# VILLAGE OFFICERS' MANUAL.

# கிராம உத்தியோகஸ்தர்களைக்குறித்த சட்டபுஸ்தகம்.

கவர்னமெண்டாருடைய உத்தரவின்படி தயார்
செய்யப்பட்டது.

---

மதராஸ்:

கவர்னமெண்ட் அச்சுக்கூடம் ஸூபரின்டெண்டெண்ட் அவர்களால்
பதிப்பிக்கப்பட்டது.

---

1915.

# அடக்கம்.

---

## 1-ம் பாகம்.—கிராம உத்தியோகஸ்தர்களுடைய அதிகாரங்களும் அலுவல்களும்.

### 1-ம் அத்தியாயம்—முகவுரை.



### 2-ம் அத்தியாயம்.—ஸிவில்.



### 3-ம் அத்தியாயம்.—போலீஸாரின் அலுவல்களும் மாஜிஸ்ட்ரேட்டின் அலுவல்களும்.



### 4-ம் அத்தியாயம்.—தீர்வை வசூல்.



### 5-ம் அத்தியாயம்.—பலவகைப்பட்டவை.

## 2-ம் பாகம்.—கிராம சுகாதாரம்.



---

## அனுபந்தம்.

---

# VILLAGE OFFICERS' MANUAL.

# கிராம உத்தியோகஸ்தர்களைக்குறித்த சட்டபுஸ்தகம்.

## 1-ம் பாகம்.—கிராம உத்தியோகஸ்தர்களுடைய அதிகாரங்களும் அலுவல்களும்.

### 1-ம் அத்தியாயம்.—முகவுரை.

1. கிராம உத்தியோகஸ்தர்களுடைய அந்தஸ்து முதலியவை.

கிராம ஊழியக்காரர்கள் ஆறு வகுப்பினராயிருக்கிறார்கள். அவ்வகுப்புகளாவன :—

(1) மணியக்காரர், பொட்டேல், நாயுடு, பெட்டன்தார், ரெட்டி, பெத்தகாபு, நாட்டாண்மைக்காரர் அல்லது அதிகாரி என்று சாதாரணமாய்ச் சொல்லப்படுகிற பெரியதனக்காரர்.

(2) முன்ஸிப்.

(3) கர்ணம், ஷான்போக் அல்லது மேனன்.

(4) வெட்டியான், தோட்டி, தண்டல்காரன், பாரிகி, உக்ராணி அல்லது கோல்காரன்.

(5) நீர்க்கட்டி அல்லது பாய்ச்சலுக்காக ஜலம் பகிர்வோன்.

(6) காவற்காரன் அல்லது தலையாரி.

கிராமப்பெரியதனக்காரர் கிராமத்தில் கவர்ன்மெண்டாருடைய பிரதிநிதியாயிருக்கிறார். அவர் கிராம மாஜிஸ்ட்ரேட்டாயும் கிராமப் பொலீஸ் தலைவராயுமிருக்கிறார். அவர் எதற்குத் தலைவராயிருக்கிறாரோ அந்தக் கிராமத்தின் வருமானத்தை வசூல்செய்கிறவராயிருப்பதோடுங்கூட, இந்த சட்டத்தின் 5-ம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிற வெவ்வேறான பலவகைப்பட்ட அலுவல்களைச் செய்யவேண்டியவருமாயிருக்கிறார். கிராமப்பெரியதனக்காரரால் வசூல் செய்யமுடியாத மிகுந்த பேரிஜையுடைய கிராமங்களுக்காக உடன்சேர்க்கையான மணியக்காரர்கள் நியமிக்கப்படுகிறார்கள்.

கிராம முன்ஸிபுகள் 1889-ம் வருஷத்து 1 - வது ஆக்டின்படி நியமிக்கப்படுகிறார்கள். கிராமப் பெரியதனக்காரருடைய உத்தியோகத்திற்கும் முன்ஸிபினுடைய உத்தியோகத்திற்குமுட்பட்ட அதிகாரவரம்பு ஒரே எல்லையைச்சேர்ந்ததாயிருக்கிற இடங்களில் கிராமப் பெரியதனக்காரர்கள் முன்ஸிபுகளாகவும் இருப்பார்கள்.

கிராமக்கணக்குகள் வைப்பதென்னும் வேலை ஒப்பிக்கப்பெற்றிருக்கிற கர்ணம் கிராமப் பெரியதனக்காரருக்குக் கீழ்ப்பட்டவர். அவர் ஒவ்வொரு வகையிலும் கிராமப் பெரியதனக்காரருக்கு உதவி செய்து யோசனை சொல்லவேண்டும். கிராமப் பெரியதனக்காரர் கிராமமுன்ஸிபாகவும் மாஜிஸ்ட்ரேட்டாகவுமிருக்கிற ஹோதாவில் கர்ணம அவருக்கு க்ளார்க்காவார். எழுதிவைக்கவேண்டிய அவசியமிருக்கிற ரிபோர்ட்டுகளையும் கணககுகளையும் ஸ்டேட்மெண்ட் முதலியவைகளையும் அவர் தயார்செய்யவேண்டியவராவா. ஒரே ஒருகர்ணம கணக்குவைக்கமுடியாத மிகுந்த பேரீஜுடைய கிராமங்களுக்கு உதவி கர்ணங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கிறார்கள்; ஆனால், அபபடிப்பட்ட சகல விஷயங்களிலும், (டி. 13 முதல் டி. 18 வரையிலுள்ள) ரொக்கக் கணக்குகளுக்கு பிரதான கர்ணமானவர் தாமே முழுவதும் உத்தரவாதியாவார். அதுசம்பந்தமான இதர கணக்குகளையும் அலுவல்களையும் பிரதான காணத்துக்கும் அவருடைய உதவி கர்ணம அல்லது உதவி கர்ணங்களுக்கும் பங்கிட்டுகொடுக்கவேண்டும்.

வெட்டியான் அல்லது தோட்டி என்பவன் பெரியதனக்காரருடைய உத்தரவுகளின்படி நடக்கிற கிராமச் சேவகனுக மாத்திரமிருக்கிறான். இந்த ஊழியக்காரர்களுடைய சங்கியை கிராமத்தின் வருமானத்திற்கேற்றபடி மாறுகிறது.

ஏரிகளிலிருந்தும கால்வாய்களிலிருந்தும் நீர்பாய்ச்சலிருக்கிற இடங்களிலே, பெரியதனக்காரருடைய உத்தரவுகளின்படி பிரவர்த்திக்கிற நீர்ககட்டி என்பவன் கிராமநிலங்களுக்கு நீர்பாய்ச்சும் வேலையைச் செய்கிறவனுயிருக்கிறான். நீர்க்கட்டி இராத இடங்களிலே அந்த வேலையைச் சிலவேளைகளில் பொதுவாய்க கிராமவெட்டியானுவது பயிரிடுங் குடிகளேயாவது செய்கிறார்கள். இந்த வகுப்பைச்ச்சேர்நத ஊழியககாரர்களின் சங்கியையானது - கிராமத்தில் நீர்பாய்ச்சல் வருவாய்களின் நஞ்சை ஆயக்கட்டுக்கேற்றபடி மாறுகிறது.

கிராமப் பெரியதனக்காரருடைய உத்தரவுகளின்படி பொலீஸ் வேலைகளைச் செயவதற்காகத் தலையாரி உத்தேசிக்கப்பட்டிருக்கிறான். அவனுடைய சரியான வேலை தன் கிராமத்தைக் காவல்காப்பதாகும். தன் கிராமத்திலிருந்து தாலூகா கஜானுவுக்குக் கிஸ்தி இரிசால்கொண்டுபோவதும், அதைக காவல்காப்பதும், பொதுவாய் பெரியதனக்காரருடைய உத்தரவுகளின்படி நடப்பதும் அவனுடைய கடமையாகும். காவற்காரர்களுடைய சங்கியையானது கிராமம் அல்லது கிராமங்களின் தொகுப்பின் ஜனசங்கியைக்கேற்றபடி சாதாரணமாய் மாறுகிறது.

கிராமத்துத் தாழ்ந்த ஊழியக்காரர்களில் யாரையும் கிராமப் பெரியதனக்காரராவது கர்ணமாவது வீட்டுவேலைக்காரர்களாக உபயோகிக்கக்கூடாது.

2. கிராம உத்தியோகஸ்தர்கள் தாசில்தாரருடைய நேர் உத்தரவுகளுக்குட்பட்டிருக்கிறார்கள். தாசில்தாரர்களும் டெப்யுடி தா

சில்தாரர்களும் ரெவினியு இன்ஸ்பெக்டர்களும் வேறே மேலான உத்தியோகஸ்தர்களும் தங்களுக்குச் செய்கிறசட்டப்படிக்கான எல்லா உத்தரவுகளின்படிக்கும் விரைவாகவும் நம்பிக்கையாகவும் நடப்பது அவர்களுடைய கடமையாகும். அவர்கள் தங்களுடைய கிராமங்களிலுள்ள கவர்ன்மென்டைச் சேர்ந்த இதர இலாகாக்களிலுள்ள உத்தியோகஸ்தர்களுக்கெல்லாம் உதவிசெய்யவும் வேண்டும்.

3. கிராம உத்தியோகஸ்தர்கள் தங்களுடைய கிராமங்களில் வசிக்கவேண்டும்; அப்படி வசிக்காவிட்டால் அவர்கள் வேலையினின்றும் தள்ளிவிடப்படுவார்கள்; ஸர்க்கார் வேலையாகப் போனாலன்றி மற்றப்படி தாசில்தாருடைய அனுமதியில்லாமல் அவர்கள் தங்களுடைய கிராமங்களை விட்டுப்போகக்கூடாது.

4. எல்லா வகுப்புக் கிராம உத்தியோகஸ்தர்களும் தங்களுடைய கிராமங்களில் நிலங்களை வாங்க அர்ஹராவார்கள்; ஆனால், நிலத்தை வாங்கத் தங்களுக்குள்ள சுதந்தரத்தை தங்களுக்காகவேயாவது தங்களுடைய சிநேகிதர்களுக்காகவாவது துர்விநியோகம் செய்தால் அவர்கள் மிகவும் கண்டிதமாய் நடத்தப்படுவார்கள்

5. மைனரை (வயதுவராதவரைத்) தவிர பரம்பரையான கிராம உத்தியோகத்தை வகிக்க பாத்தியதையுள்ளவராயிருக்கும் எந்த நபரும் அதிகாரவாயிலாய் ரஜாபெற்று வேலைக்கு வராமலிருக்கும்பொழுதன்றி மற்றப்படி, பிரதிநிதியைக்கொண்டு தம்முடைய வேலையைச் செய்விக்க அவருக்கு அனுமதி கொடுக்கக்கூடாது. பெரிய தனக்காரர் வேலையையும் கர்ணம் வேலையையும் நெருக்கமான உறவினர்களாயிருக்கும் நபர்கள் செய்வது ஸர்க்கார் காரியத்தை உத்தேசிக்கும்போது உசிதமாயில்லை; இதே ஆட்சேபணையினால்தான் இந்த இரண்டு உத்தியோகங்களையும் சாசுவதமாய் ஒரே நபரிடத்தில் ஒப்பிப்பது முற்றிலும் கூடாதென்று ஏற்படுகிறது. காலியாயிருக்கும் யாதொரு உத்தியோகத்துக்குப் பரம்பரை பாத்தியதையானது யாதொரு நபரிடத்தில் சங்கிரமித்திருந்து, மேலே சொன்ன காரணங்களில் எந்தக் காரணத்தினாலாகிலும் அந்த நபரை மேற்படி உத்தியோகத்துக்கு நியமிக்கக்கூடாமையாயிருக்கிற விஷயங்களிலே, பரம்பரை வழியில் அடுத்தாற்போல் யோக்கியதையடைந்திருக்கும் நபர் நியமிக்கப்படுவார்.

6. கிராம உத்தியோகஸ்தர்கள் தெரிந்துகொள்ளவேண்டியதென்னவென்றால்:—இன்ஸாலவென்ஸி என்னும் கடன்தீர்க்கச் சக்தியற்றிருப்பதைக்குறித்த ஆக்டின் பிரயோஜனத்தை அவர்கள் அடையத் தலைப்படுவார்களாகில வேலையிலிருந்து சிறிதுகாலம்வரையில் நீக்கிவைக்கப்படுவதற்கும் கடைசியாகத் தள்ளிவிடப்படுவதற்கும் உள்ளாகிறார்கள்; ஆனால், கடன்தீர்க்கச் சக்தியற்றவனுக்கு நேரிட்ட கஷ்டமானது எதிர்பாராத துரதிருஷ்டங்களினாலாவது தன்னால் நிவர்த்திக்கமுடியாத சந்தர்ப்பங்களினாலாவது சம்பவித்ததேயல்லாமல், பொருளை வீணவிரயஞ்செய்து அழிக்கத்தக்க அப்பியாசங்களினால் சம்பவிக்கவில்லையென்று தோற்றுமாகில், மேற்கண்டபடி வேலையிலிருந்து சிறிதுகாலம்வரையில் நீக்கிவைக்கப்படுவதற்காவது கடைசியாய்த் தள்ளிவிடப்படுவதற்காவது அவர்கள் உள்ளாகமாட்டார்கள்.

7. அடியிற்கண்ட விதிகள் எந்த டிஸ்ட்ரிக்டுகளில் நிஷ்கரிஷையான சம்பளங்கள் கிராம ஊழியக்காரர்களுக்குக் கொடுக்கப்படுகின்றனவோ அப்படிப்பட்ட எல்லா டிஸ்ட்ரிக்டுகளுக்கும் பிரயோகப்படுகின்றன. அவைகளை ஜாக்கிரதையாய்க் கற்றுக்கொண்டு அவைகளின்படி நடந்துகொள்ளவேண்டும் :—

ஒவ்வொரு மாதமுதலிலும் கிராமப் பெரியதனக்காரர்-முன் மாதத்திலே வாஸ்தவமாய் வேலையில் அமர்த்திக்கொள்ளப்பட்ட சிப்பந்திகளைக் காட்டும் பிரத்தியேகமான சம்பளப்பட்டிகளை நிர்ணயிக்கப்பட்டிருக்கிற நமூனாபடி தயார்செய்து, அவைகளில் தாமும் கர்ணமும் கையெழுத்து செய்தான பிறகு அவைகளைத் தாசில்தாரருக்கு அனுபபவேண்டும் ; (கர்ணங்களின விசாரணையிலிருக்கும் கிராமத் தொகுப்புகளுக்காகவல்லாமல்) தம்முடைய விசாரணையிலிருக்கும் ஒவவொரு கிராமத்துக்காகவும் அல்லது கிராமத் தொகுபபுக்காகவும் இந்த நமூனாவின் அச்சிட்ட பிரதிகள் தாசில்தாரரால் சர்ப்பரா செய்யப்படும். சம்பளப்பட்டிகளைத் தாலூகா ஆபீஸில பரிசோதித்துப்பார்த்து, அவைகளை ரொக்கத்துடனாவது சமபந்தபபட்ட தொகைகளைக் கிராம வசூலிலிருந்து செலுத்தும்படி ஜாரி உத்தரவு அவைகளின் மேலே யெழுதி அந்த உத்தரவுடனாவது கிராமங்களுக்குத் திருப்பியனுப்பிவிடவேண்டும்.

குறிப்பு.—(1) அந்த மாதத்தில் வாங்காமல் நிற்கக்கூடிய யாதொரு தொகையை, அதாவது, சேரவேண்டியதாயிருந்தும் ரஜா பெற்றுக்கொண்டு போனது முதலிய காரணத்தினாலே பில் எழுதி வாங்கப்படாமலிருக்கும் சம்பளங்களை சரியான கலத்தில எழுதி, இன்ன காரணங்களினால் அது வாங்கப்படவிலலையென்று 'ஷரா' கலததில் சுருக்கமாய விவரங்காணவேண்டும்.

(2) கிராமப் பெரியதனககாரர் பில்லில் கண்ட தொகையைப் பெற்றுக்கொள்வதற்கு தாமே நேரில் தாலூகா ஆபீஸுக்குப் போகமுடியாத பட்சத்திலே, அவர் - அந்தப்பட்டியின அடியில் இதுகாரியத்துக்காக விட்டுவைத்திருக்கும் இடத்திலே தம்முடைய ஏஜென்டின பெயரைக் குறிப்பிடவேண்டும்.

தாலூகா ஆபீஸிலிருந்து சம்பளப்பட்டியைத் திரும்பவும் பெற்றுக்கொண்டபிறகு, கிராமப் பெரியதனக்காரர் - தாசில்தாரரால் ஜாரிசெய்யப்பட்டபடி சம்பளங்களை சம்பந்தப்பட்ட ஊழியக்காரர்களுக்கு பட்டுவாடாசெய்து, சம்பளபபட்டியில் இதுகாரியத்துக்காக விட்டுவைத்திருக்கும கலத்திலே அவர்கள் சம்பளம் பெற்றுக்கொண்டதாக அவர்களுடைய கையெழுத்துகள் வாங்கிக்கொள்ளவேண்டும் ; அந்தப்படி கையெழுத்து வாங்கிக்கொள்ளும்போது, அந்தக்கலத்திலே தொகை செலுத்திய தேதியை ஜாக்கிரதையாய்க் குறிப்பிடவேண்டும். பிறகு இந்தப்பட்டிகளை ஆலசியம்பண்ணாமல் தாலூகா ஆபீஸுக்குத திரும்பவும் அனுப்பிவிடவேண்டும் ; அந்தப்படி அனுப்பும்போது, பட்டுவாடா செய்யப்படாமலிருக்கும் பாபத்துகளின் விஷயத்தில், 'ஷரா' கலத்தில் தொகை செலுத்தப்படாமலிருப்பதற்கு விவரங்காணவேண்டும். தொகைபெற்றுக்கொள்ளுகிறவர்கள எழுதப்படிக்கத் தெரியாதவர்களாயிருக்கிற விஷயத்திலே, சில கௌரவமுள்ள நபர்கள் முன்னிலையில் தொகை செலுத்தவேண்டும் ; இவர்கள் அந்தப்படி தொகை செலுத்தப்பட்டதற்கு அத்தாட்சியாகத் தங்களுடைய கையெழுத்துக்களைப் போட

வேண்டும். முந்திய மாதத்துச் சம்பளப்பட்டி கிரமப்படி கையெழுத்திட்டுத் தாசில்தாரரிடத்தில் திரும்ப அனுப்பப்படுகிறவரையிலே, அடுத்த மாதத்துச் சம்பளத்திற்காக உத்தரவு கொடுக்கப்படமாட்டாது.

**குறிப்பு.**—கிராம வசூலிலிருந்து பணம் செலுத்தப்படுகிற விஷயத்திலே, தொகை பெற்றுக்கொண்டவர்களால் மேலே விவரித்துச் சொன்னபிரகாரம் கிரமப்படி கையெழுத்து செய்யப்பட்டிருக்கிற சம்பளப்பட்டிகளை கிராம இரிசாலோடுகூட தாலூகாவுக்கு அனுப்பிவிடவேண்டும்; அந்தப்படி செலவான தொகையைக் கிராம ரொக்கத்தைப்பற்றிய கணக்குகளிலே மொத்த வசூலிலிருந்து கழிக்கப்பட்ட தொகையாகக் காட்டவேண்டும். பட்டியில் கண்டபடி வாஸ்தவமாகச் செலவாயிருக்கும் தொகை மாத்திரம் வரவுவைக்கப்படும்.

கஜானாவிலிருந்தாவது பாங்கிலிருந்தாவது ரொக்கமாகப் பெற்றுக்கொண்டிருக்கும் தொகையில் எவ்வளவாவது பட்டுவாடா செய்யப்படாமல் நின்றுபோய்விட்டால், அடுத்த சம்பளப்பட்டியில் அந்தத்தொகையைக் குறைத்து வாங்கி அந்த ரூபமாக அதை வாபஸ் செய்துவிடவேண்டும்; அதாவது, ஷை தொகையை அந்த பட்டியின் மொத்தத்திலிருந்து கழித்துக்கொண்டு அதில் கண்ட கிராம ஊழியக்காரர்களுக்குக் கொடுப்பதில் உபயோகிக்கவேண்டும்.

பிற்பாடு செலுத்துவதற்காக நிறுத்திவைத்துக்கொள்ளப்பட்டிருக்கும் தொகைகளாவது, பட்டுவாடா ஆகாததாக வாபஸ் செய்யப்பட்டிருக்கும் தொகைகளாவது, கிராம வசூலிலிருந்து பட்டுவாடா செய்யும்படி உத்தரவு ஜாரியாயிருந்தும் வாஸ்தவத்தில் பட்டுவாடா ஆகாமலிருக்கும் தொகைகளாவது பிற்பாடு சுதந்தரித்துக் கேட்கப்பட்டாலும்; ஏறகனவே வசூல் செய்யப்பட்டிருக்கும் அபராதங்கள் தகுதியான அதிகாரியால் வஜா செய்யப்பட்டாலும், சம்பளப்பட்டி தயார் செய்யப்படுகிற நமூனாப்படியே உடனசேர்க்கையான பில்லுகளைக் கிராமப் பெரியதனக்காரர் தயார்செய்து, தொகைசெலுத்துவதற்காக உத்தரவு ஜாரிசெய்யும் விஷயத்திலும பட்டுவாடா செய்வது முதலிய விஷயங்களிலும் வழக்கமாய அனுசரித்துவரும் முறையையே அனுசரிக்கவேண்டும். எந்தக்கால அளவுகளுக்காக பாக்கி சேரவேண்டியதாயிருக்கிறதோ அந்தக் கால அளவுகளைக்குறித்த விவரங்களையும், எந்த வௌச்சர்களென்னும் ஆதரவுசீட்டுகளில் அந்த சம்பளம் கொடாமல் நிறுத்திவைக்கப்பட்டதோ அல்லது பட்டுவாடா ஆகாததாகக் குறைத்து வாங்குவது மூலமாய் வாபஸ் செய்யப்பட்டதோ அல்லது கிராம வசூலிலிருந்து செலுத்தும்படி உத்தரவு ஜாரிசெய்யப்பட்டிருந்து வாஸ்தவமாய் பட்டுவாடா செய்யப்படவில்லையோ அந்த வௌச்சர்களைக் குறித்த விவரங்களையும் சம்பளப்பட்டியின் 'ஷரா' கலத்தில ஜாக்கிரதையாய்க் குறிப்பிடவேண்டும்.

**குறிப்பு.**—அபராதமாகவோ அல்லது மிச்சமாகவோ ஒருதரம் கழித்துக்கொள்ளப்பட்ட தொகையானது - டிவிஷனல் ஆபிஸரிடமிருந்து பிரத்தியேகமாய் அனுமதி பெறாமலும், ட்ரெஷரி (கஜானா) டெப்யுடி கலெக்டரால் முன்னதாய்த் தணிக்கை செய்யப்படாமலும் கொடுக்கப்படமாட்டாது.

யாதொரு சம்பளமாவது வர்த்தனைகளாவது ஒரு வருஷகாலத்திற்கு மேற்பட வாங்கப்படாமலிருந்தால், ட்ரெஷரி டெப்யுடி கலெ

க்டரிடமிருந்தும், இரண்டுவருஷகாலத்திற்கு மேற்பட வாங்கப்படாமலிருந்தால ரெவினியு போர்டாரிடமிருந்தும் பிரத்தியேகமாய் அனுமதி பெற்றுக்கொள்ளாமல், அந்த சம்பளம் அலலது வர்த்தனைகளைக் கிராம சிப்பந்திகளுக்கு பட்டுவாடா செய்யக்கூடாது.

8. சுயேசசையான விசாரணை அதிகாரம வஹிக்கும் தாசிலதாரர்களும் டெப்யுடி தாசிலதாரர்களும கிராம உத்தியோகஸ்தர்களுக்கு மூன்றுமாதகாலத்துக்கு மேற்படாமல் ரஜா கொடுக்கவும், ரஜா பெற்றுக்கொள்ளுகிற உததியோகஸ்தருடைய யாதொரு பந்து அல்லது சினேகிதனைக்கொண்டும், அவருடைய உத்தரவாதத்தின்மேலும அந்தவேலையை நடத்துவதறகாகத் திருப்திகரமான ஏறபாடுகள் செயயமுடியாத பட்சத்திலே, அந்தக்கால அளவுக்கு பதில உத்தியோகஸ்தர்களை நியமிககவும அதிகாரம பெற்றிருக்கிறாகள். இந்தக் கால அளவைக காட்டிலும அதிகமாய ரஜா கொடுக்கவேண்டுமென்று செய்துகொளளப்படுகிற விணணப்பங்கள் டிவிஷனல் ஆபிஸர்களால் பைசல் செய்யப்படும.

கிராமப் பெரியதனக்காரர்கள் ஏககாலத்தில் ஏழு தினத்துக்கு மேற்படாத ஒரு காலத்துக்காவது ஒரு வருஷத்தில 20 தினத்துக்கு மேற்படாமலாவது கிராமததுக கீழ்த்தர தொழிலாளிகளுக்கு ரஜா கொடுக்க அதிகாரம் பெற்றிருக்கிறாகள் ; ஆனல், பதில ஆள்களைக் கொண்டு அந்த வேலையை நடத்துவதற்காகத் திருப்திகரமான ஏற்பாடுகள் செய்யவேண்டும.

9. காயமாய் வேலைபார்க்கிறவா ரஜா வாங்கிக்கொண்டாவது உத்தியோகத்திலிருந்து சிறிதுகாலம் நீககிவைக்கப்பட்டாவதிருந்து வேலைக்கு வராமலிருக்கிறபோது பதிலுககு எவரையாவது நியமித்தால், அந்த உததியோகச் சம்பளம் முழுவதும பதிலுக்கு வேலை பார்க்கிறவருக்குக் கொடுக்கப்படும.

யாதொரு கர்ணமாவது பெரியதனக்காரராவது இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட கிராமங்களில் அதே உத்தியோகத்தைச்சேர்ந்த அலுவல்களைச செய்தாலும், தம்முடைய சொந்த உத்தியோகததைசசேர்ந்த அலுவல்களுடனகூட அதே கிராமத்தில் வேறொரு உத்தியோகத்தைசசேர்ந்த அலுவல்களையும் செய்தாலும், அவருக்கு இங்கே பிரஸ்தாபிக்கப்பட்ட சகல உத்தியோகங்களுக்கும் உரிய சம்பளம் முழுவதையும் டிவிஷனல் ஆபிஸருடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு கொடுக்கலாம் ; ஆனல், இந்த ஏற்பாடானது எந்த விஷயத்திலும் மூன்று மாதத்துக்கு மேற்பட்ட காலத்துக்கு நீடித்திருக்கக்கூடாது.

10. ஸம்மன்மேல் கோர்ட்டுகளுக்குவந்து ஹாஜராகிற கிராம உத்தியோகஸ்தர்கள் அலுவல் செய்துகொண்டிருப்பதாக எண்ணப்படுவாாகளாகையால், அவாகளுடைய சம்பளம் அவர்களுக்கு பட்டுவாடா செய்யப்படும்

11. கிராம உத்தியோகஸ்தர்களுக்குப் பிரயாணவர்த்தனை கொடுப்பதற்குச் சாதாரணமாய் அனுமதி கொடுக்கப்படமாட்டாது ; ஆனல், ஸாவே பளளிககூடங்களில் பயிறசியடைநதுவரும் கர்ணங்

களுக்கு, IV (a) குறிப்பிட்ட அனுபந்தத்திற்கண்ட பொதுவான கற்பனைகளுக்குட்பட்டு கலெக்டருடைய அங்கீகாரத்தைப் பெற்றுக்கொண்டு பிரயாணவாத்தனை கொடுக்கலாம். சாட்சியம் சொல்ல கோர்ட்டுகளுக்குப் போய் ஹாஜராகவும் லோகல்போர்ட் சபைகளுக்குப் போகவும் பிரயாணம் செய்வதற்காக கிராம உத்தியோகஸ்தர்களுக்குப் பிரயாணவர்த்தனைகள் கொடுக்கும் விஷயமானது, ஸிவில் ஸெர்விஸ் ரெகுலேஷனிற்கண்ட விதிகளைக்கொண்டு கிராம உத்தியோகஸ்தர்கள் விஷயத்தில் நடவடிக்கை நடத்தப்பட்டுவந்தாற்போல ஒழுங்குபடுத்தப்படும.

குறிப்பு.—இந்தப் பாராவில் "கோர்ட்" என்னும் வார்த்தைக்குச் சாதாரணமாய் அதற்குள்ள அர்த்தத்தின்படி அர்த்தம் கொள்ளவேண்டும்; ஆகவே, நீதிவிவகாரமுறைப்படி தீர்ப்பு செய்யும் ஸர்வே உத்தியோகஸ்தர்கள் சிற்சமயங்களில் நீதிவிவகார சம்பந்தமான அலுவல்களைச் செலுத்திக்கொண்டுவருவதனாலேயே, அந்த உத்தியோகஸ்தர்களால் நடத்தப்படும் விசாரணைகளுக்கு வந்து ஹாஜராகும்படி கிராம உத்தியோகஸ்தர்களுக்கு ஸம்மன் அனுப்பப்படுகிற விஷயங்கள் அடங்குமபடியாக கோர்ட் என்னும் வார்த்தைக்கு அர்த்தம் பண்ணக்கூடாது. ஸர்வே அல்லது ஸெட்டில்மெண்ட் உத்தியோகஸ்தர்களுக்கு முன்பாக கிராம உத்தியோகஸ்தர்கள் ஹாஜராவது சாதாரணமாய் அவர்களுடைய அலுவல்களைச் சேர்ந்ததாகும்.

12. கலெக்டராலாவது டிவிஷனல் ஆபிஸராலாவது பிரத்தியேகமாய் விசாரணை செய்யப்பட்டாலன்றி, மற்றப்படி கிராம உத்தியோகஸ்தர்களைப்பற்றிய விசேஷ பரீட்சையைக் கொடுத்திராத எந்த நபரும்-கர்ணம், உதவி கர்ணம், பெரியதனக்காரர், மணியக்காரர் அல்லது முன்ஸிப் வேலைக்கு நியமிக்கப்படமாட்டார். கர்ணம் உத்தியோகத்துக்கு அபேட்சகராயிருப்பவர்கள் - லாண்ட் ரெகார்ட்ஸ் சிப்பந்தியைச் சேர்ந்த யாதொரு உத்தியோகஸ்தராலாவது யாதொரு டிஸ்ட்ரிக்ட் ஸர்வேயராலாவது நடத்தப்படும் கர்ணம் பள்ளிக்கூடத்தில் நிர்ணயிக்கப்பட்டபடி ஸர்வே பயிற்சி அடைந்திருப்பதாகவாகிலும், யாதொரு ஸர்வே உத்தியோகஸ்தரால் நடத்தப்படும் கர்ணம் பள்ளிக்கூடத்தில் சர்வே பரீட்சை கொடுத்திருப்பதாகவாகிலும காட்டும் ஸெர்ட்டிபிகேட்டுகளை ஹாஜராசெய்விக்கவுமவேண்டும்.

## 2-ம் அத்தியாயம்.—ஸிவில்.

---

### 2. கிராமப் பெரியதனக்காரர்களின் ஸிவில் அதிகாரங்களைக்குறித்த சட்டங்களும் விதியேற்பாடுகளும்.

கிராமப் பெரியதனக்காரர்களின் அலுவல்களைக்குறித்த சட்டம் அடியிற்கண்ட ஆக்டுகளிலும் ரெகுலேஷன்களிலும் அடங்கியிருக்கிறது :—

* (1) (1904-ம்ஹு த்து சென்னபட்டணம் 4-வது ஆக்டினுல் திருத்தப்பட்டபடியுள்ள) 1889-ம்ஹு த்து சென்னபட்டணம் 1-வது ஆக்ட்.

(2) (1904-ம்ஹு த்து சென்னபட்டணம் 4-வது ஆக்டினுல் திருத்தப்பட்டபடியுள்ள) 1816-ம்ஹு த்து 5-வது ரெகுலேஷன்.

(3) 1840-ம்ஹு த்து சென்னபட்டணம் 8-வது ஆக்ட்.

(4) 1816-ம்ஹு த்து 12-வது ரெகுலேஷன்.

2. ஸிவில் வியாஜ்ஜியங்களைப் பரிசீலனைசெய்வதற்காகக் கிராம முன்ஸிபுகளுக்குக கொடுக்கப்பட்டிருக்கிற அதிகாரங்கள் சரியாய்ச் செலுத்தப்படுமாகில், ஸிவில் கோர்ட்டுகளில் வியாஜ்ஜியங்களைத் தாக்கல்செய்வதனுலுண்டாகும் அசௌகரியமும் செலவும் கிராமத்தாருக்கு நேரிடாதபடி கிராம முன்ஸிபுகள் அவர்களுக்கு மிகுந்த உபயோகமாயிருக்கக்கூடும். ஆகையால், மேலேகண்ட சட்டதிட்டங்களின் நிபந்தனைகளைக் கிராம முன்ஸிபுகள் பூர்த்தியாய்த் தெரிந்துகொள்வதுமல்லாமல், கட்சிக்காரர்கள் தாராளமாய்த் தங்களுடைய கோர்ட்டுகளுக்கு வியாஜ்ஜியங்கொண்டுவரும்படிசெய்யும் விதமாக, தங்களுக்குமுன் தாக்கல்செய்யப்படுகிற வியாஜ்ஜியங்களைப் பரிசீலனைபண்ணவும்வேண்டும்.

1889-ம்ஹு த்து சென்னபட்டணம் 1-வது ஆக்ட்.—1816-ம்ஹு த்து 4-வது ரெகுலேஷனையும் 1883-ம்ஹு த்து 4-வது ஆக்டையும் இந்த ஆக்ட் ரத்துசெய்து அவைகளுக்குப் பர்த்தியாயிருக்கிறது.

1-ம் அத்தியாயம் பீடிகாவிதிகளையுடையது. "கிராமம்," "கிராமமுன்ஸிப்," "கிராமக்கோர்ட்" முதலியவைகளின் அர்த்தங்களைக் கவனமாய்ச் சிந்திக்கவேண்டும்.

2-ம் அத்தியாயம் கிராமக்கோர்ட்டுகளின் ஸ்தாபகத்தைக்குறித்தும் ஏற்பாட்டைக்குறித்தும சொல்லுகிறது. ஒவ்வொரு கிராமக்கோர்ட்டிலும் சாதாரணமாய் ஒரு கிராம முன்ஸிப் இருக்கவேண்டும்; அவர் அந்த கிராமத்தில்வசிப்பவராயிருக்கவேண்டும்; ஆனுல்,

---

* 10-வது அனுபந்தமாக அச்சிடப்பட்டிருக்கிறது.

டிஸ்ட்ரிக்ட் கெஜெட்டில் பிரசுரஞ்செய்யப்படும் பிரத்தியேகமான உத்தரவுகளின்படி அந்த கோர்ட் மூன்று நியாயாதிபதிகள் சேர்ந்ததாயிருக்கலாம் ; அவர்களுக்குள் கிராமமுன்ஸிப் அக்கிராசனாதிபதியாவார் ; கலெக்டா சித்தஞ்செய்துவைத்திருக்கும் ஒரு ஜாபிதாவிலிருந்து வியாஜ்ஜியத்திற்குக் கட்சிக்காரராயிருக்கிற ஓவ்வொருவரும் ஓவ்வொருவரைத் தெரிந்தெடுத்து மற்ற இருவரையும் நியமிக்கலாகும். இந்த ஜாபிதாவைக் கிராமமுன்ஸிபின் நியாயஸ்தலத்தில் மாட்டிவைக்கவேண்டும். வியாஜ்ஜியங்களைப பரிசீலனை செய்வதற்காக அப்படிப்பட்ட நியாயசபையைச் சேர்க்கும் விதம் இப்படிப்பட்டதென்று 9-வது பிரிவில் விவரித்திருக்கிறது. வியாஜ்ஜியங்களைப்பற்றிய ரெஜிஸ்டரை வைக்கவும் கோர்ட்டின் நடவடிக்கைகளை எழுதவும் கிராமமுன்ஸிபுகள் கடமைப்பட்டிருக்கிறார்கள். இதை அவர்கள் தாங்களே செய்யவேண்டும ; ஆனால், அவசியமாயிருக்கும்பட்சத்திலே, கிராம கர்ணத்தின் உதவியைப் பெற்றுக்கொள்ளலாம். எல்லா கட்டளைகளையும் சேர்ப்பிப்பதும், டிக்ரிகளை நிறைவேற்றுகையில் கிராமமுன்ஸிபின் உத்தரவுகளின்படி பிரவர்த்திப்பதும், சமாசாரம் கொண்டுபோகும் வேலையில் வழக்கமாய் அமர்ந்திருக்கிற கிராம உத்தியோகஸ்தருடைய கடமையாயிருக்கும்.

3-ம் அத்தியாயத்திலே, கிராமக்கோர்ட்டுகளால பரிசீலனைசெய்யத்தக்க வியாஜ்ஜியங்கள் இன்னவைகளென்றும் பரிசீலனைசெய்யத்தகாத வியாஜ்ஜியங்கள் இன்னவைகளென்றும், ஆக்டின்படி வியாஜ்ஜியம்கொண்டுவருவதற்காகவும் விண்ணப்பம் பண்ணிக்கொள்வதற்காகவும் ஏற்படுத்தப்பட்ட காலஅளவு இன்னதென்றும் கண்டிருக்கிறது. கணக்கின் நிகரத்தொகையாகவாவது மற்றப்படியாவது கடன் அல்லது தாவாவானது தொகை அல்லது பெறுமானத்தில் 20 ரூபாய்க்கு அதிகப்படாதபோது, (கான்ட்ராக்டின்) ஒப்பந்தத்தின்மேல் பாக்கியாயிருக்கிற பணத்தைக்குறித்தாகிலும் ஜங்கமசொத்தைக்குறித்தாகிலும் அப்படிப்பட்ட சொத்தின் பெறுமானத்தைக்குறித்தாகிலும் கொண்டுவரப்படுகிற வியாஜ்ஜியங்களை கிராமமுன்ஸிபுகள் பரிசீலனைசெய்ய அதிகாரமுடையவர்களாயிருக்கிறார்கள் ; ஆயினும், முன்ஸிபுக்குமுன் கட்சிக்காரர்கள் சம்மதபத்திரம் எழுதிக்கொடுத்தால், ஷை தொகை அல்லது பெறுமானம் 200 ரூபாய் வரையில் போகலாம். ஆனால், அடியிற்கண்ட விஷயங்களைக்குறித்து யாதொரு வியாஜ்ஜியம் பிடிக்கக்கூடாதென்பதைக் கவனிக்கவேண்டும் :—(1) கூட்டுப்பங்கு வியாபாரத்தில் நிலுவை இவ்வளவென்று அக்கூட்டுப்பங்குக்காரர்களாவது அவர்களுடைய ஏஜெண்டுகளாவது முடிவேற்படுத்தியிருந்தாலொழிய அப்படிப்பட்ட நிலுவையைக்குறித்து : (2) மரண சாஸனம் எழுதாமல் இறந்துபோயிருக்கும் விஷயத்தில் பங்கைக்குறித்தாவது பங்கின் ஒரு பாகத்தைக்குறித்தாவது ; மரணசாஸனத்தின்படி ஏற்பாடான பொருளுக்காகவாவது பொருளில் ஒரு பாகத்திற்காகவாவது : (3) நிலத்தின் குத்தகைத்தொகையானது பிரதிவாதியால் கையெழுத்துசெய்யப்பட்டிருக்கிற எழுத்துமூலமான ஒப்பந்தத்தின்மேல் பாக்கியாயிருந்தாலொழிய அப்படிப்பட்ட குத்தகைத்தொகையைக்குறி

த்து : (4) முந்திய வியாஜ்ஜியத்தில் வேண்டுமென்று விடப்பட்டோ அல்லது கைவிடப்பட்டோ இருக்கிற தாவாவின் பாகத்தைக்குறி த்து : (5) அதே கட்சிக்காரர்களுக்காவது அவர்களை ஆதாரமாகக் கொண்டு தாவாசெய்கிறவர்களுக்காவது வியாஜ்ஜியமூலமுண்டாகி முந்திய வியாஜ்ஜியத்தில் தகுந்த அதிகாரமுடைய கோர்ட்டா ரால் முன்னமே விசாரித்துப் பைசல்செய்யப்பட்டிருக்குமாகில் அந்த விஷயத்தில் : (6) சுவான்மென்டாராலாவது அவர்களமே லாவது உத்தியோக முறைமையில் ஸர்க்கார் உத்தியோகஸ்தர் களாலாவது அவர்கள்மேலாவது வியாஜ்ஜியங்கொணடுவரப்படுகிற விஷயத்தில் : (7) மைனர்கள் (வயதுவராதவர்கள்) அல்லது புத்தி மாருட்டமுள்ளவர்களாலாவது அவர்களமேலாவது வியாஜ்ஜியங் கொணடுவரப்படுகிற விஷயத்தில். ஆகடினபடி கொண்டுவரப்படும் வியாஜ்ஜியங்களானவை - வியாஜ்ஜியம் ஆரம்பமாகும்போது பிரதி வாதிகளெல்லாரும் யாருடைய அதிகாரப்பிரதேச எல்லைக்குள் வாச ஞ்செய்துகொண்டிருக்கிறார்களோ அல்லது தொழில் நடத்திக் கொண்டிருக்கிறார்களோ அல்லது லாபத்துக்காக வேலைசெய்துகொ ண்டிருக்கிறார்களோ அந்த கிராம முன்ஸிபினுடைய கோர்ட்டில் தாக்கலாகவேணடும் ; ஆயினும், யாதொரு வியாஜ்ஜியம் அல்லது நடவடிக்கையில் ஒரு கிராம முன்ஸிபே கட்சிக்காரராகவாவது நேராயப் பற்றுள்ளவராகவாவதிருக்கிற விஷயத்திலே, அடுத்துப் பக்கத்திலிருக்கிற யாதொரு கிராமத்தின் முன்ஸிபினுடைய கோர் ட்டில அந்த வியாஜ்ஜியம் அல்லது நடவடிக்கையைக் கொண்டு போகவேண்டும். கால நிர்ணயவிஷயத்தைப்பற்றிச் சொல்லவேண் டியதென்னவெனறால், வியாஜ்ஜியந்தொடரவாவது விணணப்பஞ் செய்துகொள்ளவாவது சுதந்தரம் முதலில ஏற்பட்ட காலம் முதற் கொண்டு மூனறு வருஷமான பிறகு இந்த ஆக்டின்படிக்கான யா தொரு வியாஜ்ஜியமாகிலும் விணணப்பமாகிலும் ஏறறுக்கொள்ளத் தக்கதாகாது. மேலேகணட விலக்குக்குட்பட்டு காலநிர்ணயத்தைக் குறித்த 1908-ம் ஹிந்திய இந்துதேசத்து 9-வது ஆக்டின் நிபந்தனை கள் அந்த வியாஜ்ஜியஙகளுக்கும் விண்ணப்பஙகளுக்கும் பிரயோகப் படத்தக்கன. ஆகையால, கிராம முனஸிபுகள ஸிவில் வியாஜ ஜியங்களைப் பரிசீலனை செய்வதறகுக் காலநிாணய ஆக்டின நிபந்த னைகள் சமபந்தப்படுகிறவரையிலே அவர்கள் அந்த நிபந்தனைகளை நன்றாய்த் தெரிந்துகொண்டிருக்கவேணடியதவசியம்.

4-ம் அத்தியாயம் வியாஜஜியம் தொடருவதற்கும் வியாஜ்ஜியங்க ளைத் தயாாசெய்வது முதலியவற்றிற்கும சமபந்தப்படுகிறது. கிரா மத்தில வழஙகுகிற பாஷையிலெழுதி வாதியினலாவது, அவரில லாத பட்சத்திலே அவரிடத்தில கிரமமாய் அதிகாரம்பெற்ற ஏஜெ ன்டினலாவது கையெழுத்து செய்யப்பட்டிருக்கிற ப்ளெயன்ட் மூல மாக வியாஜ்ஜியத்தைக் கொண்டுவரவேணடும். 23 - வது பிரிவிற் கண்ட விவரங்களை அதில் காணவேண்டும். ஒவ்வொரு பிரதிவா திக்காகவும் ஒவ்வொரு பிரதி வீதமாக இன்னும் பிரதிகளைத்தாக்கல் செய்யவேண்டும். ப்ளெய்னடுகளுக்கு முத்திரை வேணடியதில்லை. ப்ளெய்னடுகள் கிரமமாயக் கொடுக்கப் படும்போது அவைகளை,

IV B அனுபந்தத்தில் நிர்ணயிக்கப்பட்ட நமூனுப்படி வைக்கப்பட்டிருக்கும் ரெஜிஸ்டரில் தாகக்கல் செய்யவேண்டும்.

அதன்பிறகு விசாரணைசெய்யப்படும் தேதியைக்குறித்துக் குறைந்தது இரண்டு தினங்களுக்குமுன் நோடிஸ் கொடுத்து வெளயன்டின் நகல்சகிதமாகப் பிரதிவாதிக்கு ஸம்மன் அனுப்பவேண்டும். ஸம்மன்களைச் சேர்ப்பிக்கும் விதத்தைக்குறித்து 25-வது பிரிவு முதல் 27-வது பிரிவு வரையிலுள்ள பிரிவுகளில் விவரம் கண்டிருக்கிறது. கிராமக் கோர்ட்டின் அதிகாரம் பிரதேச எல்லேக்கு வெளியில் வசித்துக்கொண்டிருக்கிற பிரதிவாதிகளுக்கு ஸம்மன் சேர்ப்பிக்கவேண்டியதாயிருந்தால், கோர்ட் கட்டணமுத்திரைத் தலைகள் ரூபமாக அடியிற்கண்ட விதநிர்ணயப்படி ஸம்மன கட்டணங்களை விதித்து, ஸம்மன் சேர்ப்பிக்கவேண்டுமென்று செய்துகொள்ளப்படும் விண்ணப்பம் சகிதமாக டிஸ்ட்ரிகட் முன்ஸிபினிடத்தில் அனுப்பவேண்டும் :—

### விதநிர்ணயம்.

ஒவ்வொரு ஸம்மனுக்காகவும்—

| | அணு. |
|---|---|
| (a) ஒரே ஒரு பிரதிவாதிக்கு ... ... | 8 |
| (b) அதேகாலத்தில் சேர்ப்பிக்கவேண்டுமென்று விண்ணப்பம் செய்துகொண்டால் அதே கிராமத்தில் வசிக்கிற உடன்சேர்க்கையான ஒவ்வொரு பிரதிவாதிக்கும். | 4 |

விசாரணைக்காக ஏற்படுத்தப்பட்ட தினத்தில் வாதியாவது பிரதிவாதியாவது அவ்விருவருமாவது ஹாஜராகாவிட்டால், 28-வது, 30-வது, 31-வது பிரிவுகளிற்கண்ட நடவடிக்கைமுறையை அனுசரிக்கவேண்டும். ஜாரிசெய்யப்பட்ட உத்தரவுகள் அல்லது டிக்ரிகள் 32-வது, 33-வது பிரிவுகளில் நிபந்தனை ஏற்படுத்தியிருக்கிற விதமாக ரத்துசெய்யப்படுவதற்குள்ளாகும். டிக்ரியை ரத்துசெய்வதற்கு முன்பாக எதிர்கட்சிக்காரனுக்கு நோடிஸ் சேர்ப்பித்திருக்கிறதாவென்று கவனிக்கவேண்டும்.

5-ம் அத்தியாயம் வியாஜ்ஜியங்களை விசாரணைசெய்வது முதலியவற்றிற்கும், சாட்சிகளுக்கு ஸம்மனனுப்பி வரவழைத்து விமரிசை செய்வதற்கும் சம்பந்தப்படுகிறது. பிரதிவாதி தாவாவை ஒப்புக்கொண்டாலும் கட்சிக்காரர்கள் ராஜியாய்விட்டாலும், அதற்கேற்றபடி டிக்ரிகொடுக்கவேண்டும். பிரமாணத்திற்குக் கட்டுப்படுவதாக உபய கட்சிக்காரர்களும் உடன்படுவார்களாகில், அதற்கேற்றபடியே தீர்மானம்கொடுக்கவேண்டும். வாதி வியாஜ்ஜியத்தைத் தள்ளிக்கொள்ள விரும்புவாராகில், அவருக்கு அப்படிசெய்ய அனுமதிகொடுக்கலாம்; ஆனுல், அவர் நூதனமாய் வியாஜ்ஜியம் கொண்டுவரக்கூடாது. இந்த விஷயங்களிலெதுவும் நேரிடாவிட்டால், பிரதிவாதியினுடைய ஆக்ஷேபணைகளை எழுதிக்கொண்டு, சாட்சியம் வாங்கத் தொடங்கவேண்டும்; கோர்ட்டில் ஆஜராகாத சாட்சிகளை ஸம்மனனுப்பி வரவழைக்கவாவது வேறேவிதமாய் அவர்களுடைய சாட்சியத்தைப்பெறுக் கொள்ளவாவது அநுசரிக்கவேண்டிய முறை இன்ன

தென்று 40-வது பிரிவுமுதல் 42 - வது பிரிவுவரையிலுள்ள பிரிவுகளில் நிர்ணயித்திருக்கிறது. ஒரு வருஷத்துக்கு அதமம் 200 வியாஜ்ஜியங்களிருப்பதாக எந்தக் கிராமக் கோர்ட்டுகளின கட்டுகளினால் தெரியவருகிறதோ அந்தக் கிராமக் கோர்ட்டுகளுக்கு ஸம்மன் முதலிய கட்டளைகள் சேர்ப்பிப்பவர்களைப் பிரத்தியேகமாய் நியமிக்கக் கலெக்டர்களுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. 25 - வது, 40-வது பிரிவுகளின்படி எழுத்துமூலமாய்ப் பிறப்பிக்கப்பட்ட ஸம்மன்கள் கிராம ஊழியக்காரனாலன்றி மற்றப்படி சேர்ப்பிக்கப்படுமானால், எனவே, கலெக்டர்களுடைய உத்தரவின்படி பிரத்தியேகமாய் நியமிக்கப்பட்ட ஸம்மன் முதலிய கட்டளைகள் சேர்ப்பிப்பவர்களைக் கொண்டு சேர்ப்பிக்கப்படுமானால், அடியிற்கண்ட கட்டணங்கள் ரொக்கமாய் விதித்து வாங்கத்தககவைகளாகும் :—

| | அணா. |
|---|---|
| (1) கோர்ட்டாருடைய அதிகாரப்பிரதேச எல்லைக்குள் வசித்துக்கொண்டிருக்கிற ஒவ்வொரு சாட்சி அல்லது பிரதிவாதிக்காகவும் ... | 1 |
| (2) கோர்ட்டாருடைய அதிகாரப்பிரதேச எல்லைக்கு வெளியில் வசித்துக்கொண்டிருக்கிற ஒவ்வொரு சாட்சிக்காகவும் ... ... ... | 2 |

**குறிப்பு.**—(1) ஸம்மன் பிறப்பிக்கிற அல்லது ஸவால் அனுப்புகிற கோர்ட்டாருடைய அதிகாரவரம்புககு வெளியில் சாட்சி வசித்துக்கொண்டிருககிற விஷயங்களிலே, மேலேகண்ட (2) குறிபபிட்ட விதியின்படி இரண்டணா கட்டணம விதித்து வாங்கபபடும். யாருக்கு ஸம்மன் அல்லது ஸவால் அனுப்பப்படுகிறதோ அந்தக் கிராம முன்ஸிபானவர் ஸம்மன் முதலிய கட்டளைகளைச்சேர்ப்பிப்பதற்காகப் பிரத்தியேகமாய்ச் சிபபந்தியை உடையவராயிருந்தால், ஸம்மன் சேர்ப்பிப்பதற்காவது யாருககு ஸவால் அனுப்பபபடுகிறதோ அந்த சாட்சிககு ஸம்மன் பிறபபிப்பதறகாவது வாங்கவேண்டிய கட்டணம் (1) குறிப்பிட்ட விதியின்படி ஒரு அணாவாகும்; ஸம்மன் பிறப்பித்த அல்லது ஸவால் அனுப்பிய கிராமககோர்ட்டிலிருந்து மேறபடி கிராம முனஸிப் இந்தத் தொகையை வசூல்செய்யககூடும். யாருக்கு ஸம்மன் அல்லது ஸவால் அனுப்பப்படுகிறதோ அந்தக் கிராம முனஸிபுககுப் பிரத்தியேகமான சிப்பந்தி இராவிட்டால், சாதாரணமான கிராமசிபபந்தி ஸம்மன் சேர்ப்பிககும் அவ்வேலையை இலவசமாய்ச் செயயவேண்டும்; ஸம்மனைப் பிறப்பித்த அல்லது ஸவாலை அனுப்பின கோர்ட்டாரிடத்திலிருந்து கட்டண மெதுவும் வசூல் செய்யத்தக்கதல்ல.

பிரத்தியேகமான ஸம்மன் முதலிய கட்டளைகளைச் சேர்ப்பிக்கும் சிப்பந்தியின் சம்பளங்களைக் கொடுப்பதும் கட்டணம் விதித்து வாங்குவதும் கிராம முன்ஸிபுகளின் பாமாக விடபபடும்; அவர்கள் வரப்பெற்றுக்கொண்டு செலவுசெய்த எல்லாத்தொகைகளுக்கும் கணக்குவைக்கவேண்டும்.

(2) சென்னபட்டணத்து கிராமக கோர்டடுகளைக்குறித்த 1889-ம் ஸூ 1-வது ஆக்ட் 29-வது பிரிவினால் தமக்குக் கொடுககப்பட்டிருக்கும் அதிகாரங்களைக் கொண்டும், 1893-ம்ஸூ எப்ரல்மீ 25உயுள்ள போர்ட் ஸெயின்ட் ஜார்ஜ் கெஜெட் 1 - ம் பாகம் 455 - வது பக்கத்தில் பிரசுரிக்கப்பட்டு, 1894-ம்ஸூ மேமீ 8உயுள்ள போர்ட் ஸெயின்ட் ஜார்ஜ் கெஜெட் 1-ம் பாகம் 528-வது பக்கத்தில் பிரசுரிக்கப்பட்ட பிழை திருத்தத்தினால் திருத்தப்பட்டபடிக்குள்ள 1893-ம்ஸூ எப்ரல்மீ 22உ போடட 179-ம் நெ. விளம்பரத்தைத் திருத்தியும், ஆலோசனை சபையிலுள்ள கவர்னரவர்கள் ஷை ஆக்ட் 25-வது 40-வது பிரிவுகளின்படி எழுத்துமூலமாய்ப் பிறப்பிக்கப்பட்டு, சேலம் ஜில்லாவில் எர்க்காடு கிராம முன்ஸிபின அதிகார வரம்புக்குட்பட்ட யாதொரு கிராம ஊழியக்காரனாலன்றி மற்றப்படி சேர்ப்பிக்கப்படுகிற ஸம்மன்களுக்காக அடியிற்கண்ட கட்டணங்கள் விதித்து வசூல் செய்யத்தக்கவைகளாகுமென்று களிகூர்ந்து நிர்ணயிக்கிறார்கள் :—

அணு.

(1) ஏர்க்காடு யூனியனுக்குள் வசித்துக்கொண்டிருக்கிற யாதொரு சாட்சி அல்லது பிரதிவாதிக்குச் சேர்ப்பிக்கப் படும் ஒவ்வொரு ஸம்மனுககாகவும் ... ... 1

(2) ஏர்க்காடு யூனியனுக்கு வெளியிலும் ஏர்க்காடு கிராம முன்ஸிபின அதிகார வரம்புக்குள்ளும் வசித்துக் கொண்டிருக்கிற யாதொரு சாட்சி அல்லது பிரதிவாதிக்குச் சேர்ப்பிக்கப்படும் ஒவ்வொரு ஸம்மனுக் காகவும் ... ... ... ... ... 2

பிரமாணத்தின்மேலாவது சத்தியமாய்க் கூறும் உறுதிமொழியின்மேலாவது சாட்சிகளை விமரிசைபண்ணவேண்டும்; ஆனால் அவர்கள சொல்லுகிற விஷயங்களை எழுதிவைக்கவேண்டியதில்லை. ராஜியாகும்போலிருக்குமானால், வியாஜ்ஜியத்தை நிறுத்திவைத்துக் கெடுவு கொடுக்கலாம்.

6-ம் அத்தியாயம் டிக்ரி கொடுப்பதற்கும அதை நிறைவேற்றுவதற்கும் சம்பந்தப்படுகிறது. கட்சிக்காரர்களாவது அவர்களுடைய ஏஜென்டுகளாவது சொல்லிக்கொள்வதைக் கேட்டு இரண்டுபக்கங்களிலும் சொல்லப்படுகிற சாட்சியத்தைக் கவனமாய் யோசித்தபிறகு, கோர்ட்டார் தங்களுக்கு நியாயமாகவும் நீதியாகவும் மனச்சாட்சிக்கேற்றதாகவும் தோற்றுகிற டிக்ரியைக் கொடுக்கவேண்டும். VIII A அனுபந்தத்தில் நிரணயிக்கப்பட்டிருக்கும் நமூனாப்படி டிக்ரி எழுதப்படவேண்டியதுமல்லாமல், கிராம முன்ஸிபாவது, நியாய சபை ஏற்பட்டிருக்கிற விஷயத்தில் அதற்குச் சமமதிக்கிற நியாயாதிபதிகளாவது அதில் கையெழுத்து செய்யவேண்டும். டிக்ரி நமூனாவில் "தீர்மானத்துக்குரிய நியாயங்களு"க்காக விடப்பட்டிருக்கும் இடம் போதாமலிருப்பதாகக் காணப்பட்டால், கிராம முன்ஸிப் ஒரு தனி காகிதத்தை டிக்ரி நமூனாவுடன சேர்த்து அதில் தம்முடைய நியாயங்களை எழுதிககொண்டுபோகலாம். இன்ன கோர்ட்டார் டிக்ரிகளை நிறைவேறறலாமென்பதும் அவைகளை நிறைவேற்றும்போது அனுசரிக்கவேண்டிய முறைமை இன்னதென்பதும் 48-வது பிரிவுமுதல் 67-வது பிரிவுவரையிலுள்ள பிரிவுகளில் சொல்லப்பட்டிருக்கின்றன; இவைகளை ஜாக்கிரதையாயக் கவனிக்க வேண்டும்.

கடைசி அத்தியாயமாகிய 7-ம் அத்தியாயத்தில் பலவகையான நிபந்தனைகள் அடங்கியிருக்கின்றன; டிக்ரிகளைக் கொடுத்து நிறைவேற்றுவதற்கு முன்பாகக் கட்சிக்காரர்கள இறந்துபோவார்களாகில், அனுசரிக்கவேண்டிய முறைமை இன்னதென்று 68-வது பிரிவுமுதல் 72-வது பிரிவுவரையிலுள்ள பிரிவுகளில் கண்டிருக்கிறது. கிராமக் கோர்ட்டார் செய்த டிக்ரி அல்லது உத்தரவை, 73-வது பிரிவில் சொல்லியிருக்கிற காரணங்களிலெதனாலாகிலும ரத்துசெய்ய டிஸ்ட்ரிக்ட் முன்ஸிபுக்கு அந்த பிரிவில் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது, மேலும், யாதொரு கிராம முன்ஸிப லஞ்சம்வாங்கினாரென்றாவது நீதிக்கேடாய்ப் பாரபட்சம் செய்தாரென்றாவது நீதி விவகார நடவடிக்கைகளை நடத்துவதில் முறைபிறழ்வாய் நடந்தாரென்றாவது கண்டுபிடிக்கப்படுவாராகில் அவர் கடுந்தண்டனைக்குள்ளாவார். கிராமக்கோர்ட்டுகளில் உபயோகமாகவேண்டிய நமூனாக்க

ளையும் கிராமக்கோர்ட்டார் அனுப்பவேண்டிய ரிடர்ன்களையும் (விவரக் கணக்குகளையும்) 75-வது பிரிவின்படி ஹைகோர்ட்டார் நிர்ணயிப்பார்கள். அடியிற்கண்ட நமூனுக்களை ஹைகோர்ட்டார் நிர்ணயித்திருக்கிறார்கள் :—

(1) 10-வது பிரிவின்படிக்கான வியாஜ்ஜியங்களைப்பற்றிய ரெஜிஸ்டர் (IV B அனுபந்தம்).

(2) 25-வது பிரிவின்படி பிரதிவாதிக்குச் சேர்ப்பிக்கப்படும் ஸம்மன் நமூனு (V-ம அனுபந்தம).

(3) 28-வது பிரிவின்படி விசாரணை நிறுத்திவைக்கப்படுவதைக்குறித்துப் பிரதிவாதிக்கு நோடிஸ் (VI-ம அனுபந்தம).

(4) 40-வது 41-வது பிரிவுகளின் பிரகாரம் சாட்சியம் சொல்லும்படி சாட்சிகளுக்குச் சேர்ப்பிக்கப்படும் ஸம்மன் நமூனு (VII-ம் அனுபந்தம).

(5) 40-வது 41-வது பிரிவுகளின் பிரகாரம் தஸ்தவேஜுகளைக்கொண்டுவந்து காட்டும்படி சாட்சிகளுக்குச் சேர்ப்பிக்கப்படும் ஸம்மன் நமூனு (VIII-ம் அனுபந்தம்).

(6) 46-வது, 47-வது பிரிவுகளின்படிக்கான டிக்ரி நமூனு (VIII A அனுபந்தம்).

(7) (டிக்ரியை) நிறைவேற்றுவதற்கான நடவடிக்கைகளைக் குறித்த ரெஜிஸ்டர் (IX-ம் அனுபந்தம்).

(8) பைசல் செய்யப்பட்ட கேஸுகளைக்குறித்து மூன்றுமாதத்துக்கொருமுறை அனுப்பப்படும் ரிடர்ன் (விவரக் கணக்கு) நமூனு (X-ம் அனுபந்தம்).

அடியிற் கண்டவை கிராம முன்ஸிபுகள் அனுப்பவேண்டிய ரிடர்ன்களாகும் :—

(1) இரண்டுவாரத்துக்கொருமுறை : (டிக்ரியை) நிறைவேற்றுவதற்கான நடவடிக்கைகளைக்குறித்த ரெஜிஸ்டரிலிருந்து எடுத்தெழுதிய எக்ஸ்ட்ராக்ட் (IX-ம அனுபந்தம்)—பிரதி மாதத்திலும் முதல் பதினைந்து தினங்களுக்குச் சம்பந்தப்பட்ட எக்ஸ்ட்ராக்டை அடுத்தமாதம் முதல தேதி அனுப்பிவிடவேண்டும் ; பிரதி மாதத்திலும் பிந்திய அரைமாதத்துக்குச் சம்பந்தப்பட்ட எக்ஸ்ட்ராக்டை அடுத்தமாதம் 16உ அனுப்பிவிடவேண்டும்.

(2) வரப்பெற்றுக்கொண்டு பைசலாயிருக்கிற கேஸுகளைக் குறித்து X-ம் அனுபந்தத்திற்கண்ட நமூனுப்படி மூன்றுமாதத்துக்கொருமுறை அனுப்பப்படும் ரிடர்ன்.

75-வது பிரிவின்படி டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜாவது டிஸ்ட்ரிக்ட் முன்ஸிபாவது கிராமக் கோர்ட்டுகளின் ரெஜிஸ்டர்களையும் ரெகார்டுகளையும் எப்போதாகிலும் வரவழைத்துப் பார்வையிடலாம். இந

தப்பிரிவின்படி கிராமக் கோர்ட்டுகளின் ரெஜிஸ்டர்களும் ரெகார்டு களும் வரவழைக்கப்படும்போது, அவைகளை இதுசம்பந்தப்பட்ட கிராம முன்ஸிப் ஸெர்விஸ் பேரிங்காக அதாவது தபாலதலை ஒட்டாமல் தபாலில் அனுப்பவேண்டும்; எந்தக் கோர்ட்டார் ஷை ரெஜிஸ்டர்களையும் ரெகார்டுகளையும் வரவழைத்தார்களோ அவர்கள் தபால் கட்டணம் செலுத்தி அவைகளைத் திருப்பியனுப்பவேண்டும்.

1816-ம் ஹூ த்து 4-வது ரெகுலேஷன்படி செய்யப்பட்ட அடியிற்கண்ட விதியேற்பாடுகள் 1889-ம் ஹூ த்து 1-வது ஆக்டுக்குப் பிரயோகப்படுகின்றன:—

| பிரமாணம். | பழைய ரெகுலேஷனிலுள்ள பிரிவும் தற்காலத்து ஆக்டில் அதற்குப் பொருத்தமான பிரிவும். | கருத்து. |
|---|---|---|
| 1887-ம் ஹூ ஏப்ரல்மீ 26வ 1240-A நெ. ஹைகோர்ட் ஸர்க்குலர். | பொது .. | நீதி விவகார விஷயமான எந்த வேலையையும் ஞாயிற்றுக்கிழமைகளில் பிரசித்தப்படுத்தவுங்கூடாது, செய்யவுங் கூடாது. |
| 1823-ம் ஹூ ஆகஸ்ட்மீ 25வ ஸதராலத் ஸர்க்குலர் உத்தரவு. | ஷை .. | கிராமக் கோர்ட்டுகளுக்கு முன் ஹாஜராகிற சகல ஸர்க்கார் உத்தியோகஸ்தர்களையும் இதர நபர்களையும் அவரவர்களுடைய அந்தஸ்துக்கும் கௌரவத்துக்கும் ஏற்றபடி நன்குமதித்து மரியாதை பாராட்டவேண்டும். |
| இந்தியன் லா ரிபோர்ட், 13-வது வால்யும், சென்னபட்டணம், 145, 146-வது பக்கங்கள். | 1889-ம் ஹூ த்து 1-வது ஆக்ட் 13-வது பிரிவு. | கிராம முன்ஸிபுகளின் கோர்ட்டுகளால் பிடித்து விசாரிக்கப்படத்தக்க வியாஜ்ஜியங்களை விசாரிக்க ஸ்மால் காஸ் கோர்ட்டுகளுக்கும் ஷை கோர்ட்டுகளுக்கும் ஒரே மாதிரியான அதிகாரம் உண்டு. |
| இந்தியன் லா ரிபோர்ட், 20-வது வால்யும், சென்னபட்டணம், 21, 22-வது பக்கங்கள். | ஷை. | 13-வது பிரிவைச்சேர்ந்த 3-வது விலக்கில் கண்ட "நிலம்" என்னும் வார்த்தையில், வீடுகட்டியிருக்கும் நிலம் எப்பதும் அடங்கும்; ஆகவே, பிரதிவாதிகளால் கையெழுத்து செய்யப்பட்டிருக்கும் எழுத்து மூலமான ஒப்பந்தத்தின்படி பாக்கியாயிருந்தாலன்றி மற்றபடி, வீட்டு வாடகைக்காகக் கொண்டுவரப்படும் வியாஜ்ஜியமானது யாதொரு கிராம முன்ஸிப் கோர்ட்டில் பிடித்து விசாரிக்கப்படத்தக்கதல்ல |
| இந்தியன் லா ரிபோர்ட், 21-வது வால்யும், சென்னபட்டணம், 115, 116-வது பக்கங்கள். | 1889-ம் ஹூ த்து 1-வது ஆக்ட் 13-வது பிரிவு. | ஸக்ஸெஷன் ஸெர்டிபிகேட் ஆக்டில் கண்ட நிபந்தனைகள் யாதொரு கிராம முன்ஸிப் கோர்ட்டில் நடக்கும் வியாஜ்ஜியங்களுக்குப் பிரயோகப்படுகின்றன. |

| பிரமாணம். | பழைய ரெகுலேஷனிலுள்ள பிரிவும் தற்காலத்து ஆக்டில் அதற்குப் பொருத்தமான பிரிவும். | கருத்து. |
|---|---|---|
| இந்தியன் லா ரிபோர்ட் 8 - வது வால்யும், சென்னபட்டணம், 500-ம் பக்கம். | 1816-ம் வருஷத்து 4 - வது ரெகுலேஷன 7 வது, 26 - வது பிரிவுகள். கிராமக்கோர்ட்டுகளாக்ட் 16-வது பிரிவு. | ஒரு வியாஜ்ஜியத்திலே கிராம முன்ஸிபுகரும தனக்கும் விரோதமிருக்கிறதென்கிற காரணத்கினுல் அந்த கிராமமுன்ஸிப் வியாஜ்ஜியத்தைப் பரிசீலனைசெய்வதை பிரதிவாதி ஆட்சேபிப்பதன்மேல் அந்த முன்ஸிப் அவ் வியாஜ்ஜியத்தை வேறொரு முன்ஸிபுகரு மாற்றிவிட்டார்: இந்தப்படி மாற்றியது சட்டத்திறகு விரோதமென்று அபிப்பிராயங்கொள்ளப்பட்டது. * |
| 1870-ம் வருஷம் 7 - வது ஆக்ட, பிரிவு 19 (v). | 1816-ம் வருஷத்து 4 - வது ரெகுலேஷன் 12-வது பிரிவு கிராமக் கோர்டடுகளாக்ட் 22-வது பிரிவு. | கிராம முன்ஸிப்புகளுக்குமுன் தாக்கல்செய்யப்பட்ட வியாஜஜியங்களில் ப்ளெய்ன்டுகளுக்குக் கோர்ட் கட்டணம் நிவர்த்தி செய்யப்பட்டிருக்கிறது. |
| 1889 - ம் வருஷம் அக்டோபர்மீ 15வ. போர்ட் ஸெய்ன்ட் ஜார்ஜ் கெஜெட் 704 - ம் பக்கத்தில் 1889-ம் வருஷம் அக்டோபர்மீ 7வ. 386-ம் நம்பர் கவர்ன் மெ ன் ட் விளம்பரம். | கிராமக கோர்ட்டுகளாகட் 27-வது பிரிவு. | கிராமக் கோர்ட்டுகளின் அதிகாரப்பிரதேச எல்லைக்கு வெளியிலிருக்கிற பிரதிவாதிகளுக்கு ஸம்மன் சேர்ப்பிப்பதற்காக கோர்ட கட்டண முத்திரைத் தலைகள் ரூபாய் அடியிற கண்ட கட்டணத்தொகை விதித்து வசூல் செய்யத்தக்கதாகும் :—<br>ஒவ்வொரு ஸம்மனுக்காகவும்—<br>(a) ஒரே ஒரு பிரதிவாதிக்கு 8 அணு.<br>(b) அதேகாலத்தில் ஸம்மனுக்காக விண்ணப்பம் செய்துகொள்ளப்பட்டால், அதே கிராமத்தில் வசித்துக்கொண்டிருக்கிற உடன்சேர்க்கையான ஒவ்வொரு பிரதிவாதிக்கும், 4 அணு. |
| 1839-ம் வருஷம் மார்ச்மீ 27வ. ஸதர தாலத் நடவடிக்கை. | 1816-ம் வருஷத்து 4 - வது ரெகுலேஷன 13 - வது பிரிவு. கிராமக்கோர்ட்டுகளாக்ட் 35-வது பிரிவு. | கிராம முன்ஸிபுகளுக்குமுன் கொடுத்துகொள்ளப்படும் ராஜிநாமாக்கள் டிக்ரிகளைப்போலவே செலாவணியாகவேண்டியதுமல்லாமல், டிக்ரிகளைப் போலவே அவைகளை நிறைவேற்றவும்வேண்டும் |

* குறிப்பு.—ஆட்சேபிக்கிற கட்சிக்காரர் வியாஜ்ஜியத்தை மாற்றவேண்டுமென்று டிஸ்ட்ரிக்ட் முன்ஸிபுக்கு 21 - வது பிரிவின்படி விண்ணப்பம் செய்துகொள்ள இடமுண்டு.

| பிரமாணம். | பழைய ரெகுலேஷனிலுள்ள பிரிவும் தற்காலத்து ஆக்டில் அதற்குப் பொருத்தமான பிரிவும். | கருத்து. |
|---|---|---|
| 1827-ம் வருஷம் மார்ச் மீ 1௳ சென்னபட்டணம் கவர்ன்மெண்டாருடைய விளம்பரம். | 1816-ம் வருஷத்து 4-வது ரெகுலேஷன் 16-வது பிரிவு. கிராமக்கோர்ட்டுகளாக்ட் 39-வது, 12-வது பிரிவுகள். | ஸ்வல்பமானவைகளும் முக்கியமானதல்லாதவைகளுமான விஷயங்களில் சாட்சியங்கொடுக்க ஜமீன்தார்கள் முதலிய அந்தஸ்தும் கௌரவமுமுள்ள நபர்களுக்குச் சாட்சிகளாக வரும்படி ஸம்மனனுப்பாமல் கூடியவரையில் கிராம முன்ஸிபுகள் இருக்கவேண்டும். |
| ஷை கோர்ட்டாருடைய 1880-ம் வருஷம் மே மீ 4௳ 811-ம் நெ. நடவடிக்கை. | 1816-ம் வருஷத்து 4-வது ரெகுலேஷன் 15-வது பிரிவு. கிராமக்கோர்ட்டுகளாக்ட் 43-வது பிரிவு. | சாட்சிகள் தங்கள் சாட்சியஞ் சொல்ல முறைப்படி நிற்கவேண்டும். பலஹீனத்தினாலாவது வயோதிகத்தினாலாவது வியாதியினாலாவது அல்லது வேறே காரணத்தினாலாவது யாதொரு விஷயத்தில் சாட்சிக்கு ஆஸனங்கொடுப்பது யுக்தமென்று கிராம முன்ஸிபுகளுக்குத் தோற்றினாலன்றி மற்றப்படி, நின்று சாட்சியம் சொல்லச்சொல்லவேண்டும். இந்த வழக்கம் அப்படியே நடந்துகொண்டிருக்கவேண்டும். பிரமாணத்தையாவது உறுதிமொழியையாவது எப்போதும் நின்றுகொண்டே செய்யவேண்டும். எந்த விஷயத்திலும் சாட்சியையாவது கட்சிக்காரரையாவது பெஞ்சின்மேல் உட்காரவிடலாகாது. |
| 1884-ம் வருஷம் ஏப்ரல் மீ 30௳யிலும் ஜூன் மீ 16௳யிலும் பிறந்த 1050-ம் நெ. 1486-ம் நெ. கவர்ன்மெண்ட் உத்தரவுகள். | 1816-ம் வருஷத்து 4-வது ரெகுலேஷன் 30-வது பிரிவு. கிராமக்கோர்ட்டுகளாக்ட் 48-வது பிரிவு. | கிராம முன்ஸிபினுடைய டிக்ரியை நிறைவேற்றுவதற்காகப் பிறப்பிக்கப்படும் ஒவ்வொரு கட்டளைக்காகவும் கட்டணம் நாலணாவாகும். அக்கட்டணத்தை விண்ணப்பத்துடன் ஒட்டப்படும் கோர்ட் கட்டண ஸ்டாம்ப் ரூபமாகச் செலுத்தவேண்டும்; கட்டணஞ் செலுத்தியபின்பு முத்திரைத்தலையைக் குத்தித் துவாரமாக்கிவிடவேண்டும். |
| 1887-ம் வருஷம் நவம்பர் மீ 16௳யிலும் 1889-ம் வருஷம் பிப்ரவரி மீ 22௳யிலும் பிறந்த 2795-ம் நெ. 493-A நெ. ஷை கோர்ட் ஸர்க்குலர்கள். | ஷை | கிராம முன்ஸிபினுடைய டிக்ரியை நிறைவேற்றுகையில் செய்யப்படும் விற்பனைகளில் கொள் கிரயத்தொகைக்கு ரூபாய்க்கு ஒரு அணா வீதம் கிரயம் பெற்ற கடன்கொடுத்தவரிடத்திலிருந்து கட்டணம் வாங்கத்தக்கதாகும், அக்கட்டணத்தைக் கோர்ட் கட்டண ஸ்டாம்ப் ரூபமாக மாற்றவேண்டும். ஒரு அணாவுக்குக் குறைந்த பாகம் சேரவேண்டியதாயிருக்குமானால், ஒரு அணா விதிக்கப்படத்தக்கதாகும். இந்த கட்டணத்திற்கு பவுண்டேஜ் என்று பெயர். |

| பிரமாணம். | பழைய ரெகு லேஷனிலுள்ள பிரிவும் தற் காலத்து ஆக் டில் அதற்குப பொருத்தமான பிரிவும. | கருத்து. |
| --- | --- | --- |
| இந்தியன லா ரி போர்ட், வால் யுமை 9, சென்ன பட்டணம், 378-ம் பக்கம். | 1816-ம்ஹூ்த்து 4-வது ரெகு லேஷன 30-வது பிரிவு. கிராமக் கோர் ட்டுகளாகட் 62-வது பிரிவு. | டிக்ரியை மாற்றிக்கொள்ளப்பெற்றவர் அதை நிறைவேற்ற அனுமதிபெற் றுக்கொள்ளக்கூடும். |
| இந்தியன லா ரி போர்ட், வால யும் 9, சென்ன பட்டணம், 385-ம் பக்கம். | 1816-மஹூ்த்து 4-வது ரெகு லேஷன 35-வது பிரிவு. கிராமக்கோர்ட் டுகளாக 73-வது பிரிவு. | கிராம முனஸிபுகளுக்குமேல 1816-ம் ஹூ்த்து 4-வது ரெகுலேஷன் 35-வது பிரிவினால ஏற்படுத்தப்பட்டிருக்கிற அதிகாரங்கள அப்படிபபட்ட கிராம முனஸிபுகளுக்குமுன கொண்டு வரப்படும விபாஜ்ஜியங்களில் கட்சிக் காரர்களாயிருப்பவர்களுக்கு மாத்திரம பிரயோகப்படும். |

1899-ம்ஹூ்த்து 2-வது ஆக்ட்.

கிராம முன்ஸிபுகள் இந்த ஆக்டிற்கண்ட நிபந்தனைகளை நன்று யத் தெரிந்துகொண்டிருக்கவேண்டும. முத்திரை போடப்படாம லேயாவது போதுமான அளவுக்கு முத்திரை போடப்படாமலாவதி ருக்கிற தஸ்தவேஜுகளை, தண்டத்தொகையையும தீர்வை அல்லது தீர்வையின் மிகுதியான பாகத்தையும செலுத்துவதனமேல சாட் சியமாக ஏற்றுக்கொள்ள அவர்களுக்கு அதிகாரமுண்டு விதிக்கப் பட்ட தண்டத்தொகையையும தீர்வையையுங் காட்டுகிற ஒரு ரெ ஜிஸ்டரை வைத்திருக்கவேண்டும ; அந்த ரெஜிஸ்டருக்கு நமூனா அடியிற்கண்டிருக்கிறது ; அதிலிருந்து எடுக்கப்பட்ட எக்ஸ்ட்ராக் டையும், மேலேகண்டபடி ஏற்றுக்கொள்ளப்பட்ட தஸ்தவேஜு களையும் ஒவ்வொரு மாதத்திலும டிஸ்ட்ரிக்ட் முனஸிபுக்கு அனு ப்பிவிடவேண்டும்.

**முத்திரையே போடாமலும் போதுமான அளவுக்கு முத்திரை போடாமலுமிருந்து, ......... தாலூகா ......... கிராம முன்ஸிபினால் 1899-ம் ஹு 2-வது ஆக்ட் 33-வது பிரிவின்படி சாக்ஷியமாக ஏற்றுக்கொள்ளப்பட்ட தஸ்தவேஜுகளைக்குறித்த ரெஜிஸ்டர்.**

| வியாஜ்ஜிய நம்பர். | தஸ்தவேஜின் விவரமும் சாராம்சமும். | யாதொரு தண்டத் தொகையும் விதிக்கத்தக்கதல்லவென்று எதிர்வாதஞ் செய்யப்பட்டால், அப்படிப்பட்ட எதிர்வாதத்திற்குள்ள ஆதாரங்கள். | தண்டத்தொகை விதிக்கக் கிராம முனஸிப் தீர்மானிப்பதற்குள்ள ஆதாரங்கள். | விதிக்கப்பட்ட தொகை. | | | | தேதி. | | | ஷரா. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | தீர்வை. | தண்டத் தொகை. | மொத்தம். | யாரிடத்திலிருந்து வசூல் செய்யப்பட்டதோ அவர். | தஸ்தவேஜு காட்டப்பட்ட தேதி. | தண்டத் தொகை முதலியது விதிக்கப்பட்ட தேதி. | தண்டத் தொகை முதலியதைத் தாலூகாவுக்கு அனுப்பிய தேதி. | |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |
| | | | | | | | | | | | |

### 1870-ம் ஹு 7-வது ஆக்ட் (இந்தியா).

*கிராமக் கோர்ட்டுகளில் தாக்கல் செய்யப்படுகிற, காட்டப்படுகிற அல்லது ரெகார்ட் செய்யப்படுகிற, அல்லது அந்தக் கோர்ட்டாரால் வரப்பெற்றுக்கொள்ளப்படுகிற அல்லது சவதரிக்கப்படுகிற சகல விண்ணப்பங்களும் மனுக்களும நகலகளும் இந்த ஆக்டின்படி விதிக்கப்படத்தக்க கட்டணங்கள விதிக்கப்படுவதனின்றும் நிவாரணையாயிருக்கின்றன.*

### 1816-ம் ஹு 5-வது ரெகுலேஷனும் 1840-ம் ஹு 8-வது ஆக்டும்.

*ரொக்கத்தைப்பற்றியாவது அசையும்பொருள் எவ்வளவு மதிப்புள்ளதாயிருந்தாலும் அதைப்பற்றியாவது கொண்டுவரப்படும் வியாஜ்ஜியங்களைப் பரிசீலனை செய்வதற்காகத் தங்களுடைய கிராமங்களுக்குட்பட்ட கிராம பஞ்சாயத்துகளைச் சேர்க்கக் கிராம முனஸிபுகளுக்கு 1816-ம் ஹு 5-வது ரெகுலேஷனபடி அதிகாரமுண்டு. விவாதம் நேரிடுவதனால் பிடிக்கத்தக்க செலவைக் குறைக்கவேண்டுமென்பதும், முக்கியமானவர்களாயும் மிகவும் புத்திசாலிகளாயுமிருக்கிற குடித்தனக்காரர்களைக்கொண்டு அவர்களுடைய அயலாருக்கு நியாயம் நடத்துவிப்பதனாலே அக்குடித்தனக்காரர்களை உபயோகமுள்ளவர்களாகவும் மதிக்கத்தக்கவர்களாகவும் செய்யவேண்டுமென்பதும் மேற்படி ரெகுலேஷன் கருத்தாகும்; இந்த விஷயம் அந்த ரெகுலேஷன பீடிகையிலே தெரியவரும். ஆகடினபடி பஞ்சாயத்தாரை ஸமமனனுப்பி வரவழைக்க முன்ஸிபுக்குள்ள அதிகாரத்தை,*

2-வது பிரிவைச்சேர்ந்த மூன்றாவது பகுதியிலுள்ள விலக்குக்குட்பட்டு, அந்த பிரிவின் 2-வது பகுதியில் சொல்லப்பட்டிருக்கிற இரண்டு விஷயங்களுக்கு மாத்திரம் உபயோகிக்கலாகுமென்பதைக் கவனித்தல்வேண்டும்.

பஞ்சாயத்தைச் சேர்க்கிற விதம் இன்னதென்று 3-வது பிரிவில் சொல்லியிருக்கிறது. பஞ்சாயத்தாருக்கு அனுப்பப்பட்ட விஷயத்தை விசாரணை செய்கையில் அவர்கள் அநுசரிக்கவேண்டிய முறைமையைக்குறித்துப் பொதுவாய ஆக்டின 4-வது பிரிவு முதல் 7-வது பிரிவுவரையிலுள்ள பிரிவுகளில் சொல்லியிருக்கிறது; 4-வது பிரிவைச்சேர்ந்த 2-வது, 8-வது. 13-வது உட்பிரிவுகளிலும் 5-வது பிரிவிலும் சொல்லியிருக்கிற கடமைகள்தான் முனஸிபுகளுடைய கடமைகளாகும்.

வியாஜ்ஜியத்தைத் தீர்மானிக்கப் பஞ்சாயத்தாருக்குள் பெரும்பான்மையாருக்கு அதிகாரமுண்டு; அந்த தீர்மானத்தைச் சட்டப்படி நியாயமானதாக்குவதற்கு 1840-ம் வருஷத்து 8-வது ஆக்டின்படி அவர்களுடைய கையெழுத்து அல்லது கைநாட்டு செய்வது போதுமானது; ஆயினும், பெரும்பான்மையோரால் செய்யப்பட்ட தீர்மானத்திற்குக் கையெழுத்து அல்லது கைநாட்டுச்செய்யச் சிறுபான்மையோருக்கு இஷ்டமிராவிட்டால் அந்தப்படி கையெழுத்து அல்லது கைநாட்டு செய்யாமைக்குத் தமக்குள்ள நியாயங்களை எழுதித் தங்களுடைய கைநாட்டு அல்லது கையெழுத்து இட்டுவைக்க அச்சிறுபான்மையோருக்குச் சுதந்தரமுண்டு. முத்திரையிட்ட லகோட்டாவில் டிகரிகளின் நகல்களை முனஸிப் வரப்பெற்றுக்கொள்ளும்போது, 8-வது, 9-வது பிரிவுகளில் சொல்லியிருக்கிற முறைமையை அவர் அநுசரிக்கவேண்டும். ஒருவனுக்கு நேரில் செய்யப்பட்ட தீங்குகளினிமித்தம் நஷ்டங்கட்டிக் கொடுக்கவேண்டுமென்றாவது ஒருவனுக்கு நேரில் சேரவேண்டிய எவ்வகையான நஷ்டம் வாங்கும்பொருட்டாவது கொண்டுவரப்படும் வியாஜ்ஜியங்களை 12-வது பிரிவின்படி கிராமப் பஞ்சாயத்தாருடைய அபிப்பிராயத்துக்கு அனுப்புவது கூடாதென்பதை கிராம முனஸிபுகள் கவனிக்கவேண்டும். பைசல் செய்யப்பட்ட யாதொரு தொகை அல்லது வேறே அசையும்பொருளின் அளவாவது அதன் பெறுமானமாவது 100 ரூபாய்க்கு அதிகப்படாமலிருக்கும்போது, கிராமப் பஞ்சாயத்தாருடைய டிகரிகளைக் கிராம முனஸிபுகள் நிறைவேற்றக்கூடும்.

1816-ம் வருஷத்து 5-வது ரெகுலேஷன்படிக்கான விதியேற்பாடுகள்.

| பிரமாணம் | ரெகுலேஷன் பிரிவு. | கருத்து. |
|---|---|---|
| 1837-ம் வருஷம் ஜனவரி மீ 27உ பிறந்த ஸதரதாலத். | 4-வது பிரிவின் 2 குறிப்பிட்ட பாகம். | இந்த பாகத்தினால் செய்யப்படவேண்டிய உடன்படிக்கையைப் பஞ்சாயத்தாருக்கு முன் கொண்டுபோகாமை பஞ்சாயத்தாரால் செய்யப்படும் டிக்ரிக்கு பாதகமாகும். |

## 1816-ம் ௵த்து 5-வது ரெகுலேஷன்படிக்கான விதியேற்பாடுகள்—தொடர்ச்சி.

| பிரமாணம். | ரெகுலேஷன பிரிவு. | கருத்து. |
|---|---|---|
| 1828-ம் ௵ பிப்ரவரி ௴ 28௳ பிறந்த ஸதராதாலத் ஸர்க்குலர் உத்தரவு. | 4-வது பிரிவு. | ஸ்வமேற யாதொரு நீதிவிசாரணைகர்த்தாக்களுக்குமுன் எப்படியோ அப்படியே பஞ்சாயத்தாருக்கு முன்னும் யாதொரு வியாஜ்ஜியத்தில் ராஜிநாமாவை ஏற்றுக்கொள்ளலாம். உபய கட்சிக்காரரும் சம்மதிப்பார்களானால் பஞ்சாயத்தாருடைய தீர்மானத்திற்கு வியாஜ்ஜியம் அனுப்பலாகும்; ஆகையால், மேற்படியார்களுடைய சம்மதியின்படி அந்த வியாஜ்ஜியத்தை மறுபடியும் வாபஸெடுத்துக்கொள்ளலாம்; தீர்மானத்தை ஒப்புக்கொள்ளுகிறோமென்று எழுதிக்கொடுத்த முச்சிலிக்கா ரத்தாகவேண்டியதுதானே. |
| 1828-ம் ௵ மார்ச் ௴ 27௳ பிறந்த ஸதராதாலத் ஸர்க்குலர் உத்தரவு. | 6-வது பிரிவு. | தீர்மானம் கொடுப்பதற்குமுன்னே பஞ்சாயத்தைச் சேர்ந்த ஒருவராவது பலராவது இறந்துபோனால், அது காரணமாக அந்த பஞ்சாயத்து கலைந்துபோனதாகவும், முச்சிலிக்கா சட்டப்படி செலாவணியாகாததாய்விட்டதாகவும் பாவிக்கப்படவேண்டும். நூதன பஞ்சாயத்து வேண்டுமென்று கட்சிக்காரர்கள் விண்ணப்பஞ்செய்துகொண்டால், முந்திய பஞ்சாயத்தைச் சேர்ந்து ஜீவித்திருக்கிறவர்களுக்கு இந்த பஞ்சாயத்தில் சேர சுதந்தரமுண்டு; மேலும் முந்திய பஞ்சாயத்தாருக்குமுன் எழுதிக்கொள்ளப்பட்ட எவையேனும் வாக்குமூலங்கள் சரியானவைகளென்று அத்தாட்சி கூறப்பட்டிருக்குமாகில் அவைகளை உபயோகித்துக்கொள்ள நூதன பஞ்சாயத்தாருக்குச் சுதந்தரமுண்டு. |
| 1824-ம் ௵ மார்ச் ௴ 19௳ பிறந்த ஸதராதாலத் ஸர்க்குலர் உத்தரவு. | 12-வது பிரிவு. | நஷ்டத்திற்காகக் கொண்டுவரப்படும் எல்லா வியாஜ்ஜியங்களும் பஞ்சாயத்தார் பிடிக்கக்கூடாதென்று நிவர்த்திசெய்யப்பட்டிருக்கின்றன. |
| M. P. 110-ம் ந. விஷயமாக 1836-ம் ௵ அக்டோபர் ௴ 24௳ யுள்ள ஸதராதாலத் நடவடிக்கை. | 12-வது பிரிவு. | யாதொரு கோர்ட்டாருடைய டிக்ரியின்படி கடைசியாயத் தீர்மானிக்கப்பட்ட வியாஜ்ஜியத்தின் சாராம்சங்களைப்பற்றி விசாரணைசெய்யப் பஞ்சாயத்தாருக்கு எவ்வளவும் அதிகாரங் கிடையாது. |
| இந்தியன் லா ரிபோர்ட், 7-வது வால்யும், சென்னைபட்டணம், [illegible]52-ம் பக்கம். | 17-வது பிரிவு. | ரெகுலேஷனைச் சேர்ந்த 17-வது பிரிவு பிந்திய சட்டதிட்டங்களினால் ரத்துசெய்யப்படவில்லை. |
| 1829-ம் ௵ பிப்ரவரி ௴ 18௳ யுள்ள ஸதராதாலத் நடவடிக்கை. | 17-வது பிரிவு | முந்திய மாதத்தில் தீர்மானிக்கப்பட்ட வியாஜ்ஜியங்களைக்குறித்தது அடியிற்கண்ட நமூனாப்படி கர்ணம் எழுதிய ரிபோர்ட்டை கிராம முன்சிபுகள் பிரதி சௌர மாதம் முதல்தேதியில் டிஸ்டிரிக்ட் முன்சிபுக்கு அனுப்பவேண்டும். |

**மூ—த்தில் கிராமத்திலே பஞ்சாயத்தாரால் தீர்மானிக்கப்பட்ட வியாஜ்ஜியங்களைப்பற்றிய ரிபோர்ட்.**

| நம்பர். | கட்சிக்காரர்களுடைய பெயர். | வியாஜ்ஜியங்களின் சாராம்சம். | தாக்கல் செய்யப்பட்டதேதி. | டிக்ரியின் தேதியும் அதன் பொழிப்பும். |
|---|---|---|---|---|
| | | | | |

தங்களுக்குமுன் பைசலாகாமலிருக்கிற வியாஜ்ஜியங்களைக்குறித்துக் கிராமமுன்ஸிப்புகள் - கர்ணத்தினுடைய அடியிற்கண்ட நமூனைப்படி எழுதப்படும் ரிபோர்ட்டுகளைப் பிரதிவருஷம் ஜனவரிமீ 1உ யிலும் ஜூலைமீ 1உயிலும் டிஸ்ட்ரிக்ட் முன்ஸிப்புக்கு அனுப்பவேண்டும் :—

**ஜனவரிமூ 1உயில் அல்லது ஜூலைமூ 1உயில் கிராமத்திலே பஞ்சாயத்தாருக்குமுன் தீர்மானமாகாமலிருக்கிற வியாஜ்ஜியங்களைப்பற்றிய ரிபோர்ட்.**

| நம்பர் | கட்சிக்காரர்களுடைய பெயர். | வியாஜ்ஜியங்களின் சாராம்சம். | தாக்கல் செய்யப்பட்ட தேதி. |
|---|---|---|---|
| | | | |

இந்த ரிபோர்ட்டுகளை "ஸெர்விஸ் பேரிங்காய்" சர்க்கார் தபால் மூலமாகவாவது ஒரு சேவகன் மூலமாகவாவது டிஸ்ட்ரிக்ட் முன்ஸிப்புக்கோ அல்லது அதிசமீபத்திலுள்ள பொலீஸ் உத்தியோகஸ்தருக்கோ அனுப்பிவிடவேண்டும்; அந்தப் பொலீஸ் உத்தியோகஸ்தர் அவைகளுக்காக ரசீதுகொடுத்து அவைகளை டிஸ்ட்ரிக்ட் முன்ஸிப்புக்கு அனுப்பிவிடவேண்டும்.

## 1816-ம்ஹூ 12-வது ரெகுலேஷன்.

(1) நிச்சயமாய் ஏற்படாததாகவாவது விவாதத்திலிருக்கிறதாகவாவதுள்ள எல்லை அல்லது நில அடையாளத்தைத் தீர்மானிக்கிற பட்சத்திலே நிலங்கள் அல்லது பயிர்களைப்பற்றிய தாவாக்கள் செலாவணியாகத்தக்கவைகளாயிருக்குமாகில் அப்படிப்பட்ட தாவாக்களுக்கும், (2) பூஸ்திதிக்குடையவர்கள் அல்லது குத்தகைதாரர்களுக்கும் அவர்களுடைய ரயத்துகளுக்கும் நிலத்தின் அனுபோகத்தைப்பற்றியும் சாகுபடியைப்பற்றியும் நீர்ப்பாய்ச்சலைப்பற்றியும் நேரிடுகிற விவாதங்களுக்கும் சம்பந்தப்பட்ட சச்சரவுகளைப் பைசல்செய்து

தீர்மானிப்பதற்காக கிராமப்பஞ்சாயத்தாரைச் சேர்க்கவேண்டுமென்று கிராமமுன்ஸிப்புகளுக்கு உத்தரவுசெய்ய இந்த ரெகுலேஷன்படி கலெக்டர்களுக்கு அதிகாரமுண்டு.

பஞ்சாயத்தாரைச்சேர்ப்பதும் பஞ்சாயத்தார் நடத்தும் நடவடிக்கைகளும் 1816-ம்ஸ்ரீத்து 5-வது ரெகுலேஷனில் சொல்லப்பட்டிருக்கிற விதிகளுக்கிணங்கி இருக்கவேண்டும்.

1816-ம்ஸ்ரீத்து 12-வது ரெகுலேஷன்படிக்கான விதியேற்பாடுகள்.

| பிரமாணம். | ரெகுலேஷன் பிரிவு. | கருத்து. |
|---|---|---|
| 1856-ம்ஸ்ரீ மேமீ 13உ பிறந்த ரெவினியுபோர்டார் ஸர்க்குலர் உத்தரவு 43-வது பக்கம்.<br>1837-ம்ஸ்ரீத்து 4-வது ஆக்ட். | பொது .. | சுதேசிகளுக்கு எப்படியோ அப்படியே நிலங்களை வைத்துக்கொண்டிருக்கிற ஐரோப்பியர்களுக்கும் இந்த ரெகுலேஷன் பிரயோகப்படத்தக்கதாகும். பஞ்சாயத்தைச்சேர்ந்த எல்லாரும் ஐரோப்பியர்களாகவாவது சிலர் ஐரோப்பியர்களாகவாவதிருக்கலாம். |
| 1837-ம்ஸ்ரீ ஜனவரிமீ 27உ பிறந்த ஸதரதாலத் நடவடிக்கை. | 6-வது பிரிவு 1-வது பகுதி. | கிராமப்பஞ்சாயத்தாருடைய அபிப்பிராயத்திற்கு யாதொரு கேஸ் அனுப்பப்படுவதன்மேல், இந்தப் பகுதியின் நிபந்தனைகளின்படி அந்த பஞ்சாயத்தைச் சேர்க்கவேண்டுமென்றும், 1816-ம்ஸ்ரீத்து 5-வது ரெகுலேஷன்படி நடவடிக்கை நடத்தவேண்டுமென்றும் இந்தப் பகுதியில் கண்டிருக்கிறது.<br>இந்த ரெகுலேஷன்படி அபிப்பிராயத்திற்கு அனுப்பப்பட்ட யாதொரு வியாஜ்ஜியத்திலே, 1816-ம்ஸ்ரீத்து 5-வது ரெகுலேஷன் 4-வது பிரிவைச்சேர்ந்த 2-வது பகுதியின்படி கிராமப்பஞ்சாயத்தாருக்குமுன் எழுத்து மூலமான உடன்படிக்கையைக் கொண்டுபோகாமலிருப்பது டிகரிக்குப் பாதகமாகும். |
| 1828-ம்ஸ்ரீ பிப்ரவரிமீ 28உ பிறந்த ஸதரதாலத் ஸர்க்குலர் உத்தரவு. | ... | பஞ்சாயத்தாருக்குமுன் ராஜிநாமா தாக்கல் செய்ய கட்சிக்காரர்களுக்குச் சுதந்தரமுண்டு. பஞ்சாயத்தைச்சேர்ந்த ஒருவர் இறந்துபோகிற விஷயத்திலே, அது காரணமாக அந்த பஞ்சாயத்து கலைந்துபோகிறது. |

3. பலவகைப்பட்டவை.

வகாலத்துநாமாவுக்குச் சாட்சிகையெழுத்துபோடுவது.

1. வகாலத்துநாமாக்களில் கையெழுத்துசெய்கிற கட்சிக்காரர்கள் விண்ணப்பமெழுதிக் கேட்டுக்கொள்வதன்மேல், கிராமமுன்ஸிபுகள் அவைகளில் சாட்சிகையெழுத்து போடலாம்.

இதுவிஷயமாகச் செய்துகொள்ளப்படும் விண்ணப்பங்களுக்கு யாதொரு கட்டணமும் கிடையாதென்று நிவாரணை ஏற்படுத்தப் பட்டிருக்கிறது; அல்லாமலும், சாட்சிகளைப்பெழுத்து போடுவதற்கு எவ்வித கட்டணமும் வாங்கக்கூடாது.

யாதொரு வகாலத்துநாமா எழுதப்படுவதற்குமுன்னே அதில் வக்கீலுடைய பெயர் காணப்படாவிட்டாலன்றி மற்றப்படி, அந்த வகாலத்துநாமா சரியானதென்று அதில் கையெழுத்துசெய்யக்கூடாது.

கிராம முன்ஸிபுகளின் ரெகார்டுகளுக்கு நகல்கள்.

2. (a) ஒரு கிராமமுன்ஸிபின் ரெகார்டுகளுக்கு நகல்கள் பெறுவதற்கான விண்ணப்பத்தை நேரில் அந்தக் கிராமமுன்ஸிபுக்காவது அந்தக் கிராம் சோட் யாருடைய அதிகார வரம்புக்குள் இருக்கிறதோ அந்த டிஸ்ட்ரிக்ட் முன்ஸிபுக்காவது செய்துகொள்ளலாம். அப்படிப்பட்ட ஒவ்வொரு விண்ணப்பத்திலும், ஷை நகல்கள் தயாரானவுடன் அவைகளை எந்த விதமாய்த் தம்மிடத்தில் ஒப்புவிக்கப்படவேண்டுமென்று அந்த விண்ணப்பதாரர் விரும்புகிறாரோ அதாவது—

(1) ஷை நகல்களை அந்தக் கிராமமுன்ஸிபினிடத்திலிருந்தாவது இதுசம்பந்தப்பட்ட டிஸ்ட்ரிக்ட் முன்ஸிபினிடத்திலிருந்தாவது தாம் நேரில் பெற்றுக்கொள்ள விரும்புகிறாரோ, அல்லது

(2) அந்த டிஸ்ட்ரிக்ட் முன்ஸிபின் கோர்ட்டிலிருந்து ஷை நகல்களை ரெஜிஸ்டர் தபால் மூலமாயத் தமக்கு அனுப்பவேண்டுமென்று விரும்புகிறாரோ,

அதைக் கண்டெழுதவேண்டும்.

அந்த நகல்களை ரெஜிஸ்டர் தபால்மூலமாய்த் தமக்கு அனுப்பவேண்டுமென்று விண்ணப்பதாரர் விரும்புகிறபட்சத்திலே, அவர் - அந்தப்படி செய்வதற்குப் பிடிக்கும் செலவை டிஸ்ட்ரிக்ட் முன்ஸிபின் கோர்ட்டில் டிபாஸிட்செய்யவேண்டும்.

(b) அந்த விண்ணப்பமானது யாதொரு கிராம முன்ஸிபுக்கு நேரில் செய்துகொள்ளப்பட்டால், அவர் அவசியமான முத்திரைக்கடுதாசிகளைச் சவதரிக்கும்படி உடனே கேட்கவேண்டும்; அவர் - அவைகளைப் பெற்றுக்கொண்டதனமேல், அந்த விண்ணப்பத்தையும் முத்திரைக்கடுதாசிகளையும் எந்த ரெகார்டுகளுக்கு நகல்கள் கேட்கப்பட்டிருக்கின்றனவோ அந்த ரெகார்டுகளையும், அவருடைய கிராமம் யாருடைய அதிகார வரம்புக்குள் இருக்கிறதோ அந்த டிஸ்ட்ரிக்ட் முன்ஸிபுக்கு அனுப்பவேண்டும்.

(c) அந்தக் கிராமம் யாருடைய அதிகாரவரம்புக்குள் இருக்கிறதோ அந்த டிஸ்ட்ரிக்ட் முன்ஸிபுக்கு ஷை விண்ணப்பம்செய்துகொள்ளப்பட்டால், அந்த டிஸ்ட்ரிக்ட் முன்ஸிபானவர் - எந்த ரெகார்டுகளுக்கு நகல்கள் கேட்கப்பட்டிருக்கின்றனவோ அந்த ரெகார்டுகளை அனுப்பும்படி இது சம்பந்தப்பட்ட கிராம முன்ஸிபை

உடனே கேட்கவேண்டும்; அவர் அவைகளைப் பெற்றுக்கொண்ட தன்மேல், அவசியமான முத்திரைக்கடுதாசிகளைச் சவதரிக்கும்படி கேட்கவேண்டும்.

(d) மேலே கண்ட இரண்டு விதங்களில் எந்த . . . — , டிஸ்ட்ரிக்ட் முன்ஸிபானவர் நகல்களைச்செய்பவர் சம்பந்தமாகவுள்ள சாதாரண விதிகளின்படி அந்த நகல்களைத் தயார்செய்வித்து, விண்ணப்பதாரர் விரும்புமவிதமாய் அவைகளை அவரிடத்தில் ஒப்புவிக்கவேண்டும். அதன்மேல் அந்த ரெகார்டுகளைக் கிராமமுன்ஸிபுக்குத் திரும்ப அனுப்பிவிடவேண்டும்.

ரெகார்டுகளை அழித்துவிடுவது.

3. விதிகளின்படி அழித்துவிடுவதற்கு உள்ளாகத்தக்க தங்களுடைய கோர்ட்டுகளின் ரெகார்டுகளையெல்லாம் கிராமமுன்ஸிபானவர் நன்றாய்ப் பார்வையிட்டு அழிக்கப்படுவதற்காக டிஸ்ட்ரிக்ட் முன்ஸிபுகளுக்கு அனுப்பிவிடவேண்டும்.

## 3-ம் அத்தியாயம்.—பொலீஸாரின் அலுவல்களும் மாஜிஸ்ட்ரேட்டின் அலுவல்களும்.

4. பொலீஸாருடனுள்ள சம்பந்தம்.

* 1816-ம் வருஷத்து 11-வது ரெகுலேஷன்படி கிராமப் பெரியதனக்காரர் - தம்முடைய கிராமத்தில் முக்கியமான பொலீஸ் அதிகாரங்களை உடையவராவார்; மேலும், சாதாரண பொலீஸார் யாதொரு கிராமத்தில் அலுவல் பார்த்துக்கொண்டிருக்கையிலே, அந்தக் கிராமப் பெரியதனக்காரரிடத்தில் மரியாதையுடனும் வினயத்துடனும் நடந்துகொள்ளவேண்டும். அவருடைய ஆலோசனையையும் உதவியையும் கோரவேண்டியதல்லாமல், (பொலீஸ்) ஜவான்கள் கிராமப் பெரியதனக்காரர்களை அடிக்கடி பார்க்கவேண்டுமென்றும், அவர்களோடு கலந்து ஆலோசனை பண்ணவேண்டுமென்றும் அவர்களுக்கு உத்தரவு செய்யவேண்டும். பொலீஸார்-யாதொரு கிராமத்தில் குற்றங்கள் நடவாதபடி தடுக்கும்போதும் குற்றங்களைக் கண்டுபிடிக்கும்போதும், அந்தக் கிராமப் பெரியதனக்காரர் தங்களோடு முழுமையும் ஏகோபித்துத் தங்களுக்கு உதவிசெய்யப்பெறுவதற்கு ஆதாரராயிருக்கிறார்கள்; ஷை கிராமப் பெரியதனக்காரர் தம்முடைய தலையாரிகளுடன் தம்மாலியன்றவரையில் பொலீஸாருக்கு எல்லா உதவியும் செய்யவேண்டும்.

2. யாதொரு பொலீஸ் ஜவான் எந்தக் காரியத்துக்காகவாகிலும் யாதொரு கிராமத்துக்கு வரும்போது, அந்தக் கிராம மாஜிஸ்ட்ரேட்டாவது, அவர் இல்லாதபோது கர்ணமாவது, அந்தக் கிராமத்தைச் சேர்ந்த வேறே யாதொரு கௌரவமான நபராவது (ஷை ஜவான்) வந்துசேர்ந்த மணிநேரத்தை ஜவானுடைய பீட் புஸ்தகத்தில் பதிவு செய்து அதில் கையெழுத்து போடவேண்டியதுமல்லாமல், அவனுக்குத் தெரிவிக்கப்படும் யாதொரு சங்கதியின் சாராம்சத்தையும் கண்டெழுதலாம். அந்த சங்கதி பெரிதாயிருந்தால், அதைப் பிரத்தியேகமான ஒரு துண்டு காகிதத்திலெழுதி அந்த ஜவானிடத்தில் கொடுக்கவேண்டும்.

3. மறியல் வாரண்டுகளையும் சோதனை வாரண்டுகளையும் அபராதங்களை வசூல் செய்வதற்காக ஜங்கம சொத்தை ஜப்திசெய்து ஏலம் போடுவதற்கான வாரண்டுகளையும் நிறைவேற்றும்போதாவது, எந்தக் குற்றங்களைச் செய்தால் வாரண்டில்லாமலே பிடிக்க பொலீஸாருக்கு அதிகாரமிருக்கிறதோ அந்தக் குற்றங்களைச் செய்கிறவர்களைப் பிடிக்கும்போதாவது ஜவான்களுக்கு வேண்டியிருக்கிற எல்லா உதவியையும் கிராமப் பெரியதனக்காரரும் கிராமக் காவற்காரர்களும் செய்யக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

4. உடுப்புமுதலியசாமான்களை எடுத்துக்கொண்டுபோக ஜவான்கள் தலையாரிகளை உபயோகித்துக்கொள்ளாமலிருக்கும்படி கிராமப் பெரியதனக்காரர் பார்க்கவேண்டும்.

---

* 6-வது அனுபந்தமாக அச்சிடப்பட்டிருக்கிறது.

5. குற்றத்தைத தடுப்பது.

5. யாதொரு கிராமப் பெரியதனககாரா தமமுடைய கிராம எல்லைகளுக்குள குற்றங்கள் நடவாதபடி எல்லாவகையாலும தடுக்க முயலுவது தம்முடைய கடமையென்பதைத் தெரிந்துகொள்ளவேண்டும்.

6. கூட்டக் கொளளைககாரர்களைப் பற்றியாவது தம்முடைய கிராமத்திலோ வேறே யாதொரு கிராமத்திலோ பிரவேசித்திருக்கிற சந்தேகத்துக்கிடமான நபர்களை சமபந்தமாயாவது கிராமப் பெரியதனககாரருககு சஙகதி எதேனும தெரியவருமாகில, அதை அவர் பொலீஸாருக்குத் தெரியப்படுத்துவதும தேசத்தின பொதுவான பாதுகாப்புககாக சகல காரியஙகளிலும உபயோகித்து நடப்பதும அவருடைய கடமையாகும்.

7. சந்தேகத்துககிடமான தோற்றத்தையுடைய அனனியர்கள் தமமுடைய கிராமத்தில வந்திருககிறாாகளென்பதையும, அவர்களைப்பற்றித் தாம சேகரிக்ககூடியதாயிருக்கிற எல்லா சங்கதியையும் பிரதேச ஸப்மாஜிஸ்ட்ரேட்டுககும பொலீஸாருககும ரிபோர்ட் செயவது அவருடைய கடமையாகும. இந்தக காரியத்துககாக, XI-ம அனுபந்தத்தில நிர்ணயிககப்பட்ட நமூனாபபடி ஒரு ரெஜிஸ்டரை அவா வைத்துவரவேணடும்; மேலும, அந்த ரெஜிஸ்டரானது பொலீஸாரும மாஜிஸட்ரேட் உத்தியோகஸ்தாகளும் பார்வையிடக்கூடியபடி வைத்திருககப்படும.

8. அமரிகையைக் கெடுப்பதற்கேற்ற யாதொரு கலகம் முதலியது சம்பவிக்குமபோலிருககுமாகில, அவா-அப்படிப்பட்டதைச் சம்பவிக்கவிடாமல் தடுப்பதற்காக ஏற்பாடுகள செயயும்பொருட்டு, அதைக்குறித்து அதி சமீபத்திலுள்ள பொலீஸாருக்கு மாத்திரமல்லாமல் மாஜிஸ்ட்ரேட்டுக்குங்கூட உடனே சங்கதி தெரிவிக்கவேண்டும்.

9. தம்முடைய கிராம எல்லைகளுக்குள் வசித்துக்கொணடிருககும் பிரசித்தமான கொள்ளைக்காரர்கள அல்லது நிலையாய்க் குற்றஞ்செய்வதையே தொழிலாகக்கொணட கூட்டத்தைச் சேர்ந்தவாகள அல்லது க்ரிமினல் ப்ரொஸீஜர்கோட் 565-வது பிரிவின்படி தங்களுடைய இருப்பிடமுதலிய விவரங்களைப பொலீஸாருக்குத் தெரிவிக்கும்படி உத்தரவு செய்யபபட்டிருக்கும் நபாகளைக்குறித்தும், பிரசித்திபெற்ற சந்தேகத்திற்கிடமான எந்த நபாகளைத் தாம் கவனித்துவர வேண்டுமென்று பொலீஸாரால் கேட்டுக்கொள்ளப்படுகிறாரோ அந்த நபர்களைப்பற்றியும கிராமப் பெரியதனக்காரர் - XII-ம அனுபந்தத்தில் நிர்ணயிககப்பட்டிருக்கிற நமூனாப்படி ஒரு ரெஜிஸ்டர வைத்துவரவேண்டும். இந்த ரெஜிஸ்டரின் முதல் ஐந்து கலங்களில் செய்யவேண்டிய பதிவுகளை ஸ்டேஷன் ஹௌஸ் ஆபிஸராவது அவர் யாருக்குக் கீழ்பபட்டிருக்கிறாரோ அந்த உத்தியோகஸ்தராவது செய்வார். இந்த ரெஜிஸ்டரில பதிவு செய்யப்பட்டிருககிற யாதொரு நபர் தமமுடைய கிராமத்தில இல்லாமற்போய்விட்டால், ஒரு யாதாஸ்து நமூனாவின் மூலமாய்—பின்னால்வரும் 6-வது

பிரிவைப்பார்க்க—ஸ்டேஷன் ஹௌஸ் ஆபிஸருக்கு அப்படி இல்லாமற்போனதைப்பற்றி உடனே தெரிவிப்பது கிராமப் பெரியதனக்காரரின் கடமையாகும். அந் நபர் திரும்பிவரும்போது, அப்படி திரும்பிவந்ததைப்பற்றி மேலேகண்ட மாதிரியாய் ஒரு ரிபோர்ட் அனுப்பவும்வேண்டும். கிராமப் பெரியதனக்காரர்களால் வைத்துவரப்பட்ட இந்த ரெஜிஸ்டரும் மற்ற எல்லா பொலீஸ் ரெஜிஸ்டர்களும் பொலீஸாரால் பார்வையிடக்கூடியபடி வைத்துவைக்கப்படும்.

10. க்ரிமினல் ப்ரொஸீஜர்கோட் 45 - வது பிரிவின்படி, ஒவ்வொரு கிராமப் பெரியதனக்காரரும், கிராமக் கணக்கப்பிள்ளையும், கிராமக் காவற்காரரும், நிலத்தீர்வை அல்லது நிலத்தின் குத்தகைத் தொகையைக் கவர்ன்மெண்டாருக்காகவாவது கோர்ட் ஆவ் வார்ட்ஸாருக்காகவாவது வசூல் செய்யும் வேலையில் அமர்ந்திருக்கிற ஒவ்வொரு உத்தியோகஸ்தரும், அடியிற்கண்ட விஷயங்களைக்குறித்துத் தமக்குக் கிடைக்கக்கூடிய யாதொரு சங்கதியை அதிசமீபத்திலுள்ள மாஜிஸ்டரேட், அல்லது அதிசமீபத்திலுள்ள பொலீஸ் ஸ்டேஷன் விசாரணை உத்தியோகஸ்தர், ஆகிய இவர்களில் யார் அதிசமீபத்திலிருக்கிறாரோ அவருக்கு உடனே தெரியப்படுத்துவது அவருடைய கடமையாகும். அந்த விஷயங்களாவன :—

(a) எதற்குத் தாம் பெரியதனக்காரராகவாவது கணக்கப்பிள்ளையாகவாவது காவற்காரராகவாவது பொலீஸ் உத்தியோகஸ்தராகவாவது இருக்கிறாரோ, அல்லது எதில் தாம் நிலத்துக்குடையவராயிருக்கிறாரோ அல்லது நிலத்தை அனுபோகத்தில் வைத்துக்கொண்டிருக்கிறாரோ அல்லது ஏஜெண்டாயிருக்கிறாரோ அல்லது எதில் தாம் தீர்வையாவது குத்தகைத் தொகையாவது வசூல் செய்கிறாரோ அப்படிப்பட்ட யாதொரு கிராமத்தில், திருட்டுச்சொத்தை வாங்குவதிலாகிலும் விற்பதிலாகிலும் பிரசித்தியடைந்திருக்கிற யாதொருவன் நிலையாகவேனும் சிறிது காலத்துக்காகவேனும் வசித்துக்கொண்டிருக்கிற இடம் ;

(b) தக்கித் திருடனென்றாவது, கூட்டக் கொள்ளைக்காரனென்றாவது, தப்பித்துக்கொண்டு ஓடிப்போய்விட்ட கைதியென்றாவது பிரசித்தஞ் செய்யப்பட்ட குற்றவாளியெனறாவது தெரிந்திருக்கிற அல்லது அப்படிப்பட்டவனென்று நியாயமான காரணத்தைக்கொண்டு தாம் அனுமானிக்கிற யாதொரு நபர் அப்படிப்பட்ட கிராமத்துக்குள் யாதொரு இடத்துக்கு வந்திருப்பது அல்லது அந்த கிராமத்தின் மூலமாய்ப் போயிருப்பது ;

(c) ஜாமீன் வாங்கத்தக்கதல்லாத யாதொரு குற்றத்தையாவது, இந்தியன் பினல்கோடைச்சேர்ந்த அடியிற்கண்ட பிரிவுகளில் எதன்படியாகிலும் தண்டிக்கப்படத்தக்க யாதொரு குற்றத்தையாவது அப்படிப்பட்ட கிராமத்திலாயினும அதற்குச் சமீபத்திலாயினும் செய்வது அல்லது செய்ய எண்ணங்கொண்டிருப்பது :—

143. சட்ட விரோதமான கூட்டத்தில் ஒருவனாயிருப்பது.

144. மரண முண்டுபண்ணுவதற்கான ஆயுதத்தைத் தரித்துக்கொண்டு சட்டவிரோதமான கூட்டத்தில் சேருவது.

145. யாதொரு சட்ட விரோதமான கூட்டம் கலைந்துபோகும்படி உத்தரவு செய்யப்பட்டிருக்கிறதென்று தெரிந்திருந்து அந்தக் கூட்டத்தில் சேருவது அல்லது அதில் இருந்துவருவது.

147. கலகஞ்செய்வது.

148. மரண முண்டுபண்ணுவதற்கான ஆயுதம் தரித்துக்கொண்டு கலகஞ்செய்வது.

(d) யாதொரு சடுதியான மரணமாவது அசாதாரணமான மரணமாவது சந்தேகத்துக்கிடமான சந்தர்ப்பங்களில் யாதொரு மரணமாவது அப்படிப்பட்ட கிராமத்திலேலா அல்லது அதற்குச் சமீபத்திலேலா நேரிடுவது;

(e) எந்தக் காரியமானது பிரிடிஷ் இந்தியாவில் செய்யப்பட்டிருந்தால் அது இந்தியன் பினல்கோடைச் சேர்ந்த அடியிற்கண்ட பிரிவுகளில் எதன்படியாவது தண்டிக்கப்படத்தக்க குற்றமாகுமோ அப்படிப்பட்ட யாதொரு காரியத்தை அந்தக் கிராமத்துக்குச் சமீபமாக பிரிடிஷ் இந்தியாவுக்கு வெளியில் எந்த இடத்திலாவது செய்வது அல்லது செய்ய எண்ணங்கொண்டிருப்பது:—

302. கொலை.

304. கொலையாகாமல் அநியாய மரண முண்டுபண்ணுவது.

382. திருடும்பொருட்டு மரணம் அல்லது துன்பம் அல்லது தடங்கல் உண்டு பண்ணுவதற்காக ஆயத்தஞ்செய்துகொண்டு திருடுவது.

392. கொள்ளையடிப்பது.

393. கொள்ளையடிக்க எத்தனப்படுவது.

394. கொள்ளையடிக்கையில் மனதாரத் துன்பமுண்டுபண்ணுவது.

395. பலர்கூடிக் கொள்ளையடிப்பது.

396. பலர்கூடிக் கொள்ளையடிக்கையில் கொலைசெய்வது.

397. கொள்ளையடிக்கையிலாவது பலர்கூடிக் கொள்ளையடிக்கையிலாவது மரணம் அல்லது கொடுந்துன்பம் உண்டுபண்ண எத்தனப்படுவது.

398. மரணமுண்டுபண்ணத்தக்க ஆயுதத்தைத் தரித்துக்கொண்டு கொள்ளையடிக்கவாவது பலர்கூடிக் கொள்ளையடிக்கவாவது எத்தனப்படுவது.

399. பலர்கூடிக் கொள்ளையடிப்பதற்கு ஆயத்தம் பண்ணுவது.

402. பலர்கூடிக் கொள்ளையடிக்கும்பொருட்டு ஜமைகூடுவது.

435. நூறு ரூபாய் அல்லது (விவசாய மாசூல் விஷயத்திலே) பத்து ரூபாய் சேதம உண்டுபண்ணவேண்டுமென்கிற எண்ணத்தோடு நெருப்பைக்கொண்டாவது வெடிக்கத்தக்க வஸ்துவைகொண்டாவது கெடுதிசெயவது.

436. வீடுமுதலானவற்றை அழிக்கவேண்டுமென்கிற எண்ணத்தோடு நெருபபைக்கொண்டாவது வெடிக்கத்தக்க வஸ்துவைகொண்டாவது கெடுதி செய்வது.

449. மரணதண்டனை விதிக்கத்தக்க குற்றத்தைச் செய்யும் பொருட்டு வீட்டினிடமாய நுழைவது.

450. ஆயுளபரியந்தம் தீவாந்தரசிட்சை விதிக்கத்தக்க குற்றத்தைச் செயயுமபொருட்டு வீட்டினிடமாய் நுழைவது.

457. காவலதண்டனை விதிக்கத்தக்க குற்றத்தைச் செய்யும பொருட்டு இராக்காலத்தில் பதுங்கியிருந்து வீட்டினிடமாய நுழைவது அல்லது கன்னமிடுவது.

458. துன்பம - தாககுதல அலலது அக்கிரமமான தடங்கல் உண்டுபண்ணுவதற்கு ஆயததஞ் செய்துகொண்டு இராககாலத்தில் பதுங்கியிருந்து வீட்டினிடமாய் நுழைவது அலலது கனனமிடுவது.

459. பதுங்கியிருந்து வீட்டினிடமாய நுழைகையிலாவது கன்னமிடுகையிலாவது கொடுந்துன்பம் உண்டுபண்ணுவது.

460. இராக்காலத்தில கன்னமிடுவது முதலான குற்றஞ் செய்வதில் கூட்டாயச் சமபந்தப்பட்டிருக்கிறவர்களில ஒருவன மரணமாகிலும் கொடுந்துன்பமாகிலும் உண்டுபண்ணுவது.

(f) யாதொரு நபர் அலலது சொத்தின பந்தோபஸ்துக்காகிலும் குற்றத்தைத் தடுப்பதற்காகிலும் ஒழுங்கின் பாதுகாப்புக்காகிலும் பாதகமுண்டாக்கும்போலிருக்கத்தக்க எந்த விஷயத்தைக்குறித்துப் பிரதேச கவர்ன்மென்டாருடைய அனுமதியை முனனதாகப் பெற்றுக்கொண்டு பொதுவான உத்தரவைக்கொண்டோ அல்லது பிரத்தியேகமான உத்தரவைக்கொண்டோ டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்ட்ரேட் சங்கதி தெரிவிக்கும்படி தமக்கு உத்தரவு செய்திருக்கிறாரோ அப்படிப்பட்ட யாதொரு விஷயம்.

இந்தப் பாராவிலே—

(i) "கிராமம்" என்பதில் கிராம நிலங்களென்பதும் அடங்கும்; மேலும்,

(ii) "பிரசித்தஞ் செய்யப்பட்ட குற்றவாளி" என்னும் சொற்றொடரில், எந்தக் காரியமானது ப்ரிடிஷ் இந்தியாவில் செய்யப்பட்டால் இந்தியன் பினல் கோடின் அடியிற்கண்ட பிரிவுகளில், அதாவது 302, 304, 382, 392, 393, 394, 395, 396, 397, 398, 399, 402, 435, 436, 449, 450, 457, 458, 459, 460-வது பிரிவுகளில்; எதன்படியாவது தண்டிக்கப் படத்தக்கதாகுமோ அப்படிப்பட்ட யாதொரு காரியத்தின் விஷயமாய் இந்தியாவின் யாதொரு பாகத்தில் ஆலோசனை சபையிலுள்ள கவர்னர் ஜெனரலவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட அல்லது இன்னும் இருந்துவரும்படி செய்யப்பட்ட யாதொரு கோர்ட்டாராலாகிலும் அதிகாரியாலாகிலும் குற்றவாளியாகப் பிரசித்தஞ்செய்யப்பட்ட யாதொரு நபரென்பதும் அடங்கும்.

11. மேலேகண்டபடி க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட் 45-வது பிரிவின்பிரகாரம் எந்த சமாசாரத்தைத் தெரிவிக்க கிராமப் பெரியதனக்காரர்களும் மற்றவர்களும் சட்டப்படி கடமைப்பட்டிருக்கிறார்களோ அந்த சமாசாரத்தை அவர்கள் தெரிவிக்கத் தவறினால், அவர்களுக்கு ஆறுமாதத்துக்கு மேற்படாத ஒரு காலத்துக்கு வெறுங்காவல் தண்டனையாவது, ஆயிரம் ரூபாயக்கு மேற்படாமல் அபராதமாவது இவ்விரண்டு தண்டனைகளுமாவது இந்தியன் பினல் கோட் 176-வது பிரிவின்படி விதிக்கப்படத்தக்கதாகும்.

12. ஒவ்வொரு கிராமப் பெரியதனக்காரரும் தம்முடைய கிராமத்தின் எல்லைகளுக்குள்ளே செய்யப்பட்டு இருக்கக்கூடியவைகளாயிருக்கும் சகல குற்றங்களைக் குறித்தும் அதிசமீபத்திலுள்ள மாஜிஸ்ட்ரேட்டுக்காவது அதிக சமீபத்திலுள்ள பொலீஸ் ஸ்டேஷன் விசாரணை உத்தியோகஸ்தருக்காவது ரிபோர்ட் செய்வதும் அவருடைய கடமையாகும். அங்கப்படி ரிபோர்ட் செய்யத்தவறினால், அவர் இலாகா மூலமாய்த் தண்டிக்கப்படுவதற்கு உள்ளாவார்.

13. 10-வது பாராவில் குறிப்பிடப்பட்ட வகையைச்சேர்ந்த யாதொரு சமாசாரத்தையாவது பிடிக்கப்படத்தக்க இதர குற்றங்களுக்குச் சம்பந்தமான யாதொரு சமாசாரத்தையாவது கிராமக் காவற்காரர்கள் சாதாரணமாய் முதலில் கிராமப் பெரியதனக்காரர்களுக்குத் தெரிவிக்கவேண்டும். மேலும், கிராமப் பெரியதனக்காரர்களாலும் பொலீஸாராலும் கிராமக் காவற்காரர்களுக்குச் செய்யப்படும் உத்தரவுகளை அக்காவற்காரர்கள் அனுசரித்து அவைகளுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதும் அவர்களுடைய கடமையாகும். அவர்கள் தங்களுடைய ஸர்க்கார் அலுவல்களுக்கும், அந்த கிராம விஸ்தீர்ணத்தின் ஒவ்வொரு பாகத்தையும் பொது ரஸ்தாக்களையும் அந்த கிராமத்தின் எல்லைகளுக்குள்ளிருக்கும் ராட்பதாவான பாட்டைகளையும் சூத்திரங்களையும் பெட்ரோல்செய்வதற்கும் பார்வையிடுவதற்கும் தங்களுடைய முழுகாலத்தையும் உபயோகிக்கவே

ண்டும். காவல் விசாரணையின்கீழிருக்கும் எல்லா அன்னியர்களையும் சந்தேகத்திற்கிடமான நபர்களையும் அவர்கள் கவனிக்கவேண்டும். அவர்கள் பொலீஸ் உத்தியோகஸ்தர்களுடனிருந்து க்ரிமினல் ப்ராஸெஸ் என்னும் கட்டளைகளையெல்லாம் நிறைவேற்றுவதுமல்லாமல, சாதாரண பொலீஸாருக்கு வேண்டிய எல்லா உதவியையும் பொதுவாய்ச் செய்யவேண்டும். அவர்கள் பிரதிதினமும் பககத்திலுள்ள கிராமஙகளின கிராமக் காவற்காரர்களுடன் கடிதப போக்குவரவு வைத்துக்கொண்டு அதனால் ஒருவருக்குத் தெரிந்த சங்கதியை மற்றொருவர் அறியவேண்டும.

14. கூட்டக் கொள்ளைக்காரர்கள் யாதொரு நபரையாவது சொத்தையாவது தாக்கினால், கிராமப் பெரியதனக்காரரும தலையாரியும் தாமே நேரில் முயற்சிபண்ணியும் செய்துகாட்டியும் தஙகளுடைய கிராமத்தாரை ஓடிப்போய்விடாமலும் அவர்களுக்கிணங்காமலும ஒன்றாய்ச்சேர்நது பலவந்தமாய் அவர்களை எதிர்க்கும்படி தூண்டுவது அவர்களுடைய கடமையாகும். தற்காப்புச் சுதந்தரத்தைச் செலுத்துகையிலே செய்யப்படுகிற யாதொரு காரியம் குற்றமாகாதென்பதையும், குற்றவாளிகளை எதிர்ப்பதற்கு சாத்தியமான எல்லா முகாந்தரங்களையும் அனுசரிக்கவும துப்பாக்கி அல்லது வேறே யாதொரு தளவாடமும் ஆயுதத்தையும் உபயோகிக்கவும் கூடுமென்றும கிராமத்தாருக்குத் தெரியும்படியாக எடுத்துக் காட்டவேண்டும்; ஆனால், குறறவாளிகளைப் பிடிப்பதறகே அவாகள் முதலில் முயறசி செயயவேண்டுமெனபதை அவர்கள அறியவேண்டும்.

15. கிராமப பெரியதனக்காரா—

(1) பொது ஜனங்களால் உபயோகிக்கப்படுகிறதாகவாவது உபயோகிக்கபபடத்தக்கதாகவாவதிருக்கிற யாதொரு வழி, நதி அலலது கால்வாயிலிருந்தாகிலும் யாதொரு பொதுவான இடத்திலிருநதாகிலும் சட்டத்துக்கு விரோதமான யாதொரு தடங்கல அல்லது இடைஞ்சலை நீககவேண்டுமென்றும்,

(2) யாதொரு வர்த்தகம் அல்லது தொழிலாவது, யாதொரு சரகு அல்லது வாத்தகச்சாமானை வைத்திருப்பதாவது ஜனங்களின் ஆரோக்கியம் அல்லது தேக சுகத்துக்குக் கெடுதியாயிருககிற காரணத்தினாலே அபபடிப்பட்டதை நிறுத்தவேணடுமென்றாகிலும், தடுககவேண்டுமெனறாகிலும.

(3) யாதொரு கடடிடத்தைக் கட்டுவதையோ அல்லது பற்றிக்கொள்ளும்போலாவது வெடிக்குமபோலாவதிருக்கிற யாதொரு வஸ்துவை ஒருவகை செய்வதையோ தடுக்கவேண்டுமெனறாகிலும் நிறுத்திவிடவேண்டுமென்றாகிலும்,

(4) யாதொரு கட்டிடமானது வெகுசாய விழுந்து அதன் சமீபத்தில் வசித்துக்கொண்டாவது வேலைசெயதுகொண்டாவது அதன் வழியாய்ப் போய்க்கொண்டாவதிருக்கிறவர்களுக்குத் தீங்கு விளைக்கத்தக்க ஸ்திதியிலிருக்கிறதெனறும், அதுகாரணத்தினால் அதை எடுத்துவிடுவதோ அல்லது மரமத்துசெய்வதோ அல்லது அதற்கு முட்டு முதலிய ஆதாரங்கொடுப்பதோ அவசியமென்றும்,

(5) அப்படிப்பட்ட யாதொரு வழி அல்லது பொதுவான இடத்துக்குச் சமீபமாயுள்ள யாதொரு குளம், கிணறு அல்லது பள்ளத்தினாலே ஜனங்களுக்கு அபாயம் நேரிடாதபடி அதற்கு அடைப்பு அடைத்துவைக்கவேண்டுமென்றும்,

அபிப்பிராயப்பட்டால், அவர் இந்த சங்கதியைப் பொது ஜனங்களுக்கு இடைஞ்சலான காரியமாக பிரதேச ஸப் மாஜிஸ்ட்ரேட்டுக்கு ரிபோர்ட் செய்யவேண்டும்; அதன்மேல் அவர் அவசியமான நடவடிக்கை நடத்துவார்.

6. கிராமப் பெரியதனக்காரர்களுடைய ரிபோர்ட்டுகள்.

16. 10-வது, 12-வது பாராக்களில் குறிப்பிட்ட வகையைச்சேர்ந்த யாதொரு சமாசாரம் யாதொரு கிராமப் பெரியதனக்காரருக்குக் கிடைத்தால், அவர் XIII-ம அநுபந்தத்தில் நிர்ணயிக்கப்பட்ட நமூனாப்படி மூன்று பிரதிகளாக உடனே ஒரு ரிபோர்ட் தயார்செய்து அவைகளில் ஒரு பிரதியை உடனே பொலீஸாருக்கும், இன்னொரு பிரதியை அதேகாலத்தில் ஸப் மாஜிஸ்ட்ரேட்டுக்கும அனுப்பி, மூன்றாவது பிரதியை ஆபீஸ் நகலாக நிறுத்திக்கொள்ளவேண்டும். இந்த ரிபோர்ட்டில், பிராது செய்பவருடைய வாக்குமூலத்தின் சாராம்சமும், அவருடன் வந்த எவரேனும சாட்சிகளின வாக்குமூலங்களின்சாராம்சமும் அடங்கியிருக்கவேண்டும. மேலும் அதில், எந்த மணிநேரத்தில் குற்றம செய்யப்பட்டதோ அதையும, குற்றவாளிகளுள் எவர்கள் இன்னாரென்று எண்ணிக்கப்பட்டிருக்கிறார்களோ அவர்களின பெயர்களையும், அவர்களைப்பற்றிய விவரங்களையுங் கூடக் குறிப்பிடும்படி ஜாக்கிரதையாய்ப் பார்க்கவேண்டும.

7. குற்றத்தைக் கண்டுபிடிப்பதும் அதற்காக பிராது தொடருவதும்.

17. குற்றவாளிகளைப் பிடிப்பதற்காக சகல விஷயங்களிலும் ஏகோபித்து நடப்பது கிராமப் பெரியதனக்காரருடைய கடமையாகும்.

18. திருட்டுச்சொத்து ஒளித்துவைக்கப்பட்டிருக்கிறதென்று நம்பத்தக்க சமாசாரம கிராமப் பெரியதனக்காரருக்குக் கிடைத்து, அதை பந்தோபஸ்து செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் சீக்கிரத்தில் செய்யாதபட்சத்திலே அது வெளியேறிவிடுமென்று எண்ணுவதற்கு நியாயமிருக்குமானால், அவர் சோதனைபோட்டுவித்து, அந்த சொத்து அகப்பட்டால் அதைப் பந்தோபஸ்துசெய்து அதையும் குற்றவாளியையும் பிரதேச ஸப்-மாஜிஸ்ட்ரேட்டினிடம் அனுப்புவதுமல்லாமல், அதேகாலத்தில் பொலீஸ் ஸ்டேஷனுக்கும் சங்கதி தெரிவிக்கவும் வேண்டும். ஒளித்துவைத்திருக்கும் இடம் குடியிருக்கும் வீடாயிருக்குமாகில், சூரியோதயமுதல் சூரியாஸ்தமனத்துக்குள்தான் மேலேகண்ட சோதனை போடவேண்டும்.

19. பொலீஸார் சோதனைபோடும எல்லாக் காலங்களிலும் கிராமப் பெரியதனக்காரர் ஹாஜராயிருக்கவேண்டும்.

20. ஆடுமாடு முதலிய கால்நடைகள் திருடப்பட்டால், கிராமப் பெரியதனக்காரர் பொலீஸாருக்கும் மாஜிஸ்ட்ரேட்டுக்கும் ரிபோர்ட் அனுப்புவதோடுமாத்திரம் திருப்தியடையாமல், திருடிக்கொண்டுபோகப்பட்ட கால்நடைகளின் காலடிச்சுவட்டைக் காலம் போக்காமல தம்முடைய தலையாரிகளுடன் பார்த்துக்கொண்டே போக வேண்டும். இந்தக் கடமையைச் சரியாய்க் கவனித்தால், திருடிக கொண்டுபோகப்பட்ட கால்நடைகள் அநேகமாய் எப்பொழுதும அகப்பட்டுவிடும்.

21. பலாத்காரமாய்க் குற்றத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்வதற்காக பொலீஸார் செய்யக்கூடிய யாதொரு கொடுமை அல்லது வேதனைகளை கிராமப் பெரியதனக்காரர் கண்டுங்காணாததுபோலிருக்கக்கூடாதென்று தடுககப்பட்டிருக்கிறார். ஆட்சேபனைக்கிடமான அப்படிப்பட்ட காரியங்களைப் பொலீஸார் செயயும்போது, அந்த விஷயத்தை அதி சமீபத்திலிருக்கும் ஸப்-மாஜிஸ்ட்ரேட்டுககு ரிபோர்ட் செய்வது கிராமப பெரியதனக்காரரின் கடமையாகும்.

22. குற்றத்தை ஒப்புக்கொள்ளுகிறதற்காவது யாதொரு வாக்குமூலத்துக்காவது குற்றஞ் சாட்டப்பட்டவனுடைய கையெழுத்தை வாங்கவாகிலும், மேறபடி வாக்குமூலத்தை எழுதிவைக்கவுமாகிலும் கூடாதென்று கிராமப் பெரியதனக்காரர் முற்றும் தடுககப்பட்டிருக்கிறார்.

8. சடுதியான மரணங்களைக்குறித்தும் அசாதாரண மான மரணங்களைககுறித்தும ரிபோர்ட்.

23. யாதொரு சடுதியான மரணமாவது அசாதாரணமான மரணமாவது சந்தேகத்துக்கிடமான சந்தாப்பங்களில் யாதொரு மரணமாவது கிராமத்தின் எல்லைகளுக்குள் நேரிடுமாகில் அதைக்குறித்து ஒவ்வொரு கிராமப் பெரியதனக்காரரும் காவற்காரரும் தமக்குத் தெரியவரும் யாதொரு சஙகதியை அதிசமீபத்திலுள்ள மாஜிஸ்ட்ரேட், அதிசமீபத்திலுள்ள பொலீஸ் ஸ்டேஷன் விசாரணை உத்தியோகஸ்தர், ஆகிய இவர்களில் யார் சமீபத்தில் இருக்கிறாரோ அவருக்கு ரிபோர்ட்செய்வது அவர்களுடைய கடமையாகும்.

24. 1816-ம் ஹூ 11-வது ரெகுலேஷன் 13-வது பிரிவின்படிக்கும் க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட் 174-வது பிரிவின்படிக்கும் கிராமப் பெரியதனக்காரர்கள் மரணவிசாரணை செய்ய அதிகாரங் கொடுக்கப்பெற்றிருக்கிறார்கள் ; இந்தக் கடமையானது தங்களால் கிரமமான துரிதத்தோடும் ஜாக்கிரதையாகவும் செலுத்தப்படும்படியாக அவர்கள் பார்த்துக்கொள்ளவேண்டும். சாத்தியமான விஷயத்திலே, கிராமப் பெரியதனக்காரர்கள அப்படிப்பட்ட மரண விசாரணை நடக்கும்போது ஸ்டேஷன் ஹௌஸ் ஆபிஸரையாவது மாஜிஸ்ட்ரேட்டையாவது ஹாஜராயிருக்கும்படி செய்துகொள்ளவேண்டும்.

25. கொலை செய்யப்பட்டதாக எண்ணப்படுகிற ஒரு நபருடைய தேகம் கண்டுபிடிக்கப்பட்டதென்று சங்கதி தெரியவருவதன்மேல்

கிராமப் பெரியதனக்காரர் - யாதொரு விசாரணை செய்வதற்குமுன் அதிசமீபத்திலுள்ள இரண்டாவது அல்லது மூன்றாவது வகுப்பு மாஜிஸ்ட்ரேட்டுக்கும் அதிசமீபத்திலுள்ள ஸ்டேஷன் ஹௌஸ் ஆபிஸருக்கும் அதைக்குறித்து உடனே சங்கதி தெரிவிக்கவேண்டும். அதன்மேல் அவர் கர்ணத்தையும் அந்தக் கிராமவாசிகளில் கௌரவமுள்ள இரண்டு அல்லது மூன்று பெயர்களையும் அந்த இடத்துக்கு இட்டுக்கொண்டுபோய், அவர்கள் முன்னிலையிலே, பிரேதம் கண்டுபிடிக்கப்பட்டதைப்பற்றியும் அப்படி கண்டுபிடிக்கப்பட்டபோது அதன் தோற்றத்தைப்பற்றியுமாவது, கொலை செய்யப்பட்டிருந்தால், இறந்துபோனவர் கொலை செய்யப்பட்டதைப்பற்றியாவது ஏதேனும் சங்கதி தெரிவிக்கக்கூடியவராயிருக்கிற ஒவ்வொருவரையும் விசாரிக்கவேண்டும்.

26. என்ன சந்தர்ப்பங்களில் பிரேதம் கண்டுபிடிக்கப்பட்டதோ அந்த சந்தர்ப்பங்களைப்பற்றி விசாரணை செய்வதற்கு வேண்டிய காலத்துக்குள் மாஜிஸ்ட்ரேட்டாவது ஸ்டேஷன் ஹௌஸ் ஆபிஸராவது அந்த இடத்தில் வந்துசேர்வாரானால், மேற்படி விசாரணையானது அவருடைய மேற்பார்வையின்கீழ் நடத்தப்படவேண்டும்.

27. மேற்படி விசாரணை செய்வதற்கு வேண்டிய காலத்துக்குள் அவர் வந்துசேராவிட்டால், கிராமப் பெரியதனக்காரர்-தம்மால் விசாரிக்கப்படும் எல்லா நபர்களின் சாட்சியத்தையும் எழுதிக்கொள்ளும்படிக்கும், பிரேதத்தின் தோற்றத்தைக்குறித்து அவசியமான விவரங்கள் எவையேனுமிருந்தால் அவைகளைப் பதிந்துகொள்ளும்படிக்கும், முழுநடவடிக்கைகளைப்பற்றியும் ஒரு ரிபோர்ட் தயார் செய்யும்படிக்கும், கர்ணத்துக்கு உத்தரவு செய்யவேண்டும். அப்படிப்பட்ட ரிபோர்ட்டில் கிராமப் பெரியதனக்காரர் அத்தாட்சிக் கையெழுத்து செய்து, விசாரணைக்காலத்திலே ஹாஜராயிருக்கும் கிராமக் குடித்தனக்காரர்களில் இரண்டு அல்லது பல குடித்தனக்காரர்களையும் கர்ணத்தையும் அதில அத்தாட்சிக் கையெழுத்துபோடுவித்து அதைத் தாம் வாங்கியிருக்கும் சாட்சியத்தின் சகிதமாக ஸப் மாஜிஸ்ட்ரேட்டுக்கு அனுப்பவேண்டும்.

28. மேற்படி விசாரணையானது கிராமப் பெரியதனக்காரரால் நடத்தப்படும்போது, அவருடைய அதிகார வரம்புக்குள் இருக்கும் யாதொரு நபர் அல்லது நபர்கள் கொலைசெய்திருக்கிறார்களென்று சந்தேகிக்க இடமிருந்தால், அவர்-அப்படிப்பட்ட நபர் அல்லது நபர்களை உடனே பிடித்து, அந்த நபர் அல்லது நபர்களை ஸ்டேஷன் ஹௌஸ் ஆபிஸரிடத்திலாவது மாஜிஸ்ட்ரேட்டினிடத்திலாவது அனுப்பவேண்டும்.

29. க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட் 174-வது பிரிவின்படி கிராமப் பெரியதனக்காரர்-தற்கொலை நேரிடும் விஷயத்திலாகிலும, மிருகத்தினாலாவது யந்திரத்தினாலாவது தற்செயலாகவாவது மரணம் நேரிடும் விஷயத்திலாகிலும், சந்தேகத்திற்கிடமான சந்தர்ப்பங்களில் மரணம் நேரிடுகிற விஷயங்களிலாகிலும் மேலே கண்டமாதிரியாக விசாரணை நடத்தலாம்.

30. சந்தேகத்திற்கிடமான சந்தர்ப்பங்களில் மரணம் நேரிடும் விஷயங்களிலே, மரண விசாரணைவிசிதம் அல்லது மாஜர்நாமாவில் அடியிற்கண்ட அம்சங்களைக்குறித்துப் பூர்த்தியான சங்கதி தெரிவிக்கவேண்டியதாகையால், கிராமப் பெரியதனக்காரர் அவைகளைக் கவனிக்கவேண்டும் :—

(1) தேகம முதலில் கண்டுபிடிக்கப்பட்டபோது அது வெப்பமாயிருந்ததா குளிர்ச்சியாயிருந்ததா? அது விறைத்துக்கொண்டிருந்ததா இல்லையா ?

(2) அழுக ஆரம்பித்ததா ?

(3) மரணம் நேரிட்ட சரியான காலம் எது ?

(4) இறந்துபோனவர் உயிரோடு இருந்தகாலத்தில் கடைசியாக எப்போது எவ்விடத்தில் யாரோடுகூட இருக்கக் காணப்பட்டார் ?

(5) தேகத்தைக் கண்டபோது அது என்ன கோலத்திலும் ஸ்திதியிலும் இருந்ததோ அதைச் சரியாய்க் கூறவேண்டும்.

(6) சுற்றிலுமுள்ள புட்டிகள், காகிதங்கள், ஆயுதங்கள் அல்லது சிந்தியிருக்கும் திரவவஸ்துக்கள் ஆகிய இவைகளைப்போன்ற வஸ்துக்களெல்லாம் இன்னின்ன நிலையில் இருக்கின்றனவென்பதை கவனிக்கவேண்டும்.

குறிப்பு.—இந்த வஸ்துககளைச் சேகரித்துப் பாதுகாக்கவேண்டும்.

(7) தேகத்திலாவது சமீபத்திலாவது இரத்தக்குறிகள் எவையேனுமிருந்தால் அவைகள் இன்ன இடத்தில் இவ்வளவு பரிமாணமுள்ளவையாயிருக்கின்றனவென்று சரியாய்க் கவனிக்கவேண்டும். இந்த இரத்தக்குறிகள் உலர்ந்துபோயிருந்தனவா அல்லது திரவரூபமாயிருந்தனவா என்பதையும் கூறவேண்டும்.

(8) இரத்தம் ஏராளமாய்ப் பெருகிற்று ?

(9) அது கறுப்பாகவும் இலேசாய் நீர்மயமாகவும் இருந்ததா?

(10) தேகம் கண்டுபிடிக்கப்பட்டபொழுது அதிலிருந்து இரத்தம் ஒழுகிக்கொண்டேயிருந்ததா அல்லது இரத்தம் கட்டிப்போயிருந்ததா ?

(11) இறந்துபோனவரிடத்தில் விசேஷ குறிகள் எவையேனும் காணப்பட்டனவா ? அப்படி காணப்பட்டால் அவைகள் முதலில் எப்பொழுது கவனிக்கப்பட்டன ? அவைகள் எவ்வளவு நேரம் இருந்தன ?

(12) யாதொரு ஆகாரம், போஜனம், பானம் அல்லது ஔஷதத்தை உட்கொண்ட எவ்வளவு நேரத்திற்குப் பிறகு அக்குறிகள் தோன்றின ?

(13) அவைகள் மத்தியில் விட்டுவிட்டுத் தோன்றினவா ? அல்லது மரணம்வரையில் இடைவிடாமல் அவைகள் இருந்துகொண்டே வந்தனவா ?

குறிப்பு 1.—விஷமிருக்கிறதாக அனுமானிக்கப்படக்கூடிய போஜனம் அல்லது ஔஷதத்தின் யாதொரு பாகத்தை பத்திரபபடுத்தி வைக்கவேண்டும்.

குறிப்பு 2.—வாந்தியெடுத்த அல்லது பேதியான எல்லா வஸ்துவையும் பத்திரப்படுத்தி வைக்கவேண்டும்.

குறிப்பு 3.—போஜனம் அல்லது வாந்தியான வஸ்துவைப் பத்திரப்படுத்தும்போது, ஒவ்வொரு வஸ்துவையும சுத்தமான பாண்டம் அல்லது ஏனத்தில் தனித்தனியாக வைப்பதில் மெத்தவும் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்; கொடுக்கப்படும் யாதொரு புடம் பாண்டம் அல்லது பாண்டத்தின் பாகத்தை எடுத்துக்கொள்ளவேண்டாம்; ஆனால் சுத்தமான ஒரு புது மட்பாண்டத்தைக் கொடுக்கும்படி வற்புறுத்திக் கேட்கவேண்டும்; அதை உடனே பத்திரமாய் மூடி, வைத்திய உத்தியோகஸ்தர் கையில் கொடுக்கிறவரையிலே ஜாக்கிரதையாயப் பாதுகாக்கவேண்டும்.

(14) தேகத்தின் வெளிப்புறத்துத் தோற்றத்தையும், எல்லாத் துன்பக்குறிகளின் வெளிப்புறத்துத் தோற்றத்தையும், அவைகளின் நிலைமை, லட்சணம, அளவு, திசை ஆகிய இவைகளையும் குறித்துக் கொள்ளவேண்டும். காயங்களின் ஓரம வாயதிறந்துகொண்டிருந்ததா அல்லது மூடிக்கொண்டிருந்ததா என்பதைக் குறித்துக்கொள்ளவேண்டும.

(15) அனுமானிக்கத்தக்க வேறே யாதொரு சங்கதியையும், அனுமானிக்கப்பட்ட எல்லா நபர்களின் வாக்குமூலங்களையும குறிப்பிடவேண்டும்.

(16) தற்கொலை செய்துகொண்டவன் எந்த நிலையில தேகத்தை வைத்துக்கொண்டிருக்கக்கூடுமோ அந்த நிலையில் தேகமிருந்ததா?

(17) ஆயுதமிருந்த இடத்தை யோசிக்கையில், இறந்துபோனவன் அதை அவ்விடத்தில் வைத்திருக்கக்கூடுமெனபது அசம்பாவிதமாயிருக்கத்தக்க அவ்வளவு தூரம் அந்த ஆயுதத்துக்கும் தேகத்துக்கும் இருந்ததா?

(18) கத்தி அல்லது துப்பாக்கியைப்போன்ற யாதொரு ஆயுதம் இறந்துபோனவனுடைய கையிலிருக்கக் கண்டால், அந்த ஆயுதம் அழுத்தமாய்ப் பிடிக்கப்பட்டிருந்ததா அல்லது தளர்த்தியாயப் பிடிக்கப்பட்டிருந்ததா என்பதைக் கவனிக்கவேண்டும.

31. தூக்குப்போட்டுக்கொள்ளுகிற விஷயத்திலாவது திக்குமுக்காடச்செய்கிற விஷயத்திலாவது, அடியிற்கண்ட அம்சங்களைப்பற்றி ஜாக்கிரதையாய் விசாரித்துக் குறித்துக்கொள்ளவேண்டும:—

I. பொதுவான விசாரணைகள்—

(a) தப்பித்துக்கொண்டுபோக வேறே சாத்தியமான வகைகளில்லாதபடி அறை உட்புறத்தில் பூட்டப்பட்டிருந்ததா?

(b) அறைக்குச் சமீபத்தில் யாதொரு துப்பாக்கி முதலிய சுடுகருவிகளாவது வேறே ஆயுதங்களாவது எவையேனும் இரத்தக் குறிகளாவது போராட்டக்குறிகளாவது காணப்பட்டனவா?

(c) இறந்துபோனவனுடைய உடுப்பு கிழிந்துபோயிருந்ததா அல்லது மயிர் அவிழ்ந்து தாறுமாறாயிருந்ததா?

(d) இறந்துபோனபிறகு எவ்விதத்திலாவது தேகத்தின் ஜோலிகுப் போயிருந்ததாக உடுப்பு முதலியவற்றால் தெரியவந்ததா ?

(e) தேகத்தின் நிலைமையையும் தரித்துக்கொண்டிருந்த உடுப்பின் லட்சணத்தையும் குறித்துக்கொள்ளவேண்டும்.

II. உபயோகப்படுத்தப்பட்ட கட்டைப்பற்றிய குறிப்புகள்—

(a) கட்டு இன்னும் கழுத்தைச்சுற்றியிருந்தால், அதன் சரியான ஸ்தானத்தையும் சங்கியையையும் லட்சணத்தையும் முடி அல்லது முடிகள்போட்டிருக்கிற விதத்தையும் (எனவே, வலதுகை வழக்கமுடையவனால் முடி போடப்பட்டதா அல்லது இடதுகை வழக்கமுடையவனால் முடிபோடப்பட்டதா என்பதையும்) ஜாக்கிரதையாய்க் குறித்துக்கொள்ளவேண்டும் (அல்லது அவைகளை அப்படியே சித்திரித்துக்கொள்வது நல்லது) ; முடிகள் இன்னின்ன இடத்தில் இருக்கின்றனவென்பதையும் சரியாய் அந்தப்படியே குறித்துக்கொள்ளவேண்டும். முடிகள் அவிழாமல் அப்படியே இருக்கும்படி கயிற்றை அறுத்து எடுத்துவிடவேண்டும். கட்டு எடுத்துவிடப்பட்டிருக்குமானால், அதைக் கொண்டுவரும்படிக் கேட்கவேண்டும்.

(b) சாட்சியத்திற்காகக் கட்டைப் பத்திரப்படுத்தி வைத்துக்கொள்ளவேண்டும். குற்றஞ்சாட்டப்பட்டவனுடைய ஸ்வாதீனத்திலுள்ளதாகவாவது இறந்துபோனவனுக்குச் சொந்தமானதாகவாவதிருக்கிற யாதொரு வஸ்துவோடு அதை ஒத்திட்டுப்பார்க்கவேண்டியது அவசியமாயிருக்கலாம் ; அல்லது அதை வேறே எவனாவது வைத்துக்கொண்டிருந்தானென்று ஆராய்ச்சிசெய்து நிச்சயிக்கலாம்.

(c) கட்டு என்ன வஸ்துவினால் செய்யப்பட்டிருக்கிறதோ அந்த வஸ்துவைக் குறித்துக்கொள்ளவேண்டும்.

(d) (கயிறாயிருக்குமானால்) கட்டின் முனைகள் நூதனமாய் அறுக்கப்பட்டவைகளாகக் காணப்பட்டனவா ?

(e) கழுத்திலுள்ள அடையாள வடிவோடு கட்டை ஒத்திட்டுப்பார்க்கவேண்டும்.

(f) வியர்வையினால் உண்டாகக்கூடியதுபோன்ற யாதொரு ஊதா நிறமானகோடு கட்டிலிருக்கிறதாவென்று குறித்துக்கொள்ளவேண்டும்.

(g) இரத்தக்குறிகளையேனும் அல்லது மயிர் அல்லது வேறே வஸ்துக்களின் குறிகளையேனும் கட்டில் ஒட்டிக்கொண்டிருந்தனவா ?

III. துன்பக்குறிகளின் வெளிப்புறத்துத் தோற்றங்கள்—

(a) தூக்குப்போட்டுக்கொண்டதனாலாவது திக்குமுக்காடும்படி செய்ததனாலாவது நேராய் உண்டானவைகளல்லாத வேறே துன்பக்குறிகளையேனும் இறந்துபோனவன்மேலிருந்தனவா ?

(b) இந்தக் குறிகள் (இருக்குமானால்) என்ன ஆயுதத்தினால் உண்டாக்கப்பட்டிருக்கக்கூடும்?

(c) அக்குறிகளே மரணத்தை உண்டாக்குவதற்குப் போதுமானவைகளாயிருந்தனவா? போதுமானவைகளாயிராவிட்டால், இரத்த நஷ்டத்தினாலேயிருந்த பலஹீனத்தை அவைகள் உண்டாக்கத்தக்கவைகளாயிருந்தனவா?

(d) அவைகள் வெகுசாயத் தற்செயலாக நேரிட்டவைகளா? தற்கொலை விஷயமாக நேரிட்டவைகளா? அல்லது நினையாமல் செய்த கொலைவிஷயமாக நேரிட்டவைகளா (எனவே, போராட்டத்தில் உண்டானவைகளைப்போல இருக்கின்றனவா?)

(e) அடியிற் கண்டவைகளைக் கவனிக்கவேண்டும் :—

முகம்—வெளுத்திருக்கிறதா? வீங்கியிருக்கிறதா? அமைதியாயிருக்கிறதா?

வாயும் நாசித்துவாரங்களும்—நுரை இருக்கிறதா?

நாக்கு—எவ்விடத்தில் எப்படியிருக்கிறது? நிறமென்ன? அதற்குக் கெடுதி நேரிட்டிருக்கிறதா இல்லையா?

கண்கள்—வெளியே வந்திருக்கின்றனவா?

கண்மணிகள்—விரிந்திருக்கின்றனவா?

(f) கழுத்தைப்பற்றியும் அதன்மேலுள்ள அடையாளங்களைப்பற்றியும் குறிப்புகள்—

(i) அடையாளங்களின் லட்சணம்.—கயிறு அல்லது நூலின் அடையாளத்தைப்போன்ற யாதொரு அடையாளம் இருந்ததா? அந்த அடையாளமானது கழுத்தைச்சுற்றி வளைவாய்ப்போயிருந்ததா? அந்த அடையாளத்தின் ஓரங்களுடைய நிறமும் அதற்கு அப்புறமிருக்கிற பாகங்களின் நிறமும் என்ன? விரல்கள் முதலியவற்றின் அடையாளங்கள் இருக்கின்றனவா?

(ii) அடையாளங்களின் திக்கு.—கோணலாய்ச் சாய்ந்திருக்கின்றனவா இல்லையா? முடிகள் இன்ன இடத்தில் இன்னவிதமாயிருந்தனவென்று தோன்றுவதைக் கவனிக்கவேண்டும்.

(iii) கழுத்தின் எந்த பாகத்தில் கயிறு அல்லது நூல் அழுந்தியிருந்ததோ அந்த பாகத்தின் மேல்தோல் எப்படியிருக்கிறது?

(iv) எவ்விதக் கீறல்களாவது உராய்வுகளாவது காயங்களாவது உண்டா?

(g) கைகள்—இரத்தமபட்டிருக்கிறதா? பிடித்து முடக்கிக்கொண்டிருக்கின்றனவா? கைகளில் ஏதேனுமிருக்கிறதா?

**குறிப்பு.**—பிடித்துக்கொண்டாவது ஒட்டிக்கொண்டாவதிருக்கிறதாகக் காணப்படுகிற யாதொரு மயிர் முதலியதை ஜாக்கிரதையாய்ப் பந்தோபஸ்து செய்யவேண்டும்.

(h) சம்போகத்திற்குரிய அவயவங்கள்—ஆண்பிள்ளை விஷயத்திலே, வீர்த்துவாரத்தில பிந்து இருக்கிறதாவென்று கவனிக்க வேண்டும்.

32. சந்தேகத்திற்கிடமான சந்தர்ப்பங்களில் கண்டுபிடிக்கப் பட்ட ஒவ்வொரு பிரேதத்தையும், அதைககுறித்து கிராமப் பெரியதனக்காரர் விசாரணை செயது முடித்தானபிறகு, சீக்கிரத்தில் மாஜிஸ்ட்ரேட்டாவது யாதொரு பொலீஸ் உத்தியோகஸ்தராவது அந்த இடத்தில் வந்து சேராவிட்டால், மரணாந்தர பரீட்சைககாக அதிசமீபத்திலுள்ள ஆஸ்பத்திரிக்கு அனுப்பவேண்டும். அப்படி அனுப்பப்படும் பிரேதங்களைக் கொண்டுபோவதறகான சாதனங்கள் ஏற்படுத்திக்கொடுப்பது கிராமப் பெரியதனக்காரருடைய கடமையாகும். அபபடி அனுபபவேண்டிய அவசியமில்லாமல பேவாரிசாயுள்ள பிரேதங்களைப் புதைப்பதற்காகவும கிராமப் பெரியதனக்காரர் ஏற்பாடு செயயவேண்டும். இந்த விஷயங்களில் நேரிட்ட எவையேனும செலவுகளை மாஜிஸ்ட்ரேட்டுக்கு ஒரு பில் அனுப்பி பெற்றுக்கொள்ளலாம.

9. ஸ்வல்ப க்ரிமினல் கேஸுகளின் பரிசீலனை.

33. கிராமப் பெரியதனக்காரர்கள் ஸ்வல்ப க்ரிமினல் கேஸுகளைப் பரிசீலனை செய்வதற்குச சமபந்தப்படுகிற சட்டத்தின் பிரிவுகள் - 1816-ம் வருஷத்து 11-வது ரெகுலேஷனைச்சேர்ந்த 10-வது 14-வது பிரிவுகளும், * 1821-ம் வருஷத்து 4-வது ரெகுலேஷனைச் சேர்ந்த 6-வது பிரிவுமேயாம் ; அவைகள் அடியிற்கண்டவைகளாகும் :—

1816-ம் வருஷத்து 11-வது ரெகுலேஷனின் 10-வது பிரிவு.

முதலாவது —அவதூறான பாஷையை உபயோகிப்பது, ஸ்வல்பமாய்த் தாககுவது அல்லது சணடைபோடுவது ஆகிய இவைகளைப் போன்ற ஸ்வல்பமாதிரியான விஷயங்களிலே, வாய்மொழியாக விசாரணைபண்ணி உபயவாதிகளையும அனுபபிவிடவாவது, எந்த குற்றம் யார் செய்ததாக சொல்லப்படுகிறதோ அந்தக் குற்றத்தை அவாகள் செய்தார்களென்று ருஜுவாகித் தண்டனைக்குப் பாத்திரர்களென்று தோற்றுமாகில் குற்றம் செய்யும் நபர்களை 12 மணி நேரத்திற்கு மேற்படாமல் ஒரு காலத்திற்குக் கிராமச்சாவடியில் காவற்படுத்திவைக்கவாவது, குற்றம் செய்பவர்கள் தாழ்ந்த சாதிகளில் எதையாகிலும் சேர்ந்தவர்களாயிருந்து தொழுவில் போடுவதென்னும அவமானமாகிய தண்டனையை அவர்களுக்கு விதிப்பது தகுதியற்றதல்லாததாயிருக்குமானால 6 மணி நேரத்திறகு மேற்படாமல் ஓர் காலத்திறகு அவாகளைத் தொழுவில் போட்டுவைக்கும்படி உத்தரவு பணணவாவது கிராமப பெரியதனக்காரர்களுக்கு அதிகாரமுண்டு

இரண்டாவது.—இந்தப் பிரிவிலுள்ள முதல் பாகத்தினால் கிராமப் பெரியதனககாரர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் தண்டனையதிகாரத்தை அவாகள செலுத்துகிற சகல கேஸுகளையுங்குறித்து

* 8-வது அனுபந்தமாக அச்சிடப்பட்டிருக்கிறது.

அவர்கள் தாலூகா மாஜிஸ்ட்ரேட்டுக்கு ரிபோர்ட் செய்யவேண்டும்; ஆனால், அவர்கள் நபர்களைத் தள்ளிவிடுகிற கேஸுகளைபற்றி ரிபோர்ட் செய்யவேண்டிய அவசியமில்லை.

### 1816-ம்௵த்து 11-வது ரெகுலேஷனின் 14-வது பிரிவு.

இந்த ரெகுலேஷன் 10-வது பிரிவின்படி கிராமப் பெரியதனக்காரர்களால் காவலில் வைக்கப்பட்டவர்களைக் குறித்துக் கர்ணங்கள் ரெஜிஸ்டர்களை வைத்திருக்கவேண்டும்; இந்த ரெஜிஸ்டர்களைக் கிராமப் பெரியதனக்காரர்கள் தாலூகா மாஜிஸ்ட்ரேட்டுகளுக்கு மாதந்தோறும் அனுப்பவேண்டும்.

### 1821-ம்௵த்து 4-வது ரெகுலேஷனின் 6-வது பிரிவு.

முதலாவது.—1816-ம்௵த்து 11-வது ரெகுலேஷன் 10-வது பிரிவைச்சேர்ந்த முதல் பாகத்தின்படி ஸ்வல்ப குற்றங்களைத் தண்டிக்க கிராமப் பெரியதனக்காரர்களுக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரங்கள் - 1821-ம்௵த்து 4-வது ரெகுலேஷனிற்கண்ட விதிகளின்படிக்கும் வரையறைகளின்படிக்கும் பிரமாதமான சந்தர்ப்பங்கள் சகிதமாயிராமலும், துஷ்டர்களென்று பெயர்போனவர்களால் செய்யப்படாமலும், திருட்டுச் சொத்தின் மதிப்பு ஒரு ரூபாய்க்குமேற்படாமலுமிருக்கிற ஸ்வல்ப திருட்டுகளை தண்டிப்பதற்கு வியாபிக்கும்படி செய்யப்பட்டிருக்கின்றன.

இரண்டாவது. இந்தப் பிரிவின் முதல் பாகத்தினால் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட தண்டனையதிகாரத்தைக் கிராமப் பெரியதனக்காரர்கள் செலுத்தியிருக்கும் எல்லா கேஸுகளையுங்குறித்து அவர்கள் தாலூகா மாஜிஸ்ட்ரேட்டுக்கு ரிபோர்ட் செய்யவேண்டும்.

34. ஸ்வல்ப கிரிமினல் கேஸுகளைப் பிடிக்கக் கிராமப் பெரியதனக்காரரல்லாத ரெவினியு ரெட்டி அல்லது மணியகாரருக்கு அதிகாரமில்லை.

35. கிராமப் பெரியதனக்காரர்களிடத்தில் கொடுத்துக்கொள்ளப்படும் பிராதுகளுக்குக் கோர்ட் கட்டணங்களில்லையென்று நிவர்த்தி செய்யப்பட்டிருக்கின்றன.

36. கிராமப் பெரியதனக்காரர் தம்முடைய கிராமம் தவிர வேறே எந்த கிராமத்திலும் செய்யப்பட்ட குற்றத்தைப் பரிசீலனை பண்ண அவருக்கு அதிகாரம் கிடையாது.

37. சங்கதி தெரிவிக்கப்படுவதன்மேலாவது நேரில் சங்கதி தெரியவருவதன்மேலாவது கட்சிக்காரர்கள் பிராது கொடுத்துக்கொள்வதன்மேலாவது கிராமப் பெரியதனக்காரர் குற்றங்களைப்பிடித்து விசாரணை செய்யலாம். கிராமப் பெரியதனக்காரர் ஸ்வல்ப களவு

கேஸுகளைப்பற்றிப் பைசலசெய்தாகிறவரையில், அவர் பொலீஸாருக்கு அவைகளைக் குறித்து ரிபோர்ட் செய்யவேண்டுமென்கிற அவசியமில்லை.

38. குற்றங்களைப் பெரிதாக்கத்தக்க சந்தர்ப்பங்களையுடையவைகளாயிராத ஸ்வல்ப களவு கேஸுகளைமாத்திரம் கிராமப் பெரியதனக்காரர் விசாரணைசெய்ய அதிகார வரம்புடையவராயிருக்கிறார். ஆகையால், யாதொரு கட்டிடத்தில் செய்யப்பட்ட களவுகேஸுகளைப்பற்றியாவது ஊழியக்காரனசெய்த களவுகேஸைப்பற்றியாவது கிராமப பெரியதனக்காரர் விசாரணை செய்யக்கூடாது. ஒரு வீட்டுக்கு வெளியிலுள்ள தாழ்வாரத்திலிருந்தாவது ஒரு வீட்டின் கூரையிலிருந்தாவது திருடுவது - ஒரு கட்டிடத்திலிருந்து திருடுவதாகமாட்டாது.

39. திருடப்பட்ட சொத்தின் மதிப்பு ஒரு ரூபாய்க்கு மேற்படாவிட்டால, ஆடுகள - வெட்டுமரம் - காட்டு உற்பத்தி அல்லது புறம்போக்கு நிலஙகளிலிருக்கும் மரங்கள், ஆகிய இவைகளைப்பற்றிய ஸ்வலபக் களவுகளைக் குறித்துப் பரிசீலனை செய்யக் கிராமப் பெரியதனக்காரருக்கு அதிகாரமுண்டு. அப்படிப்பட்ட கேஸுகளைப் பரிசீலனை செய்வதற்காகக் கலெக்டரிடத்திலிருந்து முன்னதாய் அனுமதிபெற்றுக்கொள்ளவேண்டிய அவசியமில்லை.

40. திருட்டுச்சொத்தின் மதிப்பு ஒரு ரூபாய்க்கு மேற்படுமாகில், ஸ்வலப திருட்டுகளைப்பற்றி அவர் அதிகாரஞ் செலுத்தக்கூடாது. கேஸைத் தம்முடைய அதிகார வரம்புக்குள் கொண்டுவருமபொருட்டு திருட்டுசசொத்தின் மதிப்பை அவர் தம்முடைய இஷ்டப்படி ஏற்படுத்திக்கொள்வது கூடாது.

41. பிரஸ்தாப சொத்தின் மதிப்பு ஒரு ரூபாய்க்கு மேற்படாமலிருந்தபோதிலும், திருடடுச்சொத்தை வாஙகிக்கொள்ளும் கேஸுகளைப் பரிசீலனைசெய்யக் கிராமப் பெரியதனக்காரருக்கு அதிகாரமில்லை.

42. வாரண்டில்லாமல் ஆளைப்பிடிப்பதற்குச் சட்டம் இடங்கொடுக்காத விஷயங்களிலே குற்றஞ்சாட்டப்பட்டவனைப பிடிக்காமலிருக்கும்படி ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்; அந்தப்படி பிடிக்கும் பட்சத்திலே, கிராம உத்தியோகஸ்தரானவர்-அக்கிரமமாய் அடைத்து வைப்பதற்காகத் தம்மேல் பிராது தொடரப்படுவதற்குள்ளாவார்.

43. ஒருவனைத் தொழுவில் காவற்படுத்திவைக்கவேண்டுமானல இரண்டு அம்சங்கள் ஒத்திருக்கவேண்டும; அவையாவன:—முதலாவது, அவன கீழ் ஜாதிகளில் யாதொரு ஜாதியைச் சேர்ந்தவனுயிருக்கவேண்டும், இரண்டாவது, ஜன சமூகத்தில் அவனுடைய அந்தஸ்தையாவது மற்றபடி யோக்கியதையையாவது யோசிக்கையிலே அவ்வளவு அவமானமுள்ள தண்டனையை அவனுக்கு விதிப்பது அயுக்தமாயிராமலிருக்கவேண்டும்.

44. பரம்பரையான கம்மாளர் அல்லது வேறே கைத்தொழிலாளிகளின் வகுப்பைச் சேர்ந்தவர்களுக்காவது கிறிஸ்தவர் அல்லது மஹம்மதியருக்காவது காபு என்னும் ஜாதியைச் சேர்ந்தவனுக்காவது தொழுவில் காவற்படுத்துவதென்னும் தண்டனையை விதிப்பது சரியல்ல.

45. குற்றவாளிகளுக்குக் கைவிலங்குபோடவோ அல்லது அபராத தண்டனை விதிக்கவோ கிராமம் பெரியதனக்காரருக்கு அதிகாரமில்லை.

46. தாம் பரிசீலனைசெய்ய அதிகாரம் கொடுக்கப்பெற்றிருக்கிற கேஸுகளிலே தம்முடைய அதிகாரம் பிரதேச எல்லைக்குள் இருக்கிற எந்த நபர்கள் ஹாஜராகவேண்டியதாயிருக்கலாமோ அவர்களுக்கு வாய்மொழியாகவாவது எழுத்துமூலமாகவாவது ஸம்மனனுப்ப க்ரிமினல் கேஸுகளில் அவருக்கு அதிகாரமுண்டு ; ஆனால், தம்முடைய அதிகாரப் பிரதேச எல்லைக்கு வெளியிலிருப்பவர்களுக்கு ஸம்மன்களனுப்ப அவருக்கு அதிகாரமில்லை.

47. எவனாவது - கிராமப் பெரியதனக்காரர் பரிசீலனைசெய்ய அதிகாரங்கொடுக்கப்பெற்றிருக்கிற யாதொரு கேஸிலே வாய்மொழியாகவேனும எழுத்துமூலமாகவேனும் அந்தக் கிராமப் பெரியதனக்காரரால் பிறப்பிக்கப்பட்ட ஸம்மன் சேர்ப்பிப்பதை தவிர்க்கும்பொருட்டு ஒளித்துக்கொண்டாலும, தனக்கோ அல்லது வேறே யாருக்கோ அந்த ஸம்மன் சேர்ப்பிப்பதை வேணடுமென்று தடுத்தாலும், அந்த ஸம்மன்படி வந்து ஹாஜராகத் தவறினாலும, அது விஷயத்தில சம்பந்தப்பட்ட கிராமப் பெரியதனக்காரரால ரிபோர்ட் செய்யப்படுவதன்மேல் அவன்-இந்தியன் பினல் கோட் 172-வது (ஸம்மன் சேருவதையாவது இதர நடவடிக்கைகளையாவது தவிர்க்கும்பொருட்டு மறைந்துபோவது), 173-வது (ஸம்மன் அல்லது இதர நடவடிக்கைகளைச்சேரவொட்டாமலாவது பிரசித்தஞ்செய்யவொட்டாமலாவது தடுப்பது), 174-வது (ஸர்க்கார் உத்தியோகஸ்தரிடத்திலிருந்து வருகிற கட்டளைப்படி ஹாஜராகாமலிருப்பது) பிரிவுகளின்படி பிராது தொடரப்படுவதற்குள்ளாவான்.

48. கிராமப் பெரியதனக்காரர்கள் ஸ்வல்ப கேஸுகளின் பரிசீலனைகாலத்தில் தாங்கள் விசாரிக்கும் சாட்சிகளை அடியிற்கண்ட விதமாகப் பிரமாணம் செய்விக்கவாவது உறுதிமொழி சொல்லுவிக்கவாவது வேண்டும் :—

### கிறிஸ்தவ சாட்சியைப் பிரமாணம் செய்விக்கவேண்டிய விதம்.

“ இப்போது கோர்ட்டார் முன்னிலையிலிருக்கிற விஷயத்தைக் குறித்து நீர் கொடுக்கவேண்டிய சாட்சியம் யதார்த்தமாகவும் முழுமையும்யதார்த்தமாகவும் யதார்த்தம் தவிர வேறே எதுவுமாய் இராததாகவும் இருக்கவேணடும் ; இந்தப்படியிருக்கக் கடவுள் உமக்குச் சகாயம் செய்வாராக.”

யாதொரு கிறிஸ்தவ சாட்சியைப் பிரமாணம் செய்விக்கும்போது, அவருடைய கையில் பைபில் என்னும் விவிலிய வேத புஸ்தகத்தை யெடுத்துக்கொண்டு, "இந்தப்படி யிருக்கக் கடவுள் எனக்குச் சகாயம் செய்வாராக" என்னும் வார்த்தைகளைச் சொல்லி, அப்போதே அந்தப் புஸ்தகத்தை முத்தமிடும்படியும் அவரைச் செய்ய வேண்டும்.

**மஹம்மதிய அல்லது ஹிந்து சாட்சியை உறுதிமொழி சொல்லுவிக்கவேண்டிய விதம்.**

"ஸர்வ சக்தியுள்ள கடவுள் முன்னிலையில் நான் பயபக்தியுடன் உறுதிமொழி கூறுவதென்னவென்றால்,—நான் சொல்லப் போகும் விஷயம் யதார்த்தம், முழுமையும் யதார்த்தம், யதார்த்தம் தவிர வேறொன்றுமில்லை."

49. சாட்சி குழந்தையாயிருந்து, தான் சாட்சி சொல்லுவதற்கு முன்னே சத்தியம் செய்விக்கப்படவேண்டிய கடமையிலிருந்து நிவாரணை செய்யப்படாமலிருந்தால், அடியிற்கண்டபடி அந்த சாட்சியைப் பிரமாணம் செய்விக்கலாம் :—

"நான் யதார்த்தத்தைப் பேசுவேனென்று சத்தியம் பண்ணுகிறேன்."

குற்றம் சாட்டப்பட்டவனைப் பிரமாணம் செய்விக்கவாவது உறுதிமொழி சொல்லுவிக்கவாவது கூடாது.

50. கிராமப் பெரியதனக்காரர்களால் குற்றவாளிகளென்று தீர்மானிக்கப்பட்டவர்களைப் பொலீஸ் காவலுக்கு அனுப்பக்கூடாது. அவர்களைக் கிராமச் சாவடியில் காவற்படுத்திவைக்கவேண்டும். குற்றவாளியென்று தீர்மானிக்கப்பட்ட நபரை யாதொரு மரத்தின் அடியில் மறியல்செய்துவைப்பது சட்ட விரோதமாகும்.

51. கிராமப் பெரியதனக்காரரால் பிறப்பிக்கப்பட்ட ப்ராஸெஸ் என்னும் கட்டளைகளைச் சேர்ப்பிப்பதும், ஸ்வல்ப கேஸுகள் பரிசீலனையாகுங் காலத்திலே கிராமப் பெரியதனக்காரரிடத்தில் ஹாஜராயிருப்பதும், கிராமச் சாவடியில் மறியல்செய்து வைக்கப்பட்டவர்களைக் காவல் காப்பதும் (தலையாரிகளுடைய) கிராமக் காவற்காரர்களுடைய கடமையாகும்.

52. கிராமப் பெரியதனக்காரர் தண்டனையாக விதித்திருக்கிற காவலிலிருந்து தப்பித்துக்கொண்டுபோகிறவர்களாவது தப்பித்துக் கொண்டுபோக எத்தனப்படுகிறவர்களாவது - அது விஷயத்தில் சம்பந்தப்பட்ட கிராமப் பெரியதனக்காரர் ரிபோர்ட் செய்வதன்மேல், இந்தியன் பினல் கோட் 224-வது பிரிவின்படி பிராது தொடரப் படுவதற்குள்ளாவார்கள்.

53. குற்றஞ் சாட்டப்பட்டவன் குற்றவாளியென்று தீர்மானிக்கப்படும்போது அவனை வாஸ்தவத்தில் கைப்பற்றிப் பிடிக்கும்படி ஜாக்கிரதையாய்ப் பார்க்கவேண்டும். அப்போது தன்னைப் பிடிக்கக்கூடாதென்று அவன் எதிர்த்தாலும் தப்பித்துக்கொண்டு ஓடிப்

போனாலும், தப்பித்துக்கொண்டு ஓடிப்போக எத்தனப்பட்டாலும், இந்தியன் பினல் கோட் 224-வது பிரிவின்படி அவன்மேல் குற்றங்கொண்டுவந்து அவனை ஸப்-மாஜிஸ்ட்ரேட் பரிசீலனைசெய்து குற்றவாளியென்று தீர்மானிக்கலாம். ஆனால், அவனைப் பிடிக்க யாதொரு பிரயத்தனமும் செய்யப்படாமலிருந்து அவன் சும்மா நடந்துவிடும்பட்சத்திலே, இந்தியன் பினல் கோட் 224-வது பிரிவின்படி யாதொரு குற்றமும் செய்யப்பட்டதாகாது.

54. கிராமப் பெரியதனக்காரரால் பரிசீலனை செய்யப்பட்டவர்களைக்குறித்து XIV-ம் அனுபந்தத்தில் நிர்ணயிக்கப்பட்டுள்ள நமூனாப்படி ஒரு ரெஜிஸ்டரை கர்ணம் வைத்துவரவேண்டும்.

55. இந்த ரெஜிஸ்டருக்கு ஒரு நகலை, தீர்மானமாகிய தேதி முதல் 48 மணி நேரத்துக்குள்ளாக ஸப்-மாஜிஸ்ட்ரேட்டுக்கும் ஸ்டேஷன் ஹௌஸ் ஆபிஸருக்கும் அனுப்பவேண்டும்; மேலும், ஒவ்வொரு வருஷ முடிவிலும் XV-ம் அனுபந்தத்தில் நிர்ணயிக்கப்பட்டுள்ள நமூனாப்படி ஒரு ஸ்டேட்மெண்டைத் தயார்செய்து அடுத்த வருஷம் ஜனவரி மீ 15வுக்குள் தாலூகா மாஜிஸ்ட்ரேட்டுக்கு அனுப்பவேண்டும்.

56. மேலே 33-வது பாராவிலே குறிப்பிடப்பட்ட 1816-மூ த்து 11-வது ரெகுலேஷன் 10-வது பிரிவைச்சேர்ந்த இரண்டாவது பகுதியில் சொல்லியிருக்கிறபடி விதிக்கப்பட்ட யாதொரு தண்டனையைக்குறித்து ரிபோர்ட் செய்யத்தவறினால், இந்தியன் பினல்கோட் 176-வது பிரிவின்படி காவல் தண்டனையும் அபராதமும் விதிக்கப்படும்.

57. மாஜிஸ்ட்ரேட்டாகவாவது ஸிவில் ஜட்ஜாகவாவது பிரவர்த்திக்கும் கிராமப் பெரியதனக்காரருடைய ஸம்மனை அலட்சியம் செய்தாகிலும், காவலிலிருந்து தப்பித்துக்கொண்டு ஓடிப்போயாகிலும், அவரை அவமதித்தாகிலும், அவருடைய அலுவலைச் செய்யவொட்டாதபடி அவரைத் தடுக்க அவரை பலாத்காரம் செய்தாகிலும், இந்தியன் பினல் கோட் 172-வது முதல் 188-வது வரையிலுள்ள (சட்டப்படி ஸர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்குண்டாகிய அதிகாரத்துக்குள்ளாகாமல் அலட்சியம்செய்வது) பிரிவுகளிலும், 193-வது முதல் 196-வது வரையிலுள்ள (பொய்ச்சாட்சியம் முதலியவை) பிரிவுகளிலும் 199-வது (சட்டப்படி சாட்சியமாக ஏற்றுக்கொள்ளத்தக்க வாக்குமூலத்தில் பொய்யான சங்கதி சொல்லுவது), 200-வது (வாக்கு மூலம் பொய்யானதென்று தெரிந்து அதை மெய்யானதாக உபயோகிப்பது), 205-வது (ஆள்மாராட்டம் செய்வது), 206-வது (சொத்தை மோசடியாய் அப்புறப்படுத்துவது அல்லது மறைப்பது), 207-வது (சொத்தில் மோசடியாய் பாத்தியதைகொண்டாடுவது), 208-வது (பாக்கியில்லாத தொகைக்கு டிக்ரியாகும்படி மோசடியாய்ச் சும்மாவிருப்பது), 209-வது (கோர்ட்டிலே அயோக்கியமாய்ப் பொய்யான தாவாசெய்வது), 210 வது (பாக்கியில்லாத தொகைக்கு மோசடியாய் டிக்ரி பெற்றுக்கொள்வது),

211-வது (தீங்கு செய்யவேண்டுமென்கிற எண்ணத்துடன் அபத்தமாய்க்குற்றஞ்சாட்டுவது), 228-வது (ஸாக்ஷி உத்தியோகஸ்தருக்கு வேண்டுமென்று அவமரியாதை செய்வது அல்லது தடங்கலுண்ணுவது), 463-வது (சிருஷ்டனை), 471-வது (சிருஷ்டனைத்தஸ்தவேஜை எதார்த்தமானதென்று உபயோகிப்பது), 475-வது, 476-வது (தஸ்தவேஜுகளை உறுதிப்படுத்துவதற்கு உபயோகிக்கப்படும் கள்ள முத்திரை முதலிய அடையாளத்தைச் செய்வது, அல்லது கள்ள அடையாளம்போட்டிருக்கிற காகிதம முதலானவைகளை வைத்துக்கொண்டிருப்பது) பிரிவுகளிலும் சொல்லப்பட்டிருக்கிறவைகளைப்போன்ற மற்றக் குற்றங்களைச் செய்தாகிலும யாதொரு நபர் அந்தக் கிராமப் பெரியதனக்காரருடைய அதிகாரத்தை அலட்சியம் செய்யும்போதெல்லாம், அக்குற்றத்தைப் பரிசீலனைசெய்ய அதிகாரமுடைய யாதொரு மாஜிஸ்ட்ரேட்டினால் அக்குற்றவாளி தண்டிக்கப்படும்பொருட்டு, அந்தக் கிராமப் பெரியதனக்காரர் அவ்விஷயத்தைக்குறித்து தாலூகா மாஜிஸ்ட்ரேட்டுக்கு ரிபோர்ட்செய்யலாம்.

58. கிராமப் பெரியதனக்காரர் - சட்டப்படி தமக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற அதிகாரங்களை லஞ்சம் வாங்குவது முதலிய கெட்ட விதமாகவாவது பகைமை பாராட்டியாவது உபயோகித்தால, பிராது தொடரப்படுவதற்கும காவலில வைக்கப்படுவதற்கும் தாம உள்ளாவாரென்பதை ஞாபகத்தில் வைக்கவேணடும்.

தாம் பிடிக்கத்தக்க ஸ்வல்ப கேஸுகளைப்பற்றி விவகரிக்கும்போது, அடியிற்கண்டவைகள - குற்றத்தைக்குறித்து இந்தியன் பினல் கோடின் 4-வது அத்தியாயத்தில் கண்டிருக்கிற பொதுவான நிவாரணைகளுக்குள் சில நிவாரணைகளென்பதை ஞாபகத்தில் வைக்கவேணடும் :—

(i) 7 வயதுக்குட்பட்ட யாதொரு குழந்தையினால் செய்யப்படுகிறதெதுவுங் குற்றமாகமாட்டாது.

(ii) 7 வயதுக்கு மேற்பட்டும் 12 வயதுக்குட்பட்டுமிருந்து, யாதொரு காரியத்தைச் செய்யும்போது அதன் தன்மை இப்படிப்பட்டதென்றும் அதனால் இன்னது நேரிடுமென்றும் நிதானித்தறிவதற்குப் போதுமான புத்தி நுட்பத்தைப் பெற்றிராத யாதொரு குழந்தையினால் செய்யப்படுகிறதெதுவும் குற்றமாகமாட்டாது.

(iii) யாதொரு காரியத்தைச் செய்யும்போது புத்திமாருட்டமாயிருக்கிற காரணத்தினாலே அந்த செய்கையின் தன்மை இப்படிப்பட்டதென்று தெரிந்துகொள்ளவாவது, பிசகான அல்லது சட்டத்திற்கு விரோதமான காரியத்தைத் தாம் செய்துகொண்டிருக்கிறாரென்று தெரிந்துகொள்ளவாவது அசக்தராயிருக்கிற யாதொரு நபரினால் செய்யப்படுகிறதெதுவும் குற்றமாகமாட்டாது.

(iv) யாதொரு காரியமானது எவ்வித ஹானியை உண்டாக்கினாலும், ஹானியை உண்டாக்க உத்தேசிக்கப்பட்டதாயிருந்தாலும், அது வெகுசாய் ஹானியை உண்டாக்கக்கூடியதென்று தெரிந்திருந்

தாலும் அந்த ஊறானியானது சாமான்னிய புத்தியும் குணமுமுள்ள வன் அதைக் குறித்து முறையிட்டுக்கொள்ளவேண்டுமென்கிற எண்ணங்கொள்ளத்தக்கதல்லாத அவ்வளவு அற்பமாயிருக்கிறபட்சத்தில், அது குற்றமாகமாட்டாது

(v) தற்காப்பு நிமித்தம் தனக்காகவாவது தன் சொத்துக்காகவாவது தனக்குள்ள பாத்தியதையைச் செலுத்துகையில் செய்யப்படுகிற காரியமெதுவும் குற்றமாகமாட்டாது.

59. ஞாயிற்றுக் கிழமையை கோர்ட் வேலை நடந்தேறாத நாளாக பாவிக்கவேண்டுமென்பது, கவர்ன்மெண்டாருடைய அபிப்பிராயமாயிருப்பதை கவனிக்கவேண்டும்; ஆகையால், அந்த தினத்தில கிராமப் பெரியதனக்காரர்கள் ஸ்வல்ப கேஸுகளைப் பரிசீலனை செய்வது கூடாது.

10. கிராம மாஜிஸ்ட்ரேட்டுகளின ரெகார்டுகளுக்கு நகல்கள்.

60. (a) யாதொரு கிராம மாஜிஸ்ட்ரேட்டின் ரெகார்டுகளுக்கு நகல்கள் பெறுவதற்கான விண்ணப்பங்களை, நேரில அந்தக் கிராம மாஜிஸ்ட்ரேட்டுக்காவது, அந்தக் கிராமக் கோர்ட் யாருடைய அதிகார வரம்புக்குள் இருக்கிறதோ அந்த ஸப் மாஜிஸ்ட்ரேட்டுக்காவது செய்துகொள்ளலாம். அப்படிப்பட்ட ஒவ்வொரு விண்ணப்பத்திலும், ஷை நகல்கள் தயாரானவுடன் அவைகள எந்த விதமாய்த் தம்மிடத்தில ஒப்புவிக்கப்படவேண்டுமென்று அந்த விண்ணப்பதாரர் விரும்புகிறார், அதாவது—

(i) ஷை நகல்களை அந்தக் கிராம மாஜிஸ்ட்ரேட்டினிடத்திலிருந்தாவது இதுசம்பந்தப்பட்ட ஸப் மாஜிஸ்ட்ரேட்டினிடத்திலிருந்தாவது தாம் நேரில் பெற்றுக்கொள்ள விரும்புகிறார், அல்லது

(ii) அந்த ஸப் மாஜிஸ்ட்ரேட்டின் கோர்ட்டிலிருந்து ஷை நகல்களை ரெஜிஸ்டர் தபால் மூலமாய்த் தமக்கு அனுப்பவேண்டுமென்று விரும்புகிறார

என்பதைக் கண்டெழுதவேண்டும்.

அந்த நகல்களை ரெஜிஸ்டர் தபால் மூலமாய்த் தமக்கு அனுப்பவேண்டுமென்று விண்ணப்பதாரர் விரும்புகிற விஷயத்திலே அவர் - அந்தப்படி செய்வதற்காகப் பிடிக்கும் செலவை, அந்த ஸப் மாஜிஸ்ட்ரேட்டின் கோர்ட்டில் டிபாஸிட் செய்யவேண்டும்.

(b) ஷை விண்ணப்பமானது நேரில் யாதொரு கிராம மாஜிஸ்ட்ரேட்டுக்குச் செய்துகொள்ளப்பட்டால், அவர் அவசியமான முத்திரைக் கடுதாசிகளைச் சவதரிக்கும்படி உடனே கேட்கவேண்டும்; அவைகளைப் பெற்றுக்கொண்டதன்மேல் அந்த விண்ணப்பத்தையும் முத்திரைக் கடுதாசிகளையும், எந்த ரெகார்டுகளுக்கு நகல்கள் கேட்கப்பட்டிருக்கின்றனவோ அந்த ரெகார்டுகளையும், அவருடைய கிராமம் யாருடைய அதிகார வரம்புக்குள் இருக்கிறதோ அந்த ஸப் மாஜிஸ்ட்ரேட்டுக்கு அவர் அனுப்பவேண்டும.

(c) அந்த கிராமம் யாருடைய அதிகார வரம்புக்குள் இருக்கிறதோ அந்த ஸப் மாஜிஸ்ட்ரேட்டுக்கு ஷை விண்ணப்பம் செய்துகொள்ளப்பட்டால், அந்த ஸப மாஜிஸ்ட்ரேட்டானவர் - எந்த ரெகார்டுகளுக்கு நகல்கள் கேட்கப்பட்டிருக்கின்றனவோ அந்த ரெகார்டுகளை அனுப்பும்படி இதுசம்பந்தப்பட்ட கிராம மாஜிஸ்ட்ரேட்டை உடனே கேட்கவேண்டும்; அப்படிப்பட்ட ரெகார்டுகளைப் பெற்றுக்கொண்டதன்மேல், அவசியமான முத்திரைக் கடுதாசிகளைச் சவதரிக்கும்படி அவர் கேட்கவேண்டும்.

(d) மேலேகண்ட இரண்டு விதங்களில் எந்த விதத்திலும், அந்த ஸப் மாஜிஸ்ட்ரேட்டானவர் - நகல்கள் செய்பவர் சம்பந்தமாகவுள்ள சாதாரண விதிகளின்படி ஷை நகல்களைத் தயார்செய்வித்து, விண்ணப்பதாரர் விரும்பும்விதமாய் அவைகளை அவரிடத்தில் ஒப்புவிக்கவேண்டும். அதன்மேல் அந்த ரெகார்டுகளைக் கிராம மாஜிஸ்ட்ரேட்டுக்குத் திரும்ப அனுப்பிவிடவேண்டும்.

### 11. பைத்தியக்காரர்கள்.

61. பைத்தியக்காரர்கள் தங்களைத் தாங்களே பாதுகாத்துக்கொள்ள அசக்தர்களாகவும் தங்களுடைய பந்துக்கள் அல்லது சிநேகிதர்களால் கவனிக்கப்படாமலும் ஊரில் திரிந்துகொண்டிருக்கும்போதாவது, அவர்கள் அபாயத்திற்கிடமாயிருக்கும்போதாவது, அந்த விஷயத்தைக்குறித்து பொலீஸாருக்குமாத்திரமேயல்லாமல் யாருடைய அதிகாரவரம்புக்குள் அந்த கிராமமிருக்கிறதோ அந்த மாஜிஸ்ட்ரேட்டுக்கும் உடனே ரிபோர்ட் செய்யவேண்டியது கிராம உத்தியோகஸ்தர்களுடைய கடமையாகும். அப்படிப்பட்ட பைத்தியக்காரர்களைப் பொலீஸார் தங்கள் விசாரணையின்கீழ் வைத்துக்கொள்ளும்வரையிலும் அவர்களை ஷை கிராம உத்தியோகஸ்தர்கள் பத்திரமாய் வைத்திருக்கவேண்டும்.

### 12. ஏழைகளான பலஹீனர்களும் அனாதரவான குழந்தைகளும்.

62. ஏழைகளான பிரயாணிகளைச் சகாயமற்ற ஸ்திதியிலிருக்கக் கண்டால் அவர்களையும், காணாமற்போன குழந்தைகளையும் தாய் தந்தையில்லாக் குழந்தைகளையும் அனாதரவாயிருக்கக்கண்டால் அவர்களையும் பாதுகாப்பது கிராமப் பெரியதனக்காரருடைய கடமையாகும்.

63. தங்களுக்கு உதவிசெய்யக்கூடியவர்களாயும் அந்தப்படி உதவிசெய்யக்கடமைப்பட்டவர்களாயுமிருக்கிற பந்துக்கள் யாருக்கு இருக்கிறார்களோ அவர்கள் விஷயமாய் ஸர்க்கார் பணத்தைச் செலவிடுவதற்கு கவர்னமெண்டார் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். பந்துக்கள் எவரும் இராமலாவது ஜீவனோபாயம் எதுவும் இராமலாவதுள்ள வாஸ்தவமான ஏழைகளுக்குத்தான் கவர்ன்மெண்டாருடைய உதவியைச் செய்யக்கூடும்.

64. சகாயமற்ற பிரயாணிகளும் குழந்தைகளும்-தங்களுக்கு வேண்டியவற்றைப் பெறாவிட்டால் பட்டினிகிடக்கும்படியான அபாய

முள்ள ஸ்திதியிலிருப்பார்களாகில், கிராமப் பெரியதனக்காரர் அவர்களுக்கு ஆகாரம் கொடுத்துதவவேண்டும்; அப்படிப்பட்டவர்கள் பிரயாணம் செய்யக்கூடியவர்களாயிருக்கிறபட்சத்திலே, அதுவிஷயமான சந்தர்ப்பங்களைக் கண்டெழுதி ஒரு ரிபோர்ட் சகிதமாக அதிசமீபத்திலுள்ள மாஜிஸ்ட்ரேட்டினிடத்தில் அவர்களை அனுப்ப வேண்டும். ஆனால், யாரையாவது கிராமத்திலிருந்து அனுப்பிவிடுவதற்கு முன்னே, அந்த நபர் அந்தப்படி கொண்டுபோகப்படுவதற்கேற்ற ஸ்திதியிலிருக்கிறாரென்று கிராமப் பெரியதனக்காரர் தாமே நேரில் கண்டறிந்து திருப்தியாகவேண்டியதுமல்லாமல், வழியிலே அந்த நபருடைய ஆகாரத்திற்காக ஏற்பாடு செய்யவும் வேண்டும்.

65. வைத்திய சிகிச்சை செய்யவேண்டியது மிகவும் அவசியமாயிருந்து வியாதிஸ்தர் நடந்துபோக அசக்தராயிருக்கும்படசத்தில், அவரை அதிசமீபத்திலுள்ள கவர்ன்மெண்ட் வைத்திய உத்தியோகஸ்தரிடத்திலாவது வைத்திய சாலைக்காவது ஒரு வண்டியிலேற்றி அனுப்பவேண்டும். இந்தப்படி செய்யும் விஷயத்திலே, இந்த சந்தர்ப்பங்களைப்பற்றிய ஒரு ரிபோர்ட்டை, அந்த கிராமப் பெரிய தனக்காரர் யாருக்கு அடுத்துக் கீழ்ப்பட்டவராயிருக்கிறாரோ அந்த மாஜிஸ்ட்ரேட்டுக்கு உடனே அனுப்பிவிடவேண்டும்.

66. அப்படிப்பட்ட சமயங்களில் கிராமப் பெரியதனக்காரரால் செலவிடப்பட்ட தொகையை மாஜிஸ்ட்ரேட்டானவர் அவருக்குத் திருப்பிக்கொடுத்துவிடுவார்.

67. யாதொரு நபருக்குச் சாதாரண மரணம் சம்பவித்திருந்து அவருடைய பிரேதம் கவனிக்கப்படாமலிருக்கும் விஷயத்திலே, கிராமப் பெரியதனக்காரர் அதைப் புதைப்பதற்காக ஏற்பாடு செய்யவேண்டும். அப்படி புதைப்பதற்குப் பிடித்த தொகையை, அதற்காக மாஜிஸ்ட்ரேட்டுக்கு (Bill) பில் அனுப்பிப் பெற்றுக்கொள்ளக் கூடும்.

## 4 - ம் அத்தியாயம்.—தீர்வை வசூல்.

13. *சாதாரண முகாந்தரங்கள்.*

*தீர்வையை வசூல்செய்வதும் அதை நேரே தாலூகா கஜானு வில் செலுத்துவதும கிராம ரெவினியு சிப்பந்திகளின் மிகவும் முக் கியமான கடமையென்பதைக் கிராம உத்தியோகஸ்தர்கள் தெரிந்து கொள்ளவேண்டும்.*

2. *தீர்வை வசூல்செய்வதும் வசூல் செய்யப்பட்ட பணத்தைக் கஜானுவுக்கு இரிசால் செய்கிறவரையில் தம் வசத்திலேயே வைத் திருப்பதும கிராமப் பெரியதனக்காரா அல்லது மணியக்காரருடைய கடமையாகும். கர்ணம் ஒருபோதும பணத்தை வாங்கக்கூடாது. சாத்தியப்பட்டமட்டிலே, வசூல் தொகைகளைக் கிராமச் சாவடியி லாவது ஜனங்கள் சேருவதற்காக அறிக்கை செயயப்பட்டிருக்கிற வேறே இடத்திலாவது வரப்பெற்றுக்கொள்ளவேண்டும. பெரிய தனக்காரர் ஹாஜராயிருந்து, செலுத்தபபடுகிற தொகைக்கு ரசீது களில கையெழுத்து செய்யவேண்டும. சாத்தியப்பட்டால், கர்ண மும் ஹாஜராயிருந்து, கணக்குகளில அந்தத் தொகைகளைக் கிரம மாய்ப பதிந்திருப்பதற்கு அடையாளமாக ரசீதுகளில கையெழுத்து செய்யவேண்டும். பெரியதனக்காரர் 13-ம்நெ. கணக்கை அதாவது அன்றாட வசூல் தொகைகளைக்குறித்த சிட்டாவைத் தயார்செய்து வைத்துக்கொண்டிருக்கவேண்டும் தாலூகா கச்சேரிக்கு அனுப்ப வேண்டிய இரண்டாம் பிரதியைக் கர்ணம தயார்செய்து, அது சரியா யிருக்கிறதென்பதற்கு அடையாளமாகக் அதில கர்ணம் பெரியதனக் காரர் ஆகிய இருவரும் அத்தாட்சிக் கையெழுத்து பண்ணவேண்டும். கிராமப் பெரியதனக்காரரோடுகூட உடன்சேர்க்கையாக ஒரு மணி யக்காரர் இருக்கிற கிராமங்களிலே, தாசில்தாரர் கட்டளையிடும்வித மாக வசூல்வேலை அவ்விருவருக்கும் பகிர்ந்துவிடப்படும்.*

3. *பட்டாதாரர்களாவது அவர்களுடைய பந்துக்களும் சினேகி தர்களுமாவது பட்டா நிலத்தில் பற்றுள்ள வேறே நபர்களா வது தொகைகளைச் செலுத்தலாம். ஆனால், கிஸ்தி செலுத்துவ தற்குக் கவர்ன்மெண்டார் பட்டாதாரரை எதிர்பார்க்கிறார் கள் ; பட்டாதாரர் தாம் தொகை செலுத்துவதாகச் சொல்லும் போது, மற்றவர்களால் செலுத்தப்படும் தொகையை அங்கீகரிப் பது கூடாது.*

4. *கிஸ்தித் தொகைகள் பாக்கியாகும்போது காலதாமதமில்லா மல் அவைகளை வசூல் செய்யவேண்டும் ; ஆனால், குடிகள் தொகை செலுத்துவதாகச் சொல்வார்களாகில் முன்னதாகக் கிஸ்தியை வசூல் செய்வதற்கு ஆட்சேபனை இல்லை. ஒரு ரூபாய்க்குக் குறைந்த பட்டாக்களின்மேல் பாக்கியாகிற தீர்வையை, கலெக்டரால் நிஷ்கரி ஷைசெய்யப்படும் மிகவும் அநுகூலமான கிஸ்தி மாசத்தில் ஒரேதவணை யாக வசூல் செய்யவேண்டும். ஒவ்வொரு கிஸ்தியிலும் தம்பிடிகள்*

செலுத்தவேண்டியதாகும்படி பட்டாத் தொகை இருக்கிற விஷயத்திலே, கடைசி கிஸ்தி தவிர மற்ற சகல கிஸ்திகளிலும் வருகிற தம்பிடிகளை விட்டுவிட்டு, அந்தப்படி விட்டுவிட்ட தொகையைக் கடைசி கிஸ்தியுடன் வசூல்செய்யவேண்டும். உதாரணம்—பட்டா தொகை ரூ. 12–10–0 ஆகவும், ஒவ்வொரு கிஸ்தி டிமாண்டும ரூ. $\frac{12\text{–}10\text{–}0}{4}$ = ரூ. 3–2–6 ஆகவுமிருக்கிற விஷயத்திலே, முதல் மூன்று கிஸ்திகளில் ஒவ்வொன்றும் ரூ. 3–2–0 ஆகவும், கடைசி கிஸ்தி ரூ. 3-4-0 ஆகவுமிருக்கவேண்டும்.

5. பட்டா பிறப்பதற்கு முன்னமே, முந்திய வருஷத்து டிமாண்டை அனுசரித்தும பிற்பாடு மாறுதல்கள் எவையேனும் செய்யப்பட்டிருந்தால் அவைகளை அனுசரித்தும் தீர்வைஜாஸ்தி பசலிஜாஸ்தி என்பவைகளைப்போல் ஒரு நிலையாயிராமல் ஏறிக்கொண்டும் இறங்கிக்கொண்டும் இருக்கும் அமசங்களுக்கு ஜாக்கிரதையாய் ஏற்படுத்தபபட்ட உத்தேசமதிப்பை அனுசரித்தும், பட்டா பிறப்பித்தபிறகு அதில் பதியப்பட்டிருக்கும் டிமாண்டை அனுசரித்தும் கிஸ்தித்தொகைகளைக் கணக்கிடவேண்டும். ஜமாபந்திக்கு முன்னே அங்காமியாக டிமாண்டைக் கணக்கிடும விஷயத்தில் கிராம உத்தியோகஸ்தர்கள் வெகு ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்; வஜா கொடுப்பது பிற்பாடு அவசியமாகத் தோற்றத்தக்க விஷயங்களிலன்றி மற்றப்படி, சரியான டிமாண்டுக்கு அதிகமாக எதையும் வசூல் செய்யாமலிருப்பது சாத்தியமாயிருக்கவேண்டும்.

6. இரிசால் நாமாவாகிய 15-ம்நெ. கணக்கில் கர்ணமும் பெரிய தனக்காரரும் கையெழுத்துசெயது, இரிசாலோடுகூட அதை அனுப்பவேண்டும்.

7. வெறும ரசீது நமூனுக்கள் புஸ்தகமாகச் சேர்த்து, அப்போதைக்கப்போது ரயத்துகளுக்குக் கொடுக்கும்பொருட்டு லக்கம்போட்டு தாசில்தாரரால் முத்திரையிட்டுப பெரியதனக்காரருக்குச் சவதரிக்கப்படும். பாக்கிக்காகவாவது தற்காலத்து டிமாண்டுக்காகவாவது ரயத்தால் செலுத்தப்பட்ட தொகைகளை அவசியமான விவரங்கள்சகிதமாக உடனுக்குடனே பதிந்துகொண்டு, பெரியதனக்காரரும் கர்ணமும் அததாட்சிக் கையெழுத்து செய்யவேண்டும். ரசீதில் இங்க்லிஷ் எக்கங்களை உபயோகிககவேணடும்; ஆனால், அந்தந்த பாபத்துகளைச் சுதேச பாஷையில் எழுதவேண்டும்; மேலும், செலுத்தப்பட்ட மொத்தத் தொகையை சுதேச பாஷையிலே எழுத்தால் மறுபடியும் எழுதவேண்டும். பட்டாதாரர் தவிற வேறே யாராவது பணஞ்செலுத்தி ரசீது புஸ்தகத்தை ஹாஜர் செய்யாதபட்சத்திலே, பிரத்தியேகமாய் ஒரு ரசீது கொடுக்கவேணடும். ரசீது புஸ்தகம் அடுத்ததடவை ஹாஜர் செய்யப்படும்போது, அதில் அவசியமான பதிவுகளை பெயர்த்தெழுதி, அது பெயர்த்தெழுதியதுதானென்று ஒரு குறிப்பு எழுதிச் சேர்க்கவேண்டும். தொகை வாஸ்தவத்தில் செலுத்தப்படுவதற்கு முன்பு எவவகையான ரசீதுகளையும் கொடுப்பது கூடாது. படடாதார் பணஞ்செலுத்துவாரென்று எதிர்பார்த்து ரசீது கொடுக்கப்பட்டதென்கிற சமாதானம் ஒப்புக்கொள்ளப்படமாட்டாது.

8. தொகைகளை வசூல் செய்வதிலும், அவைகளைக் கணக்குகளில் வரவு வைப்பதிலும், தாலூகா கஜாநாவுக்கு அனுப்புவதிலும் ஆலசியங்களும் கிரமப்பிசகுகளும் நேரிடாதபடி கிராம உத்தியோகஸ்தர்கள் ஜாககிரதையாயிருக்கவேண்டும் தாலூகா கஜாநாவுக்குக் கிராம இரிசாலோடு கிராமப் பெரியதனக்காரர் போகவேண்டுமென்கிற அவசியமில்லை. ஒவ்வொரு கிஸ்தி விஷயமாகவும் வசூல் பூர்த்தியாய்ச் செய்யப்படுகிறதாவென்றும், நியமிக்கப்பட்ட தேதிகளில் நம்பிக்கையுள்ள போதுமான காவல்சகிதமாக இரிசால் அனுப்பப்படுகிறதாவென்றும் பார்ப்பது அவருடைய கடமையாகும். தாலூகா கஜாநாவுக்கு இரிசால் தொகைகளைக் கொண்டுபோவது தலையாரி - வெட்டியான் - இவர்களுடைய கடமையாகும்; ஆனால், தாலூகா கஜாநாவுக்கு அனுப்பப்படும் இரிசாலுக்குக் கிராமப பெரியதனக்காரர் உத்தரவாதியாயிருப்பதாக எண்ணப்படுவார்; மேலும், தாலூகா கஜாநாவில் இரிசால் தொகையைச் சோதித்துப்பார்க்கையிலே யாதொரு குறைவிருப்பதாகக் காணப்படுமாகில அவர் அதற்காகவும் உத்தரவாதியாவார்.

14. பலாத்காரமான முகாந்தரம்.

9 1864-ம் வருஷத்து 2-வது ஆக்டினபடி பிறப்பிக்கப்படும் ஸமமன் முதலிய கட்டளைகளை இலவசமாய்ச் சேர்ப்பிப்பதும், அந்த ஆக்டில் கண்டபடி மறியல்செய்வதும ஜப்திபண்ணுவதும் கிராம உத்தியோகஸ்தர்களுடைய சரியான அலுவலைச் சேர்ந்தவைகளாயிருக்கின்றன.

10. ஆகையால், அவர்கள் - தங்களுடைய வேலைகளைச் சரியாய்ச் செய்யும்பொருட்டு, ஆக்டிலுள்ள நிபந்தனைகளின் அடியிற்கண்ட சங்கிரகத்தையும் அதனபடி இலாகா மூலமாய்ப் பிறப்பிக்கப்பட்ட கற்பனைகளையும நன்றாய்த் தெரிந்திருக்கவேண்டியது அவசியம்.

11. நிலதீருவைக்காகச் செலுத்தவேண்டிய ஸர்க்கார் தீர்வையிலே, பாய்ச்சலுக்குச் சவதரிக்கப்பட்ட தண்ணீருக்காகக் கவர்ன்மெண்டுக்குச் செலுத்தத்தக்க ஸெஸ் என்னும் வரிகளும் வேறே தீர்வைகளும் அடங்கும்.

12. நிலமும் அதனமேலிருக்கிற கட்டிடங்களும அதன் உற்பத்திகளும் ஸர்க்கார் தீர்வைக்கு ஈடாகும். "நிலம" என்பதனால், நிலத்தின் எந்த பாகவிஷயமாக பாக்கி சேரவேண்டியதாகுமோ அந்த பாகமாத்திரமேயல்லாமல், யாதொரு ரயத்தின கைப்பற்றில் அடங்கியுள்ள சகல நிலஙகளும எனறு அர்த்தமாகும்.

13. ஒவ்வொரு ரயத்வாரி நிலத்துக்குடையவரும் சொற்ப இனாம்தாரரும் தம்முடைய நிலத்திற்காகப் பாக்கியாகும் தீர்வையை அது பாக்கியாகிற மாதத்தின் 10 உயிலாவது அதற்கு முன்னிட்டாவது ஜில்லாவின் கிஸ்த்பந்தி ஏற்பாட்டின்படி கிராமப் பெரியதனக்காரரிடத்தில் செலுத்திவிடவேணடும்.

14. கிஸ்தி முழுமையுமாவது அதன் ஒருபாகமாவது அந்தப்படி செலுத்தப்படாதிருக்கிறபோது, அந்த கிஸ்தித் தொகையாகிலும்

அதில் செலுத்தப்படாத பாகமாகிலும் தீர்வை பாக்கியாயிருப்பதாக எண்ணப்படும்.

15. ஜப்திசெய்தும விற்பனைபண்ணியும் பாக்கியை வசூல்செய்யத் தாசில்தாரர்களும் டெப்யுடி தாசில்தாரர்களும் அதிகாரங் கொடுக்கப் பெற்றிருக்கிறார்கள். பாக்கிதாரருடைய அசையும் பொருளையாவது அசையாப் பொருளையாவது இரண்டையுமாவது விற்பனைபண்ணிப் பாக்கியை வசூல்செய்யலாம். சாகுபடிசெய்கிற ஒவ்வொருவனுக்காகவும் விவசாயக்கருவிகளும் உழவுக்குதவும் கால்நடைகளில் ஒரு ஜதையும் ஜப்திக்குள்ளாகாமல் நிவாரணையாகவேண்டும். பட்டாக்களை வைத்திராத ரயத்துகள அநுமதி கொடுக்கப் பெறாமல் அனுபோகத்தில் வைத்திருக்கிற விஷயங்களில் இந்தப்படி நிவாரணைசெய்யப்படவேண்டும். ஒரு ரயத்து பல பட்டாக்களை வைத்திருப்பாராகில், மறியல்செயயப்படுகிற ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஒரு ஜதை கால்நடை விஷயமாகத்தான் நிவாரணை பெற்றுக் கொள்ள அர்ஹராவார். ஒருபட்டா பல நபர்கள் பேரிலிருக்குமானால ஒவவொருவரும் தமக்காக நிவாரணை பெறறுக்கொள்ள அர்ஹராவார். பாககியை மற்றபபடி வசூல்செய்யக்கூடுமானால நாற்றுகளை ஜப்திபண்ணி விற்பனை செய்யக்கூடாது.

16. வருஷத்திற்கு நூற்றுக்கு ஆறு விழுக்காடு தீர்வைபாககிக்கு வட்டி ஏறபடும்; ஆனால, கலெக்டா அல்லது டிவிஷன் உத்தியோகஸ்தருடைய உத்தரவுகளினபடிக்கன்றி மறறபடி, பசலி முடிவு வரையிலே நிலத்தீர்வை பாக்கிக்கு வட்டி வாங்கக்கூடாது. ஒரு மாதத்துக்குக குறைந்த காலத்துக்கு வட்டி கணக்கிடவுங்கூடாது, ஒரு ரூபாய்க்குக் குறைந்த தொகைககு வட்டி வாங்கவுங்கூடாது.

### அசையும்பொருளை மறியல்செய்வது.

17. தீர்வைபாக்கிக்காக அசையும் பொருளைக் கைப்பற்றி விற்பனை பணணுகையில் அடியிற்கணட விதிகளை அநுசரிக்கவேண்டும.

18. தாசிலதாரர் அல்லது ரெவினியு இன்ஸ்பெக்டா (1-ம்கூ. நமூனைப்படி) ஒரு டிமாணட் நோடிஸை எழுத்துமூலமாய்ப் பெரியதனக்காரருககு அனுப்புவாா. தங்களுடைய சொந்த கிராமங்களில் தஙகளுடைய சொந்த அதிகாரத்தின்பேரில் டிமாணட் நோடிஸுகளைப் பிறப்பிக்கத்தக்க யோக்கியதையுள்ள கிராமப் பெரியதனக்காரர்களுக்கும அதிகாரம் கொடுக்கலாம்.

19. தொகையைச் செலுத்தும்படி செய்வதற்காக வாஸ்தவமாய்ப் பலாத்காரம் செய்வது அவசியமென்று கிராம உத்தியோகஸ்தர்களுக்கு நிச்சயமாய் ஏற்பட்டாலன்றி மற்றப்படி, டிமாண்ட் நோடிஸுகளை ஒருபோதும் பிறப்பிக்கக்கூடாது. பெரிய தனக்காரர் அநத நோடிஸைக் காட்டவேண்டும்; அதன்மேல், படி ஏதாவதிருந்தால் அதுசக்திமாக பாககி உடனே செலுத்தப்படாவிட்டால, மறியல் செய்வதற்கு அந்த நோடிஸ் அவருக்கு அதிகாரமாகும். மறியல் செய்யப்பட்ட சொத்தின் ஜாபிதா அல்லது டாப்பையும் அது கொடுத்துவைக்கப்படும அல்லது வைத்துவைக்கப்

படும் இடத்தின் பெயரையும் அந்த நோடிஸ் பிரதியின்மேல் எண்டார்ஸ்செயது, அவர் அந்தப் பிரதியை பாக்கிதாரரிடத்தில் ஒப்பிக்க வேண்டும்.

வட்டியும் படியும் மறியல் செய்வதற்காகப் பிடித்த சகல செலவுகளும் சகிதமாகத் தொகை முன்னதாய்ச் செலுத்திவிடப்பட்டாலன்றி மற்றப்படி, மறியல் செய்யப்பட்ட சொத்து உடனே பஹிரங்கமான விற்பனைக்குக் கொண்டுவரப்படுமென்றுங்கூட ஷை நோடிஸில் கண்டிருககவேண்டும்.

யாதொரு பாக்கிதாரர் ஹாஜராயிராதபோது, மறியல்செய்த தேதிமுதல கணக்கிட்டு மூன்றுவது தினம கடந்துபோவதற்குமுன்னமே, எண்டார்ஸ்மென்ட் சகிதமாக ஷை நோடிஸின் பிரதியொன்றை அவர் வழக்கமாய் வாசஞ்செய்கிற இடத்திலாவது சொத்து மறியல் செய்யப்பட்டிருக்கிற இடத்திலாவது ஒட்டிவைக்கவாகிலும் விட்டுவைக்கவாகிலும் வேண்டும.

20. இதுவிஷயத்திற்கென்று பிரத்தியேகமாய ஏற்படுத்தப்பட்ட படிச்சேவகர்கள் அல்லது அமீனுக்களிடத்தில் நிறைவேற்றுவதற்காக டிமாண்ட் நோடிஸ் ஒப்பிக்கப்படுமாகில், கட்டளை நிறைவேற்றப்படும் காலத்தில பெரியதனக்காரர் ஒருபோதும் தவறாமல் ஹாஜராயிருந்து, மறியல சொத்தை தம் வசப்படுத்திக்கொளளவேணடும். பாக்கிதாரர் பாக்கியைச் செலுத்திவிட தயாராயிருக்கிறபட்சத்திலே, அந்தப் பணத்தை அவர்மாத்திரமே வரப்பெற்றுக்கொள்ளவேண்டுமேயொழிய, படிச்சேவகரிடத்தில் செலுத்துவதற்கு அனுமதி கொடுக்கக்கூடாது.

21. பாக்கியாகிற தொகை டிமாண்டிற்கண்ட ஷரத்துகளின்படி செலுத்தப்படாவிட்டால், மறியல செய்யபபட்ட சொத்தை, வட்டியும் படியும் மறியல்செலவுமுட்படச் சேரவேண்டிய பாக்கி செல்லாகும்பொருட்டுப் பஹிரஙகமாய் விற்பனை செய்வதற்காக அசசொத்தின் ஜாபிதாவைப் பெரியதனக்காரர் தாசில்தாருக்கு அனுப்ப வேண்டும். பாக்கி வசூலாகிறவரையிலாவது சொத்து விற்பனையாகிறவரையிலாவது கிராம உத்தியோகஸ்தர்கள், மறியல் செய்யப்பட்ட சொத்தை ஜாக்கிரதையாய்ப் பாதுகாக்கவேண்டும்.

22. ரெஜிஸ்டரான யாதொரு கூட்டுப்பட்டாதாரர் கைப்பற்று நிலத்தில் தனக்கு யாதொரு பற்றுமில்லையென்று கலெக்டருக்காவது டிவிஷன் உத்தியோகஸ்தருக்காவது தாசில்தாருக்காவது எழுத்துமூலமாய் நோடிஸ் கொடுப்பாராகில், ரெஜிஸ்டரான மற்ற கைப்பற்றுதாரர்களுக்குச் சொந்தமாயிருக்கிற அசையும்பொருள்கள் விற்பனை செய்யப்படாமலிருக்கிறவரையிலாவது, அந்த நிலமும் விற்பனைசெய்தாகிறவரையிலாவது, அவருடைய அசையும்பொருள்களை ஜப்திபணணக்கூடாது. ரெஜிஸ்டரான மற்ற பட்டாதாரர்களுடைய அசையும்பொருள்களும் நிலமும் விற்பனையானபிறகு இன்னும் வரவேண்டிய பாக்கி இருக்குமாகில், மேலேகண்டபடி நோடிஸ் கொடுத்திருக்கும் ரெஜிஸ்டரான பட்டாதாருடைய அசையும் பொருள்களை ஜப்திபண்ணி விற்பனை செய்யக்கூடும்.

23. ஒரு கிராமத்தைக்குறித்த எல்லா டிமாண்ட் நோடிஸுகளை யும் ஒரே ஒரு காகிதத்தில் எழுதி அனுப்புவது சட்ட விரோதமா காது. மறியல் செய்யவேண்டிய அவசியமிருக்கிறதென்று தோற் றும்போது, மறியல் செய்கிறவர்-பாக்கிதாரராயிருந்தாலுஞ்சரி அவ ருடைய ஏஜெண்டாயிருந்தாலுஞ்சரி சொத்து யாாவசத்திலிருக்கி றதோ அவருக்கு (1-ம் நெ.) டிமாண்ட் நோடிஸின் அசலைக்காட்டி, அந்த பாக்கிதாரரைப்பற்றிய விவரங்கள் சகிதமாக ஒரு பிரத்தியே கமான நமூனாவில் நகலெடுத்துக்கொண்டு, மறியல் செய்யப்பட்ட சொத்தின் ஜாபிதாவை அந்த நகலின்மேலெழுதி அதை அவரிடத் தில் ஒப்பிக்கவேண்டும். இந்த ஜாபிதா 2-ம் நெ. நமூனாப்படி இருக்கவேண்டும்; இதற்கு அசசிட்ட நமூனாக்கள சவதரிக்கபபடும்; இவைகளில் எழுதவேண்டியவைகளை காணம் எழுதவேண்டும். (1-ம் நெ.) அசலிலே அதனபடி அதிகாரங்கொடுக்கப்பெற்ற பெரிய தனக்காரர் ஒவ்வொரு பதிவையும்பற்றிய பைசலை ஓரத்தில் குறி த்துவைக்கவேண்டும; எப்படியெனறால் :—"காட்டியதன்மேல் கொடுக்கப்பட்டது, 21-2-1907" அல்லது "தாலூகாவுக்கு 2-ம் நெ. அனுப்பப்பட்டது, 24-2-1907," அல்லது "ஜப்திக்கு சொத்து எதுவுமில்லை." (1-ம் நெ. அசல் மறியல் உத்தரவை) அதில குறிக் கப்பட்ட தேதிக்குள்ளாகத் தாலூகாவுக்கு அனுப்பவேண்டும்.

24. யாதொரு பாக்கிதாரருடைய சொத்து மறியல் செய்யப்பட் டபிறகும், விற்பனைக்காக ஏற்படுத்தப்பட்ட தினத்திற்கு முன்னும் அவர்-டிமாண்ட் செய்யப்பட்ட பாக்கித் தொகையைக் கொடுப்பதா கச்சொல்வதல்லாமல், வட்டியையும்படியையும் மறியல்விஷயமாகப் பிடித்த அவசியமான எல்லாச் செலவையுங்கூட செலுத்துகிறவிஷய த்திலே, பெரியதனக்காரர் அந்தத் தொகையைப் பெறறுக்கொண்டு, உடனே அந்த சொத்தை விடுதலைசெய்யவேணடும். அவர் சொத் தை ஒப்பித்ததறகாகப் பாக்கிதாரரிடத்திலிருந்து ரசீது பெற்றுக் கொள்ள ஜாக்கிரதையாயிருக்கவேணடும.

25. யாதொரு பாக்கிதாரருடைய மாகூலையாவது நிலத்தில் பறி க்கப்படாமலிருக்கிற உற்பத்திகளையாவது ஜப்திசெய்கிற யாதொரு பெரியதனக்காரர்-அவைகள் அறுவடையாவதறகு அல்லது பறிப்ப தற்குத் தகுதியாயிருக்கும்போது அவைகளை விற்பனை செய்விக்க லாம் ; அல்லது, தமககு இஷ்டமானால் சரியான காலத்திலே அவை களை அறுவடை செய்வித்து அல்லது பறிப்பித்து விற்பனையாகிறவ ரையில் தகுந்த இடங்களில சேர்த்துவைப்பிக்கலாம். பின்னே சொல்லியபடி செய்கிறவிஷயத்திலே, அப்படிப்பட்ட மாகூல் அல் லது உற்பத்தியை அறுவடை செயததற்காகவும் அல்லது பறித்த தற்காகவும், சேர்த்துவைத்ததற்காகவும் பிடித்த செலவை, சொந்த க்காரர் சொத்தை மீட்டுக்கொளளும்போது செலுத்தவேண்டும் ; அல்லது அது விற்பனைசெய்யபபடுகிறபட்சத்தில் விற்றுமுதலிலிரு ந்து ஷை செலவை எடுத்துக்கொள்ளவேண்டும்.

26. பெரியதனக்காரர்-மறியல்செய்யப்பட்ட எருதுகளையாவது கால்நடைகளையாவது வேலைசெய்விக்கவுங்கூடாது, மறியல்செய் யப்பட்ட சரக்கு அல்லது தட்டுமுட்டு சாமான்களை உபயோகிக்கவுங் கூடாது : கால்நடைகளுக்காவது உயிரோடிருக்கும் ஜந்துக்களுக்

காவது அவர் அவசியமான தீனி சவதரிக்கவேண்டும் ; அதற்காகப் பிடித்த செலவைச் சொந்தக்காரர் சொத்தை மீட்டுக்கொள்ளும் போது செலுத்தவேண்டும் ; அல்லது அது விறபனைசெய்யப்படுகிற பட்சத்தில் விற்றுமுதலிலிருந்து அச்செலவை எடுத்துக்கொள்ள வேண்டும்.

27. மறியல்செய்யப்பட்ட சொத்தைச் சரியாய்ப் பந்தோபஸ்து செய்வதற்காக வேண்டிய முன் ஜாக்கிரதையான ஏற்பாடுகளைச் செய்யும் விஷயத்தில் பெரியதனக்காரர் அசட்டையாயிருந்த காரணத்தினாலாவது, அதை அவர் அக்கிரமமாய் வேலைசெய்வித்த காரணத்தினாலாவது உபயோகித்த காரணத்தினாலாவது, அது திருடிக் கொண்டுபோகப்பட்டாலும் சேதமாய்ப்போனாலும் நஷ்டமானாலும், அப்படிப்பட்ட சேதம் அல்லது நஷ்டத்தொகையானது-யாருடைய அஜாக்கிரதையினாலோ அல்லது செய்கையினாலோ அப்படிப் பட்ட சேதம் அல்லது நஷ்டம் நேரிட்டதோ அந்த பெரியதனக்காரரிடத்திலிருந்து சுருக்கவகையாகக் கலெக்டரால் வசூல்செய்யப்படத் தக்கதாகும் ; அந்தத் தொகை வசூலாகும்போது நஷ்டமடைந்தவனுக்கு அதைக் கொடுத்துவிடவேண்டும்.

28. மறியல்செய்வது அளவுக்கதிகமாயிருக்கக்கூடாது ; அதாவது, மறியல்செய்யப்பட்ட சொத்து கூடியவரையில் பாக்கித்தொகைக்கு ஏற்றதாயிருக்கவேண்டும்.

29. சூரியோதயத்திற்கு முன்னும் சூரியாஸ்தமனத்திற்குப்பின்னும் சொத்தை மறியல்செய்யக்கூடாது.

30. பாக்கிதாரராகவாவது பாக்கிதாரருக்காக உத்தரவாதியாகவாவதிராத யாதொரு நபர் மறியல்செய்யப்பட்ட சொத்துக்குச் சுதந்தரமுண்டென்று தாவாபண்ணியும் பாதகமில்லாமலே பெரியதனக்காரர் அதை விறபனைசெய்விப்பாராகில், அந்த தாவாதாரர் தகுந்த அதிகாரமுடைய யாதொரு ஸிவில்கோர்ட்டில் அந்த சுதந்தரத்தை ருஜுப்படுத்துவதனமேலும், எதற்காகச் சொத்து விற்பனைசெய்யப்பட்டதோ அந்த தீர்வை பாக்கிக்காக பெரியதனக்காரர் தம்முடைய உத்தரவாதத்தை ருஜுப்படுத்த அசக்தராயிருக்கிறபட்சத்திலும், அந்த சொத்தின் முழுமதிப்புத்தொகையையும் அந்தந்த விஷயத்தைப்பற்றிய சந்தர்ப்பங்களுக்கேற்றபடி வட்டியையும், செலவையும் நஷ்டத்தொகையையும் பெரியதனக்காரரிடத்திலிருந்து வசூல்செய்யலாம். ஆனால், ஜப்திசெய்யப்பட்ட நிலத்திலுள்ள பறிக்கப்பட்ட உற்பத்தியாவது நிலத்திலுள்ள மாசூலாவது பாக்கிதாரருடைய ஸ்வாதீனத்திலிருந்தால், அவைகளுக்காகக் கொண்டு வரப்படும் தாவாக்கள் முந்திய விறபனை, கொதுவை அல்லது வேறே காரணத்தை ஆதாரமாகக்கொண்டு செய்யப்படுமாகில் அப்படிப்பட்ட தாவாக்களினாலே, அந்த மாசூல் அல்லது உற்பத்தி எந்த நிலத்தில் உற்பத்தியாயிற்றோ அந்த நிலத்திற்காகப் பாக்கியாயிருக்கிற தீர்வையைப்பற்றிய முந்திய தாவாவுக்குத் தடையுண்டாக மாட்டாது.

31. பாக்கிதாரருக்குச் சொந்தமாயிருந்து உள்ளேவைக்கப்பட்டிருக்கிற சொத்தை ஜப்திசெய்யும்பொருட்டு யாதொரு வாயம்,

தொழுவம், களஞ்சியம், கிடங்கு, வீட்டுக்கு வெளியேயுள்ள சிற்றறை அல்லது வேறே கட்டிடதைத யாதொரு பெரியதனக்காரா பலாத்காரமாய்த் திறக்கலாம்; மேலும், அவர் வெளிக்கதவு திறந்திருக்கும் யாதொரு குடியிருக்கும் வீட்டுக்குள்ளும் பிரவேசிக்கலாம; அன்றியும், மேலேசொன்ன காரியத்திறகாக அப்படிப்பட்ட குடியிருக்கும் வீட்டிலுள்ள யாதொரு அறையின் கதவை உடைத்துத்திறககலாம்; ஆனால், இதில் பினனால சொல்லியிருககிறபடிக் கன்றி மற்றப்படி, அம்மாதிரியான குடியிருககும வீட்டிற்குள் கோஷாக்களுக்காகவாவது ஸதிரீகளிருப்பதற்காகவாவதெனறே பிரத்தியேகமாய் ஏற்படுத்தபபட்டிருககிற யாதொரு அறையைப் பெரியதனககாரா உடைத்துத் திறக்கவுங்கூடாது, அதில பிரவேசிக்கவுங் கூடாது.

32. வெளிககதவு மூடியிருக்கிற குடியிருககும வீட்டிற்குள்ளாவது, ஸ்திரீகளுககாகவெனறே பிரத்தியேகமாய ஏறபடுத்தப்பட்டுத் தேசாசாரப்படி அந்தரங்கமானவைகளெனறு எணணப்படுகிற எவவித அறைகளுக்குள்ளாவது பாக்கிதாரருடைய சொத்து வைக்கப்பட்டிருக்கிறதெனறு நினைக்கப் பெரியதனககாரருககு நியாயமிருககிற விஷயத்திலே, அவா அதிசமீபத்திலுள்ள பொலீஸ் ஸ்டேஷன் விசாரணை உத்தியோகஸ்தருககு அந்த விஷயத்தைத் தெரிவிக்கவேண்டும். அவர் அந்தபபடி தெரிவித்ததனமேல், ஷை ஸ்டேஷன் விசாரணை உத்தியோகஸ்தர் அவவிடத்திற்கு ஒரு பொலீஸ் உததியோகஸ்தரை அனுப்பவேணடும்; கோஷாக்களிருக்கும இடந்தவிர வீட்டிற்குள்ளிருக்கிற வேறே யாதொரு அறையின கதவைப் பெரியதனககாரா எப்படி உடைத்துத் திறக்கலாமோ அப்படியே ஷை குடியிருககும் வீட்டின் வெளிக்கதவையும் அவர் அந்த பொலீஸ் உத்தியோகஸ்தா முனனிலேயில பலாத்காரமாயத் திறககலாம். மேலும, பொலீஸ் உத்தியோகஸ்தருடைய முனனிலேயிலே பெரியதனககாரா-கோஷாககளுக்கெனறு ஏறபடுத்தப்பட்ட இடத்திலிருக்கிற ஸ்திரீகளே அப்புறபபடுத்தவேண்டுமெனறு கிரமமான நோடீஸ கொடுத்தபின்பும, (அந்த ஸதிரீகள் தேசாசாரப்படி வெளியில் பஹிரங்கமாய் வரககூடாதவாகளான அந்தஸ்துள்ளவாகளாயிருந்தால்) அவர்களேத் தகுந்தவிதமாக அப்புறப்படுத்துவததறகேற்ற முகாந்தரங்களேச் சவதரிததபினபும, கோஷா ஸதிரீகளின அறைகளில வைக்கபபட்டிருககிற பாக்கிதாரருடைய சொத்தை ஜப்தி செய்யுமபொருட்டு அநத அறைகளுக்குள் பிரவேசிக்கலாம; ஆனால், அப்படிப்பட்ட சொத்து அகப்படுகிறபட்சத்தில் அதை உடனே அந்த அறைகளிலிருந்து அபபுறப்படுத்திவிடவேண்டும்; அதன் பிறகு அந்த அறைகளே, முனனே அவைகளிலிருந்தவர்களுக்கு தாராளமாய் விட்டுவிடவேண்டும்.

## அசையும்பொருளை விற்பனைசெய்வது.

33. யாதொரு பெரியதனக்காரர் விற்பனை நோடீஸைத் தாசில்தாரரிடத்திலிருநது வரப்பெற்றுக்கொளளும்போது, அவர் - ஜப்தி செய்யப்படட சொத்து இன்ன இடத்தில் இன்ன தினம் இன்ன மணிநேரத்திலே விற்பனை செய்யப்படுமென்று கண்டிருககும் நோ

டிஸ் சகிதமாக, விற்பனை செய்யப்போகும் சொத்தின் ஜாபிதாவைப் பாக்கிதாரருடைய வீட்டு வெளிக்கதவிலாவது சொத்து மறியல் செய்யப்பட்டிருக்கக்கூடியவளவிலாவது ஒட்டுவித்து, எவைகளின் விஷயமாகப் பாக்கி ஏற்பட்டதோ அந்த நிலங்களிருக்கிற கிராமத்திலும், உத்தேச விற்பனையைக்குறித்து எந்த இடம் அல்லது இடங்களில் கிரமமாய்ப் பஹிரங்கஞ்செய்வது தாசில்தாரருக்கு அவசியமாகத் தோற்றுமோ அந்த இடம் அல்லது இடங்களிலும் ஷை விற்பனையைக்குறித்து தண்டோராமூலமாகப் பிரசித்தஞ்செய்விக்கவேண்டும். நோடிஸ் ஒட்டப்பட்ட தேதிமுதல் பதினைந்து தினம் சென்றபிறகன்றி மற்றப்படி விற்பனை செய்வது கூடாது.

34. நியமிக்கப்பட்ட காலத்திலே யுக்தமாகத் தோற்றுகிறபடி அந்த சொத்தை ஒரே பாகமாகவாவது பல பாகங்களாகவாவது ஏலம்போட்டு, உயர்ந்த விலைக்குக் கேட்கிறவருக்குக் கொடுத்துவிடவேண்டும். பாக்கித்தொகைக்கு அதிகமாகச் சொத்து விற்பனையாகிறவிஷயத்தில், ஏலத்திற்காகப் பிடித்த செலவையும் வட்டியையும் கழித்துக்கொண்டபிறகு மிகுதித் தொகையைப் பாக்கிதாரருக்குக் கொடுத்துவிடவேண்டும்.

35. விற்பனைக்காலத்திலாவது, விற்பனை செய்கிற (அமீன் அல்லது ரெவினியு இன்ஸ்பெக்டர்) உத்தியோகஸ்தர் உடனே பின்பு ஏற்படுத்துகிற காலத்திலாவது அந்த சொத்துக்காகத் தொகையை ரொக்கமாயக் கட்டிவிடவேண்டும்; கிரயதாரர் அந்த சொத்துக்காகத் தொகை முழுவதையுஞ் செலுத்தியாகிறவரையில் அச்சொத்தின் எந்த பாகத்தையாகிலும் எடுத்துக்கொண்டுபோக அவருக்கு அனுமதி கொடுக்கப்படமாட்டாது. கிரயதாரர் கிரயத்தொகையைச் செலுத்தத் தவறுகிறவிஷயத்திலே, அந்த சொத்து மறுபடியும் ஏலம் போடப்படும்; தொகை செலுத்தத் தவறிய கிரயதாரர் மறுபடியும் ஏலம் போடுவதனால் நேரிடும் யாதொரு நஷ்டத்திற்கும் பிடிக்கும் செலவுக்கும் உள்ளாவார்.

### நிலத்தை ஜப்திபண்ணுவதும் விற்பனை செய்வதும்.

36. நிலத்தை ஜப்திசெய்யவேண்டியதாயிருக்கும்போது, பெரியதனக்காரர் தாசில்தாரரிடத்திலிருந்து 4-ம்ஷெ. டிமாண்ட் நோடிஸைப் பெற்றுக்கொண்டு அதை பாக்கிதாரருக்குச் சேர்ப்பிக்கவேண்டும். அதைச் சேர்ப்பிக்கவேண்டியதெப்படியென்றால் - பாக்கிதாரர் வழக்கமாய் வசிக்கிற இடத்திலே அவரிடத்திலாவது, அவருடைய குடும்பத்தைச்சேர்ந்த வயதுவந்த யாதொரு ஆண்பிள்ளையினிடத்திலாவது, அதிகாரம் கொடுக்கப்பெற்ற அவருடைய ஏஜென்டினிடத்திலாவது ஒரு நகலைச் சேர்ப்பிக்கவேண்டும்; அல்லது அவர் கடைசியாய் வசித்துக்கொண்டிருந்தாரென்று தெரியவரும் ஸ்தானத்திலே எல்லாருக்கும் தெரியும்படியான ஒரு இடத்திலாவது, ஜப்திசெய்யப்போகிற நிலத்தில் எல்லாருக்கும் தெரியும்படியான ஒரு இடத்திலாவது அதன் நகலொன்றை ஒட்டவேண்டும்.

37. ஜப்திபண்ணி விற்பனை செய்யப்போகிற நிலங்களைக்குறித்து XVI-ம் அனுபந்தத்தில் நிர்ணயிக்கப்பட்ட நமூனாப்படியுள்ள

ஒரு ஜாபிதா சகிதமாக, டிமாண்ட் சேர்ப்பித்தவிதத்தை அசல் டிமாண்டில் எழுதிப் பெரியதனக்காரா அதைத் தாசில்தாரருக்குத் திரும்ப அனுப்பிவிடவேண்டும் :—

**குறிப்பு.**—இந்த ஜாபிதாவைத் தயார்செய்கையிலே அடியிற்கண்ட கற்பனைகளைக் கிராம உத்தியோகஸ்தர்கள் கவனிக்கவேண்டும் :—

(1) ரெஜிஸ்டரான கைப்பற்றுதாரரால் எவ்வளவு கிரமப்பிசகாகவேனும் வேறொருவருக்கு மாற்றப்பட்டும், யாதொரு பாக்கி சேரவேண்டியதாயிராதவைகளுமான நிலங்களை, விற்பனைக்குக் கொண்டுவரப்படாத மற்ற நிலங்களுக்கு அந்த ரெஜிஸ்டரான கைப்பற்றுதாரரால் செலுத்தவேண்டியதாயிருக்கிற தீர்வை பாக்கிக்காக விற்பனை செய்வது யுக்தமல்ல. சேரவேண்டிய பாக்கியானது நிலங்களை மாற்றிக்கொள்ளப்பெற்றவர் தவறிப்போன காரணத்தினால் நேரிட்டிருந்தாலன்றி மற்றப்படி, ரெஜிஸ்டரான கைப்பற்றுதாரருடைய ஸ்வாதீனத்திலுள்ள மற்றெல்லா நிலங்களும் சொத்தும் முன்னதாக விற்பனையாகிறவரையிலே, மாற்றிக்கொள்ளப்பெற்றவருடைய ஸ்வாதீனத்திலுள்ள நிலங்களை விற்பனைசெய்வதுகூடாது.

(2) எந்த நிலத்தின விஷயமாக பாக்கி சேரவேண்டியதாயிருக்கிறதோ அந்த நிலத்தின சொத்துவ பாத்தியதையைக்குறித்து விவாதம் ஏற்பட்டாலும் சந்தேகமுண்டானாலும் பாக்கிதாரருடைய அசையும்பொருளை மறியல் செய்யாமல், நிலத்தை ஜப்திபண்ணி அவசியமானால் விற்பனைசெய்வதே சரியான முறையாகும்; ஏனென்றால், நிலத்தின் சொந்தக்காரா யாராயிருந்தபோதிலும்அந்த நிலம் பாக்கிசெலுத்தும பொறுப்புக்குட்பட்டிருப்பதைக்குறித்துச் சந்தேகமில்லை.

(3) ஸிவில் கோர்ட்டாரால் விற்பனைசெய்யப்பட்ட நிலங்களை, சொத்துவத்தைக்குறித்த மாறுதல்களை யோசிக்காமலே, அந்த நிலங்களுக்காகச் சேரவேண்டியதாயிருக்கிற தீர்வை பாக்கிக்காக ஜப்திபண்ணி விற்பனை செய்யலாம்.

(4) தீர்ப்புக்குமுன்பானாலுஞ்சரி பின்பானாலுஞ்சரி ஸிவில் கோர்ட்டாரால் நிலம் ஜப்திசெய்யப்பட்ட காரணத்தினாலே, தீர்வை பாக்கிக்காக அந்த நிலத்தை ஜப்திசெய்வதற்கு தடையுண்டாகமாட்டாது. ஸிவில கோர்ட்டார ஜப்திசெய்வதற்குமுன் எப்படியோ அப்படியே பினபும் தீர்வை பாக்கிக்காக நிலங்களையும் அவைகளில் அறுவடையாகாமலிருக்கும் மாசூலையும் ஜப்திபண்ணி விற்பனைசெய்ய ரெவினியு அதிகாரிகளுக்கும் அதிகாரமுண்டு; கோர்ட்டார ஜப்திபண்ணி விற்பனைசெய்பவை - நிலத்திலும் மாசூலிலும் தீர்ப்பான கடனாளிக்குள்ள உரிமையையும ஸ்வதந்தரத்தையும் பாத்தியதையையுமேயாம்; ரெவினியு அதிகாரிகளோவென்றால் நிலத்தையும் அதில் அறுவடையாகாமலிருக்கிற மாசூலையும் விற்பனை செய்கிறார்கள்.

எதைப்பற்றி டிமாண்ட் செய்யப்படுகிறதோ அந்த நிலம் முன்னதாக ஸிவில் கோர்ட்டாரால் ஜப்திசெய்யப்பட்டிருக்குமாகில் தாசில்தாரர்களுக்கு அந்த விஷயத்தைத்தெரிவிப்பது கிராம உத்தியோகஸ்தாகளுடைய கடமையாகும்.

(5) பாக்கிக்கும் வட்டிக்கும் ஜப்திபண்ணி விற்பனைசெய்த செலவுக்கும் சரிக்கட்டிப்போவதற்குப் போதுமான அளவுக்கு மேற்பட்ட நிலத்தில் அதிகமான பாகத்தைக் கூடியவரையில் விற்பனை செய்யாமலிருக்கவேண்டும்.

பிரத்தியேகமான நம்பரையுடைய ரெஜிஸ்டரான ரெவினியு தீர்வையானது பாக்கிதாரருடைய முழுஸ்வாதீனத்திலிருக்கும்போது அந்தத் தீர்வைக்குக்குறைந்த எந்த பாகத்தையும் விற்பனைசெய்யக்கூடாதென்பதை விதியாக வைத்துக்கொள்ளவேண்டும்.

(6) நிலத்தை விற்பனைசெய்யச் சாதாரணமாய் அதிகாரங்கொடுக்கப்பெற்ற உத்தியோகஸ்தர் ரெவினியு இன்ஸ்பெக்டராயிருக்கிறார்.

38. பாக்கியாயிருக்கிற தொகை டிமாண்டில் கண்ட ஷரத்துகளின்படி செலுத்தப்படாமலும், அது குறைவறச் செலுத்தப்படுவ

தற்காகத் தாகிலதாரருக்குத் திருப்தியுண்டாகும்படி ஏற்பாடு செய்யப்படாமலும் இருந்தால், அவர் அடியிற்கண்ட விதமாகப பாக்கிதாரருடைய நிலத்தை ஜப்திபண்ணி ஏலம்போட்டு பாக்கியை வசூல்செய்யத் தொடங்கவேண்டும்.

39. நிலத்தில் எல்லாருக்கும் தெரியும்படியான யாதொரு பாகத்திலே ஜப்தி நோடிஸை ஒட்டி ஜப்திபண்ணவேண்டும். நோடிஸில் கண்ட தேதிக்குள்ளாக பாக்கியும வட்டியும செலவும் செலுத்தப்படாவிட்டால் சட்டகிரமாசாரப்படி நிலம் விற்பனைக்குக் கொண்டுவரப்படுமென்று நோடிஸில கண்டிருக்கவேண்டும். ஜப்தியைக்குறித்து நிலத்தில் பஹிரங்கமாய்ப் பிரசித்திசெய்யும, டிஸ்டிரிக்ட் கெஜெட்டில விளம்பரம் பிரசுரஞ்செய்தும் அறிக்கைபண்ணவேண்டும்.

40. ஜபதி நோடிஸை சாத்தியப்படும்போதெல்லாம் நேரில் பாக்கிதாரர்களுக்குச் சோப்பிக்கவேண்டும் ; இந்தபபடி செய்வது சாத்தியப்படாவிட்டால, அதைக் கிராமத்தில் தண்டோராபோட்டுப் பிரசித்தஞ்செய்யவேண்டும் ; மேலும், கிராமச்சாவடியிலாவது கிராமதேவதையின் கோயிலிலாவது கிராமத்தில் பொதுஜனங்கள் சேருவதற்காகவுள்ள வேறே யாதொரு இடத்திலாவது ஒரு ஜாபிதாவை மாட்டிவைக்கவேண்டும.

41. ஜப்திசெய்தாவது ஜப்திசெய்யப்போகிறதாகவாவதிருக்கிற நிலத்தில் பாத்தியதையுண்டென்று தாவாசெய்கிற யாதொரு நபர் பாக்கியையும வட்டியையும பிடித்தசெலவையும் செலுத்தி அந்த நிலத்தை மீட்டுக்கொள்ளலாம ; ஜப்திசெய்யப்பட்ட நிலத்திற்காக அவ்வாறு கொடுப்பதாயக் காட்டப்படும் தொகையைப் பெரியதனக்காரர் பெற்றுக்கொண்டு, தொகை செலுத்தினவருக்கு ரசீது கொடுக்கவேண்டும ஆனால் எதற்காக விற்பனை பண்ணும்படி உத்தரவு செய்யப்பட்டதோ அந்த பாக்கிதாரருடைய பாக்கி முழுவதும் செலுத்தப்பட்டாலன்றி மற்றப்படி, தொகையை அங்கீகரிக்ககூடாது.

42. விற்பனை நோடிஸை வரப்பெற்றுக்கொள்வதன்மேல், பெரியதனக்காரர் விற்பனை செய்யவேண்டியதாயிருக்கிற நிலத்தில் எல்லாருக்கும தெரியும்படியான ஒரு பாகத்திலே விற்பனைக்கு அதமம் ஒரு மாதத்துக்கு முன்னதாக அதை ஒட்டிவைக்கவேண்டும. அதைச் சாத்தியப்பட்டால் பாக்கிதாரருக்குச சோப்பிக்கவுமவேண்டும் ; சாத்தியப்படாவிட்டால்,மேலே 40-வது பாராவில் ஜப்தி நோடிஸ்களைப் பிரசித்தஞ் செய்வதற்காக நிர்ணயிக்கப்பட்ட விதமாய்ப் பிரசித்தஞ்செய்யவேண்டும.

43. விற்பனை செய்யவேண்டிய நிலத்திலிருக்கிற கிணறுகளும் மரங்களும் இத்தனையென்பதையும் அவைகளின் விவரத்தையும், விற்பனை நோடிஸோடு சேர்க்கப்பட்டிருக்கிற ஷெட்யூலில் ஷராகலத்திலே எழுதவேண்டும். விற்பனைகாலத்திலே அந்த நோடிஸை முழுமையும் கெட்டியாய்ப் பஹிரங்கமாக வாசித்து, அந்தப்படி வாசிக்கப்பட்டதென்று கிராம உத்தியோகஸ்தர்கள் அதில் குறிப்பெழுதிக் கையெழுத்துசெய்யவேண்டும்.

44. ஹாஜராயிராத ரயத்துகளும் சொத்தில் கொதுவைமுதலிய பாத்தியதையுள்ளவர்களும் தங்களுடைய மேல்விலாசங்களையும் எந்த ஸர்வே நம்பர்களில் தாங்கள் பாத்தியதையுள்ளவர்களாயிருக்கிறார்களோ அந்த ஸர்வே நம்பர்களையும், வருஷாந்த கட்டணமாக ஒரு ரூபாய் செலுத்துவதன்மேல், ரெஜிஸ்டர் செய்வித்துக்கொள்ள அவர்களுக்கு அனுமதி கொடுக்கப்படுகிறது; இந்த ஸர்வே நம்பர்களில் எதுவாவது பாக்கிக்காக விற்பனை செய்யப்படப்போவதாய்ப் பிரசித்தஞ்செய்யப்பட்டால், அந்த சங்கதியை ரெஜிஸ்டர் செய்யப்பட்ட விலாசங்களுக்குத் தக்ககாலத்தில் தெரியப்படுத்தவேண்டும். நோடிஸை ஆள்மூலமாய அனுப்பினால், அதைப் பெற்றுக்கொண்டதாக ஒரு ரசீது வாங்கிக்கொள்ளவேண்டும்; தபால் மூலமாய் அனுப்பினால், "பெற்றுக்கொண்டதாய் ஒப்புகொள்ளும ரசீது கிடைக்கும்படியாக" அதை ரெஜிஸ்டர் செய்யவேண்டும். ரெஜிஸ்டர் செய்வதற்காகக் கட்டணம் விதித்து வாங்கப்படுகிறபடியால், அந்த நோடிஸை அனுப்புவதற்காகத் தபால் கட்டணமாவது வேறே எவ்வித கட்டணமாவது விதித்து வாங்கக்கூடாது.

45 விற்பனைக்காகப் பிரசுரிக்கப்பட்ட நிலங்களை ஏலத்தில் விலை கேட்கப் பாக்கிதாரர்களுக்குச் சுதந்தரமுண்டு; அவைகளை விலைக்குவாங்கக் கிராம உத்தியோகஸ்தர்களுக்கும் ஸ்வதந்தரமுண்டு; ஆனால், யாதொரு ரயத்தினுடைய நிலத்தை அபகரிக்கும் பொருட்டுக் கிராம உத்தியோகஸ்தர்கள் அதை ஏலத்துக்கு கொண்டுவராமலிருக்கவேண்டுமென்பதைப்பற்றி மிகவும ஜாககிரதையாயிருக்கவேண்டும்.

46. தீர்வைபாக்கிதொகை முழுவதையும், அதற்குச் சேரவேண்டிய வட்டியையும், பாக்கியைக் கேட்பதற்காவது பூஸ்திதியை ஜபதிபண்ணுவதற்காவது விற்பனைக்குவேண்டிய ஏற்பாடுகளை செய்வதற்காவது பிடித்த எல்லாசெலவுகளையும் கொடுப்பதாகச்சொல்லப் பாக்கிதாரருக்காகிலும் அவருக்காகப் பிரவர்த்திக்கிற யாதொரு நபருக்காகிலும நிலத்தில் பாத்தியதை கொண்டாடுகிற யாதொரு நபருக்காகிலும் அதிகாரமுண்டு; அதன்மேல் விற்பனையை நிறுத்தவேணடும்: ஆனால், விற்பனைக்காக ஏற்படுத்தப்பட்ட தினத்திற்கு முன தினத்தில் சூரியாஸ்தமனத்திற்குமுன்னே அந்தப்படி தொகை செலுத்துவதாகச சொல்லவேண்டும். விற்பனைக்காகப் பிரசுரிக்கப்பட்ட நிலத்தில் நல்ல எணணத்துடன் பாத்தியதை கொண்டாடுகிற சகல நபர்களும் அந்த நிலத்தில் தங்களுக்குள்ள பாத்தியதையைக் காப்பாற்றிக்கொள்வதற்காக நியாயமான சௌகரியங்களையெல்லாம் அவர்களுக்கு ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும்.

47. ரெவினியு விற்பனையில் நிலங்கள் கிரயத்திற்கு வாங்கப்பட்டபோது விற்பனை விளம்பரம் பிறப்பிக்கப்படும; அதைக் கிராம உத்தியோகஸ்தர்கள் கிராமத்தில் கிரமமாய்ப் பிரசுரிக்கவேண்டும்.

48. பாக்கிதாரர்கள் வேண்டுமென்று தொகை செலுத்தாமலாவது, தொகை செலுத்தாமல் தப்பித்துக்கொள்ளும்பொருட்டு மோசமாய் நடந்துகொண்டாவதிருக்கிற எல்லா விஷயங்களையும்

பற்றிக் கிராம உத்தியோகதஸ்தர்கள் தாசில்தாரர்களுக்கு ரிபோர்ட் செய்யவேண்டும்.

15. பொது.

49. பாக்கிதாரர்களுடைய அசையும்பொருளின்மீதும் அசையாப்பொருளின்மீதும் நடவடிக்கைகள் நடத்தப்பட்டபிறகுங்கூட பாக்கி வசூலாகாமல் இருக்குமாகில், அதே ஜில்லாவிலுள்ள இதர கிராமங்களிலாவது தாலூகாக்களிலாவது இதர ஜில்லாக்களிலாவது பாக்கிதாரர்களுக்கு ஏதேனும் சொத்து இருக்கிறதாவென்று கிராம உத்தியோகஸ்தர்கள் விசாரணை செய்து தெரிந்துகொள்ளவேண்டும். அவர்களுக்கு அப்படிப்பட்ட சொத்து இருப்பதாக விசாரணையினாலே தெரியவருமாகில், பாக்கியை வசூல் செய்வதற்காக அவசியமான ஏற்பாடுகள் செய்யப்படும்பொருட்டுத் தாசில்தாரருக்கு விண்ணப்பம் செய்துகொள்ளவேண்டும்.

50. ஸம்மன் முதலிய கட்டளைகளைச் சேர்ப்பிப்பதற்காகவும் மறியல் செய்வதற்காகவும் ஜப்திபண்ணுவதற்காகவும் சட்டப்படி நிர்ணயிக்கப்பட்டிருக்கிற கிரமாசாரங்களின் பிரகாரம் தாங்கள் முழுமையும் நடக்கிறார்களாவென்று கிராம உத்தியோகஸ்தர்கள் முக்கியமாய்க் கவனிக்கவேண்டும். ஸம்மன் முதலிய சகல கட்டளைகளையும், அவைகளில காலம் ஏதாவது குறிப்பிட்டிருந்தால் அதற்குள்ளாவது, காலம் குறிப்பிடாவிட்டால் அவைகள் பிறப்பிக்கப்பட்டபின்பு 20 தினங்களுக்குள்ளாவது சேர்ப்பிக்கவாகிலும் நிறைவேற்றவாகிலும் வேண்டும். அந்தப்படி செய்யத் தவறுகிற பட்சத்திலே, அந்த ஸம்மன முதலிய கட்டளைகளைச் சேர்ப்பிக்கவோ அல்லது நிறைவேற்றவோ தவறிப்போனதற்குள்ள காரணத்தைக்கண்டு அவைகளைத் தாலூகாவுக்கு வாபஸ் செய்யவேண்டும். இந்தக் கிரமாசாரங்களை அவர்கள் அசட்டை செய்வார்களாகில், விற்பனை ரத்துசெய்யப்படவேண்டியதாய் இருக்கக்கூடியதோடுங்கூட, அவர்களும் தண்டனைக்குள்ளாவார்கள். பாக்கிக்காக சொத்தை ஜப்திபண்ணி விற்பது சம்பந்தமாக மோசமாய்ப் பிரவர்த்திக்கும் கிராம உத்தியோகஸ்தர்கள் - அநியாயமடைந்த நபர்களுக்கு மோசம் தெரியவந்தது முதல் மூன்று வருஷத்திற்குள்ளாக எப்போதாவது அந்தநபர்களால் ஸிவில்கோர்ட்டில் வியாஜ்ஜியம் தொடரப்படுவதற்கு உள்ளாவார்கள்.

---

## 5 - ம் அத்தியாயம்.—பலவகைப்பட்டவை.

---

### 16. *தர்க்காஸ்து.*

*அநுபோகத்திலிராத சாதாரண தீர்வை நிலங்களுக்காகச் செய்து கொள்ளப்படும் விண்ணப்பங்கள் எழுத்துமூலமா யிருக்கவேண்டியதுமல்லாமல், கேட்டுக்கொள்ளும் நிலம் இன்னதென்று அதில் தெளிவாய்க் கண்டிருக்கவேண்டும். அவ்விண்ணப்பங்களை வெற்றுக்காகிதத்திலெழுதி யாதொரு வருஷத்தில எந்தக் காலத்திலாவது கொடுக்கலாம்; ஆனால், விண்ணப்பம் செய்துகொள்ளும்போது வாஸ்தவத்தில் அநுபோகத்திலிராமலாவது, தகுந்த அனுமதி பெற்றுக் கொள்ளாமல் அனுபவிக்கப்பட்டாவது, வாஸ்தவத்தில் விடப்படாமலிருந்தபோதிலும அப்போது தான கிரமாசாரமாய் ராஜிநாமா செய்யப்பட்டாவதிருக்கிற நிலத்திற்காகவன்றி மற்றெவ்வித நிலத்திற்காகவும விண்ணப்பத்தைப பெறமுக்கொள்ளக்கூடாது. விண்ணப்பங்களைக் கிராம அதிகாரிகளுக்காவது தாசிலதாரருக்காவது டெப்யுடி தாசில்தாரருக்காவது செய்துகொள்ளலாம. ஆயினும், கிராம உத்தியோகஸ்தர்களாவது அவர்களுடைய குடுமபங்களைச் சேர்ந்தவர்களாவது செயதுகொள்ளுகிற தர்க்காஸ்து விண்ணப்பங்களைப் பிரதமத்தில எப்போதும் தாசிலதாரருககாகிலும் டெப்யுடி தாசில்தாரருக்காகிலும செய்துகொள்ளவேண்டும். விண்ணப்பங்களை நேரிலாவது தாசில்தாரர் அல்லது டெப்யுடி தாசில்தாரர்மூலமாகவாவது கிராம உத்தியோகஸ்தர்கள் வரப்பெற்றுக்கொள்ளும் போது, அவைகளை உடனே C குறிப்பிட்ட ரெஜிஸ்டரில பதிவு செய்துகொள்ளவேண்டும்; அதன்பிறகு அப்படி விண்ணபபம செய்துகொள்ளப்பட்டிருபபதைப்பற்றி கிராமத்தில் தண்டோராமூலமாகப் பிரசித்தம்செய்து, அதைப்பற்றிய ஒரு நோட்டிஸை XIX-ம் அநுபந்தத்திற்கண்ட A-1 குறிப்பிட்ட நமூனாப்படி எழுதிக் கிராமச்சாவடியிலும் தர்க்காஸ்து நிலத்திலும் பதினைந்து தினம்வரையில் ஒட்டிவைக்கவேண்டும. இந்தக்காலம் முடிவாகும்போது XVIII-ம் அனுபந்தத்திற்கண்ட A-குறிப்பிட்ட நமூனாப்படி ஒரு யாதாஸ்தை இரட்டைப்பிரதியாகத் தயார்செய்து, அதை A-1 குறிப்பிட்ட நமூனாப்படியுள்ள நோட்டிஸ் சகிதமாக ஆலசியமில்லாமல் தாசில்தாரருக்காவது டெப்யுடி தாசில்தாரருக்காவது அனுபபவேண்டும்; அப்படி அனுப்பும்போது அதில் மணியக்காரரும் கர்ணமும் கையெழுத்து செய்வதோடுங்கூட மேற்கண்டபடி அது பிரசித்தஞ்செய்யப்பட்டதென்பதற்கு அடையாளமாக அதில் குறைந்தபட்சம் வேறே இரண்டு நபர்கள் அத்தாட்சிக்கையெழுத்தும் செய்யவேண்டும். அந்தப்படி அத்தாட்சி கையெழுத்து செய்கிறவர்கள் அக்கம்பக்கத்திலுள்ள நிலஙகளுக்குடையவர்களாகவாவது, அடியிற்கண்ட 6 - வது பாராவில் காட்டியபடி முந்திய பாத்தியதையுடைய வேறே நபர்களாகவாவதிருக்கவேண்டும். இவர்களில் யாரு மிராவிட்டாலும் இவர்கள் படிப்பில்லாதவர்களாயிருந்தாலும, வேறே கௌரவமான இரண்டு குடித்தனக்காரர்கள் அத்தாட்சிக்கையெழுத்து செய்யலாம்;*

ஆனால், இந்த விஷயத்திலே, அக்கம்பக்கத்திலுள்ள நிலங்களுக்குரியவர்கள் முதலானோர் அத்தாட்சி கையெழுத்து செய்யாததற்குள்ள காரணத்தை A-1 குறிப்பிட்ட நமூனாவினடியில் விவரித்தெழுதவேண்டும். அந்தப்படி அத்தாட்சிகூறுவது, சாத்தியப்பட்டால், கையெழுத்து மூலமாயிருக்கவேண்டுமேயல்லாமல் கைநாட்டு மூலமாயிருக்கக்கூடாது; மேலும், யாதொரு யாதாஸ்தில் குறைந்தது இரண்டுபேர் அத்தாட்சியாக சாட்சிக் கையெழுத்து போட்டிருந்தாலன்றி மற்றப்படி அது திருப்திகரமாய் அத்தாட்சி கூறப்பட்டிருப்பதாக எண்ணப்படமாட்டாது. அக்கம்பக்கத்திலுள்ள நிலங்களுக்குரியவர்கள் இன்னாரென்பதைக்காட்டும் XX-ம அனுபந்தத்திற் கண்ட A-2 குறிப்பிட்ட நமூனாபடியுள்ள ஒரு ஜாபிதாவையும் அந்த யாதாஸ்துடன் சேர்த்தனுப்பவேண்டும்.

2. தீர்வை ஏற்படுத்தப்பட்டிருக்கிற நிலங்களைக் கிரமாசாரப்படி விண்ணப்பம்செய்துகொள்ளாமல் அனுபவித்துவந்தால், அந்தப்படி அனுபவிக்கிறவர்களுக்குப் பட்டா வேணடியிருக்கிறபட்சத்திலே, உடனே கிரமாசாரமாய் விண்ணப்பம்செய்துகொள்ளும்படி அவர்களுக்கு உத்தரவுசெய்யவேண்டும்; பிற்பாடு, A-நமூனாப்படி யாதாஸ்துகள் தயார்செய்து சாதாரண காரியகிரமத்தில் அவைகளைத் தாசில்தாருக்கு அனுப்பவேண்டும். அவர்களுக்குப் பட்டா வேண்டியிராதபட்சத்திலே, அந்தப்படி அனுபோகத்திலிருப்பதை XXI-ம் அனுபந்தத்தில் கண்ட அனுமதியில்லாமல் அனுபோகத்திலிருப்பதைக் குறித்த B யாதாஸ்தில தாசில்தாருக்கு ரிபோர்ட் செய்யவேண்டும; இதைத் தாலூகாவுக்குப் பிரதிமாதமும் அனுப்பவேண்டும. தீர்வையிலலாத நிலங்களையாவது, ஸர்க்கார் காரியங்களுக்காக பிரதியேகப்படுத்தி வைக்கப்பட்டிருக்கிற தீர்வை நிலங்களையாவது, A யாதாஸ்தின் 15-வது கலத்தில் காட்டியிருக்கிறபடி கொடுப்பது வேறே விதமாய் ஆட்சேபனைக்கிடமாகவுள்ள தீர்வை நிலங்களையாவது கொடுக்கும்படிச் செய்துகொள்ளப்படும் விண்ணப்பங்களைப் பெற்றுக்கொள்ள கிராம உத்தியோகஸ்தர்களுக்கு அதிகாரமில்லை. அதுகாரியத்துக்காகச் செய்துகொள்ளப்படும் விண்ணப்பங்களைத் தவறாமல் எப்போதும் டிவிஷன உத்தியோகஸ்தருக்காவது தாசில்தாருக்காவது கொடுத்துக்கொள்ளவேண்டும்.

3. எந்த நிலங்களைக் கொடுக்கும்படி கிரமாசாரமாய் விண்ணப்பம் செய்துகொள்ளப்பட்டிருக்கிறதோ அந்த நிலங்களின் அனுபோகத்தைத் தவிர அனுமதியில்லாமல் அனுபவித்துவரும் மற்ற சகல விஷயங்களையும் XXI-ம அனுபந்தத்திற்கண்ட B நமூனாப்படி இரட்டைப்பிரதியாக ஒரு யாதாஸ்தில் தாசில்தாருக்குப் பிரதிமாதமும் ரிபோர்ட் செய்யவேண்டும். யாதொரு மாதத்தில் அப்படிப்பட்ட அனுபோகம் எதுவுமிராவிட்டால், ஒன்றுமில்லையென்னும் ஸ்டேட்மென்டை அனுப்பவேண்டும்.

4. கிராம உத்தியோகஸ்தர்கள் தங்கள் சொந்த கிராமத்திலாவது இதர கிராமங்களிலாவது தீர்வைவிதிக்கப்பட்டாகிலும் தீர்வை விதிக்கப்படாமலாகிலுமிருக்கிற தரிசு நிலங்களில் பிரவேசிக்கவோ அல்லது சாகுபடிசெய்யவோ கூடாதென்று அறுதியாய்த் தடுக்கப்

பட்டிருக்கிறார்கள் : ஆனால், தகுந்த அதிகாரியானவர் அவர்களுக்கு அப்படிப்பட்ட நிலங்களைத் தர்க்காஸ்து விதிகளை அனுசரித்துக்கொடுத்திருந்தால் மேற்கண்டபடி கிராம உத்தியோகஸ்தர்கள் அந்த நிலங்களில் பிரவேசிக்கலாம், அல்லது சாகுபடிசெய்யலாம்.

5. எந்தப் பசலியில் ஸ்வாதீனம் கொடுக்கப்படுகிறதோ அந்தப் பசலிக்குள்ளாக புதிதாய்க் கொடுக்கப்பட்ட நிலத்திலிருந்து வாஸ்தவமாய் மாசூல் அறுவடைசெய்யப்பட்டாலன்றி மற்றப்படி, அந்த பசலிக்காக ஷை நிலத்துக்குக் கட்டணம் எதுவும் வாங்கக்கூடாது. விண்ணப்பஞ் செய்துகொள்ளாமல் அநுபவிக்கப்பட்ட நிலங்களின் விஷயத்திலே தகுந்த அதிகாரியினால் தீர்வைத்தொகை நிர்ணயிக்கப்பட்டுப் பிரஸ்தாப நபருக்குத் தெரிவிக்கப்பட்டபிறகு முப்பது தினங்களுக்குள் அந்த நிலத்தின் தீர்வைத்தொகை முழுவதும் செலுத்தத்தக்கதாகும்.

6. A, B குறிப்பிட்ட யாதாஸ்துகளைத் தயார்செய்கையிலே, பற்பல கலங்களில் எழுதவேண்டியவைகள் சரியாய் எழுதப்படுகினறனவாவென்று கிராம உத்தியோகஸ்தர்கள் பார்க்கவேண்டும். A குறிப்பிட்ட யாதாஸ்தின் 5-வது கலத்திலே, நிலத்தை நஞ்சையென்றாவது புஞ்சையென்றாவது விவரங்கண்டெழுதவேண்டும். 12-வது கலத்தில் எழுதுகையிலே, சாகுபடிசெய்யக்கூடிய நிலத்தில் போக்குவரவு செய்வதற்காயினுஞ்சரி அல்லது வேறே என்னகாரியத்திற்காயினுஞ்சரி எதற்காக வழிநடைபாத்தியதை வேண்டியிருக்கிறதோ அதை விவரமாய்க் கண்டெழுதவேண்டும். யாதொரு நீர்பாயச்சல் காலவாயாவது யாதொரு நீர்பாயச்சலுக்குரிய கட்டுவேலை அணையாவது நிலத்தின் மூலமாய்ப் போகாமல அதன் சமீபத்தில்மாத்திரமிருக்குமானால், அதற்கும் நிலத்திற்குமுள்ள தூரத்தைக்குறித்து ரிபோர்ட்பண்ணவேண்டும். நிலத்திற்காக விண்ணப்பஞ்செய்த எல்லா நபர்களுடைய பெயர்களையும், விண்ணப்பதாரருக்கோ அல்லது அனுபோகதாரருக்கோ நிலத்தைக கொடுக்கலாகாதென்று ஆட்சேபனை செய்தவர்களுடைய பெயர்களையும 13-வது கலத்தில் கண்டெழுதவேண்டும். நிலத்திற்குப் பல விண்ணப்பதாரர்களிருந்து அவரவாகளுடைய பாத்தியதையின் தன்மையைக்குறித்து யுக்தாயுக்தத்தை யோசிக்கையிலே, இரண்டு அல்லது அதற்கு அதிகமான விண்ணப்பதாரர்களில் அடியிற்கண்ட கிரமப்பிரகாரம் ஒருவரைச் சிலாக்கியமாகக் கொள்ளவேண்டியதென்பதைப பொதுவிதியாக வைத்துக்கொள்ளவேண்டுமென்னும் விஷயத்தைக் கிராம உத்தியோகஸ்தர்கள் மறவாமலிருக்கவேண்டும் :—

(1) தர்க்காஸ்து நிலத்தில் இங்குமங்குமாயிருக்கிற மரங்கள் முன்னமே பட்டாவின்படி அனுபவிக்கப்பட்டு வந்தாலும், அந்த நிலத்தில் ஒரு கிணறு இருந்தாலும், பட்டாதாரரையாவது சாகுபடிக்காக அந்தக் கிணற்று ஜலத்தை உபயோகித்துவரும் ரயத்தையாவது சிலாக்கியமாய்க் கொள்ளவேண்டும்.

(2) புலங்களின் சில பாகங்கள் மாத்திரம் வேண்டுமென்று கேட்கிற தர்க்காஸ்துகளை விட ஸர்வே புலங்கள் முழுமையும் வே

ண்டுமென்று கேட்கிற தர்க்காஸ்துகளைச் சிலாக்கியமாய்க் கொள்ள வேண்டும்; ஆனால், 5 ஏகருக்கு அதிகமான விஸ்தீர்ணமுடைய யாதொரு புஞ்சை ஸர்வே புலமாவது, 2 ஏகருக்கு அதிகமான விஸ்தீர்ணமுடைய யாதொரு நஞ்சை ஸர்வே புலமாவது, அப்படிப் பட்ட விஸ்தீர்ணமுள்ளதாய் யாதொரு புது ஜலாதார ஏற்பாட்டிலிருந்து நீர்பாய்ச்சுவது சாத்தியமாயிருக்கும் புலமாவது முழுவதுமாகிலும் அதன் ஒருபாகமாகிலும் வேண்டுமென்று இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட தர்க்காஸ்துகள் வரப்பெற்றுக்கொண்டால், போட்டியாகக் கேட்கும் விண்ணப்பதாரர்களில் எவராவது விரும்புகிறபட்சத்திலே, சந்தர்ப்பத்துக்கேற்றபடி 5 ஏகராவுக்கோ 2 ஏகராவுக்கோ மேற்படாமல செளகரியமான விஸ்தீர்ணங்களாக அந்தப்புலம் உட்பிரிவினை செய்யப்படும்; மேலும, அந்தப் புலத்துக்குச் சமீபத்திலுளள நிலத்தின்விஷயமாய் யாதொரு பட்டாதாரர் கொண்டாடும் பாத்தியதையானது ஒரே ஒரு உட்பிரிவு விஷயமாகத் தான் முற்பட்டதாகக் கொள்ளப்படும்.

(3) மேலே கண்ட காரணங்களிரண்டில் யாதொன்றை ஆதாரமாகக்கொண்ட பாத்தியதை இல்லாவிட்டால், அடியிற்கண்ட கிரமப்பிரகாரம் சிலாக்கியம் பாராட்டவேண்டும:—

(a) வேண்டுமென்று கேட்கப்படுகிற நிலத்துக்கு அடுத்தாற் போல் அதே கிராமத்தில் இருக்கிற நிலத்தின் பட்டாதாரர்;

(b) விண்ணப்பதாரர்களில் கிராம பட்டாதாரராயிருக்கிற முதல் நபர்;

(c) மேலே சொல்லப்பட்ட சலகாரணைகளுள்ளவர்களில் எவரும் இராவிட்டால் முதல் விண்ணப்பதாரர்.

ஆனால்,

(i) எந்த ரயத்து நிலத்துக்கு ராஜிநாமா கொடுத்ததனாலாவது தீர்வை செலுத்தத் தவறியதனாலாவது நிலம் அனுபோகத்திலிராமற் போயிருக்கிறதோ அப்படிப் பட்ட யாதொரு ரயத்து சிலாக்கியமான பாத்தியதை எதுவும் உடையவராகார்;

(ii) யாதொரு பட்டாதாரர் தம்முடைய கைப்பற்று நிலத்துக்கு அடுத்தாற்போலுள்ள நிலத்தை விண்ணப்பமில்லாமல் அனுபோகத்தில் வைத்துக்கொண்டு அப்படிப் பட்ட நிலம் வேண்டுமென்று விண்ணப்பம் செய்து கொள்ளாமலிருந்தாலும் அப்படிப்பட்ட நிலத்துக்காகப் பட்டாவேண்டாமென்று நிராகரித்திருந்தாலும், அவர் அந்த நிலத்தின் விஷயமாய்த் தமக்குள்ள சிலாக்கியமான பாத்தியதையை இழந்துவிடுவார்.

**குறிப்பு.**—(1) இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட விண்ணப்பதாரர்கள் மேலேகண்ட 1, 2, 3 (a) குறிப்பிட்ட பகுதிகளின்படி சமமாக யோக்கியதை பெற்றிருந்தால், சாதாரணமாய் விண்ணப்பக் கிரமப்பிரகாரம் அவர்கள் சிலாக்கியமாய்க் கொள்ளப்படுவார்கள்.

(2) யாதொரு இனும்தாரர் - தாம் தர்க்காஸ்து கொடுத்திருக்கும் நிலத்துக்கு அடுத்தாற்போல் தம்முடைய இனும் நிலங்கள் இருக்கிற தென்னும் காரணத்தினால், மேலே 3 (a) குறிப்பிட்ட பகுதியினால் அடுத்த நிலத்துக்குடையவருக்கு ஏற்படும் பாத்தியதை தமக்கு உண்டென்று பாத்தியதை கொண்டாடக்கூடாது.

1-வது முதல் 16-வது வரையிலுள்ள கலங்களில் எழுதவேண்டியதைக் கிராம உத்தியோகஸ்தர்கள் எழுதவேண்டும்; மேலும், யாதாஸ்தில் பெரியதனக்காரர் கர்ணம் ஆகிய இருவரும் தேதிபோட்டுக் கையெழுத்து செய்யவேண்டும். விண்ணப்பத்தை வரப்பெற்றுக்கொண்ட தேதிமுதல் இருபது தினத்துக்கு மேற்பட யாதாஸ்தை அனுப்பாமல ஆலசியம்செய்தால், அந்தப்படி ஆலசியமசெய்ததற்குக் காரணத்தை ஷரா கலத்தில் விவரித்துக்காட்டவேண்டும். 17-ம் ஷ. 18-ம் ஷ. கலங்களில் எழுதவேண்டியதைத் தாசில்தாரர் அல்லது டெப்புடி தாசில்தாரர் எழுதவேண்டும்; மேலும், யாதாஸ்தின் ஒரு நகலைக் கிராம உத்தியோகஸ்தர்களுக்குத் திரும்ப அனுப்பிவிடவேண்டும்; அதன் பிறகு அவர்கள் 19-வது கலத்தில் எழுதவேண்டியதை எழுதவேண்டும்.

தாசில்தாரருடைய உத்தரவு அடங்கியிருக்கும் A குறிப்பிட்ட யாதாஸ்தை வரப்பெற்றுக்கொள்வதன்மேல், கிராம உத்தியோகஸ்தர்கள் - அடுத்த ஜமாபந்தியில் பட்டாபெறறுக்கொளள பாத்தியதை அடைந்திருப்பவராக ஒப்படைபெற்றவரின் பெயரை உடனே ரெஜிஸ்டர் செய்துகொளளவேண்டும். பிரதம உத்தரவானது அபீலில் ரத்துசெய்யப்பட்டால், கிராம உத்தியோகஸ்தர்கள் - அபீல் அதிகாரியின் உத்தரவுகள், தாசில்தாரரால் தங்களுக்குத் தெரிவிக்கப்பட்டவுடனே கணக்குகளில் அவசியமான திருத்தங்களைச் செய்துகொள்ளவேண்டும.

A, B குறிப்பிட்ட யாதாஸ்துகளின் கட்டுகளையும் XXII - ம் அனுபந்தத்திற்கண்ட C குறிப்பிட்ட ரெஜிஸ்டரையும் கிராம உத்தியோகஸ்தர்கள் ஜாக்கிரதையாய் வைத்து நாளது தேதிவரையில் ஆதரித்துவரவேண்டும்.

17. பட்டாவின்படிக்கன்றி மற்றபபடி நிலங்களைப் பைசல்செய்வது.

கவுல் நாமாக்கள்.

கவுலின்படி நிலங்களை எடுத்துக்கொள்வதாய் ரயத்துகள் சொல்லும்போதெல்லாம் கிராம உத்தியோகஸ்தர்கள் தாசில்தாரர்களுக்கு ரிபோர்ட் செய்யவேண்டும். நாகதாளி முளைத்திருக்கிற தரிசு நிலத்தைப் பரிஷ்கரிப்பதறகாக 5 வருஷத்துககுக் குறையாமலும் 20 வருஷத்துக்கு மேற்படாமலுமுள்ள காலங்களுக்கு தீர்வையில்லாமல் கவுல கொடுப்பது கலெக்டருக்கு யுக்தமாகத் தோற்றுகிறபட்சத்திலே அந்தபபடியே கவுல் கொடுக்கலாம். செடிகளடர்ந்த காட்டு நிலத்தையாவது சேற்று நிலத்தையாவது ராவணன் மீசையென்னும் நீண்ட கோரைப்புற்களைப்போன்ற புல் வளர்ந்திருக்கும் நிலங்களையாவது, பச்சை எருவுக்காக சிறுசெடிகளையாவது மரங்களையாவது வைத்துப் பயிராக்கும்பொருட்டு பண்படுத்துவதற்காக

வும் அதேமாதிரியான விசேஷ காரியங்களைச் செய்வதற்காகவும் கூட காலம் அதிகப்பட்டுக்கொண்டு வரக்கூடிய கவுல் கொடுக்கலாம். கவுல்நாமாக்கள் கொடுக்கும்போது, அவைகளின திட்டங்கள் கிராம உத்தியோகஸ்தர்களுக்குத் தெரிவிக்கப்படும் ; அந்தபடி கொடுத்திருக்கும் கவுல்களில் கண்ட திட்டங்களின்படி நடவாதிருக்கிற எந்த விஷயங்களையாகிலும் தாசில்தாரருக்கு உடனே தெரிவிப்பது ஷை கிராம உத்தியோகஸ்தர்களுடைய கடமையாகும்.

### 18. ராஜிநாமாக்கள்.

1. ரயத்வாரி நிலங்களுக்கு ராஜிநாமாகொடுக்கும்போது தஸ்தவேஜு எழுதிக்கொடுத்து அதன மூலமாக விட்டுவிடவேணடும் ; மேலும், அந்த நிலங்களில் வேறொரு ரயத்து சாகுபடி செய்ய ஆரம்பிக்கக்கூடியவராயிருக்கும் விதமாக யாதொரு ருதுவிலே போதுமான சீக்கிரத்தில அவைகளை விட்டுவிடவேண்டும். கடைசியாக இன்ன தேதிவரையில் தான் நிலங்களுக்கு ராஜிநாமா கொடுக்கலாமென்று ஒவ்வொரு ஜில்லாவுக்காகவும நிஷ்கரிஷை செய்யப்பட்டிருக்கிறது.

2. யாதொரு ஜில்லாவுக்காக நிர்ணயிக்கப்பட்டிருக்கும தேதிக்குப் பிறகு நிலத்திற்காகக் கொடுக்கும் ராஜிநாமாக்களை ஏற்றுக்கொள்ளவுங்கூடாது, அவைகளின் படி பிரவர்த்திக்கவுங்கூடாது.

3. ஸர்வே புலங்களின் பாகங்கள் புஞ்சைநிலமாயிருந்தால் இரண்டு ஏகராவுக்கும் நஞ்சை நிலமாயிருநதால் ஒரு ஏகராவுக்கும் குறைவாயிருக்கிறபட்சத்திலே, அவைகள் வெள்ளத்தினாலாவது ரயத்து தடுக்கமுடியாத வேறே காரணங்களினாலாவது அழிக்கப்பட்டிருந்தாலும் நிஷ்பிரயோசனமாக்கப்பட்டிருந்தாலுமனறி மற்றப்படி, அந்த பாகங்களுக்காகக்கொடுக்கும் ராஜிநாமாக்களை ஒப்புக்கொள்ளக்கூடாது.

4. ஒரு ரயத்து ராஜிநாமா கொடுக்கும் நிலம் வேறொருவர் பிரவேசிப்பதற்கு ஏற்றதாயிருக்கவேண்டும் ; அதாவது, மத்தியபாகம் தவிர அவருடைய கைப்பற்றிலிருக்கும் மற்றெல்லாபுலங்களையும் வைத்துககொண்டிருக்க அவருக்கு அனுமதி கொடுக்கப்படமாட்டாது ; ஏனென்றால, அந்த மத்திய பாகமானது வேறொரு ரயத்தின் கைப்பற்றில் இருப்பதற்குத் தகுதியானதாயிருக்கமாட்டாது.

5. யாதொரு ஷரத்துக்குட்பட்டு ராஜிநாமா கொடுக்கப்பட்டால் அது ஒப்புக்கொள்ளபபடமாட்டாது.

6. பாக்கி சேரவேணடியதாயிருக்கிற நிலத்திறகாக ராஜிநாமா கொடுத்தால் அதை ஒப்புக்கொள்ளலாம் ; ஏனென்றால், அநத பாக்கியைப் பட்டாதார் செலுத்தவேண்டிய பொறுப்பு அதனால் அற்றுபபோகவில்லை ; மேலும், அவருக்கு வேறே சொத்து ஏதாகிலுமிருந்தால் அதிலிருந்து வசூல்செய்துகொள்வதற்கு நடவடிக்கையும் நடத்தலாம்.

7. ஒரு தொகுப்பாயிருக்கும் கூட்டுப்பட்டாதாரர்களில் ஒருவர் கூட்டுக்கைப்பற்று நிலத்தில் தமக்குள்ள ஹக்குக்கு ராஜிநாமா கொடுப்பாராகில அது இதர கூட்டுக் கைப்பற்றுதாரர்களுடைய சம்மதியில்லாமல ஒப்புக்கொள்ளப்படமாட்டாது.

8. டள்ளயடவெட்டிய காரணத்தினுல் சாகுபடி செய்வதற்குத் தம்முடைய நிலத்தில் ஓர் பாகத்தை யோக்கியதையில்லாமல் செய்கிற ரயத்தானவர் அந்த பாகத்திற்கு ராஜிநாமாகொடுத்து மற்றப் பாகத்தை வைத்திருக்க அவருக்கு அனுமதிகொடுப்பது கூடாது.

9. மராமத்து செய்வதறகாக எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிற அழிந்துபோன ஏரிகளின் ஆயக்கட்டுக்குள இருக்கிற நிலங்களைக் கைப்பற்றில் வைத்துக்கொணடிருக்கிறவர்கள் கலெக்டரிடத்திலிருந்து இதற்கென்று அநுமதி பெற்றுக்கொள்ளாமல தங்களுடைய கைப்பற்று நிலங்களுக்கு ராஜிநாமா கொடுக்கக்கூடாது. ஆகையால், அப்படிபபட்ட ராஜிநாமாக்களைக் கிராம உத்தியோகஸ்தர்கள் வாங்கக்கூடாது.

10. ராஜிநாமா கொடுப்பதற்கான மனுககளைத் தபால்மூலமாக அனுப்பினுல் அவைகளை அங்கீகரிக்கக்கூடாது. அவைகளை நேரில் பட்டாதாரராவது அவருடைய அநுமதிபெறற பிரதிநிதியாவது கொடுத்துக்கொளளவேண்டும.

11. நிலங்களைக்குறித்த ராஜிநாமாககளுக்கு முத்திரைத் தீர்வை நிவர்த்திசெய்யப்பட்டிருக்கிறது.

12. இனும் நிலங்களைபபற்றிய ராஜிநாமாக்கள் கொடுப்பதற்கான மனுக்களை அந்தந்த விஷயத்தில் சமபந்தப்பட்ட நபர் அல்லது நபர்கள நேரில் தாசில்தாருக்குக் கொடுத்துக்கொள்ளவேண்டும் ;-அவைகளைக் கிராம உத்தியோகஸ்தர்கள் வாங்கக்கூடாது.

13. நிலத்திற்காக ராஜிநாமா கொடுப்பதறகான மனுவானது XXIII-ம் அனுபந்தமாக அச்சிடப்பட்டிருக்கும் நமூனைப்படி இருக்கவேண்டும் ; அது பொயயாயிராமல் சரியாயிருக்கிறதென்பதற்கு அத்தாட்சியாகக் கிராமப் பெரியதனக்காரர் கர்ணம் ஆகிய இருவரும அதில் மேறகையெழுத்துசெயயவேண்டும். அப்படிப்பட்ட காகிதத்தைக் கிராமப் பெரியதனக்காரரிடத்திலாவது கர்ணத்தினிடத்திலாவது வாஸ்தவமாய் ஒப்பித்துவிடுவது போதுமானது. அந்த மனுக்களை அங்கீகரிக்கலாமா அங்கீகரிக்கக் கூடாதாவென்பதைப் பற்றிக் கர்ணம் பெரியதனக்காரர் ஆகிய இருவரும் தெரிவிக்கிற அபிப்பிராயங்கள சகிதமாகத் தாசில்தாரருடைய அல்லது டெப்யுடி தாசில்தாருடைய உத்தரவுக்கு இந்த மனுக்களை அனுப்பவேண்டும்.

14. நிலத்தை வாஸ்தவத்தில் அநுபவித்துக்கொண்டிருக்கிறவருக்கு அக்கிரமமாய் நஷ்டம் அல்லது தொந்தரை உண்டாக்கும்பொருட்டு யாதொரு பட்டாதாரர் ஒரு புலத்திற்காக ராஜிநாமா கொடுப்பாராகில், ஷெ சங்கதியை ராஜிநாமாமனுவினமேல எண்டார்ஸ்பண்

ணித் தாசில்தாரருக்கு ரிபோர்ட் செய்யவேண்டும்: மேலும், அநு போகதாரர் அந்தப்புலத்துக்காக உடனே விண்ணப்பம்செய்து கொண்டு அதற்குப் பட்டா பெற்றுக்கொள்ளக்கூடியவராயிருக்கும் பொருட்டுக் கூடுமானபோதெல்லாம் அவருக்கும் ஷை. சங்கதியைத் தெரிவிக்கவேண்டும.

15. ஒருமுறை கொடுத்துக்கொள்ளப்பட்ட ராஜிநாமா மனுவை அமுலுக்குக் கொண்டுவரவேண்டும்; அதை வாபஸ்வாங்கிக்கொள் ள அநுமதி கொடுக்கக்கூடாது.

16. மைனர்களுடைய கார்டியன் என்னும் சம்ரக்ஷகர்கள் சட் டப்படி அங்கீகரிக்கப்பட்ட இயற்கையான கார்டியன்களாகவா வது, தகுந்த அதிகாரியால் கிரமமாய் நியமிக்கப்பட்ட கார்டியன்க ளாகவாவதிருந்தாலன்றி மற்றப்படி, அவர்களால் மைனர்களின் சொத்தாகிய நிலங்களுக்குக் கொடுக்கப்படும் ராஜிநாமாவை ஏற் றுக்கொள்வது சங்கடத்திற்கிடம்.

17. ஒரு கிராமத்திலிருக்கிற நிலத்திற்காகக் கொடுக்கப்படும் ராஜிநாமாக்களை வேறொரு கிராமத்தின் கிராம உத்தியோகஸ்தர் கள் அங்கீகரிப்பது கூடாது.

19. பட்டாவும், பதிவை மாற்றுவதும் (ட்ரான்ஸ்பர் செய்வது) முதலியதும்.

1. பூஸ்திதியைப்பற்றிய மாறுதல்கள் (ட்ரான்ஸ்பர்கள) நடந் தேறும்போது ரெவினியு கணக்குகளிலே பதிவுகளை மாற்றுகையில் அநுசரிக்கவேண்டிய முறைமையைக்குறித்து ஒழுங்கேற்படுத்துவ தற்காக அடியிற்கண்ட விதிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

2. ஸ்வதந்தரத்தை வலிய மாற்றுவது.—இது இரண்டு வகைப்ப டும்:—(a) அறுதியாக மாற்றிவிடுவது; (b) சிறிதுகாலத்திற்கு மாற்றுவது —

(a) ரெஜிஸ்டரில் பதிவான கைப்பற்றுதாரர் ஸ்வதந்தரத்தை அறுதியாக மாற்றிவிடுகிற விஷயங்களிலெல்லாம், மாற்றுவதற்குச் சமபந்தப்பட்ட உபயத்திராளுமாவது அவர்களில் எவராவது விண் ணப்பஞ் செய்துகொள்வதன்மேல், கைப்பற்று நிலத்தின் உரிமை மாறியதற்குப் பொருத்தமாயிருக்கும்படி கலெக்டராவது கிரமமாய் அதிகாரம் கொடுக்கப்பெற்ற வேறே உத்தியோகஸ்தராவது அந்த நிலத்தின் பதிவைத் திருத்தலாம்; ஆனால், பதிவை மாற்றவேண்டு மென்று செய்துகொள்ளப்படும் விண்ணப்பமானது ஒவ்வொரு விஷயத்திலும் நேரிலாவது கிரமமாய் அதிகாரம்கொடுக்கப்பெற்ற ஏஜென்டினாவது எழுத்துமூலமாகச் செய்துகொள்ளப்படவேண் டியதுமல்லாமல், அதைச்செய்துகொள்ளுகிற நபர் அல்லது நபர்கள் அதில் கையெழுத்து போடவும்வேண்டும். விண்ணப்பதாரர்களு க்கு இஷ்டமிருந்தால் அவர்கள் அந்த நிலமிருக்கிற கிராமத்தின் பெ ரியதனக்காரரையும் கர்ணத்தையும் அந்த விண்ணப்பத்தில் அத்தா ட்சிக் கையெழுத்து போடும்படி செய்யலாம். அப்படிப்பட்ட அத் தாட்சிக் கையெழுத்தை, விண்ணப்பதாரர் அல்லது விண்ணப்பதா

ரர்களே இன்னாரென்று ருஜுப்படுத்துவதற்கு சாட்சியமாக ஏற்றுக் கொள்ளலாம். எவ்விதமான வர்த்தனையாவது கட்டணமாவதில்லாமலே கிராமப் பெரியதனக்காரரும் கர்ணமும், விண்ணப்பதாரர்களால் கேட்டுக்கொள்ளப்படுகிறபட்சத்திலே, அந்த விண்ணப்பங்களில் அத்தாட்சிக்கையெழுத்து போடவேண்டும்.

(b) பதிவான கைப்பற்றுதாரர் குத்தகைக்குவிடுவது, கொதுவைவைப்பது முதலிய காரணத்தினால் கொஞ்சகாலத்திற்குச் சொத்தை வேறொருவருக்கு மாற்றுகிறவிஷயத்திலே, பதிவைத் திருத்துவதுகூடாது; ஆனால், அப்படிப்பட்ட மாறுதலுக்குச் சம்பந்தப்பட்ட உபயத்திராளும அந்தப்படிசெய்யவேண்டுமென்று கலெக்டருக்காவது கிரமமாய் அதிகாரங்கொடுக்கபெற்ற வேறே உத்தியோகஸ்தருக்காவது எழுத்துமூலமாய் ஒன்றாய்ச்சேர்ந்து விண்ணப்பங் கொடுத்துக்கொள்வாரகளாகில அப்படியே செய்யலாம். நிலமிருக்கிற கிராமப் பெரியதனக்காரரும கர்ணமும் அந்த விண்ணப்பத்தில் அத்தாட்சிக் கையெழுத்து செய்கிறபட்சத்திலே, அந்த விண்ணப்ப விஷயமாய் உடனே உத்தரவு பிறப்பிக்கப்படும்.

3. ஸ்வதந்தரத்தைக் கட்டாயமாய் மாற்றுவது.—கோர்ட்டாருடைய டிக்ரியை அனுசரித்து அந்த டிக்ரி பெற்றவர்களுக்காவது, கோர்ட்டாருடைய டிக்ரியை நிறைவேற்றுகையில் செயயப்பட்ட ஏலவிற்பனையில வாங்கிய கிரயதாரர்களுக்காவது, பதிவான கைப்பற்றுதாரர்களிடத்திலிருந்து கைப்பற்று நிலங்களின் ஸ்வதந்தரத்தை மாற்றுகிறவிஷயங்களிலே, வியாஜ்ஜியத்தின் கட்சிக்காரர்களில் யாராகிலும் ஏலத்திலெடுத்த கிரயதாரராகிலும் விண்ணப்பஞ்செய்துகொண்டு, சந்தாப்பத்திற்கேற்றபடி, டிக்ரிக்காயினும் விற்பனை ஸெர்டிபிகேட்டுக்காயினும் சரியான துதானென்று உறுதிமொழிகூறப்பட்ட ஒரு நகலையும, அதற்கிணங்க ஸ்வாதீனஞ்செய்ததைப்பற்றிய ஸெர்டிபிகேட்டையும் கொண்டுவந்து காட்டுவதன்மேல், கலெக்டரோ அல்லது அதிகாரங்கொடுக்கபெற்ற வேறே உத்தியோகஸ்தரோ பதிவை மாற்றும்படி உத்தரவுசெய்யலாம். குறித்த யாதொரு நபர ரெஜிஸ்டாசெய்வித்துக்கொள்வதற்கு அர்ஹராகும்படியாக அவரிடத்தில் சங்கிரமித்திருக்கும் ஸ்வதந்தரத்தைமாத்திரம் நிர்ணயிக்கும் நிர்ணயரூபமாயுள்ள டிக்ரிகளின் விஷயத்திலே, அப்படிப்பட்ட டிக்ரிக்கு உறுதிமொழிகூறப்பட்ட நகலொன்று கொண்டுவந்து காட்டப்படுவதன்மேல், கலெக்டராவது அதிகாரம் கொடுக்கப்பெற்ற வேறே உத்தியோகஸ்தராவது பதிவை மாற்றும்படி உத்தரவுசெய்யலாம்.

4. மாற்றுவதற்காக விண்ணப்பம்செய்துகொள்ளப்படாத விஷயங்கள்.—ஸ்வதந்தரத்தை மாற்றுவதற்கான எந்த விஷயங்களில் உபயத்திராளில் எவரும் யாதொரு விண்ணப்பமும் செய்துகொள்ளவில்லையோ அந்த விஷயங்களை கிராமக்கர்ணம் XXIV-ம் அனுபந்தத்திற் கண்ட நமூனாப்படி ஒரு ஜாபிதாவில் குறித்துக்கொள்ளவேண்டும். யாருடைய அதிகாரவரம்புக்குள் அந்தக் கிராமம் இருக்கிறதோ

அந்த தாசிலதாராருக்காவது டெப்யுடி தாசில்தாராருக்காவது ஷெ ஜாபிதாவை, அவசியமான நடவடிக்கைகை நடத்துவதற்காக ஜமாபந் திக்குமுன் வருஷாந்தரம் அனுப்பவேணடும்.

5. ஒருவருக்குப்பின் மற்றொருவர் வருவதனால் ஸ்வதந்தரம் மாறுவது.— பதிவான கைப்பற்றுதாரர் இறந்துபோனதனாலாவது எழுவருஷ த்திற்குமேற்பட நீடித்து ஹாஜராயிராததனாலாவது பதிவைமாற்ற வேண்டியதாய் நேரிட்ட எல்லா விஷயங்களையும ஸ்வதந்தரம் மாறு கிற இந்த வகுப்பைச்சேர்ந்த விஷயங்களாக, பைசல் செய் வேண்டும. பதிவான கைப்பற்றுதாரர் இறந்துபோனதனமேல் கிராமத்தின் கர்ணமானவர் - அந்த சங்கதியையும், இறந்துபோன வருடைய வார்ஸுகள் இன்னாரென்று தாம தெரிந்துகொள்ளக்கூ டியவரையில் தெரிந்துகொண்டு அவர்களுடைய பெயர்களையும், அக்குடும்பம் பாகமாய்விட்டதா அல்லது பாகமாகவில்லையா என்ப தைக்குறித்த விவரங்களையும, பாகமாகாவிட்டால், நிர்வாககர்த்தர் இன்னாரென்பதையுங்கண்டு, நிர்ணயிக்கப்பட்ட நமூனாப்படி, யாரு டைய அதிகாரவரம்புக்குள் அந்தக கிராமம் இருக்கிறதோ அந்த தாசில்தாராருக்காவது டெபயுடி தாசில்தாராருக்காவது உடனே ரிபோர்ட்செய்யவேண்டும். எழுவருஷத்திறகுமேற்பட பதிவான கைப்பறறுதாரர் மறைந்திருக்கிற விஷயத்திலும், அவர் இன்னும் உயிரோடிருக்கிறாரென்பதைத் தெரிவிப்பதற்கேற்ற யாதொரு சாட்சியம் இராமற்போகிறவிஷயத்திலும், இறந்துபோனவராக அவரைப்பாவித்து, அந்தப்படியே தாசில்தாராருக்கு ரிபோர்ட் அனு ப்பவேணடும். ஸ்வதந்தரத்தைபபற்றிய தஸ்தவேஜுகளை வைத் துக்கொண்டிராத நபர்கள் நிலங்களைத் தங்கள ஸ்வாதீனததில் வைத்துக்கொண்டிருந்து, பன்னிரண்டு வருஷகாலமாகவாவது அத ற்குமேறபட்ட காலமாகவாவது பஹிரங்கமாய்ச் சொந்தக்காரர்க ளாக அந்த நிலங்களுக்கு தீர்வை செலுத்தியிருக்கிறவிஷயங் களிலே, அந்த சங்கதியைக்குறித்துத் தாசிலதாராருக்குத் தெரி விக்கவேண்டும ; கவர்ன்மென்டாருக்குத் தீர்வைசெலுத்துகிற நிலங் களை, கொதுவை வைத்துக்கொண்டவர்களாகவாவது குத்தகைக் கொடுத்தவர்களாகவாவது அந்நியர்களுடைய அநுபோகத்திலும் ஸ்வாதீனத்திலும் விடடுவிட்டு மரண சாஸனம் எழுதிவைக்காம லும சந்ததியில்லாமலும் பட்டாதாரர்களிறந்துபோகிற விஷயங்க ளைக்குறித்தும் தாசில்தாராருக்குத் தெரிவிக்கவேண்டும்.

6. ரெஜிஸ்டரிலுள்ள பதிவை மாற்றவேண்டுமென்று செய்து கொள்ளப்படும் விண்ணப்பங்களை - கலெக்டருக்காவது, டிவிஷன் உத்தியோகஸ்தருக்காவது, தாசில்தாரர் அல்லது டெபயுடி தாசில் தாராருக்காவது, தாலூகா ஆபிஸிலுள்ள ஹெட் அக்கௌன்டன்ட் அல்லது சிரஸ்ததாராருக்காவது, ரெஜிஸ்டரில் எதைக்குறித்த பதி வை மாற்றவேண்டுமென்று பிரயத்தனம் செய்யப்படுகிறதோ அந்த நிலம் எவ்விடத்திலிருக்கிறதோ அந்த பிர்க்கா ரெவினியு இன்ஸ் பெக்டருக்காவது, சாஸனங்கள் ரெஜிஸ்டராகும்பொருட்டுக் கொ டுக்கப்படுமானால் ரெஜிஸ்டர்பண்ணுகிற உத்தியோகஸ்தர்களுக்கா வது செய்துகொள்ளலாம்.

7. நிபந்தனை நிவாரணையான இனாம் கைப்பற்று நிலங்களைக் குறித்தும் மரங்களைப்பற்றிய பட்டாக்களைக்குறித்தும் ரெஜிஸ்டரிலுள்ள பதிவை மாற்றும் விஷயங்களுக்குங்கூட மேலேகண்ட விதிகள் பிரயோகப்படுகின்றன.

8. கூட்டுப்பட்டாக்களிலுள்ள பெயர்களை மரணம் காரணமாக மாற்றுகிற விஷயத்திலே, தனிப் பட்டாக்களின் விஷயத்தில் மேலே 7-வது பாராவில் குறிப்பிடப்பட்டிருக்கிற நடவடிக்கையையே அநுசரிக்கவேண்டும். கூட்டுக்கைப்பற்று நிலத்தில் தனக்குள்ள பாத்தியதையை மாற்ற விரும்புகிறவர் கேட்டுக்கொள்வதன்மேல் கூட்டுப் பட்டாக்களிலுள்ள பெயர்களை மாற்றுகிறவிஷயத்திலே, மற்ற பாகஸ்தர்களுடைய அநுமதியை முன்னதாகப் பெற்றுக்கொள்ளவேண்டிய அவசியமில்லை. ஆனால், மாற்றப்பட்ட விஸ்தீர்ணம் இன்னதென்று விவரித்திருக்கிற தனிப்பட்டா - கூட்டுப்பட்டாதாரர்கள் எல்லோருடைய சம்மதமில்லாமல் கொடுக்கப்படமாட்டாது. தனிப் பட்டாக்களை மாற்றுவதற்காக ஏற்படுத்தியிருக்கிற நடவடிக்கையையே இந்த விஷயத்திலும் அநுசரிக்கவேண்டும். கூட்டுப்பட்டாவில் பெயர்களைப் பதியும்போது, அந்தந்த நபரால் அநுபவிக்கப்படும் நிலம் இவ்வளவென்பதைக்குறித்துப் பிரஸ்தாபிக்காமலே பதியவேண்டியதுதானே.

9. பட்டாவின்மேல் கவர்ன்மென்டாரிடத்திலிருந்து பெற்றுக் கொண்டிருக்கும் ரயத்துவாரி நிலங்களின் ரெஜிஸ்டர் பதிவை மாற்றுவதற்காகச் செய்துகொள்ளப்படும் விண்ணப்பங்களுக்கு, ஒரு அணா கோர்ட் கட்டண ஸ்டாம்ப் ஒட்டியிருக்கவேண்டும். மற்றெல்லா விண்ணப்பங்களும் - எட்டணா கட்டணத்துக்குள்ளாகத் தக்கன.

10. ரயத்துகளின் பரஸ்பரசம்மதத்தின்மேல் பட்டாக்களை மாற்றவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொள்ளப்படுமாகில், (XXV-ம் அனுபந்தத்திற்கண்ட) ஒரு அச்சிட்ட விண்ணப்ப நமூனாவை உபயோகிக்கவேண்டும்; அது எவ்வித கட்டணமுமில்லாமலே விண்ணப்பதாரர்களுக்குச் சவதரிக்கப்படும்.

11. ரெஜிஸ்ட்ரேஷன் இலாகாவைச்சேர்ந்த உத்தியோகஸ்தர்களால் அனுப்பப்படும் விண்ணப்பங்களைப் பைசல்பண்ணுவதில் காலதாமசம் உண்டாகாதபடி, அடியிற்கண்ட திட்டங்களைக் கிராமக் கர்ணங்கள் கவனிக்கவேண்டும்:—

தாசில்தாரர்களிடத்திலிருந்து விண்ணப்பங்களை வரப்பெற்றுக்கொண்டவுடனே கர்ணம் - மாற்றுகிறவர்களுடைய பெயர்களையும், புலங்களின் நம்பரையும் விஸ்தீர்ணத்தையும் தீர்வையையும், தன் வசத்திலிருக்கிற சிட்டாக்களுடனே ஒத்திட்டுப்பார்க்கவேண்டும். அவைகள் ஒத்திருந்தால், தான் பதிவுகளைச் சிட்டாக்களுடனே ஒத்திட்டதாகவும், அவைகள் ஒத்திருப்பதாகவும், சிட்டாக்களில் அந்தந்த நம்பர்களுக்கு எதிரிலே அவசியமான பதிவுகளைத்தான் செய்திருப்பதாகவும், விண்ணப்பங்களின் அடியிலே தன்னுடைய கையெழுத்து சகிதமாய் உறுதிமொழிகூறவேண்டும். அன்றியும், மாற்றுகிறவர்களுக்கும் மாற்றிக்கொள்ளப்பெறுகிறவர்களுக்கும்

சிட்டாக்களிலேற்பட்டுள்ள அங்கந்த பட்டா நம்பர்களுக்கு நேராக, விண்ணப்பம் கொடுக்கப்பட்டதென்றும் அங்கீகரிக்கப்பட்டதென்றும் சங்கதியை அவர் குறிக்கவேண்டும். மாற்றிக்கொள்ளப்பெறுகிறவர் பட்டாதாரராயிராவிட்டால், அவர் அவரை அந்தப்படி புதிதாகப் பதிவுசெய்யவேண்டும். ஏதாவதேனும் பிழைகளிருந்தால், அவர் அவைகளை விண்ணப்பங்களின் அடியில் பூரணமாய்க் காட்டவேண்டும். அதன்பிறகு, காலதாமதமில்லாமல் காணம் அவ்விண்ணப்பங்களைத் தாலூகாவுக்குத் திரும்ப அனுப்பிவிடவேண்டும்; அதற்கப்புறம் அவர் தாசில்தாரரிடத்திலிருந்து பெற்றுக்கொள்ளும் இட்டங்களின்படி நடந்துகொள்ளவேண்டும்.

12. வலிய மாற்றுகிற விஷயங்களிலே, அந்தப்படி மாற்றுவதற்கு முன்னே யாதொரு பட்டாதாரர் மாற்றுவதற்காகத் தாம் செய்துகொண்ட விண்ணப்பத்தை வாபஸ் வாங்கிக்கொள்ளுவதாக நோடிஸ் கொடுப்பாராகில், அந்தப்படி மாற்றுவதற்கு இடம் கொடுக்கப்படமாட்டாது.

20-வது பிரிவு.—நிலத்தைப்பற்றிய ரெகார்டுகளை வைத்திருப்பது.

I.—ஸர்வே புலங்களை உட்பிரிவுசெய்வது.

1. **புதிய உட்பிரிவுகளை அளப்பதும் அவைகளுக்கு உருவப்படம் தயார் செய்வதும் அவைகளை ரெஜிஸ்டர் பண்ணுவதும்**—அடியிற்கண்ட விஷயங்களிலே ஒரு புதிய உட்பிரிவை அளந்து அதற்கு உருவப்படம் தயார்பண்ணி அதை ரெஜிஸ்டர் செய்யவேண்டும்:—

(1) (தீர்வை விதிக்கப்பட்டதாயிருந்தாலுஞ்சரி, தீர்வை விதிக்கப்படாததாயிருந்தாலுஞ்சரி, புறம்போக்காயிருந்தாலுஞ்சரி) ரெஜிஸ்டர் செய்யப்பட்ட ஒரு ஸர்வே புலம் அல்லது உட்பிரிவின் பாகமானது—

(a) தர்க்காஸ்து விதிகளின்படியாகிலும்,

(b) ஏரியின் உள்வாய் நிலத்தைப்பற்றிய விதிகளின்படியாகிலும்,

(c) கவுல் விதிகளின்படியாகிலும்,

(d) தரிசு நிலத்தைப்பற்றிய விதிகளின்படியாகிலும்,

(e) கிராம நத்தத்தைப்பற்றிய விதிகளின்படியாகிலும் பட்டணங்களிலுள்ள நிவேசனத்தைப்பற்றிய விதிகளின்படியாகிலும்,

(f) மியுனிஸிபாலிடிகளுக்கும் பிரதேசசங்கங்களுக்கும் பராதீனம் செய்வதைப்பற்றி ஒழுங்கேற்படுத்துவதற்கான விதிகளின்படியாகிலும்,

(g) உலோக முதலியவைகளுக்காகப் பரிசோதிப்பதற்கான லைஸென்ஸுகளையும் சுரங்கம் வெட்டுவதற்கான குத்தகைகளையும் பிறப்பிப்பதற்கான விதிகளின்படியாகிலும்,

(h) நிலம் எடுத்துக்கொள்வதற்கான விதிகளின்படி எடுத்துக்கொள்ளப்பட்ட நிலங்களுக்குப் பர்த்தியாகவாகிலும், தண்ணீரில் அடித்துக்கொண்டுபோகப்பட்ட இறும் நிலங்களுக்குப் பர்த்தியாகவாகிலும்,

அனுபோகத்துக்காகக் கொடுக்கப்பட்டால்.

(2) ரெஜிஸ்டர் செய்யப்பட்ட ஸர்வே புலம் அல்லது உட்பிரிவின் பாகமானது தீர்வை விதிக்கப்பட்டதாயிருந்து புறம்போக்குக்கு மாற்றப்பட்டால்.

(3) ரெஜிஸ்டர் செய்யப்பட்ட ஸர்வே புலம் அல்லது உட்பிரிவின் பாகமானது பொதுக் காரியங்களுக்காக எடுத்துக்கொள்ளப்பட்டால்.

(4) ரெஜிஸ்டர் செய்யப்பட்ட ஸர்வே புலம் அல்லது உட்பிரிவின் பாகத்துக்கு ராஜிநாமா கொடுக்கப்பட்டால்.

(5) ரெஜிஸ்டர் செய்யப்பட்ட ஸர்வே புலம் அல்லது உட்பிரிவின் பாகமானது (கவர்ன்மெண்டாரால் கொடுக்கப்பட்ட) கடனுக்கு ஜாமீனாக ஏற்படுத்தப்பட்டால்.

(6) ஒவ்வொரு சிறு துண்டும் வஜா பெறுவதற்குத் தகுதியாயிருக்கும்படி செய்யும் நோக்கத்துடன், ரெஜிஸ்டர் செய்யப்பட்ட நஞ்சை ஸர்வே புலம் அல்லது உட்பிரிவானது சிறு துண்டுகளாகப் பிரிக்கப்பட்டால்.

(7) ரெஜிஸ்டர் செய்யப்பட்ட ஸர்வே புலம் அல்லது உட்பிரிவின் பாகமானது ஒரு கைப்பற்றுதாரரிடத்திலிருந்து இன்னொரு கைப்பற்றுதாரருக்கு மாற்றப்பட்டால், அல்லது கூட்டுக் கைப்பற்று நிலமானது உடபிரிவினை செய்யப்பட்டால்.

(8) "நஞ்சை" அல்லது "புஞ்சை" யென்று ரெஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கும் ஸர்வே புலம் அல்லது உட்பிரிவின் பாகமானது முறையே "புஞ்சை" அல்லது "நஞ்சை"க்கு மாற்றப்பட்டால்; அல்லது, ரெஜிஸ்டர் செய்யப்பட்ட நஞ்சை ஸர்வே புலம் அல்லது உட்பிரிவின் பாகமானது, "ஒருபோக"த்திலிருந்து "இருபோகம்" அல்லது "(கம்பௌண்ட் செய்யப்பட்ட) சலகரணையான ஏற்பாடு செய்துகொள்ளப்பட்ட இருபோக"த்துக்கு மாற்றப்பட்டால், அல்லது பின் சொன்னதிலிருந்து முன் சொன்னதற்கு மாற்றப்பட்டால்.

2. **புதிய உட்பிரிவுக்கு எல்லைக்குறிப்பு ஏற்படுத்துவதும், எல்லைக்குறிப்பு ஏற்படுத்துவதற்குப் பிடிக்கும் செலவை வசூல்செய்வதும்.**—(a) மேலே சொல்லப்பட்ட மாறுதல்களினால் ஏற்படுத்தப்படும் புதிய எல்லைக்கு, தர்க்காஸ்து விதிகளின்படி செய்யப்படும் எந்த உட்பிரிவுகளின் விஷயத்திலே ஒரு முழு ஸர்வே புலமாவது அதனை உட்பிரிவாவது தனித்தனியான துண்டுகளாகவாயினும் கொடுக்கப்படுகிறதோ அந்த உட்பிரிவுகளின் விஷயத்திலும், எந்த விஷயங்களில் கடனைப்பற்றிய காரியங்களுக்காகவாவது ஒரு கைப்பற்றுதாரரிடத்திலிருந்து இன்னொரு கைப்பற்றுதாரருக்கு மாற்றப்படுவது சம்பந்தமாகவாவது கூட்டுக் கைப்பற்று நிலங்களைப் பிரிவினை செய்வது சம்பந்தமாகவாவது உட்பிரிவுகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றனவோ அப்படிப்பட்ட விஷயங்களிலும் தவிர மற்ற விஷயங்களில் சகல வளைவுகளிலும் முச்சந்தி ஸ்தானங்களிலும் கற்களைக்கொண்டு எல்லைக்குறிப்பு ஏற்படுத்தவேண்டும். மேலே விலக்கப்பட்ட விஷயங்களிலே அததற்குச் சம்பந்தப்பட்ட கைப்பற்றுதாரர்கள் இஷ்டப்படுகிறபட்சத்தில்தான் எல்லைக்குறிப்பு ஏற்படுத்தவேண்டும்.

(b) இந்தப்பாராவின்படி எல்லைக்குறிப்பு ஏற்படுத்துவதற்காகப் பிடிக்கும் செலவை, ஒவ்வொரு கைப்பற்று நிலத்தின் விஷயமாகவும் ஏற்படுத்தப்பட்ட அல்லது செய்யப்பட்ட குறிகளின் பங்கியைக்குத் தக்கபடி எல்லைக்குறிப்பு ஏற்படுத்தப்பெற்ற நிலங்களுக்குள் பங்கீடு செய்து, அதை ரெஜிஸ்டர் செய்யப்பட்ட கைப்பற்றுதாரர்களிடமிருந்து வசூல் செய்யவேண்டும். இந்தப் பங்கீடு காரியத்துக்காக கவர்ன்மெண்டார் - அனுபோகத்திலிராத நிலக்கைப் பற்றுதாரர்களாக எண்ணப்படுவார்கள். புதிய உட்பிரிவுகளை அளப்பதற்காகவாவது அவைகளுக்கு உருவப்படம் ஏற்படுத்துவதற்காகவாவது சாதாரணமாய்ச் செலவு கட்டிவாங்கக்கூடாது.

(c) ரெயில்வேக்களுக்காக நிலம் எடுத்துக்கொள்ளப்பட்டால், நிலம் எடுத்துக்கொள்வதற்காக நியமிக்கப்பட்ட உத்தியோகஸ்தர்களுடைய உத்தரவுகளின்படி வேலைசெய்துவருகிற ஸர்வேயர்கள் - மேலே (a) குறிப்பிட்ட உட்பாராவின்படி ஏற்படுத்தவேண்டியதாயிருக்கிற எல்லைக்குறிப்பை ஏற்படுத்தவேண்டும்.

3. எல்லைக்குறிப்பு ஏற்படுத்துகையிலும், ஒரு புதிய உட்பிரிவை அளக்கையிலும் அதற்கு உருவப்படம் தயார் செய்கையிலும் அதை ரெஜிஸ்டர் பண்ணுகையிலும், ஏற்கனவே உருவப்படம் தயார்செய்து ரெஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கிற உட்பிரிவுகளுக்கு எல்லைக்குறிப்பு ஏற்படுத்துகையிலும் அனுசரிக்கவேண்டிய நடவடிக்கை முறை.—(a) காணமானவர் பூமியின்பேரில உத்தேசிக்கப்பட்ட உட்பிரிவை அளக்கவேண்டியதுமல்லாமல், இதுகாரியத்துக்காகப் புலத்தின் உருவப்படத்தில் எவவளவை டிரேஸ் பண்ணுவது அவசியமோ அவ்வளவை ட்ரேஸ்பண்ணி அதன்மேல் அந்த அளவுகளைப் ப்ளாட் செய்யவும்வேண்டும். பிறகு இந்த ட்ரேஸிங்கில் உத்தேசிக்கப்பட்ட உட்பிரிவை ப்ளாட்செய்து அந்த ட்ரேஸிங்கை, அடியிற்கண்ட நமூனாப்படி ஒரு ஸ்டேட்மெண்ட் சகிதமாக, தாலூகா ஆபிஸுக்கு அனுப்பப்படும்பொருட்டு பிர்க்கா ரெவினியு இன்ஸ்பெக்டருக்கு அனுப்பவேண்டும் :—

ஜில்லா தாலூகாவைச்சேர்ந்த கிராமத்திலுள்ள உட்பிரிவுகளைக்குறித்த ஸ்டேட்மென்ட்.

| இப்போதுள்ள புலம் அல்லது உட்பிரிவின் நம்பர். | அது இன்ன வகையைச் சேர்ந்தது என்பதும், ஸர்வே விஸ்தீர்ணமும் தீர்வையும். | | | இப்போதுள்ள பட்டாதாரர்களின் பெயர்கள். | செய்ய உத்தேசிக்கப்பட்ட உட்பிரிவுகளைக்குறித்த விவரங்கள். | | | | | பிரேரேபிக்கப்பட்ட பட்டாதாரர்களின் பெயர்கள். | கட்சிக்காரர்களின் கையெழுத்து. | ஷரா. | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | புஞ்சை, நஞ்சை அல்லது புறம்போக்கு. | ஸர்வே விஸ்தீர்ணம். | தீர்வை. | | புஞ்சை, நஞ்சை அல்லது புறம்போக்கு. | எழுத்து அல்லது உட்பிரிவு. | ஏரியா ஸ்கொயரின்படி (விஸ்தீர்ண சதுரத்தின்படி) விஸ்தீரணம். | 3-வது கலத்தை அனுசரித்துச் சரிக்கட்டப்பட்ட விஸ்தீரணம். | தீர்வை. | | | பிரேரேபிக்கப்பட்ட உட்பிரிவுகளுக்கு கிரமமாய் எல்லைக்குறிப்பு ஏற்படுத்தியிருக்கிறதா என்பது. | 12-வது கலத்தில் கையெழுத்துக்குக் கட்சிக்காரர்கள் தவறியிருந்தால் அதற்குக் காரணங்கள். | உட்பிரிவு செய்வதற்குக் காரணம். |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 |
| | | ஏ. ஸெ. | ரூ. அ. | | | | ஏ. ஸெ. | ஏ. ஸெ. | ரூ. அ. | | | | | |

**குறிப்பு.**—புலத்தின் உருவப்படங்கள் பூர்த்தியாயிருக்கின்றனவென்றும் சரியாயிருக்கின்றனவென்றும் லாண்ட் ரெகார்ட்ஸ் சிப்பந்தியால் உறுதிமொழி கூறப்பட்டிருக்கிற அல்லது அந்தப்படங்கள் தயார் செய்வதையே தொழிலாகவுடையவர்களால் அவைகள் தயார்செய்யப்பட்டிருக்கிற பிரதேசங்களில் மாத்திரமே ஏரியா ஸ்கொயரென்னும் விஸ்தீரண சரி சதுரத்தை உபயோகிக்கவேண்டும். இதர பிரதேசங்களில் உட்பிரிவின் விஸ்தீர்ணங்களைக் கணிதரீதியாய்க் கணக்கிட்டு, அந்தப்படி கணக்கிட்ட காகிதத்தை ஒவ்வொரு ஸ்கெட்ச்சுடனும் சேர்த்துவைக்கவேண்டும். பிந்திய விஷயத்திலே 8-வது கலத்தின் தலைப்பை "இதனுடன் சேர்த்திருக்கும் கணக்குச்சீட்டின்படி விஸ்தீர்ணம்" என்று இங்கியில் மாற்றிக்கொள்ளவேண்டும்.

எந்தக்கேஸுக்காக ட்ரேஸிங்கும் ஸ்டேட்மென்டும் அனுப்பும்படி கேட்கப்பட்டதோ அந்தக்கேஸ் பைசலானபிறகு, அவைகளை லாண்ட் ரெகார்ட்ஸ் இன்ஸ்பெக்டர் அடுத்ததடவை வரும்வரையில் வைத்துவைப்பதற்காக அந்த கிராமத்துக்குத் திரும்ப அனுப்பிவிடவேண்டும். ஷை இன்ஸ்பெக்டர் யாதொரு கிராமத்தில் வந்துசேர்ந்தவுடனே, அவர் - 1897-ம௵த்திய சென்னபட்டணத்து 4-வது ஆக்டிற்கண்ட 6-வது பிரிவின்படி பிரசுரிக்கவேண்டியிருக்கிற விளம்பரத்தை நிர்ணயிக்கப்பட்டவிதமாகத் தயார்பண்ணுவித்துப் பிரசித்தஞ் செய்விக்கவேண்டியது மல்லாமல, நிஷ்கரிஷை செய்யப்பட்ட காலத்திலே பூமியின்பேரில் அந்தப் புதிய உட்பிரிவின் அளவுகளைச் சரிபார்க்கவும்வேண்டும். அந்தப் புதிய உட்பிரிவின் எல்லையானது 2-வது பாராவின்படி எல்லைக்குறிப்பு ஏற்படுத்தவேண்டியதாயிருக்கிறபட்சத்திலே, இனஸ்பெக்டரானவர் அந்த எல்லைக் குறிப்பும் ஏற்படுத்தவேண்டும்.

(b) எல்லாம் ஒழுங்காயிருந்தால், இன்ஸ்பெக்டர் அந்த உட்பிரிவைப் புல உருவப்படமாக ப்ளாட்செய்யவேண்டும் ; அதன்மேல் கர்ணம் அந்த உட்பிரிவை 3 - ம் நெ. கிராமக் கணக்கிலும் பைசவேற்பாட்டு ரெஜிஸ்டரிலும் ரெஜிஸ்டர் செய்யவேண்டும். அதன் பிறகு, இன்ஸ்பெக்டரானவர் - முறையே ஷை ஆக்டின் 11 - வது பிரிவைச்சேர்ந்த (4) குறிப்பிட்ட உட்பிரிவின்படிக்கும் 12 - வது பிரிவைச்சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படிக்கும் அவசியமான விளம்பரத்தையும் நோடிஸுகளையும் தயார்பண்ணி பிரசித்தஞ் செய்வித்துச் சேர்ப்பிக்கச் செய்யவேண்டியதுமல்லாமல், பூமியின்பேரில் அந்த அளவுகள் தமமால் சரிபார்க்கப்பட்டு சரியாயிருப்பதாய்க் காணப்பட்டனவென்றும, விதிகளின்படி எல்லைக்குறிப்பு ஏற்படுத்தவேண்டியிருக்கிற இடங்களிலே கற்கள் நாடடப்பட்டிருக்கின்றனவென்றும், அந்த உட்பிரிவானது புல உருவப்படமாக ப்ளாட் செய்யப்பட்டுக் கிராமக் கணக்குகளில் பதியப்பட்டிருக்கிறதென்றும், முறையே 1897-ம௵த்திய சென்னபட்டணத்து 4-வது ஆக்டிற்கண்ட 11-வது பிரிவைச்சேர்ந்த (4) குறிப்பிட்ட உட்பிரிவின்படிக்கும் 12-வது பிரிவைச்சேர்நத (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படிக்கும் அந்த வேலையானது கிரமமாய்ப் பிரசித்தஞ்செய்யப்பட்டு நோடிஸுகள் சேர்ப்பிக்கப்பட்டிருக்கின்றனவென்றும் பொருள்படும்படியாக ஒரு ஸெர்டிபிகேட்டை அந்த ட்ரேஸிங்கின் முதுப்பில் எழுதிவைக்கவும்வேண்டும், அதன்பிறகு லாண்ட் ரெகார்ட்ஸ் இன்ஸ்பெக்டருடைய ஸெர்டிபிகேட் சகிதமாகவும் ஸ்டேட்மென்ட் சகிதமாகவும் அநத ட்ரேஸிங்கைத் தாலூகா ஆபிஸுக்கு அனுப்பவேண்டும்.

(c) இன்ஸ்பெக்ட்ரானவர் அந்த அளவுகளில் ஏதாகிலும் பிழை இருப்பதாகக் கண்டாலும், எல்லையின விஷயமாய் ஏதேனும் தகரார் இருப்பதாகக் கண்டாலும், அவர்-அவசியமாயிருக்கும விசாரணை செய்தபிறகு, ட்ரேஸிங்கின்மேல் ப்ளாட் செய்திருப்பதைத் திருத்தவேண்டும் ; மேலும், அவர் - அந்தப்படி செய்யும் திருத்தமானது ரெஜிஸ்டர் செய்ததை மாற்றும்படி எந்தக் காரணங்களைக் கொண்டு அனுமதி கொடுக்கப்பட்டதோ அந்தக் காரணங்களை முக்

கியாம்சத்தில் பாதிப்பதாயிருந்தாலன்றி மற்றப்படி, மேலே விவரிக்கப்பட்டபடி நடவடிக்கை நடத்திக்கொண்டு போகவேண்டும்; அந்தப்படி நடத்தும்போது, செய்யப்பட்ட திருத்தம் இப்படிப்பட்டதென்று தம்முடைய ஸெர்டிபிகேட்டில் குறிப்பிடவேண்டியதுமல்லாமல், ஒரு தகரார் ஏற்பட்டிருக்கிற விஷயத்திலே, நியாயங்கள் சகிதமாகத் தம்முடைய தீர்மானத்தைப் பிரத்தியேகமாய் எழுதி வைத்து ஷெ ஆக்ட் 11-வது பிரிவைச்சேர்ந்த (3) குறிப்பிட்ட உட்பிரிவில் சொல்லியிருக்கிறபடி அதன் தாற்பரியத்தை உடனே கட்சிக்காரர்களுக்குத் தெரிவிக்கவுமவேண்டும். அந்தப பிழையாவது தகராராவது மேலே (a) குறிப்பிட்ட பகுதியின்படி நிபந்தனைக்குட்பட்டுக் கொடுக்கப்பட்ட அனுமதியை முக்கியாம்சத்தில் பாதிக்கிற பட்சத்திலே, இன்ஸ்பெக்டரானவர் - பிரத்தியேகமான ரிபோர்ட் சகிதமாக அந்தக் காகிதத்தை தாலூகா ஆபிஸுக்குத் திரும்ப அனுப்பிவிடவேண்டும்.

(d) லாண்ட் ரெகார்ட்ஸ இன்ஸ்பெக்டர் சாதாரண காரியக்கிரமத்தில் கிராமத்தை வந்து பாரப்பதற்கு முன்னே அந்த உட்பிரிவை ப்ளாட் செய்வித்து முடிவாய் அதற்கு அனுமதிபெறவேண்டியது அவசியமாயிருந்தால், தாசில்தாரர் - மேலே லாண்ட் ரெகார்ட்ஸ் இன்ஸ்பெக்டருக்கு விதிககபபட்ட அலுவல்களைச் செய்யும்படி சாதாரண பிர்க்கா ரெவினியு இன்ஸ்பெக்டருக்குக் கட்டளையிடவேண்டும்.

(e) மேலே (a), (b) குறிப்பிட்ட பகுதிகளில் நிர்ணயிக்கப்பட்ட நடவடிக்கை முறையை, ஏறகனவே உருவப்படம் தயார்செய்து ரெஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கிற உட்பிரிவுகளுக்கு ஜில்லாவில் செலாவணியாய்க் கொண்டிருக்கிற விதிகளின்படி இப்போது எல்லைக்குறிப்பு ஏற்படுத்தவேண்டியிருக்கிற விஷயங்களிலே அவசியமான மாறுதலகள் சகிதமாய் அனுசரிககவேணடும்

4. எந்தப் புலத்தில் யாதொரு உட்பிரிவை ஸர்வே செய்யவேண்டியிருக்கிறதோ அந்தப்புலமானது மறுபடியும் அளவெடுத்ததைக் குறித்துத் தற்காலத்திலுள்ள தஸ்தவேஜில் ஏதேனும் விட்டிருப்பது காரணமாகவாகிலும் வித்தியாசம் இருப்பது காரணமாகவாகிலும் அளவெடுப்பதற்காகச் எடுத்துக்கொள்ளப்பட்டதாயிருக்கிறபட்சத்திலே, ஜில்லாவில் அமுலிலிருந்துவருகிற குறித்த விதிகளின்படி அந்த அளவெடுப்பது முடிந்து அது செலாவணியாகிற வரையிலே ஸர்வேசெய்ய ஆரம்பிக்கக்கூடாது.

5. **புதிய உட்பிரிவுகளைக் குறிப்பிடும் விதம்.**—(a) இரண்டு பாஷைகளில் அச்சிட்டுள்ள ரெஜிஸ்டரில் ஸர்வே புலங்களையும் உட்பிரிவுகளையும் குறிப்பிட்டிருப்பதை அனுசரித்துப் புதிய உட்பிரிவுகள் குறிப்பிடப்படும்; அந்தப்படி குறிப்பிடுவது - எந்த (ப்ளாட்டிலிருந்து) துண்டிலிருந்து புதிதாய் உட்பிரிவுசெய்யப்படுகிறதோ அதைக் காட்டக்கூடியதாயிருக்கவேண்டும். இரண்டு பாஷைகளிலுள்ள ரெஜிஸ்டரிலே உட்பிரிவுகள் இலக்கஙகளைக்கொண்டு குறிப்பிடப்பட்டிருந்தால், புதிய உட்பிரிவுகளை எழுத்துகளைக்கொண்டு குறிப்பிடவேண்டும, முன்சொன்ன உட்பிரிவுகள் எழுத்துக்களைக்கொ

ண்டு குறிப்பிடப்பட்டிருந்தால், புதிய உட்பிரிவுகளை இலக்கங்களைக்கொண்டு குறிப்பிடவேண்டும், அதாவது, (1) பைசலேற்பாடான 14-1-ம் நெ. உட்பிரிவைச்சேர்ந்த புதிய உட்பிரிவுகளை 14-1-A, 14-1-B என்று இம்மாதிரியாகக் குறிப்பிடவேண்டும்; (2) பைசலேற்பாடான 14-1-A நெ. உட்பிரிவைச்சேர்ந்த புதிய உட்பிரிவுகளை 14-1-A-1, 14-1-A-2 என்று இம்மாதிரியாகக் குறிப்பிடவேண்டும். 14-A, 14-B என்று இம்மாதிரி எழுத்துக்களை உபயோகிக்கும் வழக்கம் இதுவரையிலே ஜில்லாவில் இருந்தாலன்றி மற்றப்படி, பைசலேற்பாடான S. 14-ம் நம்பரைச்சேர்ந்த புதிய உட்பிரிவுகளைச் சாதாரணமாய 14-1, 14-2 என்று இம்மாதிரி குறிப்பிடவேண்டும்; எழுத்துக்களை உபயோகிக்கும் வழக்கமிருந்தால், அந்த வழக்கத்தையே அனுசரித்துக்கொண்டுவரலாம். இந்தப்படி செய்வதன் முக்கியமான நோக்கங்கள் என்னவென்றால், ஒவ்வொரு உட்பிரிவின் வரலாற்றைத் தெளிவாயக் காட்டுவதும், ரெவினியு ரெகார்டுகளைத் தொடர்ச்சியாய வைத்துவரும்படிச் செய்வதும், ரெஜிஸ்டர் செய்யப்பட்ட சாஸனங்களைத் தேடிப்பார்ப்பதையும் இன்னதானென்று அந்த சாஸனங்களை ருஜுப்படுத்துவதையும் சுலபப்படுத்துவதுமேயாம்.

(b) பைசலேற்பாடானதற்குப் பிறகு உண்டான உட்பிரிவுகள் முறையே எழுத்துக்கள் மூலமாகவோ இலக்கங்கள் மூலமாகவோ குறிப்பிடப்பட்டிருப்பதறகேறபடி, இந்த உட்பிரிவுகளிலிருந்து பின்னும் உண்டான உட்பிரிவுகளை இலக்கங்கள் மூலமாகவாவது எழுத்துக்கள் மூலமாகவாவது குறிப்பிடவேண்டும்.

(c) ரெஜிஸ்டர் செய்யப்பட்ட தரிசின் அல்லது தீர்வை விதிக்கப்படாத ஸர்வே நம்பரின் பாகம் அல்லது பாகங்களை அனுபோகத்துக்காகக் கொடுப்பதாகவோ புறம்போக்குக்கு மாற்றுவதாகவோ உத்தேசித்திருந்து, அப்படிப்பட்ட தரிசாவது ஸர்வே நம்பராவது பெருத்த விஸ்தீரணமுடையதாயிருக்கிறபட்சத்திலே, ஸர்வே நம்பரின் அந்த பாகம் அல்லது பாகங்களைப் புதிய ஸர்வே புலங்களாக பிரத்தியேகமாய் எல்லைக்குறிப்பு ஏறபடுத்தி, உருவப்படம் எழுதி ரெஜிஸ்டர் பண்ணவேண்டும்; கடைசியாக ரெஜிஸ்டரான கிராம ஸர்வே நம்பருக்குத் தொடர்ச்சியாய் அவைகளுக்கு நம்பர் கொடுக்கவேண்டும்; பிரிக்கப்பட்ட ஸர்வே புலத்தின் மிகுதிபாகத்துக்கு ஆதியில இருந்த நம்பரே இருக்கவேண்டும்.

## II.—ஸர்வே அடையாளங்களை நிஷ்கரிஷையான காலத்துக்கொருமுறை பார்வையிடுவதும், அவைகளைத் தக்கபடி வைத்திருப்பதும்.

ரெவினியு ஸர்வே நடந்துகொண்டிருக்கிற ஜில்லாக்களிலே, ஸர்வே உத்தியோகஸ்தர்கள் கிராமத்தை விட்டுப்போவதற்குமுன்னே கிராமப் பெரியதனக்காரர்களும் கர்ணங்களும் - கிராம எல்லை அடையாளங்களும புல எல்லை அடையாளங்களும் வாஸ்தவமாய் காட்டப்பட்டிருக்கின்றனவென்று தெரிந்து திருப்தியடையவேண்டியதுமல்லாமல், ஸர்வே உத்தியோகஸ்தர்களால் தங்களிடம் கொடுக்கப்படும் அடையாளங்களைக்குறித்த ஜாபிதாவின் அடியிலுள்ள

அக்நாலெட்ஜமெண்ட் என்னும் அங்கீகார பத்திரத்தில் கையெழுத்து போடவேண்டும்.

2. அடியிற்கண்டவை 1900-ம் வருஷத்திய சென்னபட்டணத்து 4-வது ஆக்டினால் திருத்தப்பட்டபடிக்குள்ள ஸர்வேயையும் எல்லைகளையுங்குறித்த சென்னபட்டணம் 1897-ம் வருஷத்து 4-வது ஆக்டின் 32-வது பிரிவைச் சேர்ந்த (a) குறிப்பிட்ட உட்பிரிவின்படிக்கான விதிகளாகும் :—

(a) சாதாரணமாய் ஸர்வே அடையாளங்கள் அடியிற்கண்ட விவரப்படி இருக்கவேண்டும்; மேலும், அவைகளைக் குறிப்பிட்ட ஸ்தானங்களில் ஏற்படுத்தவேண்டும் :—

| விவரம். | ஸ்தானம். |
|---|---|
| (1) **தியாடலைட் கற்கள்.**—மூன்றடி உயரமும் ஒன்பதங்குல அகலமும் ஒன்பதங்குல நீளமும் உள்ளவைகளாய் ஏறக்குறைய சதுரமாக அடித்துள்ள உறுதியான கற்கள்; இவைகளின் உச்சியில் தூக்குநூற்குண்டு நிற்பதற்காக வெட்டப்பட்டுள்ள துவாரமொன்றும் ஒரு பக்கத்தில் அகன்ற அம்புபோன்ற குறியொன்றும் இருக்கவேண்டும். | தியாடலைட் அமைக்கப்பட்டிருக்கிற ஸ்டேஷன்களென்று ஸர்வே செய்த காலத்தில் தயார் செய்யப்பட்ட கிராம உருவப்படத்திலாவது வேறே ரெகார்டிலாவது குறிப்பிடப்பட்டிருக்கிற இடங்களில். |
| (2) **புலங்களின் கற்கள்.**—இரண்டடி உயரமும் ஆறங்குல அகலமும் ஆறங்குல நீளமும் உள்ளவைகளாய் ஏறக்குறைய சதுரமாக அடித்துள்ள உறுதியான கற்கள்; இவைகளின் ஒரு பக்கத்தில் அகன்ற அம்புபோன்ற குறியொன்று வெட்டியிருக்கும். | ஸர்வே புலங்களின் எல்லைகளிலுள்ள வளைவுகளிலும் முச்சந்திஸ்தானங்களிலும், தியாடலைட் அமைக்கப்படாமலிருந்தும் ஸர்வேசெய்த காலத்தில் தயார் செய்யப்பட்ட கிராம உருவப்படத்திலாவது வேறே ரெகார்டிலாவது கண்டம் ஸ்டேஷன்களென்றாவது பிளேன்டேபில் ஸ்டேஷன்களென்றாவது ஆப்செட் ஸ்டேஷன்களென்றாவது குறிப்பிடப்பட்டிருக்கும் இடங்களிலும். |
| (3) **உட்பிரிவு கற்கள்.**—இரண்டடி உயரமும் ஆறங்குல அகலமும் ஆறங்குல நீளமுள்ளவைகளாய் ஏறக்குறைய சதுரமாய் அடித்துள்ள உறுதியான கற்கள்; இவைகளின் உச்சியில் "S" என்னும் எழுத்தும், ஒரு பக்கத்தில் அகன்ற அம்புபோன்ற குறியொன்றும் வெட்டியிருக்கும். | (i) வெவ்வேறு வர்க்கங்களைச் சேர்ந்தவைகளாகவோ அல்லது வெவ்வேறு தாணியாட்சியின்படி கைப்பற்றியிருந்து வருபவைகளாகவோ கிராம ரெகார்டுகளில் ரெஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கிற உட்பிரிவுகளுக்கிடையில் எல்லைகளிலுள்ள வளைவுகளிலும் முச்சந்தி ஸ்தானங்களிலும்.<br>(ii) உட்பிரிவு எல்லைகளில் கலெக்டருடைய பிரத்தியேகமான உத்தரவுகளின்படி எல்லைக்குறிப்பு ஏற்படுத்தப்படக்கூடிய வேறே ஸ்தானங்களில். |

**விலக்குகள்.**

(1) புலங்களின் முச்சந்தி ஸ்தானங்களுக்கு எல்லைக்குறிப்பாயுள்ள புலக்கற்களின் உச்சியிலே முக்கோண உருவமொன்று வெட்டி அந்தக் கற்களைப் பின்னும் பிரித்துக்காட்டவேண்டும்.

(2) தென் கன்னடத்திலே, "ஹில் நம்பர்ஸ்" என்று சொல்லப்படும் புலங்களைச்சேர்ந்தவைகளாயிருக்கும் உட்பிரிவுகளின் எல்

லைகளிலுள்ள வளவுகளிலும் முச்சந்தி ஸ்தானங்களிலும் ஏற்படுத்தப்பட்டிருக்கும அடையாளங்கள - இரண்டடி உயரமும் ஒன்பதங்குல அகலமும் ஒன்தபங்குல நீளமுமுள்ளவைகளாய் ஏறக்குறைய சவுக்கமாக அடித்துள்ள தருக்கல்களாயிருக்கவேண்டும் ; இவைகளின் ஒரு பக்கத்தில் அகன்ற அம்புபோன்ற குறியொன்று வெட்டியிருக்கவேண்டும்.

(3) இந்த விதிகள் வெளிவருவதற்குமுன் தகுந்த அதிகாரத்தின்படி கிரமமாய நாட்டப்பட்டிருககிற ஸர்வே அடையாளங்கள நிர்ணயிக்கப்பட்ட விவரப்படி இருப்பதாக எண்ணப்படும்.

(4) மலையாள ஜில்லாவைச்சேர்ந்த வயநாடு தாலூகாவிலும் நீலகிரியிலுள்ள நாட்டுப்பிரதேசங்களிலும் மேலேசொன்ன மூன்று வகைகளையும் சேர்ந்த கற்களை ஏறக்குறைய சவுக்கமாக அடிக்க வேண்டிய அவசியமில்லை ; ஆனால் அந்த கறகள் நிர்ணயிக்கப்பட்ட அளவுக்குக் கூடியமட்டில் சற்றேறக்குறைய சரியாயிருக்கவேண்டும்.

(b) ரெஜிஸ்டரான கவர்ன்மென்ட் நிலத்துக்குடையவர் ஒவ்வொருவரும் - (i) தம்முடைய கைப்பற்று நிலத்தின் எல்லைகளின் மேல் அல்லது எல்லைகளுக்குள் இருப்பதாய்க் கிராம ரெகார்டுகளில் காட்டப்பட்டிருக்கிற சகல தியாடலைட் கற்களையும புலக்கற்களையும், (ii) தம்முடைய கைப்பற்று நிலத்தின் எல்லைகளின்மேல் அலலது எலலைகளுக்குள் இருப்பதாய் கிராம ரெகார்டுகளில காட்டப்பட்டவைகளும், வெவவேறு வகையைச் சேர்ந்ததாகவோ அல்லது வெவ்வேறு காணியாட்சியின்படி கைப்பற்றிலிருப்பதாகவோ கிராம ரெஜிஸ்டர்களில் ரெஜிஸ்டா செய்யப்பட்டிருக்கிற உட்பிரிவுகளைப் பிரிப்பவைகளுமான சகல உட்பிரிவு கற்களையும் நல்ல ஸ்திதியில் வைத்திருககவும அவைகள் காணமறபோனால் அவைகளைப் புதுபபிக்கவும் கடமைப்பட்டவராவார்.

(c) (i) ஒரு கல்லானது - பூமிக்கு வெளியே இருந்தாலும், அதன் நீளத்திலே மூன்றிலிரண்டு பங்குக்குக் குறைவாகப புதைக்கப்பட்டிருந்தாலும், அதை முழுவதும் மண மூடியிருந்தாலும், அதன்மேல் புல்பூண்டு முளைத்திருந்தாலும்,

(ii) அது சரியான ஸ்தானத்தில் இராவிடடாலும்,

அதற்கு மராமத்து வேண்டியிருப்பதாக எண்ணப்படும

(d) (c) அடையாளமிட்ட விதியில் குறிப்பிடபபட்ட கற்களைப் புதுப்பிக்கவேண்டிய அவசியம் இருப்பதாகவோ மராமத்து செய்ய வேண்டிய அவசியம் இருப்பதாகவோ லாண்ட் ரெகார்ட்ஸ இனஸ்பெக்டராவது பட்டணங்களின விஷயததிலே டவுன் ஸர்வேயராவது பிரசுரஞ்செய்திருக்கும தேதிமுதல் பதினைந்து தினத்துக்குள்ளாக ரெஜிஸ்டரான ஒவ்வொரு நிலத்துக்குடையவரும் அப்படிப்பட்ட கற்களைப் புதுப்பிக்கவோ மராமத்துசெயயவோ கடமைப்பட்டவராவார்.

(e) ரெஜிஸ்டரான நிலத்துக்குடையவர் அந்தப்படிசெய்யத் தவறிப்போகிறபடசத்திலே, தாலூகாவைச்சேர்ந்த லாண்ட் ரெகார்

ட்ஸ் இன்ஸ்பெக்டராவது, ஜில்லாவைச்சேர்ந்த லாண்ட் ரெகார்ட்ஸ் தாசிலதாரராவது, பின் சொன்னவருடைய உத்தரவுகளின்படி வேலை செய்துவரும் டெப்யுடி ஸர்வேயராவது, பட்டணங்களின் விஷயத்திலே டவுன் ஸர்வேயராவது அவசியம் செய்யவேண்டிய மராமத்துகளைச்செய்து புதுப்பிக்கவேண்டிய கற்களைப் புதுப்பிக்க வேண்டும்; மேலும், அவர் - எவையேனும் மரங்களையாகிலும் காட்டையாகிலும் வேலிகளையாகிலும் அறுவடையாகாமலிருக்கும் பயிரையாகிலும் முக்கியமான வேறே தடைகளையாகிலும் வெட்டியோ அல்லது அப்புறப்படுத்தியோ எந்த எல்லைகள் அல்லது வேறே ரேகைகளை இது காரியத்துக்காக பரிசோதிப்பது அவசியமாயிருக்கலாமோ அந்த எல்லைகள் அல்லது ரேகைகளைப் பரிசோதிக்கலாம்.

(f) (e) குறிப்பிட்ட விதியின்படி காணாமற்போன ஒரு கல்லைப் புதுப்பிப்பதற்காகப் பிடிக்கும் செலவில் அடியிலகண்ட பாபத்துக்கள் அடங்கும் :—

(1) என்ன அளவுள்ள காய் எவ்வகையான கல் வேண்டியதாயிருக்கிறதோ அதற்கு கிராம டெப்போவில (பண்டசாலையில்) வாங்கப்படும் சரியான கிரயத்தொகை; இந்தக் கிரயத்தொகையானது ஒரே மாதிரியான சந்தர்ப்பங்கள் வாய்ந்துள்ள கிராமங்களுக்காக ஒரே மாதிரியான வீதப்படி கனட்ராக்டரின் ஷரத்துகளுக்கேற்றபடியும் அவ்வவ்விடங்களின் நிலைமைகளுக்கேற்றபடியும் அப்போதைக்கப்போது கலெக்டரால் கணக்கிடப்படும்.

(2) (கற்களை) காப்பாறறிவருவதற்கான கண்டன்மெனட் சிப்பந்திகள் உழைத்தகாலத்துக்கும் செய்த வேலைக்கும் ஒரு நிஷ்கர்ஷையான கூலி; அடர்த்தியாய் வளர்ந்திருக்கும் புல் பூண்டுகளைப் பரிஷ்கரிப்பது அவசியமாயிருக்கும் இடங்கள்தவிர மற்ற இடங்களிலே மேற்படி கூலியானது நாலணா வீதம் கணக்கிடப்படும்; அடர்த்தியாய் வளர்ந்திருக்கும் புல் பூண்டுகளைப் பரிஷ்கரிக்கும் விஷயத்திலோ மேற்படி கூலியானது பன்னிரண்டணா வீதம் கணக்கிடப்படும்.

(3) கல்லைக் கிராம டெப்போவிலிருந்து நிலத்துக்குக் கொண்டுபோய் அதை அங்கே நாட்டும் விஷயத்தில உதவிசெய்வதற்காக (கற்களை) காப்பாறறிவருவதற்கான கண்டன்மென்ட் சிப்பந்திகளோடுகூட கூலியாளகளையும் வேலைக்கு வைத்துக்கொள்வது அவசியமென்று லாண்ட் ரெகார்ட்ஸ் உத்தியோகஸ்தருக்குத் தோற்றுகிற விஷயங்களிலே, கூலியாள்களுக்காக வாஸ்தவமாய்ப் பிடிக்கும் செலவு.

(e) குறிப்பிட்ட விதியின்படி ஒரு கல்லை மராமத்துசெய்வதற்காகப் பிடிக்கும் செலவானது - அடர்த்தியாய் வளர்ந்திருக்கும் புல் பூண்டுகளைப் பரிஷ்கரிப்பது அவசியமாயிருக்கிற இடங்கள்தவிர மற்ற இடங்களிலே, நாலணா வீதம் கணக்கிடப்படும் அடர்த்தியாய் வளர்ந்திருக்கும் புல் பூண்டுகளைப் பரிஷ்கரிப்பதாயிருந்தால் மேற்படி செலவானது பன்னிரண்டணாவீதம் கணக்கிடப்படும்.

(g) (e) குறிப்பிட்ட விதியின்படி காரியம் நடத்தப்படுகிறபோது, புதுப்பிப்பதற்காகவும் மராமத்து செய்வதற்காகவும் பிடித்து

(f) குறிப்பிட்ட விதியின்படி கணக்கிடப்பட்ட செலவை, ரெஜிஸ்டராகி அனுபோகத்திலிருந்துவருகிற எந்த புலங்கள் அல்லது உட்பிரிவுகளின் எல்லைகளிலே அந்தப்படி புதுப்பிக்கப்பட்ட அல்லது மராமத்து செய்யப்பட்ட கற்கள் இருக்கின்றனவோ அந்தப் புலங்கள் அல்லது உட்பிரிவுகளுக்குள் சமமாகப் பங்கீடுசெய்து, அந்தப்படி பங்கீடுசெய்யப்பட்ட தொகைகளை நிலத்தீர்வை பாக்கியைப்போல அவைகளிலிருந்து வசூல செய்யவேண்டும். புதுப்பிக்கப்பட்ட அல்லது மராமத்து செய்யப்பட்ட கற்கள் ரெஜிஸ்டராகி அனுபோகத்திலிருந்துவருகிற புலம் அல்லது உட்பிரிவின் எல்லைகளுக்குள் இருந்தால், கூடி செலவை அந்தப் புலம் அல்லது உட்பிரிவின் மேலேயே முழுவதும் சுமத்தி, நிலத்தீர்வை பாக்கியைப்போல அதிலிருந்து வசூல் செய்யவேண்டும்.

(h) கூடி ஆக்ட் 21-வது பிரிவைச் சேர்ந்த (ii) குறிப்பிட்ட உட்பிரிவின்படி கவர்ன்மெண்டாருடைய செலவிலே யாதொரு ஸர்வே அடையாளமானது புதுப்பிக்கப்பட்டாலும் மராமத்து செய்யப்பட்டாலும், அந்த செலவை, எந்தக் கைப்பற்று நிலங்களின் எல்லைகளுக்கு எல்லைக்குறிப்பேற்படுத்துவதற்காக அந்த ஸர்வே அடையாளம் உத்தேசிக்கப்பட்டிருக்கிறதோ அந்தக் கைப்பற்று நிலங்களின் பாயகாரிகளுக்குள் சமமாகப் பங்கீடு செய்யவேண்டும்.

3. மேற்கண்ட விதிகளில் 2 (a) (3) (i) குறிப்பிட்ட விதியில் விவரமாய்ச் சொல்லப்பட்டவைகளல்லாத வேறே உட்பிரிவுகற்களை காப்பாற்றிவரும் விஷயத்தை முழுவதும் ரயத்துகளுக்கு விட்டுவிடவேண்டும், அவைகளை காப்பாற்றிவரும்படி கவர்ன்மெண்ட் உத்தியோகஸ்தர்கள் கட்டாயப்படுத்தவேண்டிய அவசியமில்லை.

4. கர்ணம் - தமமுடைய கிராமம அடங்கியிருக்கும் எல்லைக் குறிப்பு ஸ்கெட்ச அல்லது ஸ்கெட்சுகளில் தியாடலைட் கற்களுக்கும புலக்கற்களுக்கும இலக்கமிடவேண்டும். இந்த ஸ்கெட்சுகளைத் துணி முகனியமன்றின்மேல ஒட்டி ஒன்றாகச்சேர்த்துத் தைத்துவைத்திருக்கவேண்டும்; இவை வேண்டியபோது பார்வையிடுவதற்காக ஜாக்கிரதையான ரெகார்டாயிருக்கும். கிராம முழுவதற்கும ஒரே தொடர்ச்சியாகத தியாடலைட் கற்களுக்கு இலக்கம் போடவேண்டும். கிராமத்தின் அல்லது தாலூகாவின் அல்லது ஜில்லாவின் எல்லைகளிலுள்ள கற்களை எண்ணி, எந்தக கிராமங்களின் எல்லைகளில் அவைகள் இருக்கின்றனவோ அந்தக் கிராமங்களில மிகவும் குறைந்த சங்கியையுள்ள கிராமத்தில் தான அவைகளை ரெஜிஸ்டர் செய்யவேண்டும். வைத்திருக்கவேண்டிய உட்பிரிவு கற்களுக்கும அம்மாதிரியே புல உருவப்படங்களில் இலக்கம் போடவேண்டும். சந்தாப்பத்துக்கேற்றபடி ஒவ்வொரு ஸர்வே புலம் அல்லது உட்பிரிவுக்காகவும கணக்கிட்டு புலக கற்களுக்கும உட்பிரிவு கற்களுக்கும் தனித்தனி தொடர்ச்சியாய இலக்கமபோடவேண்டும் ஸர்வே புலங்களுக்கு இடையிலுள்ள எல்லையிலிருக்கும் புலக் கற்களுக்கு, குறைந்த சங்கியையுள்ள புலத்துக்கு எதிராக இலக்கமிடவேண்டும். உட்பிரிவு செய்யப்பட்ட புலத்தில் குறைந்த சங்கியையுள்ள உட்பிரிவுக்கெதிராக உட்பிரிவு கற்களுக்கு இலக்கமிடவேண்டும்.

5. கர்ணம அடியிற்கண்ட நமூனுக்களின்படி மூன்று ரெஜிஸ்டர்கள வைத்துவரவேண்டும :—

A.—தியாடலைட் கற்களுக்காக.

| கிராமத்தில் கல்லின் வரிசைக் கிரமமான நம்பர். | கல்லின் விவரம், அதாவது, சாதாரண கல்லா அல்லது கிராம சந்தி ஸ்தானத்திலிருக்கிற கல்லா. | அடுத்த புலங்களின் அல்லது உட்பிரிவுகளின் நம்பர்கள், அல்லது கல்லானது ஒரு புலம் அல்லது உட்பிரிவுக்குள் இருந்தால் அதன் நம்பர். குறிப்பு.—இந்தக் கலத்தில் பதியப்பட்டுள்ள புலங்கள் அல்லது உட்பிரிவுகளுக்குடையவர்கள் அதைக் காப்பாற்றி வைப்பதற்கு உத்தரவாதிகளாவார்கள். | ஸாகஸார வருஷம், 191 - 191 . பார்வையிட்ட தேதியும் முடிவும். | ரயத்தால் பழுதுசெய்யப்பட்டிருந்தால் அல்லது மராமத்து செய்யப்பட்டிருந்தால் பார்வையிட்ட தேதி. | லாண்ட் ரெகார்ட்ஸ் இன்ஸ்பெக்டராவது தாசில்தாராவது வந்து பார்த்த காலத்தில் மராமத்து செய்யப்பட்டதாகோ அல்லது புதுப்பிக்கப்பட்டதாகோ அடையாளமாகவாகிலும், 5-வது கலத்தில் கர்ணத்தின் ரிபோர்ட் சரியாயிருக்கிறதாவென்று பார்த்ததற்கு அடையாளமாகவாகிலும் லாண்ட் ரெகார்ட்ஸ் இன்ஸ்பெக்டர் அல்லது தாசில்தாருடைய இனிஷல் (பெயரின் முதற்குறிப்பெழுத்துக்கள்). |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| | | | | | |

குறிப்பு.—(1) சரிதம் செங்கெ இந்த நமூனுவுக்காக ரூல்போட (கோடு கிழிக்க) வேண்டும்.
(2) 6-வது கலத்துக்குப்பிறகுள்ள ஒவ்வொரு மும்மூன்று கலங்களிலும் பிந்திய வருஷங்களுக்காக [illegible], [illegible], 6-வது கலங்களில் எழுதுவதை மீண்டும் எழுதவேண்டும்.
(3) ஒவ்வொரு கலத்துக்கும் தனியே ஒருகோடு இழுக்கவேண்டும்.

B.—புலக்கற்களுக்காக.

| ஸாவே நம்பர். | புலத்தில கல்லின வரிசைக்கிரமமான நம்பர். | எந்தப் புலங்கள் அல்லது உட்பிரிவுகளின எல்லைகளிலாவது எல்லைகளுக்குள்ளாவது கல் இருக்கிறதோ அந்தப் புலங்கள் அல்லது உட்பிரிவுகளின நம்பர்கள். குறிப்பு.—இந்தக் கலத்தில பதியப்பட்டுள்ள புலங்கள் அல்லது உட்பிரிவுகளுக்குடையவர்கள் அதைக் காப்பாற்றி வைப்பதற்கு உத்தரவாதிகளாவார்கள். | ஸாகஸார வருஷம், 191 - 191 . பார்வையிட்ட தேதியும் முடிவும். | ரயத்தால பழுதுசெய்யப்பட்டிருந்தால அல்லது மராமத்து செய்யப்பட்டிருந்தால பார்வையிட்ட தேதி. | லாண்ட் ரெகார்ட்ஸ் இன்ஸ்பெக்டராவது தாசில்தாராவது வந்து பார்த்த காலத்தில் மராமத்து செய்யப்பட்டதாகோ அல்லது புதுப்பிக்கப்பட்டதாகோ அடையாளமாகவாகிலும், 5-வது கலத்தில் கர்ணத்தின் ரிபோர்ட் சரியாயிருக்கிறதாவென்று பார்த்ததற்கு அடையாளமாகவாகிலும் லாண்ட் ரெகார்ட்ஸ் இன்ஸ்பெக்டர் அல்லது தாசில்தாருடைய இனிஷல் (பெயரின் முதற்குறிப்பெழுத்துக்கள்). |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| | | | | | |

குறிப்பு.—(1) சரிதம் செங்கெ இந்த நமூனுவுக்காக ரூல் போடவேண்டும்.
(2) 6-வது கலத்துக்குப்பிறகுள்ள ஒவ்வொரு மும்மூன்று கலங்களிலும் பிந்திய வருஷங்களுக்காக [illegible], 5, 6-வது கலங்களில் எழுதுவதை மீண்டும் எழுதவேண்டும்.
(3) ஒவ்வொரு கல்லுக்கும் தனியே ஒருகோடு இழுக்கவேண்டும்.

## C.—உட்பிரிவு கற்களுக்காக.

| | | | ஸர்க்கார் வருஷம், 191 - 191 . | | |
|---|---|---|---|---|---|
| ஸர்வே நமபரும் உட்பிரிவு நம்பர் அல்லது எழுத்தும. | உட்பிரிவில கலலின வரிசைக்கிரமமான நமபர். | எந்தப் புலங்கள அல்லது உட்பிரிவுகளின எல்லைகளில் கல இருக்கிறதோ அந்தப் புலங்கள் அல்லது உட்பிரிவுகளின நம்பர்கள். குறிப்பு —இந்தக கலத்தில பதியப்பட்டுள்ள புலஙகள் அல்லது உட்பிரிவுகளுககுடையவர்கள் அவைகளைக் காபபாற்றிவைப்பதற்கு உத்தரவாதிகளாவார்கள். | பார்வையிட்ட தேதியும் முடிவும். | ரயத்தால பர்த்திசெய்யப்பட்டிருந்தால் அல்லது மரமத்து செய்யப்பட்டிருந்தால், பார்வையிட்ட தேதி. | லாணட் ரெகார்ட்ஸ் இனஸ்பெகடராவது தாசில்தாரராவது வந்து பார்த்த காலத்தில் மரமத்து செய்யப்பட்டதற்கோ அல்லது புதுப்பிக்கப்பட்டதற்கோ அடையாளமாகவாகிலும், 5-வது கலத்தில் காணத்தின ரிபோர்ட சரியாயிருக்கிறதாவென்று பார்த்ததற்கு அடையாளமாகவாகிலும் லாண்ட் ரெகார்ட்ஸ் இனஸ்பெக்டர் அல்லது தாசில்தாருடைய இனிஷல் (பெயரின முதற்குறிப்பெழுத்துக்கள்). |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| | | | | | |

குறிப்பு.—(1) காகிதமான செங்கோடு இருக்கும் பக்கத்துக்காக ரூல போடவேண்டும.
(2) 6-வது கலத்துக்குப்பிறகுள்ள ஒவ்வொரு மும்மூன்று கலஙகளிலும் பிரதிய வருஷஙகளுக்காக , 6-வது கலங்களில எழுதினதை மீண்டும எழுதவேண்டும.
( ) ஒவ்வொரு கலனுக்கும தனியே ஒருகோடு இழுத்திருக்கவேண்டும.

சகல தியாடலைட் கற்களையும A குறிப்பிட்ட ரெஜிஸ்டரிலும், சகல புலககறகளையும B குறிப்பிட்ட ரெஜிஸடரிலும், A குறிப்பிட்ட கிராம ரெஜிஸ்டரின் 5-வது 6 வது அல்லது 8-வது கலத்தில வெவ்வேறாய் ரெஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கும் நிலங்களுக்கு மத்தியிலுள்ள எல்லையின்மேலிருக்கும சகல உட்பிரிவு கறகளையும் C குறிப்பிட்ட ரெஜிஸ்டரிலும் பதியவேண்டும. முந்திய இரண்டுவகைக் கற்களின் சங்கியை அல்லது நிலைமையில் மாறுதலகள் நேரிடுவது வெகு அபூர்வமாகையால, A குறிப்பிட்ட ரெஜிஸ்டரையும் B குறிப்பிட்ட ரெஜிஸ்டரையும் ஜாக்கிரதையாய்த் தயாரசெய்கிறபட்சத்தில், இருக்கிற இடத்தையெல்லாம உபயோகித்தாகிறவரையில், அந்த ரெஜிஸ்டர்களை மறுபடியும எழுதவேண்டிய அவசியம் இருக்கமாட்டாது. இரட்டைப் பக்கத்தில ஐந்து வருஷத்துக்குரிய விவரங்கள்கண்டு கலங்களுக்கு, அதாவது 18 கலங்களுக்கு ரூல போடுவது (கோடு கிழிப்பது) சாதாரணமாகச் சாத்தியமாயிருக்கும. உட்பிரிவு கறகளுடன் இன்னும் அப்படிப் பட்ட கற்களைச் சேர்ப்பது வெகுசாய மற்ற கறகளின் விஷயத்திலிருப்பதைக் காட்டிலும அதிக சாதாரணமாயிருக்கலாம் : ஆகவே, அதிக நெருககமாய் வரிபிளந்து எழுதவேண்டியதாகவாவது ரெஜிஸ்டரை மறுபடியும் எழுதவேண்டியதாகவாவது நேரிடுவதைக் கூடிய மட்டில் தடுக்கும்பொருட்டு, ஒரு ஸர்வே புலத்தின் கடைசி உட்பிரி

வுக்கும் அடுத்த ஸர்வே புலத்தின் முதல உட்பிரிவுக்கும சம்பந்தமான பதிவுகளுக்கிடையில் சிறிதுமட்டில இடமவிட்டிருக்குமபடியாக அதைத தயார்செய்யவேண்டும். 1, 2, 3-வது கலங்களில் எழுதவேண்டியதை, டிமார்க்கேஷன் ஸ்கெட்சுகளென்னும் எல்லைக்குறிபபு சம்பந்தமான ஸ்கெட்சுகளிலிருந்தும் புலங்களைப்பற்றிய புஸ்தகங்களிலிருந்தும் எடுத்தெழுதவேணடும். A குறிப்பு ரெஜிஸ்டரின் 1-வது கலத்திலுளள பதிவுகளையாவது B, C குறிப்பு ரெஜிஸ்டாகளின 2-வது கலத்திலுள்ள பதிவுகளையாவது முடித்துவிடாதபடி ஜாக்கிரதையாயிருக்கவேண்டும ; முடித்துவிட்டால, அடுத்த கலங்களிலுள்ள பதிவுகளுககு இடமிராமற்போயவிடும.

6. கர்ணம தன்னுடைய கிராமதிலுள்ள ஒவ்வொரு தியாடலைட் கல்லையும புலைகல்லையும மேலே கண்ட 2 (a) (3) (1) குறிப்பிட்ட பாராவில் விவரிககபபட்ட வகையைசசோதக ஒவ்வொரு உட்பிரிவு கல்லையும் அசமம வருஷத்துககு ஒருதரமாகிலும் பார்வையிடவேண்டும். முனஸிபும மணியக்காரருங்கூட காணத்துடனிருந்து சில புலங்களை பாாவையிடவேண்டும. கர்ணம் யாதொரு கல இருக்கவேண்டிய நிலைமையிலிருபபதைக்கண்டால், அவா ரெஜிஸ்டரின 4-வது கலத்தில் தேதியைமாத்திரம பதியவேணடும். கலலானது காணாமற்போகிற பட்சததிலே "காணபபடவிலலை" என்னும வார்த்தையையும, அது முழுவதுமோ அல்லது சுமார் 8 அங்குலத்துக்கு மேறபட்டோ பூமிக வெளியிலிருந்தால் "பூமிககுவெளியே" என்னும வார்த்தகளையும, அது முழுவதும பூமிக்கு அடியில் புதைந்துபோயிருந்தாலும அதனமேல புலபூணடு வளர்ந்து மூடிக்கொணடிருந்தாலும முறையே "புதைந்திருக்கிறது" அல்லது "புல்பூணடு மூடிககொணடிருககிறது" என்னும் வார்த்தைகளையும தேதி பதிவுடனகூட அவர் எழுதவேண்டும. கர்ணத்துக்கு இங்கிலீஷ் தெரியாவிட்டால அமமாதிரியான சுதேச பாஷைசசொறகளை உபயோகிககவேண்டும. காணாமறபோன ஒரு கல்லுக்கு பாத்தியாக வேறு கலலை அமைக்க முடியாதிருக்கிற விஷயங்களிலே, உதாரணமாக, அதன ஸ்தானமானது இப்போது ஒரு ஆற்றின் அடித்தரையிலாவது ரெயிலவேயில் சாசுவதமாய் ஏற்படுத்தியிருக்கும லைன பேரிலாவது ஒரு ரஸ்தாவிலாவது அமைகிற சந்தர்ப்பஙகளிலே, காணம அந்த சஙகதியை ரெஜிஸ்டரில குறித்து வைக்கவேண்டும் ; லாணட ரெகார்ட்ஸ் தாசில்தார் பார்வையிட்டு அந்த சஙகதி உணமைதான் என்று கணடறிந்த பிறகு, அந்தக் கல்லை பர்த்திசெயயாமல விட்டுவிடவேண்டும்.

7. லாணட ரெகாாடஸ் இனஸபெக்டா வந்து பாாப்பதை முன்னறிந்து, காணமும் முனஸிபும் - சகல மாமத்துகளையும செய்யுமபடிக்கும எத்தனை கறகளைப் புதுபபிப்பது சாத்தியமோ அத்தனை கறகளைப் புதுப்பிக்குமபடிககும ரயததுகளைத் தூண்டும் விஷயத்தில் தஙகளாலானமட்டில முயற்சி செயயவேணடும. விலை கொடுத்து வாங்குவதறகாகக் கறகளைக கிராமத்தில் எங்கே சேர்த்து வைத்திருககிறதோ (கீழே 12-வது பாராவைப்பார்க்க) அதை அவாகள் ரயததுகளுககுத் தெரிவிதது, தஙகளாலானமட்டில் அவர்களுககு உதவிசெயயவேணடும. லாணட் ரெகார்ட்ஸ் இன்ஸ்பெக்டர் வருவதற்கு முன்னே ரயத்து யாதொரு கலலைப் புதுப்பித்தா

லும் மராமத்துசெய்ததாலும், அந்தப்படி செய்ததற்கு அடையாளமாக ரெஜிஸ்டரின் 5-வது கலத்தில் கர்ணம் தேதியைப் பதியவேண்டும்.

8 இரண்டு மாதத்துக்கொருமுறை கர்ணமானவர் - காணாமற்போயிருந்து அல்லது பழுதாயிருந்து நாளது தேதிவரையில் ரயத்துகளால் புதுப்பிக்கப்படாமல் அல்லது மராமத்து செய்யப்படாமலிருக்கிற கற்களுக்குச் சம்பந்தமான சகல பதிவுகளைக் குறித்தும் ஒரு எக்ஸ்ட்ராக்டை மூன்று பிரிவுகளாக A, B, C குறிப்பிட்ட ரெஜிஸ்டர்களிலிருந்து தயார்செய்யவேண்டும். (இந்த எக்ஸ்ட்ராக்டானது ரெஜிஸ்டரின் 1 முதல் 4 வரையிலுள்ள கலங்கள் என்ன நமூனாக்களின்படி யிருக்கிறதோ அதே நமூனாக்களின்படி இருக்கவேண்டும்; அவசியமானால், 4-வது கலத்திலுள்ள இங்கிலீஷ் வார்த்தைகளுக்குப் பதிலாக அவைகளுக்குச் சரியான சுதேச பாஷைச் சொற்களை உபயோகித்துக்கொள்ளலாம்); ஆயினும், இந்தப்படி தயார்செய்யும்போது, முன்னமே அனுப்பப்பட்ட எக்ஸ்ட்ராக்டில் ஏற்கனவே வந்திருக்கிற பதிவுகளை விட்டுவிடவேண்டும்; மேலும், கர்ணமானவர்-இந்த எக்ஸ்ட்ராக்டுகளுக்கு அத்தாட்சியாகத் தம்முடைய கையெழுத்துபோட்டு அவைகளை, அடியிற்கண்ட நமூனாப்படியுள்ள ஒரு பிரசுர விளம்பர சகிதமாக, தம்முடைய மாதாந்த சாகுபடிக் கணக்கு அனுப்புகிறகாலத்திலேயே பிர்க்கா ரெவினியு இன்ஸ்பெக்டருக்கு அனுப்பவேண்டும். பிர்க்கா ரெவினியு இன்ஸ்பெக்டரானவர்-அந்த எக்ஸ்ட்ராக்டுகளையும் விளம்பரங்களையும் நேராய்த் தபாலிலாவது தாலூகா ஆபீஸ் மூலமாகவாவது லாண்ட் ரெகார்ட்ஸ் இன்ஸ்பெக்டருக்கு ஆலசியமில்லாமல் அனுப்பிவிடவேண்டும்:—

### விளம்பர நமூனா.

1. இதனுடன் சேர்ந்துள்ள ஜாபிதாக்களிற்கண்ட ஸர்வே அடையாளங்கள் அவைகளில் குறிப்பிட்டிருக்கிறபடி காணாமற்போயிருக்கின்றன அல்லது பழுதாயிருக்கின்றனவென்று இதனால் பிரசித்தஞ்செய்யப்படுகிறது.

2 ஜாபிதாக்களின் 3-வது கலத்தில் குறிப்பிட்டுள்ள புலங்களில் பாத்தியமதையுள்ளவர்கள் இந்த விளம்பரம் பிரசித்தஞ்செய்யப்பட்ட தேதிமுதல் 15 தினத்திற்குள்ளாக புதுப்பிக்கவேண்டிய கற்களைப் புதுப்பிக்கவேண்டும், அல்லது அவசியமான மராமத்துகள் செய்யவேண்டும்: அவர்கள் அந்தப்படி செய்யத்தவறினால், லாண்ட் ரெகார்ட்ஸ் இன்ஸ்பெக்டராகிலும் லாண்ட் ரெகார்ட்ஸ் தாசில்தாராகிலும் அவசியமான நடவடிக்கை நடத்துவார்; மேலும், இது விஷயமாய்ப் பிடித்த செலவுகள - 1897-ம் ௵த்து 4-வது ஆக்டின்படிக்கான விதிகளின் பிரகாரம் கணக்கிட்டு, ஷை ஜாபிதாக்களின் 3-வது கலத்தில் குறிப்பிட்டுள்ள நிலங்களுக்குள் பங்கீடுசெய்து நிலத்தீர்வை பாக்கியைப்போல அந்த நிலங்களிலிருந்து வசூல்செய்யப்படும்.

3. பின்னும் விவரங்கள் தெரிந்துகொள்ள விரும்புகிறவர்கள் கிராம உத்தியோகஸ்தர்களுக்கு விண்ணப்பம் செய்துகொள்ளவேண்டும்; ரயத்துகளுக்கு இது விஷயமாய் நியாயமான உதவியெல்லாம் செய்யும்படி ஷை உத்தியோகஸ்தர்களுக்கு உத்தரவுசெய்திருக்கிறது.

(கையொப்பம்).

**தேதி,** **லாண்ட் ரெகார்ட்ஸ் இன்ஸ்பெக்டர்.**

**பிரசித்தஞ்செய்த தேதி** (கையொப்பம்) எ. பி. (கி. மு.)

(கையொப்பம்) வி. டி. (கி. க.)

9. இந்த ஜாபிதாவையும் விளம்பரத்தையும் வரப்பெற்றுக் கொண்டதன்மேல், லாண்ட் ரெகார்ட்ஸ் இன்ஸ்பெக்டரானவர் கர்ணத்தால் செய்யப்பட்ட வேலை இவ்வளவென்று குறித்துக்கொண்டு, உடனே அந்த விளம்பரத்தில் தேதிபோட்டுக் கையெழுத்து செய்து அதை அந்த ஜாபிதா சகிதமாகத் தாலூகா ஆபீஸ் மூலமாய்க் கர்ணத்துக்குத் திரும்ப அனுப்பிவிடவேண்டும். அதன்மேல் அந்த விளம்பரத்தையும் ஜாபிதாவையும் கிராமச் சாவடியிலாவது, கிராமச்சாவடி இராவிட்டால் கிராமத்தில் யாவருக்கும் தெரியும்படியான யாதொரு இடத்திலாவது ஒட்டி, தண்டோராபோட்டு கிராமத்தார் அதைக் கவனிக்கும்படி செய்யவேண்டும். காணமற்போன கற்களையும் மரமத்து செய்யவேண்டியிருக்கிற கற்களையுங்குறித்து கர்ணம் வைத்துவரவேண்டிய ஜாபிதாவின் ஆபீஸ் பிரதியில் ஒழு-ஏற்பாடுகளைச் செய்த தேதியை எழுதி கர்ணம் கிராம முன்ஸிப் ஆகிய இருவரும் ஜொடிபை செய்யவேண்டும்.

10. இடம் மாறியிருக்கிற அல்லது கண்டுபிடிக்க முடியாமலிருக்கிற புலக்கற்களும் உட்பிரிவு கற்களும் பூமியின்பேரில் இருக்கவேண்டிய சரியான ஸ்தானத்தைக் கண்டறிவதற்காக, கர்ணமானவர் தாம் பயிற்சியடைந்த கல்விச்சாலையில் தமக்குத் தெரிவிக்கப்பட்டிருக்கும் கற்பனைகளை அனுசரித்து நடக்கவேண்டும்.

11. (1) முதலில் * புனா ஸர்வே செய்யப்பட்ட ஜில்லாக்களிலே, பழய ஸர்வே சம்பந்தமான தியாடலைட் ஸ்டேஷன்கள் சரியாகக்காப்பாற்றப்படவுமில்லை புதுப்பிக்கப்படவுமில்லை, புதிதாய் ட்ராவர்ஸ் (குறுக்கு) ஸர்வே செய்யப்படவுமில்லை. மேலும், இந்த ஜில்லாக்களின் பெரும்பாகத்திலே, (பாயிண்டர்களையுடைய) தியாடலைட் முச்சந்தி ஸ்தானங்களுக்கு மாத்திரம் பழய ஸர்வேயில் ஏகதேசமாய எல்லைக்குறிப்பு ஏற்படுத்தப்பட்டது. இந்த விஸ்தீரணங்களில், பழய ஸ்டேஷன்களுள் சேதப்படாமல் இன்னும் அப்படியே இருக்கும் அநேக ஸ்டேஷன்களைக் கண்டுபிடித்து, அவைகளைப்பற்றிய எல்லைக்குறிப்பு ஸ்கெட்சுகளில் அவைகளைச் சுமாராயக் காட்டும்படிக்கும், அவைகளின் வரிசைக்கிரமமான நம்பர்களைத் தியாடலைட் ரெஜிஸ்டரில் பதியும்படிக்கும் கர்ணங்களுக்கு உத்தரவு செய்யவேண்டும். தகராறு ஏற்படுகிற விஷயத்திலே பழய ட்ராவர்ஸ் (குறுக்குக்) கோடுகளின் ஸ்தானத்தை நிர்ணயிக்கும் விஷயத்தில் இந்த ஸ்டேஷன்கள் உதவியாயிருக்கக்கூடுமாகையால், அவைகளை ஜாக்கிரதையாயக் காப்பாற்றவேண்டும். காணமற்போன ஸ்டேஷன்களின் ஸ்தானத்தை உருவப்படங்களில் குறிப்பிடுவதற்காவது பூமியின்பேரில் அவைகளுக்குப் பர்த்திசெய்வதற்காவது எவ்வித பிரயத்தனமும் செய்யவேண்டியதில்லை.

*(1) கோதாவரி, கிருஷ்ணா, குண்டூர், நெல்லூர் ஜில்லாக்கள் முழுவதும்.
(2) சேலம் ஜில்லாவின் தென்பாகத்திலுள்ள ஐந்து தாலூகாக்கள்.
(3) கர்நூல் ஜில்லாவில் ராமல்லகோட்டா தாலூகா.
(4) திருச்சிருப்பள்ளி ஜில்லாவைச் சேர்ந்த நாமக்கல் தாலூகா.

(2) மற்ற ஜில்லாக்களிலெல்லாம் தியாடலைட் வேலையானது புலத்தில் செய்யப்படும் ஸர்வே வேலைக்கு ஆதாரமாகும்; எல்லா

ஸ்டேஷன்களிலும் நிலையான அடையாளங்கள் அமைக்கப்பட்டன; கிராம உருவப்படங்களில் இவைகளைக் காட்டியிருக்கிறது. ஆகவே, சகல ஸ்டேஷன்களின் ஸ்தானத்தையும் நிர்ணயித்து அவைகளை ரெஜிஸ்டர் செய்யும் விஷயத்திலே இந்த விஸ்தீர்ணங்களில் எவ்வித கஷ்டமும் இராது. இந்த விஸ்தீர்ணங்களிலே கர்ணமானவர்-காணாமற்போன தியாடலைட் ஸ்டேஷன்களைப் புலங்களின உருவப்படங்களிலுள்ள அளவுகளுக்குத் தக்கபடி முதலில் மறுபடியும் ஸ்தாபிக்கவேண்டும். அந்தப்படி சர்ணத்தால நாட்டப்படும் கல்லானது புலக்கல்லாகவாவது கரடுமுரடாயுள்ள கல்லாகவுமாவது இருக்கலாம்; ஆனால், அது அநேகாமியான அடையாளமாயிருப்பதற்குத் தகுதியாயிருக்கவேண்டும புலத்தின அளவுகள் கொண்டு போய்விடுகிற ஸ்தானத்துக்குச் சமீபத்திலே, காணாமற்போன ஸ்டேஷனின் ஸதானத்தைக காட்டுவதற்காக பூமியின்பேரில் அடையாளங்கள் இருந்தால, அநேகாமியான கல்லே அநத ஸதானத்தில் நாட்டி, அந்த பூமியினபேரில் அக்கம்பக்கத்திலுள்ள புலக்கறகளில் குறைந்தது நாலு கறகளிலிருந்து அதற்கு அளவு எடுக்கவேண்டும். கர்ணம எடுதத இந்த அளவுகளை ஒரு ஸ்கெட்சில எழுதிவைத்து, அதை லாண்ட் ரெகார்ட்ஸ இனஸ்பெக்டருக்கு அனுப்பவேண்டும. மேலும, கர்ணமானவா-லாணட் ரெகார்ட்ஸ இனஸ்பெக்டராவது லாணட் ரெகார்ட்ஸ் தாசிலதாராவது கோணங்களைப் பார்வையிடுவதும தூரங்களை அளப்பதும சௌகரியமாயிருக்கும்படியாக, தம்மால நாடடப்பட்ட கலலுக்கும அதன் இரண்டுபககங்களிலுமுள்ள தியாடலைட் ஸடேஷனகளுக்கும மத்தியிலிருக்கும ரேகைகளில் எவ்வித தடங்கலுமிராதபடி பரிஷ்கரித்து வைத்திருகக வேண்டும்.

12. கிராமத்தில சில தியாடலைட் கறகளும் புலக்கற்களும் உட்பிரிவு கற்களும கிராம முன்ஸிப் வசத்தில சேர்த்துவைக்கப்படும். இவைகளெல்லாம சேர்ந்து கிராம டெப்போ ஏற்படும். கிராம முன்ஸிபானவர் - களட்ராக்டரிடமிருந்து வரப்பெற்றுக் கொண்டு ரயத்துகளுக்கு விற்கப்பட்ட அல்லது லாண்ட் ரெகார்ட்ஸ் உத்தியோகஸ்தர்களுக்கு கொடுக்கபபட்ட கற்களைக்குறித்த ரெஜிஸ்டரை இதனுடன் சேரக்கப்பட்ட (XXVI-ம) நமூனாப்படி வைத்திருக்கவேண்டும். இநத ரெஜிஸ்டரிலுளள பதிவுகளுக்கும் டெப்போவிலுள்ள ஸ்டாக்குககும முன்ஸிப் உத்தரவாதியாவார். கிராம டெப்போவில் கல்லின் விலையானது கலெக்டரால் நிஷகரிஷை செய்யப்பட்டுப பிரசித்தஞ்செயயப்படும. ரயத்துகளுக்கு விற்பனைசெய்யும்போதெல்லாம ரொக்கத்துக்கே விறபனை செய்ய வேணடும். இது சம்பந்தமாய வரப்பெற்றுககொணட தொகைகளை இதர கிராம இரிசால அனுப்பும காலத்திலேயே சலான் சகிதமாய்த் தாலூகா ஆபிஸுக்கு அனுபபவேணடும். லாண்ட் ரெகார்ட்ஸ் சிப்பந்திகள் மராமத்துகள் செய்தது காரணமாகவாவது கறகளைப் புதுப்பித்தது காரணமாகவாவது செலுத்தியிருக்கும் தொகைகளோடு அவைகளை ஒன்றாய்ச் சேர்ககக்கூடாது.

13. லாண்ட் ரெகார்ட்ஸ் உத்தியோகஸ்தர்கள் கற்களைப் புதுப்பிக்கும்போதாவது மராமத்து செயயும்போதாவது, அவர்கள் - தாங்

கள் அந்தப்படி மரமத்துசெய்தது காரணமாகவும் புதுப்பித்தது காரணமாகவும் ரயத்துகளிடமிருந்து வசூலிக்கத்தக்கதாயிருக்கும் தொகையைக்குறித்த விவரங்களை இதனுடன் சேர்த்திருக்கிற (XXVII-ம் அனுபந்தத்திற்கண்ட) நமூனாப்படி ஒரு ஸ்டேட்மென்ட் தயார் செய்து கிராம உத்தியோகஸ்தாகளுக்குக் கொடுக்கவேண்டும். கிராம உத்தியோகஸ்தர்கள் பணத்தை வசூல்செய்ய ஆரம்பித்து, அந்தப்படி வசூல்செய்யப்பட்ட பணத்தைத் தாலூகா ஆபீஸுக்கு இரிசால் செய்யவேண்டும்.

14. கிராம உத்தியோகஸ்தாகள் ஸ்டேட்மென்டின் 8-வது கலத்தில் கண்ட பாக்கியை மூன்று தினங்களுக்குள்ளாக வசூல் செய்யச் சக்தியற்றவர்களாயிருந்தால், வசூலாகாமல் பாக்கியாயிருக்கும் ஒவ்வொரு பாபத்துக்கும் சம்பந்தப்பட்ட குறிப்புகளையெல்லாம் ஒவ்வொரு பட்டாதாரருக்காகவும் (XXIX-ம்) அனுபந்தத்திற்கண்ட ஒரு தனியான ஸ்டேட்மென்டில் கர்ணம் பதிவுசெய்யவேண்டும். இந்த ஸ்டேட்மென்ட் இரட்டைப் பிரதியாக இருக்கவேண்டும்; ஒரு பிரதியைப் பட்டாதாரரிடத்தில் சேர்ப்பிக்கவாவது வேண்டும்; அவர் இல்லாதபக்ஷத்திலே, அவருடைய வீட்டின் கதவின்மேலாகிலும், கிராமத்தில் அவருக்கு வீடு இராதபக்ஷத்திலே கிராமச் சாவடியிலாகிலும் கிராமத்திலுள்ள பகிரங்கமான வேறே இடத்திலாகிலும் ஒட்டவாவதுவேண்டும்; என்னசெய்யப்பட்டிருக்கிறதோ அதை இன்னொரு பிரதியின்மேல் கண்டெழுதி, அந்தப் பிரதியைத் தாலூகா ஆபிஸுக்கு அனுப்பவேண்டும். அதன்மேல், தாசில்தார்-சென்னபட்டணம் 1864-ம் வருஷத்து 2-வது ஆக்டிற்கண்ட நிபந்தனைகளின்படி டிமாண்டுகளையும், பாக்கியாயிருக்கும் தொகைகளை வசூல்செய்வதற்காக நிர்ப்பந்தமான என்ன கட்டளைகளைப் பிறப்பாடு பிறப்பிப்பது அவசியமாயிருக்குமோ அந்தக் கட்டளைகளையும் பிறப்பிப்பார். கிராம உத்தியோகஸ்தர்கள் வசூல் தொகைகளை இரிசால்செய்யும்போதெல்லாம், இதனுடன் சேர்க்கப்பட்டிருக்கும் (XXIX (a) அனுபந்தத்திற்கண்ட) நமூனாப்படி ஒரு ஸ்டேட்மென்டைக் கூட அனுப்பவேண்டும்.

15. லாண்ட்ரெகார்ட்ஸ் உத்தியோகஸ்தர் கிராமத்துக்கு வரும்போது கிராம உத்தியோகஸ்தர்கள் இருவரும் - ஊழியர்கள் சகிதமாய்க் கிராமத்தில் இருந்து, அவர் தமதுடைய வேலையைச் செய்கையிலே அவருக்கு ஒத்தாசை செய்யவேண்டும். புலங்களுக்குக் கற்களை கொண்டுபோய் நாட்டுவதிலும் சங்கிலிகொண்டு அளப்பதிலும் கொடி பிடிப்பதிலும் ரேகையைப் பரிஷகரித்து வைப்பதிலும் தாங்கள் செய்யவேண்டிய வேலையைச் செய்வது கிராம ஊழியக்காரர்களுடைய கடமையாகும்.

16. ஸர்வே கற்களை வேண்டுமென்று எடுத்துவிட்டிருப்பதாகவாவது கிறுக்கியிருப்பதாகவாவது மாற்றியிருப்பதாகவாவது கெடுத்திருப்பதாகவாவது காணப்படுகிற விஷயங்களிலே இந்தியன் பினல்கோட் 434-வது பிரிவின்படி பிராது தொடரப்படுமென்பதைக் கிராம உத்தியோகஸ்தாகள் தெரிந்துகொண்டு ரயத்துகளுக்கு எச்சரிக்கை பண்ணவேண்டும்.

17. மார்ச் மாதக் கடைசிவாரத்தில் கர்ணமானவர் - அப்போது முடிவாகிற வருஷத்துக்காக இதனுடன் சேர்க்கப்பட்டிருக்கும் (XXVIII-ம்) நமூனாப்படி ஒரு கோஷ்வாராவை தம்முடைய கருவிகளைக்குறித்த ரெஜிஸ்டர்களிலிருந்து தயார்செய்து, அதை ஏப்ரல்மீ 1 உக்குள்ளாகத் தாலூகா ஆபிஸுக்கு அனுப்பவேண்டும்.

18. கவர்ன்மெண்டாருடைய செலவிலேயே ஸர்வே கருவிகள் தங்களுக்கு ஸர்ப்பரா செய்யப்படும்போது அவைகளைத் தக்கப்படி ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்வது கர்ணங்களின் கடமையாகும். அவைகளை நியாயமாய் உபயோகிப்பதனால் உண்டாகும் குறைவுக்காகவன்றி மற்றப்படி அவைகளில் எதுவாவது எவ்விதமாகவாகிலும் நஷ்டமாகப்போனாலும், அவைகளில் எதுவாவது எவ்விதமாகவாகிலும் சேதமுண்டாக்கப்பட்டாலும் அதற்கு அவர்கள் உத்தரவாதிகளாகக்கொள்ளப்படுவார்கள். அப்படி இழக்கப்பட்ட அல்லது சேதப்படுத்தப்பட்ட கருவிகளின் மதிப்புத்தொகை அவைகளுக்கு உத்தரவாதியாயிருக்கும் கர்ணத்தினிடமிருந்து வசூல்செய்யப்படும்.

19. அங்காமியாகவோ அல்லது நிலையாகவோ தம்முடைய உத்தியோகத்தைக் காலிசெய்கிற யாதொரு கர்ணம் தம்முடைய கருவிகளைத் தமக்குப்பின் அந்த உத்தியோகத்துக்கு வருகிறவரிடத்தில் ஒப்பிக்கவேண்டும்; இவர் - அவைகளைப் பெற்றுக்கொண்டதைக் குறித்தும் அவைகளிருக்கும் ஸ்திதியைக் குறித்தும் தாலூகா ஆபிஸுக்கு ரிபோர்ட் செய்யவேண்டும். யாதொரு கர்ணம் இறந்துபோனாலும், அவருக்குப்பின் அந்த உத்தியோகத்துக்கு ஒருவரை உடனே ஏற்படுத்தாமல் அவரைச் சிறிதுகாலத்துக்கு வேலையிலிருந்து நீக்கிவைத்தாலும் அல்லது வேலையிலிருந்தே தள்ளிவிட்டாலும், அந்தக் கிராமப் பெரியதனக்காரர் அவருடைய கருவிகளை அங்காமியாயக் கைப்பற்றி தம் வசத்தில் வைத்திருக்கவேண்டும்.

20. யாதொரு ரெவினியு இன்ஸ்பெக்டரின் அல்லது லாண்ட் ரெகார்ட்ஸ் இன்ஸ்பெக்டரின் அந்தஸ்துடைய அல்லது அந்த அந்தஸ்துக்கு மேற்பட்ட அந்தஸ்துடைய யாதொரு ரெவினியு உத்தியோகஸ்தர் கருவிகளைப் பார்வையிடுவதற்காகக் காட்டும்படி கேட்கும்பொழுது, கர்ணங்கள் தங்களுடைய கருவிகளைக் கொண்டு வந்து காட்டவேண்டும். ஜமாபந்தி நடக்கும்போது பைசலேற்பாடு செய்யும் உத்தியோகஸ்தருக்கு முன்பாக அவைகளை ஸர்வே உருவப் படங்கள் சகிதமாகவும் ஸெட்டில்மெண்ட் (பைசலேற்பாடு) ரெஜிஸ்டர்கள் சகிதமாகவும் தவறாமல் எப்போதும் கொண்டுவந்து காட்டவேண்டும்.

### III.—கிராம உருவப்படங்களில் ஸ்தலவிவர சம்பந்தமான மாறுதல்களைச் சரியாய் எழுதிவைப்பதைக்குறித்த விதிகள்.

1. புனா ஸர்வேயின் கீழாவது திருத்தமான ஸர்வேயின் கீழாவது கொண்டுவர உத்தேசிக்காத விஸ்தீர்ணங்களுக்கு இந்த விதிகள் பிரயோகப்படுகின்றன.

2. ஜில்லாவைச்சேர்ந்த (காகிதத்தின்பேரில் தயார்செய்த) கிராம உருவப்படங்களின் பூர்த்தியான தொகுதியொன்றை, லா

ண்ட் ரெகார்ட்ஸ் தாசில்தாருடைய நேர்விசாரணையில் கலெக்டராபிஸிலே வைத்திருக்கவேண்டும்; அடியிற்கண்ட விதிகளில் விவரிக்கப்பட்ட திருத்தங்களையும் விவரிக்கப்பட்டபடி சோதிக்கப்படும் விஷயங்களையும் லாண்ட் ரெகார்ட்ஸ் டிராப்ட்ஸ்மனானவர் லாண்ட் ரெகார்ட்ஸ் தாசில்தாருடைய நேர் மேற்பார்வையின்கீழ் மேற்படி தொகுதியில் அப்போதைக்கப்போது எழுதிவைக்கவேண்டும்.

3. ஸ்தல விவராம்சங்கள்—முன்னமே விட்டுப்போயிருப்பவைகளும் முன்னமே செய்யப்பட்டு குறிப்பிடப்படாமலிருக்கும் மாறுதல்களும்.— யாருடைய கிராமத்தின் உருவப்படமானது இந்த விதிகளின்படி வைத்துவரப்படும் தொகுதியில் அடங்கியிருக்கிறதோ அப்படிப்பட்ட ஒவ்வொரு சர்வேயரும் தாம் வைத்திருக்கும் உருவப்படத்தில் காட்டியிருக்கும் ஸ்தல விவராம்சங்களை பூமியின்மேலிருப்பவைகளோடு சரிபார்க்கவேண்டும். அவர் தம்முடைய கிராமத்திலுள்ள சகல ஸர்வே நம்பர்களுக்கும், தாம் வைத்திருக்கும் உருவப்படத்தில் ஏற்கனவே காட்டியிருக்கிற ஸ்தல விவராம்சங்களைக் குறித்தும் அடியிற்கண்ட நமூனாப்படி முதலில் ஒரு ஜாபிதா தயார்செய்யவேண்டும்; அதாவது, அவர் முதலில் 1-வது கலத்திலும் 2-வது கலத்திலும் எழுதவேண்டியதை எழுதவேண்டும் :—

| ஸர்வே நம்பர்களின் வரிசைக் கிரமம். | கிராம உருவப்படத்தில் ஸ்தல விவராம்சங்கள் எவையேனும் காட்டப்பட்டிருந்தால் அவை. | 2-வது கலத்தில் கொடுத்திருக்கும் விவரங்கள் சரியாயிருக்கின்றனவா, சரியாயிராதபக்ஷத்திலே என்ன திருத்தம் செய்வது அவசியமாயிருக்கிறது. | எவையேனும் விவரங்கள் விட்டுவிடப்பட்டிருக்கின்றனவா, விட்டுவிடப்பட்டிருந்தால் அவைகளைக் குறித்த சங்கதிகள். | பூமியைப் பார்வையிடடபோதை பிட்டபிறகு இன்ஸ்பெக்டருடைய அபிப்பிராயக் குறிப்புகளும் அவருடைய இனிஷலும் (பெயரின் முதலெழுத்துகளும்) | லாண்ட் ரெகார்ட்ஸ் தாசில்தாருடைய உத்தரவு. கலெக்டரேட் மேற்பார்வையிடும் உத்தியோகஸ்தரின் அபிப்பிராயக் குறிப்புகள். |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |

அவர் பார்வையிட்டுச் சரிபார்த்துக்கொண்டே போகையில் 3-வது கலத்திலும் 4-வது கலத்திலும் எழுதவேண்டியதை எழுதவேண்டும். கீழே அச்சிட்டிருக்கும் விவராம்சங்களைமாத்திரம் அவர் கவனிக்கவேண்டும். பழமையான உருவப்படங்கள் சிலவற்றில் மிகவும் அதிகமான ஸ்தல விவராம்சங்களைக் காட்டியிருக்கிறது

உதாரணமாக, மாமரம, பனைமரம், தென்னைமரம் முதலிய வெவ்வேறு வகையான மரங்களைக் காட்டியிருக்கிறது ; ஆனால், இவைகள் சரியாயிருக்கின்றனவாவென்று பார்க்கவேண்டியதுமில்லை, விட்டுப்போயிருப்பவைகளைத் தேடவேண்டியதுமில்லை :—

**ஸ்தல விவராம்சங்களைக்குறிக்கும் சின்னங்கள்.**

1 கண்ணனூர் தாய்க்கிராமம்.

2 ஆதனூர் மஜரா.

3  அல்லது வீடு.

4  கோவில்.

5  மசூதி.

6  கிறிஸ்தவ தேவாலயம்.

7  விளக்குக்கூண்டு.

8 . . . . . காலடிப்பாதை.

9 வண்டிப்பாதை.

10 மண் ரஸ்தா

11 கப்பிபோட்ட ரஸ்தா.

12 கருங்கல்ஜல்லிபோட்ட ரஸ்தா.

13 ரெயில்வே (இருப்புப்பாதை).

14 தந்தி.

15 நதி, வாய்க்கால், தண்ணீர்செல்லும் பாதை.

16 அணைகட்டிடக்கூடிய நதியும் நீரோடையும்.

17 கல்வாட்டும் (சிறுபாலமும்) வாராவதியும்.

18 ஓடத்துறை

19 ஏரி.

20 கலிங்கல்

21 மதகு.

22 சதுரமாயுள்ள கிணறு.

23  வட்டமாயுள்ள கிணறு.

24  சதுப்பு.

25  உப்பளம்.

26  புதைக்குமிடம் அல்லது சுடுகாடு

27  சிறுதூறும் காடும்.

28  பாறை நிலத்தின் எல்லை.

29  குன்று.

30 





G. T. ஸ்டேஷனும் அடிக்கணக்காய சமுத்திர மட்டத்துக்கு மேலுள்ள உயரமும்.

| | | |
|---|---|---|
| 31 | □ | கிராம எல்லை ஸ்டேஷன். |
| 32 | ◯ | கண்டம் ஸ்டேஷன். |
| 33 | ○ | மைனர் ஸர்க்கூட் ஸ்டேஷன். |
| 34 | ✤ | பாறைக்குறி. |
| 35 | ● | காட்டியுள்ள கற்குவியல் அல்லது ஸ்தம்பம். |
| 36 | ——— | கிராம எல்லை. |
| 37 | ——— | ஸர்வே புல எல்லை. |

4. கர்ணமானவர் மேலும் மேலும் இந்த ஜாபிதாவைத் தயார் செய்துகொண்டு போவதையும் ஸ்தல விவராம்சங்களைப் பரிசோதனை செய்துகொண்டு போவதையும், லாண்ட் ரெகார்ட்ஸ் இன்ஸ்பெக்டர் கிராமத்தை வந்துபார்க்கிற ஒவ்வொரு தரமும் சரிபார்க்க வேண்டும். கர்ணம் தாம் பார்வையிடவேண்டியதைப் பார்வையிட்டும் இன்ஸ்பெக்டா தாம் சரிபார்க்கவேண்டியதைச் சரிபார்த்துமானவுடனே, ஒவ்வொரு ஸ்டேட்மென்டையும் லாண்ட் ரெகார்ட்ஸ் தாசில்தாரருக்கு அனுப்பவேண்டும்; இவர் அந்த ஜாபிதாவைப்படித்துப்பார்த்து, அது சரியாயத் தயார்செய்யப்பட்டிருக்கிறதாவென்றும், எவ்வளவுமட்டில் சரிப்பார்க்க வேண்டுமென்று நிர்ணயித்திருக்கிறதோ அவ்வளவுமட்டில் இன்ஸ்பெக்டர் சரிபார்த்திருக்கிறாராவென்றும் பார்க்கவேண்டும். இந்தப்படி பரிசோதிப்பது திருப்திகரமாயிருந்தால, என்னபிழை இருப்பதாகவோ எது விட்டுப் போயிருப்பதாகவோ ரிபோர்ட் செய்யபபடுகிறதோ அது அதைச் செய்யககூடியதாயிருப்பதற்கு ஒரு அளவு ஸ்கெட்ச் வேண்டியிராத லட்சண முடையதாயிருந்தாலும் வேண்டியிராதபடி அவ்வளவு சொற்பமானதாயிருந்தாலும், அப்படிப்பட்ட சகல விஷயங்களிலும்

லாண்ட் ரெகார்ட்ஸ் தாசில்தாரரானவர் 2-வது விதியின்படி வைத்துவரப்படும் உருவப்படங்களில் அவசியமான திருத்தங்களை உடனே செய்துவைக்கவேண்டும்.

5. இந்தத் திருத்தங்களைப் பதிவுசெய்து வைத்தபிறகு, சாத்திபப்படுகிறபட்சத்திலே, லாண்ட ரெகார்ட்ஸ் தாசில்தாரர் - பாக்கி விஷயங்களிலே ஸ்கெட்சுகள் தயாரசெய்யும்படி உத்தரவு சகிதமாய் அந்த ஸ்டேட்மென்டைக் கர்ணத்துக்குத் திரும்பவும் அனுப்பவேண்டும். பாக்கியாயிருக்கும் இந்த ஸர்வே நம்பர்கள் ஒவ்வொன்றுக்காகவும் காணமானவா புல உருவப்படத்தின் நகலொன்று எடுக்கவேண்டும். பிறகு அவர் அந்த நிலத்துக்குப்போய், பிரஸ்தாப ஸ்தலவிவராம்சத்தின் ஸ்தானத்தை நிஷகரிஷைசெய்வதற்காக அளவுகள எடுக்கவேணடும். சௌகரியமான யாதொரு (டயாகனல்) மூலைவிட்டக் கோட்டின்மேல் விழும் ஆப்ஸெட்டுகளை அளந்காவது, சௌகரியமாயுள்ள டை லைன்ஸ் என்னும் கட்டுக்கோடுகளை அளந்தாவது மேற்கணடபடி அளவுகள் எடுக்கக்கூடும். பிற்பாடு அவர்-இந்த அளவுகளை அனுசரித்து, அந்த ஸ்தல விவராம்சத்தை அதற்குரிய அடையாளத்தினால் ட்ரேஸிங்கின்மேல் குறிப்பிடவேண்டும்—மேலே 3-வது விதியைப் பார்க்க. ஒரு ரஸ்தா அல்லது கால்வாயைப்போல் விட்டுவிடப்பட்டிருக்கும ஒரு விவராம்சமானது அனேகமாய்ப புலங்களின உருவப்படங்களில் உட்பிரிவுகளின் எல்லைகளால் நிஷகரிஷை செயயபபடுகிறது. அப்படிப்பட்ட விஷயங்களிலே உடன்சேர்க்கையாய் அளப்பது அவசியமாயிராது; உட்பிரிவின அளவுகள் இன்னவையென்றும் அவற்றிற்குரிய அடையாளங்கள் இன்னவையென்றும டிரேஸிஙகுகளினால் தெரியவரும்.

6. முந்திய விதியினபடி கர்ணத்தால் தயார்செய்யப்படும் ஸ்கெட்சுகளை லாண்ட்ரெகார்ட்ஸ இனஸ்பெக்டர பூமியினபேரில் சரி பார்த்து, பிறகு அவைகளை லாணட ரெகார்ட்ஸ் தாசில்தாரருக்கு அனுப்பவேண்டும்; இவர் - 2-வது விதியில குறிப்பிடப்பட்ட உருவப்படங்களில் அவசியமாயத் திருத்தவேண்டியவைகளையும் சேர்க்கவேண்டியவைகளையும் திருத்துமபடிக்கும் சேர்க்கும்படிக்கும் செய்யவேணடும்.

7. ஸ்தல விவராம்சங்களைக் குறிப்பிடுவதைக்குறித்தும் அளப்பதைக்குறித்துமுள்ள அடியிற்கண்ட விதிகள் திருத்தமான ஸர்வே மானுயல் 7-ம் அத்தியாயத்திலிருந்து எடுக்கப்பட்டிருக்கின்றன :—

(8) "கிராம நத்தங்கள், பொதுக்கட்டிடங்கள், கால்வாய்கள், நீரோடைகள், ஏரிகள், கிணறுகள், வண்டிப்பாதைகள், காலடிப்பாதைகள் முதலியவைகளைப் போல முக்கியமான சகல ஸ்தல விவராம்சங்களும் ஸர்வே புலஙகளாகவாவது உட்பிரிவுகளாகவாவது பிரத்தியேகமாயக் குறிபபிடபபட்டிருந்தாலுஞ்சரி இராவிட்டாலுஞ்சரி, அவைகளின ஸ்தானத்தை அளந்து நிஷகரிஷை செய்யவேண்டும.

(9) "ஆயினும், அனவசியமாயுள்ள விவராம்சங்களையாவது வெகுசாய் மாறக்கூடிய விவராம்சங்களையாவது அளக்கவேண்டிய அவசியமில்லை. சிறு ஜல்லிக்குழிகள், வழக்கமாய் உழப்படுகிற ஆழ

மில்லாத கால்வாய்கள், சிறுபாதைகள், சிறிதுகாலத்துக்கிருக்கும் பாதைகள் அல்லது வழிகள், உபயோகிக்கப்படாமலிருக்கும் பழய கிணறுகள் - ஆகிய இவைகளை அடியோடு விட்டுவிடவேண்டும். இவ்விஷயத்தைப்பற்றி திட்டமாய் விதிகள் ஏற்படுத்துவது கஷ்டமான காரியம். புலங்களின் எல்லைகளை அளந்து அவைகளுக்கு உருவப்படம் தயார் செய்வதே ஸர்வே செய்வதன் பிரதம நோக்கமென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு ஸர்வேயர் யுக்தாயுக்தப்படி காரியம் நடத்தவேண்டும்.

(10) "ஸ்தலவிவர அம்சங்களில் ஒவ்வொன்றுக்கும் மற்றவைகளுடன் ஒத்திட்டுப்பார்க்கும்போது ஏற்படும் முக்கியத்தையைக் கவனிக்கவேண்டும்; பூமியின்மேல் விசேஷமாய்க் கவனிக்கத்தக்கதாயுள்ள யாதொரு அம்சத்துக்கு அளவெடுக்கவேண்டும்; யாதொரு காலி பிரதேசத்திலுள்ள தனியான ஒரு பெரிய மரம், ஒரு சிறிய கோயில் அல்லது ஒரு பெருத்த பாறை, மற்றப்படி கடக்கமுடியாத ஓர் மலைத் தொடர்ச்சியின் குறுக்கே செல்லும் ஒரு குறுகிய பாதை- ஆகிய இவைகள் முக்கியமான விவரங்களாகும்; இவைகளை அளந்துபார்த்து நிர்ணயிக்கவேண்டும்.

* * * *

(12) "ஓடைகள் செல்லும் மார்க்கத்தைக்காட்டும் அம்புக்குறிகள் புல அளவு புஸ்தகங்களில் போட்டிருக்கவேண்டும்.

(13) "ஒவ்வொரு ஏரியிலும் தண்ணீர் நிறைந்திருக்கும்பொழுது அதன் மிகவும் ஆழமான பாகத்தில் தண்ணீர் சுமார் இவ்வளவு ஆழமிருக்கிறதென்பதைப் புல அளவு புஸ்தகத்தில் லிங்குகளாகக் காட்டாமல் அடிகளாகக் காட்டவேண்டும்.

(14) "காலடிப்பாதைகள், வண்டி பாட்டைகள், மண் ரஸ்தாக்கள், கப்பிபோட்ட ரஸ்தாக்கள், கருங்கல் ஜல்லிபோட்ட ரஸ்தாக்கள் - ஆகிய இவைகளைப்போன்ற நிலையான சகல போக்குவரவு மார்க்கங்களையும் அவ்வவற்றுக்குரிய அடையாளங்களால் தனித்தனியே பிரித்துக்காட்டவேண்டும்.

(15) "எந்த ஸ்தானத்தில் ஒரு ரெயில்வே, ரஸ்தா அல்லது வழியானது கிராம எல்லைக்குக் குறுக்காய்ப் போகிறதோ அந்த ஸ்தானத்தில், அது எந்த இடத்திலிருந்து வருகிறது அல்லது எந்த இடத்துக்குப்போகிறது என்பதையும் அந்த இடத்துக்கும் அந்த ஸ்தானத்துக்குமுள்ள தூரத்தையும் குறிப்பிடவேண்டும்.

(16) "எந்தெந்த கிராமநத்தம், மஜரா, ஏரி, குன்று, நதி, கால்வாய் அல்லது வேறு ஸ்தலவிவர அம்சத்துக்கு அதைப் பிரத்தியேகப்படுத்திக்காட்டும் பெயரிருக்கிறதோ அப்படிப்பட்ட ஒவ்வொரு கிராமநத்தம் முதலியவற்றின் பெயரையும் புல அளவு புஸ்தகத்தில் கண்டெழுதவேண்டும்; அப்படி எழுதுவதை எழுத்துப் பிழையில்லாமல் ஜாக்கிரதையாய் எழுதவேண்டும்.

(17) "கிராம நத்தங்களைக்குறித்து விவரிக்கும்பொழுது, வீதிகளின் இருபக்கங்களிலும் வரிசையாயுள்ள வீடுகளின் எல்லைகளை,

அந்த வீதிகளின் நெடுகே அளந்து சங்கிலிக்கோடுகளிலிருந்து ஆப் ஸெட் செய்யவேண்டும். இந்த சங்கிலிக்கோடுகள் தியாடலேட் ஸ்டேஷன்களிலிருந்து ஆரம்பித்து அந்த ஸ்டேஷன்களிலேயேயாவது அந்த ஸ்டேஷன்களுக்கு இடையில் ஜாக்கிரதையாய் இழுக்கப் பட்ட ஒரு நேர்க்கோட்டிலுள்ள புள்ளிகளிலாவது முடியவேண்டும். பிரதி வீட்டு வரிசையின் ஆழத்தையும் அவைகளின் பின் புறத்திலுள்ள முக்கியமான வளைவுகளையும் மாத்திரமேயல்லாமல் புழக்கடை வரிசை ஒவ்வொன்றையுங்கூட அளவிட்டு நிர்ணயிக்க வேண்டும்; ஆனால், இந்த விஷயத்தில் அளவிடும்பொழுது தூரங்களைக் காலடியால் அளப்பதே போதுமானதாகும். ஆயினும் கோயில்களுக்கும் முக்கியமான கட்டிடங்களுக்கும் பிரத்தியேகமாய் அளவெடுக்கவேண்டும். ஒரு அங்குலம் ஒரு செயினுக்குச் சமமென னும் ஸ்கேல்படி ஒவ்வொரு கிராமநத்தத்துக்கும் உருவக்குறிப்பு மாத்திரமமைந்த ட்ராவர்ஸ் (குறுக்கு) ப்ளாட் ஒன்று தலைமைஸ்தானத்திலிருக்கும் ஆபிஸிலிருந்து ஸர்வேயருக்குச சவதரிக்கப்படும்; இதில் மேலேகண்ட விவரஙகளெல்லாவற்றையும் சரியாய் ப்ளாட் செய்யவேண்டும். வாஸ்தவத்தில் கட்டிடங்கள் கட்டப்பட்டிருக்கும பிரதேசஙகளைக் காலியிடங்களிலிருந்து பிரித்துக்காட்டுமபொருட்டு அவைகளை ஹாஷூர் என்னுமம மேடுபள்ளஙகளைக் காட்டும் குறுகிய கோடுகளினால குறிபபிடவேண்டும.

(18) "குன்றுகள், கற்பாறை பூமிகள் அல்லது மணற்பாங்கான பிரதேசங்களின் எல்லைகளைக்காட்டி, அடியிற்கண்ட விதமாக பூமியின் தன்மை அலலது குன்றின் உயரத்தைப்பற்றி புல உருவப் படத்தில் குறிப்பு எழுதவேண்டும்,— 'சிறு தூறுகள் நிறைந்த பள்ளமான பாறை நிலம்', '50 அடி முதல் 100 அடிவரையில் உயரமுள்ள ஏற்றமும் இறக்கமுமான கற்குன்றுகள்', '300 அடி உயரமுள்ளதாய்ச் சுற்றிலும 10 மைலுக்குத் தெரியக்கூடிய செங்குத்தாயிருக்கும் கரடுமுரடான குனறு', 'செம்மணலும் முரட்டுப் புல்லும்'. உயரஙகளை எப்போதும் அடிககணக்காகக் காட்ட வேண்டும்."

8. **ஸ்தல விவரங்கள்—தற்கால மாறுதல்கள்.**—ஆயினும் முன் விட்டுப்போனவைகளை எழுதி, முன் உண்டான பிழைகளைத் திருத்துகையில், தற்கால ஸ்தலவிவர மாறுதல்களையும் அதே சமயத்தில் கவனித்து 2-வது விதியில் சொல்லியிருக்கும் உருவப்படங்களில் அவைகளை ஜாக்கிரதையாய்க் குறிப்பிடவேண்டும். இப்படி செய்வதற்காக, காணமானவர் - தாம் புலங்களைப் பார்வையிடும்பொழுதே, மேலே 3-வது விதியில் விவரிக்கப்பட்ட பலவகை ஸ்தலவிவர அம்சங்களில் ஏதேனும் புதிதாகக் காணப்பட்டால் அதைத் தம்முடைய சாகுபடி குறிப்புப் புஸ்தகத்தின் 16-வது கலத்தில் குறிப்பிடவேண டும். லாணட் ரெகார்ட்ஸ் இன்ஸ்பெக்டரானவர் - தாம் அந்த இடங்களுக்குப் போகும்பொழுது இந்த குறிப்புகள் செய்யப்பட்டிருக்கின்றனவாவென்று பார்த்து அவைகளைத் தணிக்கைசெய்யவேண்டும்; மேலும், அவசியமானால் ஸ்கெட்சுகள் தயார் செய்வித்து, தாம்

போய்ப்பார்த்த பிரதி கிராமத்துக்காகவும் அடியிற்கண்ட நமூனாப்படி லாண்ட் ரெகார்ட்ஸ் தாசில்தாருக்கு ரிபோர்ட்டுகள் அனுப்பவேண்டும் :—

| ஸர்வே நம்பர். | ஸ்தலவிவர மாறுதலின் தன்மை. | ஸ்கெட்ச் கூட அனுப்பப்படுகிறதா இல்லையா | ஷரா. |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| | | | |

21. தண்ணீர் வரி.

1. **விதிகள் எவ்வளவுமட்டில் செலாவணியாதுமென்பது.**— ஸர்க்கார் மூலாந்தரமான நீர்ப்பாய்ச்சலாதாரத்தினின்றும ஜலம் சர்ப்பரா செய்யப்படும்போதாவது, அதை ஆதாரத்தினின்றும ஜலமானது நேராகவல்லாமல் மற்றப்படி ஓடியோ, ஊறியோ அல்லது வடிந்தோ எந்த நிலங்களுக்காகிலும் பாய்ந்து, அப்படி நீர்ப்பாய்ச்சப்பட்ட நிலங்களின் மேலுள்ள பயிருக்குப் பிரயோஜனகரமாயிருப்பதுமல்லாமல் அதன் ஆவசியகங்களுக்குப் போதுமானதாகவும் இருக்கும்போதாவது புஞ்சையாக வகுக்கப்பட்ட நிலங்களின்மேல விதிக்கப்பட்டிருக்கும் நிலத்தீர்வையுடனே தண்ணீர் வரியையும் விதித்து வாங்குவதற்காக அடியிற்கண்ட விதிகள் ஏற்பட்டிருக்கின்றன. 2 முதல் 7 வரையிலுள்ள பாராக்களில் அடங்கியிருக்கிற விதிகள் மதுரை, திருநெல்வேலி, மலையாளம், தென்கன்னடம் என்னும் ஜில்லாக்களுக்காவது நீலகிரி மலைகளுக்காவது பிரயோகப்படவேண்டுமென்ற அவசியமில்லை.

2. **பரிமாண தண்ணீர்வரிகள்.**—ஸர்க்கார் முகாந்தரமான நீர்ப் பாயச்சலாதாரத்தினின்றும் ஜலம் பாயும் புஞ்சை நிலங்களுக்கு அடியிற்கண்ட பரிமாண விதநிர்ணயப்படி நிஷ்கரிஷையான தண்ணீர்வரி விதிக்கப்படும் :—

| பயிர்களின் வகை. | முதல்தரம் வரிகள், ஆற்றுக் காலகள், ஊற றுககால்கள். | | | இரண்டாந்தரம் வரிகள், ஆறுக்கால்கள், ஊற்றுக்கால்கள். | | |
|---|---|---|---|---|---|---|
| | ரு. | அ. | பை. | ரு. | அ. | பை. |
| (a) ஒரே ஒரு நஞ்சை போகத்திற்காக, ஒரு ஏகருக்கு. | 4 | 0 | 0 | 3 | 0 | 0 |
| (b) இரண்டாம போகத்திற்காக, ஒரு ஏகருககு ... | 2 | 0 | 0 | 1 | 8 | 0 |
| (c) கருமபு, வெற்றிலை, வாழை, மஞ்சள், ஆள்வள்ளிக்கிழஙகு. ஆறுமாதங்களுக்கு மேல ஜலம் பாய்சசுவது அவசியமாயிருக்கும் வேறே யாதொரு நஞ்சைப் பயிர். | 6 | 0 | 0 | 4 | 8 | 0 |
| (d) முதல்போகமானாலும இரண்டாம போகமானாலும காலாகாலங்களில் ஜலம் பாயச்சப்பட்ட புஞ்சைப் பயிருக்காக, ஒரு ஏகருக்கு ... | 2 | 0 | 0 | 1 | 8 | 0 |
| (e) காலககிரமமாய நீர்பாய்ச்சப்பட்ட புஞ்சைப்பயிர், முதல்போகமாயிருந்தால, ஒரு ஏகருக்கு ... | 3 | 0 | 0 | 2 | 4 | 0 |
| (f) காலக்கிரமமாய் நீா பாய்ச்சப்பட்ட புஞ்சைப்பயிர், இரண்டாம போகமாயிருநதால், ஒரு ஏகருக்கு ... ... | 2 | 0 | 0 | 1 | 8 | 0 |
| (g) நீாபாயச்சப்பட்ட மூன்றும்போகம—(நஞ்சையாயிருந்தால்) | 2 | 0 | 0 | 1 | 8 | 0 |
| (புஞ்சையாயிருந்தால) காலமுறையாய் நீா பாய்ச்சப்பட்டாலுஞ்சரி காலாகாலங்களில் மாத்திரம் நீர் பாய்ச்சப்பட்டாலுஞ்சரி ... ... ... | 1 | 0 | 0 | 0 | 12 | 0 |

குறிப்பு.--(1) தோப்புப் பயிராகிற தென்னை முதலான மரங்களுக்கு, ஒரு வருஷத்தில் இரண்டுபோகம் நெற்பயிர் செய்வதற்குப் போதுமான ஜலத்தைச் சிலமாதகாலம்வரையில், அதாவது ஆறுமாதங்களுக்குமேற்பட்டு, பாய்ச்சினால் அதற்கு, மேலே (c) குறிப்பிட்ட பகுதியில் அடங்கியிருக்கிற பயிர்களுக்கெப்படியோ அப்படியே தண்ணீர்வரி விதிக்கப்படும். அப்படிக்கில்லாவிட்டால், (a) குறிப்பிட்ட பகுதியில் சொல்லியிருக்கிற ஒரே ஒரு நஞ்சை போகத்துக்குரிய தண்ணீர்வரி அளவைகளுக்கு விதிக்கப்படும்.

(2) கவர்ன்மெண்டார் மேலேகண்ட வரிகளை மாற்றி அடியிற்கண்ட வரிவீதப்பட்டியை பரிசோதனார்த்தமாய் ஜாரி செய்திருக்கிறார்கள் :—

| ந. | புஞ்சை நிலத்தில் முதல் போகம். | புஞ்சை நிலத்தில் இரண்டாம் போகம். | கட்டணம். முதல் போகத்துக்காக | கட்டணம். இரண்டாம் போகத்துக்காக. | மொத்த கட்டணம். |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 * | 5 * | 6 * |
| | | | ரூ. | ரூ. அ. ப. | ரூ. அ. ப. |
| 1 | நஞ்சை ... ... | நஞ்சை ... ... | 4 | 2 0 0 | 6 0 0 |
| 2 | ஷை ... ... | புஞ்சை, காலக்கிரமமாய் நீர்பாய்ச்சப்பட்டது | 4 | 1 8 0 | 5 8 0 |
| 3 | ஷை .. ... | புஞ்சை, காலாகாலங்களில் மாத்திரம் நீர்பாய்ச்சப்பட்டது. | 4 | 1 0 0 | 5 0 0 |
| 4 | புஞ்சை, காலக்கிரமமாய் நீர்பாய்ச்சப்பட்டது. | நஞ்சை ... ... | 3 | 2 8 0 | 5 8 0 |
| 5 | ஷை. ஷை | புஞ்சை, காலக்கிரமமாய் நீர்பாய்ச்சப்பட்டது. | 3 | 2 0 0 | 5 0 0 |
| 6 | ஷை. ஷை. | புஞ்சை, காலாகாலங்களில் மாத்திரம் நீர்பாய்ச்சப்பட்டது. | 3 | 1 8 0 | 4 8 0 |
| 7 | புஞ்சை, காலாகாலங்களில் மாத்திரம் நீர்பாய்ச்சப்பட்டது. | நஞ்சை ... ... | 2 | 3 0 0 | 5 0 0 |
| 8 | ஷை. ஷை. | புஞ்சை, காலக்கிரமமாய் நீர்பாய்ச்சப்பட்டது. | 2 | 2 8 0 | 4 8 0 |
| 9 | ஷை. ஷை. | புஞ்சை, காலாகாலங்களில் மாத்திரம் நீர்பாய்ச்சப்பட்டது. | 2 | 2 0 0 | 4 0 0 |

* 4-வது, 5-வது கலங்களிற்கண்ட வீதங்கள், முதல்தர ஜலாதாரங்களிலிருந்து ஜலம் பாய்ச்சப்படுகிற விஷயத்தில் பிரயோகப்படும். இரண்டாந்தர ஆதாரங்களுக்கு இந்த வீதங்களில் முக்காலபங்கு விதிக்கவேண்டும்.

(3) எந்தெந்த நீர்ப்பாய்ச்சலாதாரங்கள் முதல்தரத்தைச் சேர்ந்தவையாகவும் எவ்வெவை இரண்டாந்தரத்தைச் சேர்ந்தவையாகவும் வகுக்கப்பட்டிருக்கின்றனவென்பதைக் காட்டும் ஒரு பட்டியைக் கிராம உத்தியோகஸ்தர்கள் தாசில்தாரிடத்திலிருந்து பெற்றுக்கொள்ளவேண்டும்.

3. **பரிமாண தண்ணீர்வரிகள் எந்தெந்த பிரதேசங்களுக்குப் பிரயோகப்படமாட்டாவென்பது.**—மேலே 2-வது பாராவில் கண்டிருக்கும் வரிகள் - (1) கோதாவரி, கிருஷ்ணா, குண்டூர் ஜில்லாக்களிலுள்ள டெல்டா ட்ராக்டுகள் என்று சொல்லப்பட்ட ஆற்றுமுகத்துவாரத் துவீபப்பிரதேசங்களுக்கும், (2) கோதாவரி நதியிலும் கிருஷ்ணா நதியிலுமுள்ள லங்கை நிலங்களுக்கும் படுகை நிலங்களுக்கும், (3) கோதாவரி, கிருஷ்ணா, குண்டூர் ஜில்லாக்களின் மேட்டுப் பிரதேசத்திலுள்ள கிராமங்களில், கோதாவரி, கிருஷ்ணா நதிகளின் டெல்டா ஏற்பாடுகளுடன் சம்பந்தப்பட்ட கால்வாய்களிலிருந்து நீர்பாய்ச்சப்படும் நிலங்களுக்கும், (4) கிருஷ்ணா ஜில்லாவில் டிவிபம்பிங் (தண்ணீர் இறைப்பதற்கான) ஏற்பாட்டின்படி நீர்பாய்ச்சப்படும் நிலங்களுக்கும், (5) கர்னூல் ஜில்லாவில் ராமல்லகோட்டா, நந்தியால், நந்திகோட்கூர், ஸிர்வெல், கோயில்குண்ட்லா, பட்டிகொண்டா இந்த தாலூகாக்களுக்கும், (6) கர்னூல்-கடப்பை கால்வாயிலிருந்தும், மதுரையில் பெரியாறு பாசன ஏற்பாட்டின்படியும், நெல்லூரில் பொன்னலூர் ஏரியிலிருந்தும் ஹாஜிபுரம் ஏரியிலிருந்தும் கஞ்சம் ஜில்லாவில் ருஷிகுல்யா பாசன ஏற்பாட்டின்படியும் நீர்பாய்ச்சப்படும் நிலங்களுக்கும் பிரயோகப்படமாட்டா. வித்தியாசத்தைக்காட்டும்படியான தண்ணீர் வரி ஏற்பாடு அமுலுக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிற பிரதேசங்களிலுங்கூட மேற்படி பரிமாண தண்ணீர் வரிகள் தற்காலத்தில் அமுலிலில்லை.

4. **யந்திர உபகரண நிர்மாணங்களால் நீர்பாய்ச்சுவது.**—நீர்பாய்ச்சலுக்குரிய கட்டுவேலைகளின் உறுதிப்பாட்டுக்கு அபாயம் நேரிடாதிருக்கிறபக்ஷத்திலும் தனி நபர்களுடைய காரியங்களுக்கு யாதொரு கெடுதி நேரிடாதிருக்கிறபக்ஷத்திலும், அந்தந்த கட்டுவேலைகளின் கரைகளின்மீதாயினும் அணைக்கட்டுகளின்மீதாயினும், கலெக்டருடைய அனுமதியின்மேல் ஏற்றங்களைப்போன்ற யந்திர உபகரண நிர்மாணங்கள் நாட்டிக்கொள்ளலாம். அப்படிப்பட்ட நிர்மாணங்களைக்கொண்டு ஜலம் இறைக்கப்பட்டால் தண்ணீர் வரிகளை நாலில் ஒருபங்கு குறைக்கவேண்டும்; ஆனால், ஸர்க்கார் முகாந்தரத்திலிருந்து நேராயவரும் ஜலத்தையும் அந்த நிலத்திற்குப் பாய்ச்சிக்கொண்டிருக்கக்கூடாது. பானைகளில் மொண்டுகொண்டுபோய் ஜலம் பாய்ச்சப்பட்ட விஷயங்களுக்கும் இந்தவிதி பிரயோகமாகும்; ஆனால், அந்தப்பிரகாரம் ஜலம் பாய்ச்சப்பட்ட கொல்லைப்பயிருக்கு யாதொரு கட்டணமும் விதிக்கக்கூடாது.

5. **புலத்தின் சில பாகங்களுக்கு ஜலம் பாய்ச்சுவது.**—யாதொரு புலத்தின் சில பாகங்களுக்கு ஜலம் பாய்ச்சினால், உள்ளபடி ஜலம் பாய்ச்சப்பட்ட விஸ்தீர்ணத்துக்குமாத்திரமே கட்டணம் கணக்கிடப்படும். ஆயினும், அப்படிப்பட்ட பாகத்தின் விஸ்தீர்ணம் 10 ஸென்டுக்குக் குறைவுபட்டால், டிவிஷனல் ஆபீஸர் அல்லது ஜமாபந்தி உத்தியோகஸ்தர் உள்ளபடி ஜலம் பாய்ச்சப்பட்ட விஸ்தீர்ணத்துக்கு மாத்திரம் யுக்தாயுக்தப்படி கட்டணம் விதித்தாலும் விதிக்கலாம், அல்லது கட்டணம் விதிக்காமலே விட்டாலும் விடலாம். இந்தப்பிரகாரம் யுக்தாயுக்தப்படி செய்வதற்கான அதிகாரத்தை, கலெக்டரானவர் - சுயேச்சையான விசாரணை வஹிக்கும் எந்த தாசில்தார்களும் டெப்யுடி தாசில்தார்களும் இந்த அதிகாரத்

தைச் செலுத்தத் தகுதியுள்ளவர்களென்று தமக்குத் தோற்றுகிறதோ அவர்களுக்குக் கொடுக்கலாம்.

6. ஒரு பயிருக்கு மேற்பட்டு நீர்பாய்ச்சுவது.—யாதொரு ரயத்தானவன் வெவ்வேறு தண்ணீர்வரி வீதங்களுக்குட்பட்ட நானாவிதமான இரண்டு அல்லது அதிகமான பயிர்வகைகளைப் பயிரிட்டால், அந்தந்தப் பயிர் செய்யப்படும் விஸ்தீரணத்துக்கேற்றபடி கட்டணத்தைத் தாராதரம் பார்த்து விதிக்கவேண்டும்.

7. தீர்வைவிதிக்கப்படாத நிலங்களுக்கு நீர்பாய்ச்சுவது.—தீர்வை விதிக்கப்படாத நிலங்களுக்காவது புறம்போக்கு நிலங்களுக்காவது நீர் பாய்ச்சப்பட்டால், இதற்காக அவைகளுக்குத் தீர்வை விதிக்கப்பட்ட நிலங்களைப்போலவே கட்டணம் விதிக்கவேண்டும்.

8. நாற்றங்கால்களுக்கு நீர்பாய்ச்சுவது.—புஞ்சை நிலங்களில் தயார் செய்யப்பட்டு ஸர்க்கார் முகாந்தரமான நீர்பாய்ச்சலாதாரத்திலிருந்து ஜலம் பாய்ச்சப்பட்ட நாற்றங்கால்களுக்கு ஜலத்தின் பொருட்டு யாதொரு கட்டணமும் விதித்து வாங்கக்கூடாது; பாய்ச்சுவதற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிராத ஜலாதாரங்களிலிருந்து நீர்பாய்ச்சப்படும் விஷயங்களுக்கு இந்த நிவாரணை பிரயோகப்படாது.

9. தோப்புகளுக்கு நீர்பாய்ச்சுவதற்காகக் கட்டணம்.—நீர்பாய்ச்சலில்லாத நிலத்தில் இருக்கும் மரங்களுக்கு ஸர்க்கார் ஜலாதாரத்திலிருந்து ஜலம் பாய்ச்சிக்கொண்டால், புஞ்சைத் தீர்வையோடுங்கூட வாலாயமான தண்ணீர்வரியும் விதிக்கவேண்டும். தீர்வையில்லாத தோப்பு நிலங்களிலுள்ள மரங்களுக்கு நீர்பாய்ச்சுவதற்காகவாவது, அப்படிப்பட்ட நிலங்களில் நஞ்சைப்பயிராகிலும் புஞ்சைப்பயிராகிலும் செய்வதற்காகவாவது ஸர்க்கார் ஜலத்தை உபயோகித்தால், அதற்குத் தகுந்த தண்ணீர்வரி விதிக்கவேண்டும்.

10. ஒரேபயிரை இரண்டுமுறை அறுப்பறுப்பது.—ஒரே ஒரு பயிரை இரண்டுமுறை அறுப்பறுத்தாலும், அதற்கு ஒரே ஒரு தண்ணீர்வரியே விதிக்கவேண்டும்; உதாரணமாக, ஸர்க்கார் ஜலத்தைக் கொண்டு யாதொரு ரயத்தானவன் அவுரிபயிரிட்டு, அதை ஒரு வருஷத்தில் ஒரு முறையும் அடுத்த வருஷத்தில் இன்னொரு முறையுமாக அறுப்பறுத்தால், அவனுக்கு ஒரு வருஷத்தில் மாத்திரமே தண்ணீர்வரி விதிக்கவேண்டும்; இரண்டு வருஷங்களிலும் விதிக்கக்கூடாது.

11. ஜலம் பாய்ச்சிக்கொள்வதற்கு அனுமதி.—கிராமப் பெரியதனக்காரரிடத்திலாகிலும், டெவிஷனல் இன்ஸ்பெக்டர் அல்லது அவரைக் காட்டிலும் உயர்ந்த அதிகாரியிடத்திலாகிலும், ஜலாதாரக் கட்டுவேலைகள் பப்ளிக் வொர்க்ஸ் இலாகாதாருடைய விசாரணையிலிருந்தால் அந்த இலாகாவைச்சேர்ந்த யாதொரு உத்தியோகஸ்தரிடத்திலாகிலும் வெளிப்படையாய அனுமதி பெறாமல் இந்த விதிகளின்படி ஸர்க்கார் ஜலத்தை எவ்வளவும் பாய்ச்சிக்கொள்ளக்கூடாது.

12. உயர்ந்த வீதங்கள்.—யாதொரு ஸர்க்கார் ஜலாதாரத்திலிருந்தாவது கட்டுவேலையிலிருந்தாவது யாதொரு நிலத்துக்கு நீர்பாய்ச்சும் காரியங்களுக்காக கிரமந்தப்பி ஜலம் உபயோகித்துக் கொள்ளப்படும்பொழுதெல்லாம், இதுவிஷயமாய் கவர்ன்மென்

டாரால் ஜாரிசெய்யப்பட்டிருக்கிற விதிகளை அனுசரித்து உயர்ந்த தண்ணீர்வரிகளை விதிக்க ஜமாபந்தி உத்தியோகஸ்தருக்கு (கலெக்டர் அல்லது டிவிஷனல் ஆபீஸருக்கு) அதிகாரமுண்டு. தமக்குத் தகுதியாகத் தோற்றும் சுயேச்சையான விசாரணையுடைய யாதொரு தாசில்தாருக்காவது டெப்யுடி தாசில்தாருக்காவது, அந்த தாசில்தார் அல்லது டெப்யுடி தாசில்தாரின் விசாரணையின்கீழுள்ள பிரதேசத்துக்குள் கிரமத்தப்பி நீர்பாய்ச்சப்பட்ட விஷயங்களிலெல்லாம் இந்த விதிகளை அனுசரித்து உயர்ந்த தண்ணீர்வரிகள் விதிக்கும் அதிகாரத்தை எழுத்துமூலமான உத்தரவைக்கொண்டு கொடுக்க கலெக்டருக்கு அதிகாரமுண்டு.

13. **அநுமதியில்லாமல் அணைக்கட்டுகள் கட்டுவதைப்பற்றி ரிபோர்ட் செய்யவேண்டுமென்பது.**—ஜலத்தைக் கட்டிவைக்க அனுமதி கொடுக்கப்படாத அணைக்கட்டுகளின்கீழ் பயிர் செய்வதானால், அது சங்கதியைத் தாசில்தாருடைய உத்தரவுகளுக்காக அவரிடத்தில் ரிபோர்ட் செய்யவேண்டும்.

14. **சில சந்தர்ப்பங்களில் நஞ்சை நிலங்களுக்கு தண்ணீர்வரி விதிக்கப்படாதென்பது.**—ஏரிகளின்கீழ் நஞ்சைத் தீர்வை விதிக்கப்பட்ட நிலத்துக்கு வாலாயமாய்ப் பாய்கிற ஜலம் தவறிப்போவதன்மேல், அனுமதி பெற்றுக்கொண்டு அணைக்கட்டு ஜலம் பாய்ச்சப்பட்டால், அப்படிப்பட்ட நிலத்துக்கு தண்ணீர்வரி எதுவும் விதிக்கக்கூடாது.

15. **லோகல் போர்டார் பரமாக்கப்பட்ட கட்டுவேலைகளிலிருந்து சேஷமாய் வழிந்துபோகிற ஜலத்தைப் பாய்ச்சிக்கொள்வது.**—தனிநபர்களுடைய சொத்தாயிராததாலும் நீர்பாய்ச்சலுக்கு உபயோகப்படாததாலும் லோகல் போர்டார் பரமாக்கப்பட்ட ஏரிகளிலிருந்தும் துரவுகளிலிருந்தும் சேஷமாய் வழிந்துபோகிற ஜலம் பாய்ச்சப்பட்ட நிலங்களுக்கு தண்ணீர்வரி விதித்துவாங்க கவர்ன்மெண்டாருக்கு பாத்தியதையுண்டு.

### 22. இரண்டாம்போகத் தீர்வை.

1. **ஒருபோக நஞ்சைநிலத்தில் பயிரிடப்பட்ட நஞ்சை இரண்டாம்போகத்துக்கு நீர்பாய்ச்சுவதற்காக தீர்வைவிதம்.**—ஸர்க்காருடையதாகவாகிலும், இனாமாகவாகிலும், தஸ்திக் வர்த்தனைகளுக்குப் பாத்தியாகத் தேவஸ்தானங்களுக்கு விடப்பட்டதாகவாகிலுமிருக்கிற ஒருபோக நஞ்சைநிலத்தில், ஸர்க்கார் ஜலத்தின் உதவியைக்கொண்டு, நஞ்சை இரண்டாம்போகம் பயிரிட்டால், புலத்தின் மொத்த விஸ்தீரணத்தை யோசியாமலே, உள்ளபடி சாகுபடிசெய்யப்பட்ட விஸ்தீர்ணத்துக்கு வாலாயமான தீர்வையை—சாதாரணமாய் ஒருபோகத்தீர்வையில் பாதியை—விதிக்கவேண்டும். ஆயினும், நீர்பாய்ச்சலுக்காக நிஷ்கரிஷையான தண்ணீர்வரி ஏற்பட்டிருந்தால், அதை விதிக்கவேண்டும்.

2. **நஞ்சை நிலத்தில் புஞ்சை இரண்டாம்போகம்.**—நஞ்சை நிலத்தில் ஸர்க்கார் ஜலத்தின் உதவியைக்கொண்டு புஞ்சைப்பயிர் விளைவிக்கப்பட்டால், நஞ்சைத்தீர்வை முழுவதும் விதித்துவாங்கவேண

டும்; ஆனால் அப்படி விளைவிக்கப்பட்ட புஞ்சைப்பயிரானது முதல் சாகுபடியை அறுவடைசெய்தபிறகு பயிர்செய்யப்பட்ட இரண்டாம்போகமாக இருக்கிறபட்சத்தில், அதற்கு விதிக்கவேண்டிய தீர்வையானது - புஞ்சை நிலத்தில் விளைவிக்கப்பட்ட அதேமாதிரியான சாகுபடிக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள தீர்வை எவ்வளவோ அவ்வளவாகவே இருக்கவேண்டும்—21-வது பிரிவின் 2-வது பாராவைப் பார்க்க. ஆயினும், அப்படி விதிக்கப்படுகிற தீர்வையானது நிலத்தீர்வையின் பாதியைப்பார்க்கிலும் அதிகமாயிருக்கிறபட்சத்தில், முந்தினதைப் பாதியாகப் பெருக்கினதை விதிக்கலாம். முதல் சாகுபடி அறுவடையானபிறகு நஞ்சைநிலத்தில் ஸர்க்கார் ஜலத்தின் உதவியில்லாமல் விளைவிக்கப்பட்ட புஞ்சைப்பயிர் யாதொரு தீர்வைக்கும் உள்ளாகாது.

3. தோப்புகளுக்கு நீர்ப்பாய்ச்சுவதற்காகத் தீர்வை.—நீர் பாய்ச்சலுள்ள நிலத்தில் தென்னைமரங்களையாவது வேறு மரங்களையாவது வைத்துப் பயிராக்கினால், அந்த நிலத்தை ஒருபோக நிலமென்றாகிலும் இருபோக நிலமென்றாகிலும் எப்படி ரெஜிஸ்டர் செய்திருக்கிறதோ அதை அனுசரித்து, அந்த நிலத்திற்கு ஒருபோகத்தீர்வையோ அல்லது இருபோகத்தீர்வையோ விதித்துவாங்கவேண்டும்; ஆனால், இரண்டுபோகம் நெற்பயிர் செய்வதற்குப் போதுமானபடி ஒரு வருஷத்தில் பல மாதக்காலம் ஜலம் பாய்ச்சிக்கொள்ளப்பட்டால், ஒருபோக நிலமென்று ரெஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கும் நிலத்தில் பயிர் செய்திருந்தாலுங்கூட இருபோகத் தீர்வையை விதிக்கவேண்டும். ஆயினும் இருபோகம் விளைவதென்று ரெஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கிற நிலத்திலுங்கூட இவ்விதமான பயிரைப் புதிதாக வைத்தால், இருபோகம் விளைவிப்பதற்குப் போதுமானபடி வருஷத்தில் பல மாதகாலம் ஸர்க்கார் ஜலாதாரத்திலிருந்து ஜலம் பாய்ச்சிக்கொண்டாலொழிய, ஒருபோகத்தீர்வையையே விதித்துவாங்கவேண்டும்.

4. தோட்டப்பயிர்களுக்கு நீர் பாய்ச்சுவதற்காகத் தீர்வை.—ஒருபோகம் விளையும் நஞ்சை நிலத்தில் வெற்றிலை முதலானது போன்ற தோட்டப்பயிர்களை விளைவித்தால், இருபோகத்தீர்வை விதிக்கவேண்டும்; அதாவது, முதல் போகத்தீர்வையுடன்கூட வாலாயமான இரண்டாம்போகத் தீர்வையும் சேர்த்து விதிக்கவேண்டும்.

5. புலத்தின் ஒரு பாகத்திற்கு இரண்டாம் போகத் தீர்வை.—விஸ்தீரணத்தில் 10 ஸெண்டுகளுக்குக் குறைந்த புலங்களின் பாகங்களுக்கு டிவிஷனல் ஆபீஸராவது ஜமாபந்தி உத்தியோகஸ்தராவது யுக்தாயுக்தப்படி தண்ணீர்வரி விதித்துவாங்கலாமென்று 21-வது பிரிவின் 5-வது பாராவில் ஏற்படுத்தப்பட்டிருக்கிற விதியானது நஞ்சை நிலங்களில் விளைவிக்கப்பட்ட இரண்டாம்போகத்துக்கு விதிக்கக்கூடிய தீர்வைக்குப் பிரயோகப்படும்.

6. நீர் இறைத்துக்கொள்வதற்காகக் கழித்துக்கொடுப்பது.—நீர் இறைத்துக்கொள்வதற்காகத் தீர்வையில் கழித்துக்கொடுக்கும் தொகை வெவ்வேறு ஜில்லாக்களில் வெவ்வேறு மாதிரியாக இருக்கிறது:

இது ஒரு ஏகருக்கு ஒரு ரூபாயாகவாவது இரண்டாம்போகத்தீர்வை அல்லது தண்ணீர்வரியில நாலிலொரு பங்காகவாவது இருக்கிறது. கணக்குகளில இரண்டாம்போகத்தீர்வை அல்லது தண்ணீர்வரியின் முழுத் தொகையையும காட்டுவதுமல்லாமல், இறைத்துக்கொண்டதாகக் கழித்துக்கொடுக்கப்பட்ட தொகையை தண்ணீர் இறைத்துக்கொள்வதற்காக செய்யப்படும நிஷ்கரிஷையான வஜாக்களின்கீழ் பிரத்தியேகமாய்க் காட்டவும்வேண்டும்.

7. **இரண்டாம்போகத்தை இருமுறை அறுவடைசெய்வது.**—ஸர்க்கார் நிலத்தைக்கொண்டு விளைவிக்கப்பட்ட இரண்டாம் போகத்தை இரு முறை, அதாவது ஒரு பஸலியில் ஒருமுறையும் அடுத்த வருஷத்தின் முதலில் இரண்டாவது முறையுமாக, அறுவடைசெய்தால், முதலாவது பஸலிக்குமாத்திரம் இரண்டாம்போகத் தீர்வையை விதிக்க வேண்டும ; அடுத்த பஸலியில் அதற்காக யாதொரு தீர்வையும விதிக்கலாகாது

8. **நாற்றங்கால்களுக்கு நிவாரணை.**—இரண்டாம்போகத்துக்குத்தீர்வை விதிப்பதில நாற்றங்கால்களைக் கணக்கில் சேர்க்கவேகூடாது.

9. **இரண்டாம்போகத்தீர்வைக்காக சலகரணையான ஏற்பாடுசெய்து கொள்வது.**—இரண்டாம்போகத்துத் தீர்வைக்காகச் சலகரணையான ஏற்பாடுசெய்துகொள்ள விரும்புகிற ரயத்துகளைத் தாசில்தாரருக்கு மனுசெய்துகொள்ளும்படி திட்டஞ்செய்யவேண்டும.

10. **நீர்பாய்ச்சப்பட்ட மூன்றாம்போகம் எப்பொழுது தீர்வையினின்றும் நிவாரணையாகுமென்பது.**—முழு பசலிக்கும் இரண்டாமபோகத்தீர்வை விதிக்கப்பட்டிருந்தால், மூன்றும்போகத்துக்கு நீர் பாய்ச்சிக் கொள்வதற்காக எந்த தீர்வையும் விதிக்கலாகாது.

## 23. துரவுகள்

1. **எந்த நிலங்களில் துரவுகள் கட்டிக்கொள்ளலாமென்பது.**—யாதொரு நபர் தன் கைப்பற்று நிலத்திலே எங்கேவேண்டுமோ அங்கே துரவுமுழுகிக்கொள்ளலாம். யாதொரு ஸர்க்கார் தரிசுநிலத்திலாவது புறம்போக்குநிலத்திலாவது ரயத்து - ஒருதுரவு கட்டிக்கொள்ள விரும்பும் விஷயங்களில், அவன் - பிரதமத்தில் அந்த நிவேசனத்துக்கு தர்காஸ்துவிதிகளின்படி ஒரு பட்டாவுக்காக மனு செய்து கொண்டு அதைப பெறவேண்டும்.

2. **ரெவினியு உத்தியோகஸ்தர்களுக்கு நோடிஸ் கொடுக்கவேண்டுமா வென்பது.**—பட்டா நிலத்தில் துரவுகள் முழுகுவதாயிருக்கும்போது, அவை அடியில் 9-வது பாராவிலே சொல்லப்பட்ட விசேஷ வகுப்பைச் சேர்ந்தவையாயிருந்தாலொழிய, கலெக்டருக்கு நோடிஸ் கொடுக்கவேண்டியதில்லை : ஆயினும, கர்ணமானவர் - துரவு கட்டப்பட்ட சங்கதியை A குறிப்பிட்டுள்ள நிலையான ரெஜிஸ்டரிலும் கிராம அடங்கல கணக்கின் ஷரா கலத்திலும் எழுதிவைக்கவேண்டும.

3. **சொந்தத் துரவுகளிலிருந்து புஞ்சைநிலங்களுக்கு நீர் பாய்ச்சுவது.**—தனிநபர்களுக்குச் சொந்தமான நிலத்தில் உள்ளதாகவாகிலும், ஸர்க்காரின் தரிசுநிலத்திலாவது புறம்போக்குநிலத்திலாவது

1884-ம் ௵ ஆகஸ்ட் ௴ 20உக்கு முந்தி கட்டப்பட்டதாகவாகிலு மிருக்கும் சொந்தத் துரவுகளிலிருந்துமாத்திரமே நீர் பாய்ச்சப்பட்ட புஞ்சை நிலங்களுக்கு, ஸர்க்கார் மூகாந்தரமான பாய்ச்சலாதாரத்தி லிருந்து அந்தத் துரவுகள் எவ்வளவு தூரத்துக்குள் இருந்தாலுஞ் சரி, யாதொரு தண்ணீர்வரியும் விதிக்கக்கூடாது.

**4. சொந்தத்துரவுகளிலிருந்து நஞ்சை நிலங்களுக்கு நீர் பாய்ச்சுவது.**— சொந்தத்துரவுகளைக்கொண்டு விளைவிக்கப்பட்ட பயிர்களின் விஷய மாய் விதிக்கத்தக்க தீர்வையானது - அந்த நிலம் ஒருபோக நிலமாக வகுக்கப்பட்டிருக்கிறதா இருபோக நிலமாக வகுக்கப்பட்டிருக் கிறதா அல்லது சலகரணையான ஏற்பாடு செய்துகொள்ளப்பட்ட இருபோக நிலமாக வகுக்கப்பட்டிருக்கிறதாவென்பதை அனுசரித் தும், ரெஜிஸ்டர் செய்யப்பட்ட நீர்பாய்ச்சலாதாரத்துக்கு இர ண்டு பருவகாலங்களில் எதிலாகிலும் ஏதேனும் ஜலம் வரத்துண்டா இல்லையாவென்பதையும் அனுசரித்தும் மாறிகொண்டேயிருக்கும்: செலுத்தத்தக்க கட்டணமானது அடியிற்கண்ட அட்டவணையில் கண்டிருக்கிறது :—

| | முதல் போகம். | இரண்டாம் போகம். | செலுத்தத்தக்க தீர்வை. |
|---|---|---|---|
| (a) ஒருபோக நிலம். | போதுமான ஜலம் பாய்ச்சப்பட்டது. | போதுமான ஜலம் பாய்ச்சப்படாதது. | ஒருபோக நஞ்சைத் தீர்வை. |
| | போதுமான ஜலம் பாய்ச்சப்படாதது. | போதுமான ஜலம் பாய்ச்சப்பட்டது. | ஷை. |
| | ஷை. | போதுமான ஜலம் பாய்ச்சப்படாதது. | ஒருபோக புஞ்சைத் தீர்வை. |
| (b) சாதாரணமான இருபோக நிலம். | போதுமான ஜலம் பாய்ச்சப்படாதது. | போதுமான ஜலம் பாய்ச்சப்படாதது. | ஒருபோக புஞ்சைத் தீர்வை. |
| | போதுமான ஜலம் பாய்ச்சப்பட்டது. | ஷை. | இப்படிப்பட்டதற்குத் தனியாகத் தீர்வை போட்டால், ஒருபோக நஞ்சைத் தீர்வையும், இல்லாவிட்டால், இருபோக மொத்த நஞ்சைத் தீர்வையில் மூன்றிலிரண்டு பங்கும். |
| | போதுமான ஜலம் பாய்ச்சப்படாதது. | போதுமான ஜலம் பாய்ச்சப்பட்டது. | ஷை. |
| (c) சலகரணையான ஏற்பாடு செய்துகொள்ளப்பட்ட இருபோக நிலம். | போதுமான ஜலம் பாய்ச்சப்படாதது. | ஷை. | சலகரணையான ஏற்பாடு செய்துகொள்ளப்பட்ட முழுத்தீர்வையும். |
| | போதுமான ஜலம் பாய்ச்சப்பட்டது. | போதுமான ஜலம் பாய்ச்சப்படாதது. | ஷை. |
| | போதுமான ஜலம் பாய்ச்சப்படாதது. | ஷை. | ஒருபோக புஞ்சைத் தீர்வை. |

**விவரணம்.**—ஸெட்டில்மெண்ட் (பைசல்) ஆன பிரதேசங்களில், புஞ்சைத்தீர்வையென்றால், அந்தந்த மண்ணின் தரத்துக்கும் விதத்துக்கும் தொகுதிக்கும் இவ்வளவென்று நிஷ்கரிஷை செய்யப்பட்ட புஞ்சைத்தீர்வையென்றும், ஸெட்டில்மெண்ட் ஆகாத பிரதேசங்களில், அந்தந்த கிராமத்தின் எல்லாவற்றிலும் உயர்ந்த புஞ்சைத்தீர்வையென்றும் அர்த்தமாகும்.

5. **வஜா பெற்றுக்கொள்ள பாத்தியதைகள்.**—சொந்தத்துரவுகள் இருப்பதாகவாகிலும் அவைகளிலிருந்து ஜலம் பாய்ச்சப்பட்டதாகவாகிலுமுள்ள நஞ்சை நிலங்களின் அனுபோகதாரர்கள், தரிசுக்காகவாவது சாவியான சாகுபடிக்காகவாவது நஞ்சை நிலங்களில் புஞ்சைப்பயிர் சாகுபடி செய்ததற்காகவாவது சாதாரணமான விதிகளின்படி தீர்வை வஜா பெற்றுக்கொள்வதற்குள்ள பாத்தியதைகளுக்கு 1-வது விதியிலுள்ளதெதனாலும் பாதகமுண்டாவதாகக் கொள்ளக்கூடாது.

6. **ஸர்க்கார் அல்லது தசபந்தத்துரவுகள்.**—ஸர்க்கார் அல்லது தசபந்தத்துரவுகளுக்கு, அதாவது ஸர்க்கார் செலவிலே முழுகப்பட்ட அல்லது பழுதுபார்க்கப்பட்ட துரவுகளுக்கு, முந்திய விதிகளிலுள்ளதெதுவும் பிரயோகப்படத்தக்கதாகாது.

7. **சிறிய இனாம் நிலங்களுக்கு சொந்தத்துரவுகளிலிருந்து நீர்பாய்ச்சுவது.**—சிறிய இனாம் நிலங்களுக்கு சொந்தத்துரவுகளிலிருந்து ஜலம் பாய்ச்சப்படுவதற்காக தண்ணீர்வரி விதிக்கத்தக்கதாகாது.

8. **துரவுகள் இருக்கிற ஸர்க்கார் தரிசு நிலத்தை ஒருவகை செய்வது.**—(ஸர்க்கார் அல்லது தசபந்தமல்லாத இனாமான) துரவுகள் ஸர்க்கார் தரிசு நிலத்தில் இருக்கிற விஷயங்களிலே, தன்னுடைய நிலத்துக்குப் பாய்ச்சுவதற்காக அந்தத் துரவின் ஜலத்தை உபயோகப்படுத்தும் யாதொரு நபரின் பட்டாவிலே அந்தத்துரவு இருக்கும் புலத்தைச் சேர்ப்பிக்கும்படியாகவும் அதற்காகத் தீர்வை ஏற்படுத்தும்படியாகவும் கர்ணமானவர் தாசில்தாருக்கு மனுசெய்துகொள்ளவேண்டும். அந்தத் துரவை உபயோகித்துவருகிற நபர் அந்தப் புலத்தை ஏற்றுக்கொள்ள மறுத்தால், அது தாக்கால்ஸ்து விதிகளின்படி ஒருவகை செய்யப்படுவதற்குள்ளாகும். யாதொரு துரவை அநேக நபர்கள் உபயோகித்துவந்தால், அந்தத் துரவிலிருக்கிற புலத்தை அவர்கள் கூட்டாக ஏற்றுக்கொள்ள விரும்பாவிட்டால், கர்ணமானவர் தாசில்தாருடைய உத்தரவுகளுக்காக அந்த விஷயத்தை ரிபோர்ட் செய்யவேண்டும்.

9. **ஜலமிருக்குமென்ற நிச்சயமில்லாத ஏரிகளின் கீழுள்ள ஒருபோக நஞ்சை நிலங்களில் கட்டப்பட்ட துரவுகள்.**—ஜலமிருக்குமென்ற நிச்சயமில்லாத ஏரிகளின் கீழுள்ள ஒருபோக நஞ்சை நிலங்களில் இரண்டாம் போகத்தீர்வை செலுத்தவேண்டிய நிலைமையினின்று நிவாரணையுடன் துரவு முழுகிக்கொள்வதை உற்சாகப்படுத்தும்பொருட்டு, அடியிற்கண்ட விதிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன :—

ஒருபோக நஞ்சையாக ரெஜிஸ்டர் செய்யப்பட்டுள்ள நிலத்தில் ஒரு துரவு முழுகப்பட்டால், ஒருபோக நஞ்சை தீர்வையுடன்கூட எந்தக் கட்டணமும் விதித்துவாங்கப்படாது; ஆனால் (1) எதன்

கீழ் அந்த நிலம் ரெஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கிறதோ அந்த ஏரியின் ஆயக்கட்டின் யாதொரு பாகத்திலே, அந்தத் துரவு கட்டப்பட்டதற்கு அடுத்து முந்திய ஏழு வருஷங்களில் எதிலாவது இரண்டாம்போகம் நஞ்சைப்பயிர் செய்யப்பட்டிருக்கக்கூடாது; (2) அதிகப்படியான கட்டணம் செலுத்தவேண்டியதில்லையென்ற நிவாரணையானது அந்தத் துரவு கட்டிமுடிக்கப்படும் தேதியிலிருந்து செலாவணியாய், அதனால் நீர்பாய்ச்சக்கூடிய விஸ்தீர்ணத்துக்குத்தான் பிரயோகப்படும்; மேலும், (3) அந்தத் துரவு பழுதான நிலைமைக்கு வந்துவிட்டாலுஞ்சரி, இரண்டாம்போகம் சாகுபடி செய்வதற்குப் போதுமான ஜலம் கிடைக்கும்படியாக ஸர்க்கார் செலவிலே அந்த ஏரியில யாதொரு சீர்திருத்தம் செய்யப்பட்டாலுஞ்சரி அதிகப்படியான கட்டணம் செலுத்தவேண்டியதில்லையென்ற ஷை நிவாரணையானது செலாவணியற்றுப்போகும்.

10. துரவுகளைப்பற்றிய விவரங்கள்.—கட்டப்பட்ட துரவுகளின் தன்மை, நிலைமை, அளவு, அவைகளில் சகஜமாயுள்ள ஜலத்தின் ஆழம், அவைகளிலிருந்து நீர் பாயக்கூடிய விஸ்தீர்ணம் என்பது, ஆகிய இவைகளைப்போன்ற விவரங்களை, A குறிப்பிட்ட நிலையான ரெஜிஸ்டரின் ஷ பாகத்தில் கண்டெழுதவேண்டும்.

### 21. வன ஓடைகள்.

1. வன ஓடைகளிலிருந்து நீர்பாய்ச்சிக்கொள்வதற்காக எப்பொழுது கட்டணம் விதிக்கப்படாதென்பது.—அவைகளை விருத்திசெய்வதில் ஸர்க்காருக்கு யாதொரு சம்பந்தமில்லாமலும், ஸர்க்காரால் யாதொரு செலவும் செய்யப்படாமலுமிருக்கிறதோ அப்படிப்பட்ட இயற்கையான நீர் நிலைகளிலிருந்தாவது வன ஓடைகளிலிருந்தாவது பாய்ச்சலின்பொருட்டு உபயோகிக்கப்பட்ட ஜலத்துக்காக இரண்டாம்போகத்தீர்வையாகிலும் தண்ணீர்வரியாகிலும் விதிக்கப்படக்கூடாது; ஆனால் எப்பொழுதும் இப்படிப்பட்ட ஜலத்தை உபயோகத்துக் கொள்வதனால், யாதொரு ஸர்க்கார் மேல்லெக்காக்கள் சர்ப்பார ஆவதற்கு இடையூறு நேரிடவுங்கூடாது அந்தச் சர்ப்பார குறையக்கூடியதாயிருக்கவுங்கூடாது; மேலும், இப்படிப்பட்ட அவாந்தரமான யாதொரு பருவத்திலேயோ, பின்னாலே யாதொரு காலத்தில், அப்படிப்பட்ட சர்ப்பார ஆதாரங்களை விருத்திசெய்யவும் அவைகளின் பிரயோசனத்தைப் பாதுகாப்படி செய்யவும் அவசியமான கட்டுவேலைகளைச் செய்துமுடிப்பதற்கு ஸர்க்காருக்குள்ள பாத்தியதைக்குப் பாதகமுண்டாகவுங்கூடாது.

2. ஜலத்தை உபயோகித்துக்கொள்வதற்காகப் புதிய கட்டுவேலைகளைக் கட்டுவது.—வன ஓடைகளின் ஜலத்தையாகிலும் இயற்கையான நீர்நிலைகளின் ஜலத்தையாகிலும் உபயோகப்படுத்திக்கொள்வதற்காக யாதொரு ஓடையின் அணைக்கட்டு அல்லது புதிய ஊற்றுக்காலைப்போன்ற யாதொரு சாசுவதமான புதிய கட்டுவேலையை யாதொரு தனிநபர் கட்டத்தொடங்குவதற்குமுன், கலெக்டருடைய அனுமதியைப் பெறவேண்டும்.

**3. அனுமதியில்லாமல் கட்டிடம் கட்டுவதைப்பற்றி ரிப்போர்ட் செய்ய வேண்டுமென்பது.**—கலெக்டருடைய அனுமதியில்லாமல் சாசுவதமான யாதொரு கட்டிடத்தைக் கட்டத்தொடங்கினால், அந்த சங்கதியைக் கிராம உத்தியோகஸ்தர்கள் உடனே தாசில்தாருக்கு ரிபோர்ட் செய்யவேண்டும்.

**4. வன ஓடைகளிலிருந்து நீர்பாய்ச்சிக்கொள்வதற்காக எப்பொழுது கட்டணம் விதிக்கத்தக்கதென்பது.**—யாதொரு வன ஓடையின் ஜலத்தையாகிலும் இயற்கையான நீர்நிலையின் ஜலத்தையாகிலும் யாதொரு ஸர்க்கார் நீர்பாய்ச்சல் வேலைக்காக உபயோகித்துக்கொண்டால், அதிலிருந்து பாய்ச்சப்பட்ட ஜலத்துக்கு ஜலத்தீர்வை விதிக்கத்தக்கதாகும்.

25. வஜாக்கள்.

**A பிரிவு.—பருவகாலத்தைப்பற்றிய வஜாக்கள்.**

நஞ்சை நிலங்களுக்கு விதிக்கப்பட்ட தீர்வை விஷயமாயும் நீர் பாய்ச்சப்பட்ட புஞ்சை நிலங்களுக்கு விதிக்கப்பட்ட தண்ணீர்வரி விஷயமாயும் வஜா கொடுப்பதைப்பற்றிய விதிகள் அடியிற்கண்டவைகளாகும்; கிராம உத்தியோகஸ்தர்கள் இந்த விதிகளை அனுசரித்தன்றி மற்றப்படி வஜாவுக்காக சிபாரிசுசெய்யக்கூடாதென்பதை ஜாக்கிரதையாய்க் கவனிக்கவேண்டும். இந்த விதிகளிலும் B பிரிவிலுள்ள விதிகளிலும் கண்டிருக்கும் சகாயங்கள் தயாவிஷயமாய்த்தான் செய்துகொடுக்கப்படுகின்றனவென்றும் அவைகளை கவர்ன்மெண்டார் இஷ்டப்பட்டால் அப்போதைக்கப்போது மாற்றலாமென்றும் ஸ்பஷ்டமாய்த் தெரிந்துகொள்ளவேண்டும்.

**1. வஜா கோருகிறதும்படி கேட்பதாக உத்தேசம் இருப்பதைப்பற்றி நோடிஸ்.**—வஜா பெறவேண்டுமென்று விரும்புகிற ரயத்தானவர் பயிரைப் பார்வையிடுவது சாத்தியமாய் இருக்கும்படி தக்க காலத்தில் அந்த பிர்க்கா ரெவினியு இன்ஸ்பெக்டருக்காவது டெப்யுடி தாசில்தாருக்காவது தாசிலதாருக்காவது டிவிஷனல் ஆபிஸருக்காவது எழுத்துமூலமாய் மனு செய்துகொள்ளவேண்டும். அப்படிப்பட்ட ஒவ்வொரு மனுவையும் ஜில்லா கலெக்டர் அறிக்கைசெய்யும் தேதிக்கு முன் கொடுத்துக்கொள்ளவேண்டும். ரயத்துகள் மனுசெய்துகொள்ளத் தவறி அதனால் நேரிடும் கெடுதிகளுக்கு அவர்களே உத்தரவாதிகளாவார்கள். ஒரே காகிதத்தில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மனுக்கள செய்துகொள்ளபபடுவதற்கு யாதொரு ஆக்ஷேபணையுமில்லை: ஆனால், ஒவ்வொரு மனுதாரரும் எந்த புலங்களுக்காக தாம் வஜாபெற விரும்புகிறாரோ அவைகளைக் குறிப்பிடுவதுமல்லாமல், அந்த மனுவில தமமுடைய கையெழுத்தாவது கைநாட்டாவது போடவும் வேண்டும். பார்வையிடுவதற்குமுன் பயிரானது அறுக்கப்பட்டாவது அப்புறப்படுத்தப்பட்டாவது கால்நடைகளால் மேய்ந்துவிடப்பட்டாவதுளள சகல விஷயங்களிலும் ஜமாபந்தி உத்தியோகஸ்தா இஷ்டப்பட்டால் வஜாகொடுக்க மறுக்கலாமென்று கிராம உத்தியோகஸ்தர்கள் ரயத்துக்களுக்கு எச்சரிக்கை செய்யவேணடும்.

**2. இன்ன விஷயங்களில் பயிர் முழுவதும் சேதமாகிவிட்டதற்காக முழுத்தீர்வையும் வஜாசெய்யலாமென்பது.**—*ஸெட்டில்மெண்ட் இலாகாதாரரால் ஸெட்டில்மெண்ட் செய்யப்பட்டிருக்கிற பிரதேசங்களில், ஜலத்தின் குறைவினாலோ அல்லது மிகுதியினாலோ ஒருபோக பட்டா நஞ்சை நிலம் பயிரிடாமல் விட்டுவைக்கப்பட்டாலும் பயிர் முழுவதும் சேதமாகிவிட்டாலும் அந்த நிலத்தின் முழுத்தீர்வையும் வஜா செய்யப்படும்: ஆனால், இப்படி ஜலம் அதிகப்படுவதற்காவது குறைவுபடுவதற்காவது நிலத்தின் சொந்தக்காரர்களுடைய யாதொரு செய்கையோ அல்லது அஜாக்கிரதையோ காரணமாயிருந்தாலும், ஜலவருவாய்க்கு முகாந்தரமாயிருக்கும் நீர்பாய்ச்சல் கட்டுவேலைக்கு வாலாயமாய்ச் செய்யப்படும் மராமத்துகளை அதுவிஷயத்தில் சம்பந்தப்பட்ட ரயத்துகள் செய்யாமல் அஜாக்கிரதையாயிருந்தது காரணமாயிருந்தாலும் அப்படி வஜாசெய்ய உத்தரவு கொடுக்கப்படமாட்டாது.*

**3. இருபோக நிலங்களுக்கு வஜா—(i) எப்பொழுது கொடுக்கப்படுமென்பது.**—*ரெஜிஸ்டர் செய்யப்பட்ட இருபோக பட்டா நஞ்சை நிலங்களுக்கும் சலகரணையான ஏற்பாடுசெய்துகொள்ளப்பட்ட இருபோக நிலங்களுக்கும், ஜலத்தின் குறைவினாலோ அல்லது மிகுதியினாலோ எந்த பயிரும் விளைவிக்கப்படாவிட்டாலும் விளைவிக்கப்பட்ட சகல பயிர்களும் முழுவதும் சேதமாய்விட்டாலும், 2-வது விதியில் சொல்லப்பட்ட விலக்கான நிபந்தனைக்குட்பட்டு, ஒன்றாய்ச் சேர்க்கப்பட்ட இருபோகத் தீர்வை வஜாசெய்யப்படும்.*

(ii) எவ்வளவு வஜா செய்யப்படுமென்பது.—*ரெஜிஸ்டர் செய்யப்பட்ட இருபோக பட்டா நிலங்களுக்கு, நீர்பாய்ச்சப்பட்ட ஓரே ஒரு பயிர் செய்யப்பட்டிருந்து, 2-வது விதியில் சொல்லியிருக்கும் விலக்கான நிபந்தனைக்குட்பட்டு மற்றொரு பயிர் ஜலத்தின் குறைவினாலோ அல்லது மிகுதியினாலோ விளைவிக்கப்படாமலிருந்தாலும் சேதமாயிருந்தாலும், ஒருபோக நஞ்சைத் தீர்வைமாத்திரமே விதிக்கப்படும். இந்த சகாயமானது சலகரணையான ஏற்பாடு செய்துகொள்ளப்பட்ட இருபோக நிலங்களுக்குப் பிரயோகப்படாது.*

4. முழு புலங்களுக்குமாத்திரமே வஜா கொடுக்கப்படுமென்பது.—*யாதொரு புலம் ஸர்வே முழுவதுமாவது அங்கீகரிக்கப்பட்ட அதன் உட்பிரிவாவது பயிரிடாமல் விட்டுவைக்கப்பட்டாலும், அந்தப் புலத்தின் விஸ்தீர்ண முழுமையிலுமுள்ள பயிர் பரிஷகாரமாய் சேதமாய்விட்டாலும் மாத்திரமே மேலே 2-வது 3-வது பாராக்களில் சொல்லியிருக்கிறபடி வஜா கொடுக்கப்படுமேயல்லாமல், புலங்களின் பாகங்களுக்காக வஜா கொடுக்கப்படமாட்டாது; ஆனால், ஸர்வே புலத்தின் ஒரு பாகம் பயிரிடாமல் விட்டுவைக்கப்பட்டு மிகுதியாயுள்ள பாகத்தில் விளைவிக்கப்பட்ட பயிரானது சேதமாய்விடும் விஷயங்களில், 2-வது விதியில்கண்ட விலக்கான நிபந்தனைக்குட்பட்டு முழு புலத்துக்குமான தீர்வை வஜா செய்யப்படும். நஞ்சைத் தீர்வை விஷயமாய் வஜா பெற்றுக்கொள்ளும்பொருட்டு, புலங்களை*

உட்பிரிவுசெய்ய அனுமதி கொடுக்கப்படும்; ஆனால், புதிய புலமானது விஸ்தீர்ணத்தில் எந்த விஷயத்திலும் ஒரு ஏகரேக்குக் குறையக்கூடாது. ஆயினும், இந்த உட்பிரிவுகள் நிலையாயிருப்பதுடன் அவைகளுக்கு கற்களைக்கொண்டு எல்லைக்குறிப்பு ஏற்படுத்தவேண்டும்; மேலும், உட்பிரிவு செய்வதற்காக மனுசெய்துகொள்ளப்பட்டதற்குமுன் பயிர் ஏற்கனவே சேதமாயிருக்கும் புலங்களின் பாகங்களுக்காக தற்காலத்துக்கு மாத்திரம் வஜா பெற்றுக்கொள்ளும் பொருட்டு மாத்திரமேயல்லாமல், முன்னாடியே இப்படி உட்பிரிவு செய்வதற்காக மனு கொடுத்துக்கொள்ளவேண்டும்.

5. **மொத்த நஷ்டம் இவ்வளவென்று வைக்கப்பது.**—மேலே 2 முதல் 4 வரையிலுள்ள விதிகளில் சொல்லியிருக்கிறபடி, புலமானது பயிரிடாமல விட்டுவைக்கப்பட்டாலும பயிர் முழுவதும் சேதமாய்விட்டாலும்மாத்திரமே வஜா கொடுக்கப்படுகிறது. கலெக்டரானவர் குறித்த யாதொரு விஷயத்தில் மொத்தத்திலே புலத்தில் ஏற்பட்ட நஷ்டத்தை முழுநஷ்டமாகக் கணக்கிடுவது நியாயமாகுமா என்பதை மேற்படி விதிகளின் உட்கருத்துக்களைக் கிரமப்படி அனுசரித்து யுகதப்படி நிச்சயிப்பார்.

6. **ஸெட்டில்மென்ட் செய்யப்படாத பிரதேசங்கள்—(i) இன்ன விஷயங்களில் வஜா கொடுக்கலாமென்பது.**—ஸெட்டில்மென்ட் இல்லாததால் ஸெட்டில்மென்ட் செய்யப்படாத பிரதேசங்களில் நஞ்சை நிலத்தில் முழுநஷ்டத்துக்காக 2-வது விதியில் சொல்லியிருக்கிறபடி முழுதீர்வையும வஜாசெய்யப்படும்; மேலும, அப்படிப்பட்ட பிரதேசங்களில், ஜலத்தின் மிகுதியினாலோ அல்லது குறைவினாலோ நஞ்சை நிலத்தில் பயிர்களில் ஒரு பாகம் சேதமாய்விட்டால், இப்படி ஜலம அதிகப்படுவதற்காவது குறைவுபடுவதற்காவது நிலத்துக்குச் சொநதக்காரரான நபர்களுடைய யாதொரு செய்கையாயினும் அஜாகிரதையாயினும காரணமாயிராதபட்சத்தில, அல்லது ஜலவருவாய்க்கு முகாந்தரமாயிருக்கும் நீர்பாய்ச்சல் கட்டுவேலைக்கு வாலாயமாய்ச் செயயப்படும் மரமத்துகளை அதுவிஷயத்தில சம்பந்தப்பட்ட ரயத்துகள் செய்யாமல அஜாக்கிரதையாயிருந்தது காரணமாயிராதபட்சத்தில் அப்படிப்பட்ட சேதத்துக்காக தீர்வையில் ஒரு பாகம வஜாசெய்யப்படும்.

(ii) **தீர்வையில் ஒரு பாகத்தை வஜாசெய்யும்பொழுது எப்படி கணக்கிடவேண்டுமென்பது.**—இப்படி தீர்வையில் ஒரு பாகத்தை வஜா செய்யுமபொழுது அவரவர்களுக்குத் தனித்தனியே ஏற்பட்ட நஷ்டங்களை மதிப்பிட யாதொரு பிரயத்தனமும் செய்யப்படாது. சாதாரணமாய் பயிர் நன்றாக விளைந்திருக்கும் புலங்களைமாத்திரமல்லாமல் அனுபோகத்திலுள்ளதும் அனுபோகத்திலிராததுமான தரிசு நிலமும நீங்கலாக, எதெதன்கீழ் பயிர்கள சேதமாயவிட்டனவோ அப்படிப்பட்ட நீர்பாய்ச்சல் சம்பந்தமான ஒவ்வொரு கட்டுவேலையின் ஆயக்கட்டும் பிரத்தியேகமாக கவனிக்கப்படும. போதுமான சங்கியைவரையில் சேதப்பட்ட புலங்களின ஸ்திதியைப் பரிசோதித்துப்பார்த்து, சராசரியில் நூற்றுக்கு இவ்வளவு சேதமாயிருக்கிறதென்பதை நிச்சயிக்கவேண்டும்.

(iii) **நூற்றுக்கு இவ்வளவென்று கணக்கிடப்பட்ட சேதத்தை எப்படி பங்கிடவேண்டுமென்பது.**—சேதம் ஏற்பட்டிருக்கிற சகல புலங்களுக்கும் செலுத்தவேண்டிய தீர்வையிலிருந்து (ii) குறிப்பிட்ட பகுதியிலகாட்டியிருக்கிற விதமாய் நூற்றுக்கு இவ்வளவென்று கணக்கிடப்பட்ட தொகையைக் கழிக்கவேண்டும். இந்த விஷயத்தில் ஒரு பிரதேசம் குறைந்தது இவ்வளவு விஸ்தீர்ணமுள்ளதாயிருக்கவேண்டுமென்ற வரையறையில்லை; மேலும், ஒரே கிராமத்துக்காகிலும் ஒரே ஏரியின் கீழிருக்கும் நிலவிஸ்தீரணத்துக்காகிலும் தீர்வை வஜா செய்யவேண்டிய பிரமாணத்தையாவது பந்தியதன பிரமாணத்தை மாத்திரமேயாவது கலெக்டர் சரிப்படுத்தி ஒழுங்காக்குவதற்கு யாதொரு தடையுமிராது. ஒரே கிராமத்தில நீர்பாய்ச்சல் சம்பந்தமான ஜலாதாரங்கள் பிரத்தியேகமாய் இரண்டு அல்லது மூன்று இருந்து, இவைகள் ஒவ்வொன்றின் கீழுமுள்ள பயிர் சிறிதுமட்டில் சேதமாய்விட்டால், ஒவ்வொரு விஷயத்திலும் ஏற்பட்ட சேதத்தின் அளவில் குறிப்பிடத்தக்க வித்தியாசமிருக்கிறபட்சத்தில், நூற்றுக்கு இவ்வளவென்று தனித்தனியே தீர்வை வஜா கொடுப்பதும் சரியானதேயாகும்.

7. **நஞ்சை நிலங்களில் புஞ்சைப் பயிர் விளைவிக்கப்பட்டால் வஜா** — ஸெட்டில்மெண்ட் செய்யப்பட்டிருந்தாலுஞ்சரி, ஸெட்டில்மெண்ட் செய்யப்படாமலிருந்தாலுஞ்சரி, சகல பிரதேசங்களிலும் மற்றப்படி தரிசுநிலமாக இருந்திருக்கவேண்டிய நஞ்சை நிலத்தில் தண்ணீர் குறைவினால் புஞ்சைப் பயிர்களை விளைவித்தால், 2-வது விதியில் கண்டிருக்கும் விலக்காக நிபந்தனைகளுக்குட்பட்டு புஞ்சைத்தீர்வை மாத்திரமே விதிக்கவேண்டும். "புஞ்சைத்தீர்வை" என்றால், ஸெட்டில்மெண்ட் செய்யப்பட்டிருக்கிற பிரதேசங்களிலே, நிலமானது நஞ்சையாக இருந்தால் எந்த வகுப்பையும் மாதிரியையும் சேர்ந்ததாகுமோ அதற்குரிய புஞ்சைத்தீர்வை என்றும், ஸெட்டில்மெண்ட் செய்யப்பட்டிராத பிரதேசங்களிலே, நிலங்கள் இருக்கக்கூடிய கிராமத்துக்கான மிகவும் உயர்ந்த புஞ்சைத்தீர்வை என்றும் அர்த்தமாகும்; கிராமமென்றால் அந்தக் கிராம முழுவதையும் எடுத்துக்கொள்ளவேண்டுமேயல்லாமல் அதைச்சேர்ந்த யாதொரு குப்பத்தைமாத்திரம் எடுத்துக்கொள்ளக்கூடாது: ஆனால் மிகவும் உயர்ந்த புஞ்சைத்தீர்வையானது நஞ்சை நிலத்தின் தீர்வைக்கு அதிகப்படுகிற விஷயங்களில், கலெக்டரானவர் தமக்கு யுக்தமாகத் தோற்றினால், அடுத்த புஞ்சை நிலத்துக்குரிய விகிதத்தையாவது, அதேமாதிரியான புஞ்சை நிலங்களுக்கு ஏற்படுத்தியிருக்கும் விகிதத்தையாவது தற்காலத்துக்குத் தீர்வையாக நிச்சயிக்கலாம். பயிரிடப்பட்ட விஸ்தீரணம் எவ்வளவாயிருந்தபோதிலும் அதைக் கவனியாமலே, முழு ஸர்வே புலங்களுக்குமாவது அவைகளின் அங்கீகரிக்கப்பட்ட உட்பிரிவுகளுக்காவது இந்தப் புஞ்சைத்தீர்வை விதிக்கப்படும். ஒரு ஸர்வே புலத்தின் அல்லது அதன் உட்பிரிவின் யாதொரு பாகத்திலே, புஞ்சைப் பயிர்கள் விளைவிக்கப்பட்டு மற்றொரு பாகத்திலே விளைவிக்கப்பட்ட நஞ்சைப் பயிர் முழுவதும் சேதமாய்விட்டால், இந்த விதியில் உத்தேசிக்கப்பட்ட சகாயமான நிபந்தனை பிரயோகப்படும்.

8. **நஞ்சை நிலத்தில் சில விஷயங்களிலே விளைவிக்கப்படும் புஞ்சைப் பயிருக்கான தீர்வை**—ஒருபோக நஞ்சை நிலத்தில் புஞ்சைப் பயிர் விளைவிக்கப்படும்பட்சத்திலே, அந்த வருஷத்தின் யாதொரு பாகத்தில் நீர்பாய்ச்சல சம்பந்தமான ஜலாதாரத்திலே ஜலம் கிடைக்கக் கூடியதாயிருந்து நஞ்சைப்பயிர் விளைவிப்பதற்கு அதை உபயோகிக்கக்கூடுமாயிருந்தால், சாதாரணமான நஞ்சைத் தீர்வையே விதித்து வாங்கப்படும். ஆயினும், ஜலசர்ப்பராவே இராவிட்டாலும், நஞ்சைப் பயிர் விளைவிப்பதற்காக உபயோகிக்கமுடியாத காலத்திலாவது அப்படி விளைவிப்பதற்குப் போதுமானதாயிராத அளவாகவாவது ஜலம் சாப்பரா செய்யப்பட்டாலும், பயிருக்கு நீர் பாய்ச்சப்படாவிட்டால், புஞ்சைத் தீர்வை மாத்திரமே விதிக்கவேண்டும். புஞ்சைப் பயிருக்கு நீர் பாய்ச்சப்பட்டால், கலெக்டரானவர் தமக்கு யுக்தமாகத் தோற்றினால், புலம் முழுவதுக்கும் பூர்த்தியான நஞ்சைத்தீர்வையையாவது, புலம் முழுவதுக்கும் புஞ்சைத்தீர்வையுடன் வாஸ்தவமாய் நீர் பாய்ச்சப்பட்ட விஸ்தீர்ணத்துக்கு அந்தப் பயிருக்காக நிர்ணயிக்கப்பட்ட தண்ணீர்வரியையாவது விதிக்கலாம்; ஆனால், பிந்திய விஷயத்தில் இரண்டு அம்சங்களும் சேர்ந்த தொகையானது புலம் முழுவதுக்குமான ஒருபோக நஞ்சைத்தீர்வைக்கு அதிகமாயிருக்கக்கூடாது.

குறிப்பு—சில வெவ்வேறு வீதங்களான வாடாஸெஸ் என்னும் தண்ணீர் வரிக்கு உள்ளாகக்கூடிய நீர் பாய்ச்சப்பட்ட புஞ்சை பயிர்கள் ஒன்றுக்கு மேற்பட்டு ஏககாலத்தில் விளைவிக்கப்படுகிறபோது அப்படிப்பட்ட நஞ்சைப் புலத்தின் விஷயத்திலே, மிகவும் அதிக விஸ்தீரணத்தில் செய்யப்பட்டிருக்கும் பயிருக்காக நிர்ணயிக்கப்பட்டுள்ள தண்ணீர் வரி வீதமே நீர்பாய்ச்சப்பட்ட முழு விஸ்தீர்ணத்துக்கும் பிரயோகப்படவேண்டும்.

9. சலகரணையான ஏற்பாடு செய்துகொள்ளப்பட்ட இருபோக நஞ்சைநிலங்களின் விஷயத்திலும், இதரமான ரெஜிஸ்டர் செய்யப்பட்டுள்ள இருபோக நஞ்சை நிலங்களின் விஷயத்திலும் வஜா.—7-வது, 8-வது விதிகளில் உத்தேசிக்கப்பட்ட சகாயமானது சலகரணையான ஏற்பாடு செய்துகொள்ளப்பட்ட இருபோக நஞ்சை நிலங்களுக்கும் இதரமான ரெஜிஸ்டர் செய்யப்பட்ட இருபோக நஞ்சை நிலங்களுக்கும் பிரயோகப்படும்; ஆனால், விளைவிக்கப்பட்ட பயிர்களெல்லாம் புஞ்சையாயிருப்பதுமல்லாமல், நீர்பாய்ச்சல சம்பந்தமான ஜலாதாரத்திலிருந்துவரும் ஜலமானது நஞ்சைப் பயிர் விளைவிக்கப் போதுமானதாக இராமலும் விளைவிக்கப்பட்ட எந்தப் பயிர்களுக்கும் நீர்பாய்ச்சுவதற்காக உபயோகிக்கப்படாமலும் இருந்தால் மாத்திரமே இருபோக நஞ்சை நிலங்களுக்கு புஞ்சைத்தீர்வை விதிக்கலாமென்பதை வியக்தமாய்த் தெரிந்துகொள்ளவேண்டும். ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட பயிர்களுக்கு நீர் பாய்ச்சப்பட்டால், புலம் முழுவதுக்குமான புஞ்சைத்தீர்வையுடன் வாஸ்தவமாய் நீர்பாய்ச்சப்பட்ட விஸ்தீர்ணத்திலுள்ள ஒவ்வொரு பயிருக்காகவும் அததற்குப் பொருத்தமான தண்ணீர்வரியும் விதிக்கத்தக்கதாகும். ஆனால், இரண்டு அம்சங்களும் சேர்ந்த தொகையானது அடியிற்கண்ட உச்சத்தொகைகளுக்கு அதிகமாயிருக்கக்கூடாது:—

(1) சலகரணையான ஏற்பாடு செய்துகொள்ளப்பட்ட இருபோக நிலங்கள் - சலகரணையான ஏற்பாடு செய்துகொள்ளப்பட்ட இருபோக தீர்வை.

(2) இதரமான ரெஜிஸ்டர் செய்யப்பட்ட இருபோக நஞ்சை நிலங்கள் —

(a) ஒரு போகத்துக்கு நீர் பாய்ச்சப்பட்டால் - ஒருபோக நஞ்சைத்தீர்வை.

(b) இரண்டு போகத்துக்கு நீர் பாய்ச்சப்பட்டால் - ஒன்றாய்ச் சேர்க்கப்பட்ட இரு போக நஞ்சைத்தீர்வை.

குறிப்பு.—எந்த வெவ்வேறு வீதங்களான வாட்டர்ரேட்ஸ் என்னும் தண்ணீர்வரிக்கு உள்ளாகக்கூடிய நீர்பாய்ச்சப்பட்ட புஞ்சைப்பயிர்கள் ஒன்றுக்கு மேற்பட்டு வருஷகாலத்தில் விளைவிக்கப்படுகின்றனவோ அப்படிப்பட்ட நஞ்சைப் புலத்தின் விஷயத்திலே, மேலும் அக்காலத்தில் செய்யப்பட்டிருக்கும் பயிருக்காக நிர்ணயிக்கப்பட்டுள்ள தண்ணீர்வரிவீதமே நீர்பாய்ச்சப்பட்ட முழு விஸ்தீரணத்துக்கும் பிரயோகப்படவேண்டும்.

நீர்பாய்ச்சலாதாரத்திலிருந்து வரும் ஜலமானது நஞ்சைப் பயிர் விளைவிக்கப் போதுமானதாயிருந்தால், விளைவிக்கப்பட்ட புஞ்சைப் பயிர்களுக்கு நீர்பாய்ச்சப்பட்டாலுஞ்சரி, நீர்பாய்ச்சப்படாவிட்டாலுஞ்சரி, அடியிற்கண்டபடி நஞ்சைத்தீர்வை விதிக்க வேண்டும் :—

(1) சலகாரணையான ஏற்பாடு செய்துகொள்ளப்பட்ட இருபோக நஞ்சை நிலங்கள் - சலகாரணையான ஏற்பாடு செய்துகொள்ளப்பட்ட இருபோக தீர்வை.

(2) இதரமான ரெஜிஸ்டர் செய்யப்பட்ட இருபோக நஞ்சை நிலங்கள்—

(a) ஒருபோகம் நஞ்சைப் பயிர் விளைவிக்க ஜலம் போதுமானதாயிருந்தால் ஒருபோக நஞ்சைத்தீர்வை.

(b) இருபோகம் நஞ்சைப்பயிர் விளைவிக்க ஜலம் போதுமானதாயிருந்தால்—ஒன்றாய்ச் சேர்க்கப்பட்ட இருபோக நஞ்சைத்தீர்வை.

நீர்பாய்ச்சலாதாரத்திலிருந்து வரும் ஜலமானது பருவகாலங்களில் ஒன்றிலே நஞ்சைப் பயிர் விளைவிக்கப் போதுமானதாயிருந்து, கிடைக்கக்கூடிய ஜலத்தை மற்றொரு பருவகாலத்தில் புஞ்சைப் பயிருக்கு நீர்பாய்ச்சுவதற்காக உபயோகித்துக்கொண்டால், ஒருபோக நஞ்சைத்தீர்வையும் பொருத்தமான தண்ணீர்வரியும் சேர்த்து இரண்டு பயிர்களுக்குமான தீர்வையாகும்.

10. தண்ணீர்வரி வஜா.—ஜலத்தின் குறைவினாலாவது மிகுதியினாலாவது பயிரானது முழுமையும் சேதமடைந்தால் மாத்திரம் புஞ்சை நிலத்திற்கு தண்ணீர்வரி வஜா செய்யப்படும்; ஆனால், அப்படி ஜலம் அதிகப்படுவதற்காவது குறைவுபடுவதற்காவது நிலத்தின் சொந்தக்காரரான நபர்களின் யாதொரு செய்கையோ அல்லது அஜாக்கிரதையோ காரணமாக இருக்கக்கூடாது; இந்த விதியானது ரயத்துவாரி பட்டா நிலங்களுக்குமாத்திரமேயன்றி, யாதொரு ஸர்க்கார் ஜலாதாரத்திலிருந்து நீர் பாய்ச்சப்படும் சாசுவதமாய் ஸெட்டில்மென்ட் செய்யப்பட்ட நிலங்களுக்கும் இனாம் நிலங்களுக்கும் பிரயோகப்படுகிறது. அதே விதியானது ஒருபோக நஞ்சை நிலங்களுக்கான இரண்டாம்போகத் தீர்வைக்குங்கூட பிரயோகப்படுகிறது.

11. **லேஸ் என்னும் வரிகளை வஜா செய்வது.**—நிலத்தீர்வையை வஜா செய்வதனாலேயே லேஸ் என்னும் வரிகளையும் வஜா செய்ய வேண்டுமென்கிற அவசியமில்லை.

12. எந்த நிலங்களின் தீர்வை இனாம்தாரர்களுக்குக் கொண்டு சர்க்காரால் கொடுக்கப்பட்டிருக்கிறதோ அந்த நிலங்களுக்காக இனாம்தாரர்கள் ரயத்துகளுக்கு வஜா செய்து கொடுக்கிற விஷயத்தில் சர்க்காருக்கு யாதொரு சம்பந்தமுமில்லை.

13. **நாற்றங்கால்கள்.**—வஜாக்களைப் பற்றி தாவாக்களைத் தீர்மானஞ்செய்கையிலே, இந்தப்படி சகாயம் செய்து கொடுப்பதனால் உண்டாகும் பிரயோஜனமானது நாற்றங்கால்களுக்குக் கிடைக்காதபடி செய்யக்கூடாது.

14. **மாமூல் தரிசு**—"மாமூல் தரிசு" விஷயமாய் யாதொரு வஜாவும் கொடுக்கப்படமாட்டாது.

**குறிப்பு.**—"மாமூல்தரிசு" என்பது-சகஜமாயுள்ள யாதொரு வருஷத்திலே ஒழுங்காய்ப் பயிர் செய்யப்படாமலிருப்பதும், ருதுவும் ஜல சப்ளையும் சகஜமாயிருந்தாலுங்கூட பயிர்செய்யப்படாமலே விடப்பட்டிருக்குமென்று கொள்ளக்கூடியதுமான அனுபோக நிலமாகும்.

B-பிரிவு—அசாதாரணமான வஜாக்கள்.

அசாதாரணமான அநாவிருஷ்டி அல்லது பஞ்சம் நேரிடும் ருதுக்களிலே, ரெவினியூ உத்தியோகஸ்தர்கள்-ருதுவின் தன்மை இப்படிப்பட்டதென்று தெரிந்தவுடனே, தாங்களாகவே பாகங்களை முற்றிலும் பார்வையிடுவதும் தக்க ஏற்பாடுகள் செய்யவேண்டியதுமல்லாமல் வஜா சம்பந்தமான பிரேரேபணைகளை போர்டாரும் கவர்ன்மென்டாரும் ஆலோசித்து அவைகள் விஷயமாய் உத்தரவுகள் பிறப்பிப்பதற்காக கூடிய சீக்கிரத்திலே அவைகளைத் தயார் செய்து அனுப்பவும் வேண்டும். அப்படிப்பட்ட அசாதாரணமான வஜாக்கள் கொடுப்பதைப்பற்றிய விதிகள் எவையென்றால் :—

1. **நஞ்சை நிலங்களில் ஒருபாகத்தில் நேரும் சேதம்**—(i) அசாதாரணமான அநாவிருஷ்டி அல்லது பஞ்சம் நேரிடும் ருதுக்களில் செட்டில்மென்ட் (பைசல்ஏற்பாடு) செய்யப்பட்டிருக்கும் பிரதேசங்களிலே ஜலம் குறைவாக சப்ளையாயிருக்கும் காரணத்தினாலாவது போதுமான அளவுக்கு மழை பெய்யாத காரணத்தினாலாவது நஞ்சை நிலங்களில் ஒரு பாகத்தில் சேதம் உண்டாகிறபட்சத்திலே, போர்டாரும் கவர்ன்மென்டாரும் தீர்வை வஜா கொடுப்பதற்கு அனுமதி கொடுத்திருந்தால், அந்தப்படியே வஜா கொடுக்கலாம். எந்தப் பிரதேசத்தில் இவ்வகையான வஜா உத்தரவு கொடுக்கப்படுகிறதோ அந்தப் பிரதேசத்தில் தனித்தனி நபர்களுக்கு நேரிடும் நஷ்டங்களை அனுசரித்துக் கணக்கிடாமல் அந்தப் பிரதேச முழுவதிலும் நேரிட்ட சராசரி நஷ்டத்தை அனுசரித்தே கணக்கிட்டு ஒரேமாதிரியான வீதப்படி வஜா கொடுக்கப்படும்.

(ii) "மாமூல் தரிசு."—இந்த விதியைச்சேர்ந்த (i) குறிப்பிட்ட பகுதியின்படி வஜா கொடுப்பதற்காக ப்ரேரேபணைகளைத் தயார்செய்யும்போது, எந்தப் பிரதேசத்துக்காக வஜா கொடுக்கவேண்டுமென்று ப்ரேரேபிக்கப்படுகிறதோ அந்தப் பிரதேசத்திலுள்ள மாமூல் தரிசு நிலத்தையும் சேர்த்துக்கொள்ளலாம், ஆனால், தண்ணீர் இல்லாத காரணமாக அந்த நிலத்தில் எப்படிப்பட்ட விஷயத்திலும் பயிர்செய்ய முடியாமலிருந்திருக்கவேண்டும். மேலும், அந்த நிலத்தின் கைப்பற்றுதாரர்களுக்கு விசேஷ சகாயம் கொடுக்கவேண்டியிருக்கிறதென்று எண்ணுவதற்கான காரணங்களை அப்போதே பூர்த்தியாய் விவரித்துச் சொல்லவும் வேண்டும்.

(iii) ஸெட்டில்மெண்ட் செய்யப்படாத பிரதேசங்களில் தீர்வையில் ஒரு பாகத்தை வஜா செய்வதற்காக A பிரிவைச்சேர்ந்த 6-வது விதியிற்கண்ட (ii), (iii) குறிப்பிட்ட பகுதிகளில் விவரிக்கப்பட்ட முறையை அனுசரித்து சராசரி சேதம் இவ்வளவென்றும் வஜாவீதம் இன்னதென்றும் நிர்ணயிக்கப்படும்.

(iv) சேதம் அதிகமாயிருந்தபோதிலும் ஒரு சிறு ஏரியின் ஆயக்கட்டைப்போல வரையறுக்கப்பட்ட எல்லைகளில் மாத்திரம் சேதம் நேரிட்டிருக்கும் சந்தர்ப்பங்களைப்போல குறித்த ஒரு பிரதேசத்திலே ஒரேமாதிரியான வீதத்தை நிர்ணயிப்பது சாத்தியமாயிராவிட்டால், எங்கும் ஒரேமாதிரியாய் நூற்றுக்கு இவ்வளவென்னும் வீதப்படி வஜா செய்யும்படியாய் சிபாரிசு செய்வதற்குப் பதிலாக, அயக்காரமாயிருக்கும் புலங்களின் எந்தப் பாகங்களில் பயிர் முற்றிலும் சேதமாய்ப்போயிருக்கிறதோ அந்த பாகங்களில் வஜா செய்யும்படியாய், பிரத்தியேகமாக உத்தரவு வேண்டுமென்று சிபாரிசு செய்யலாம்; ஆனால், அப்படிப்பட்ட ஒவ்வொரு பாகமும் விஸ்தீரணத்தில் ஒரு ஏகராவுக்குக் குறைவாயிருக்கவுங்கூடாது; மேலும், எந்தப் புலங்களின் விஷயமாய் வஜா கொடுக்கவேண்டுமென்று விண்ணப்பம் செய்துகொள்ளப்படுகிறதோ அந்தப் புலங்கள் கிரமமாய்ப் பார்வையிடப்பட்டிருக்கிறதென்றும், அவைகளில் உண்டான சேதம் இவ்வளவென்று கிரமமாய்ப் பரிசோதிக்கப்பட்டிருக்கிறதென்றும் ஒவ்வொரு விஷயத்திலும் ஜமாபந்தி உத்தியோகஸ்தர் தெரிந்து திருப்தி அடையக்கூடியவராயிருக்கும்படியாக ஏற்பாடுகள் செய்வது சாத்தியமாய் இருக்கவும் வேண்டும்.

2. புஞ்சைத்தீர்வை வஜா கொடுப்பது.—(1) முன்னபடிக்கானால் வஜா கொடுக்கப்படுமென்பது—மிகவும் அசாதாரணமான சந்தர்ப்பங்களிலே, புஞ்சை நிலத்துக்கு விதிக்கப்பட்டிருக்கும் தீர்வை விஷயத்தில் தயை காட்டவேண்டுமென்று சிபாரிசு செய்வதற்குப் போதுமான காரணமிருப்பதாக கலெக்டர்களுக்குத் தோற்றினும், போர்டாரும் கவர்ன்மெண்டாரும் அதற்கு அனுமதிகொடுத்திருக்கிற பட்சத்திலே தீர்வை வஜா கொடுக்கலாம், ஆனால், தனித்தனி நபர்களுக்கு நேரிடும் நஷ்டங்களை அனுசரித்துக் கணக்கிடாமல், தீர்வை வஜா செய்யப்பெறுகிற பூப்பிரதேசத்திலும் நேரிட்ட சராசரி நஷ்டத்தை அனுசரித்து கணக்கிடப்பட்ட ஒரே மாதிரியான வீதங்களின்படியே வஜா செய்யவேண்டும்.

(ii) **இவ்வளவு வரையில் வஜா செய்யப்படுமென்பது.**—*எந்த பிரதேசங்களின் சராசரி மாசூலானது சாதாரணமாயக் கிடைக்கும மாசூலில் அரைப்பங்காகவாகிலும் அதற்கு அதிகமாகவாகிலும இருக்கிறதோ அப்படிப்பட்ட பிரதேசங்களின விஷயத்தில் வஜா கொடுக்கப்படமாட்டாது. அது அரைப்பங்கைக் காட்டிலும குறைவாயிருந்தால், போர்டாருக்கு யுக்தமாய்த் தோற்றுகிறபட்சத்திலே, அடியிற்கண்ட விதங்களினபடி சாதாரணமாய் வஜா கொடுக்கப்படும் :—*

| | |
|---|---|
| மாசூலானது சராசரி மாசூலில மூனறி லொருபங்குககு மேற்பட்டும் அரைப் பங்குக்குக குறைவாயுமிருந்தால் | நூறறுக்கு 25 வீதம முதல் 50 வீதம வரையில். |
| அது ஆறிலொருபங்குக்கு மேறபட்டும மூன்றிலொருபங்குககுக குறைவாயு மிருந்தால் . ... ... ... | நூற்றுக்கு 50 வீதம முதல 75 வீதம வரையில். |
| அது ஆறிலொருபஙகாகவாவது அதற குக் குறைவாகவாவது இருந்தால். | நூற்றுக்கு 75 வீதம முதல 100 வீதம வரையில். |

*பஞசத்தினால பீடிககப்பட்ட யாதொரு பிரதேசத்தில் கிடைத்த சராசரி மாசூல இவவளவென்று கணககிடுகையிலே, பாதுகாககப்பட்டுள்ள சகல நிலஙகளிலும, எனவே கிணறுகள் குளவுகள் முதலியவைகளால நீர்ப்பாயச்சப்பெறும் நிலங்களிலும, கிடைத்த மாசூலையும் (ஈச்சமரம பனைமரம முதலிய மரஙகளடங்கிய) சாசுவதமான தோப்புகள்வைத்திருககும சகல நிலங்களையும, "மாமூல் தரிசு" நிலங்களையும் நீககிவிடவேண்டும ; ஆனால, செம்மையாய் விளைந்திருக்கக்கூடிய புலங்களில உண்டான மாசூலையும, மழை பெய்யாத காரணத்தினால் பயிர் செயயப்படாமலே விடப்பட்டிருக்கும் நிலத்தையும் சேர்த்துக்கொள்ளவேண்டும்*

(iii) **தரிசாய் விடப்பட்டிருக்கும் நிலத்துக்கு வஜா கொடுப்பது.**—*மேலே 1-வது பாராவைசசேர்நத (ii) குறிப்பிட்ட பகுதிகளுட்பட்டு, "மாமூல் தரிசு" நிலவிஷயமாக வஜா கொடுக்கப்படமாட்டாது. ஷெ பிரதேசத்துக்குள் அனுபோகத்திலுள்ள இதர தரிசு நிலத்தின் விஷயத்திலே, பயிர் சாவியாய்ப்போயிருக்கிற நிலத்துக்குக் கொடுக்கப்படும் வஜாவிதப்படி வஜா கொடுக்கப்படும்.*

**குறிப்பு.**—*"மாமூல் தரிசு" என்பது சகஜமாயுள்ள யாதொருவருஷத்திலே ஒழுங்காயப் பயிர் செய்யப்படாமலிருப்பதும், சகஜமாயுள்ள ருதுவாயிருந்தாலுங்கூட, பயிர் செயயாமலே விடப்பட்டிருககுமென்று கொள்ளக்கூடியதுமான அனுபோக நிலமாகும்.*

3. **அனுமதியின்றி பயிர் செய்யப்படும் நிலங்களும் இனாம் நிலங்களும்.**—*சாதாரண ரயத்வாரி நிலங்களுக்குச் செயதுகொடுக்கப்படும் எவையேனும் சகாயங்களை, அனுமதியின்றிப் பயிர் செய்யப்படும் நிலங்களுக்கும், முழுத்தீர்வை விதிக்கப்பட்டுள்ள அல்லது முழுத்தீர்வைக்குச் சமமாகவாவது அதற்கு அதிகமாகவாவது இருக்கும் க்விட்ரெண்ட் அல்லது ஜோடி விதிக்கப்பட்டுள்ள இனாம் நிலங்களு*

க்கும். போராட்ருடைய அனுமதியை முன்னதாகப் பெற்றுக்கொண்டு, செய்துகொடுக்கலாம்; ஆனால், மேலேகண்டபடி அனுமதியின்றி பயிர் செய்திருப்பதைக்குறித்து வேறே விதமாய் ஆட்சேபனைக்கு இடமில்லையென்று கலெக்டர் தெரிந்து திருப்தியடையவேண்டும்.

செஸ்ஸுகளை வஜாசெய்வது—நிலத்தீர்வையை வஜாசெய்வதனாலேயே செஸ் என்னும் வரிகளையும் வஜாசெய்யவேண்டுமென்பதில்லை.

26 ஜமாபந்தி.

1. ஜமாபந்தி அல்லது வருஷாந்தர செட்டில்மென்ட்வேலையில தாமசங்கள் உண்டாகாதபடி தடுக்கவேண்டுமென்னும் நோக்கத்துடனே, கர்ணங்களானவர்கள்-ஜமாபந்திகாலத்தில் செட்டில்மென்ட் செய்யும் உத்தியோகஸ்தர்களுடைய உத்தரவுகளை அனுசரித்த பதிவுகளுக்கெல்லாம் காலியாக இடங்களை விட்டுவைத்து, தங்கள் கணக்குகளை நாளதுதேதிவரையில எழுதிவைத்திருக்கவேண்டும். முன் வருஷத்து ஜமாபந்தியிலே தங்கள் கணக்குகளில காணப்பட்ட பிழைகளும் விடுபட்டுபோன அம்சங்களும் மறுபடியும் நேரிடாதபடி அவர்கள் முக்கியமாய்க் கருத்தெடுத்துக்கொண்டு பார்க்கவேண்டும். மற்றக் கணக்குகளெல்லாவற்றிற்கும் ஆதாரமாயிருக்கும் 2-ம் நெ. அடங்கல் கணக்கை, சாகுபடிகாலத்தின் கடைசிவரையில் வைத்திராமல் பஸலியின் ஆரம்பத்திலேயே தயாரசெய்யவேண்டும். சாகுபடி நடந்துகொண்டிருக்கும்போதே அதை, பிரதிமாதமும் 25உயில ரெவினியு இன்ஸ்பெகடருக்குக் கிரமமாக அனுப்பவேண்டிய 1-ம் நெ. மாதாந்த சாகுபடி கணக்கிலும், அடங்கலிலும் பதிந்து வைக்கவேண்டும்; ராஜிநாமாகொடுத்துவிடப்பட்ட விஷயங்கள், ட்ரான்ஸ்பர்கள், தர்க்காஸ்துகள் ஆகிய இவைகளைக்குறித்து அப்போதைக்கப்போது தாலூகாவுக்கு ரிபோர்ட் பண்ணவேண்டும்; அப்படி பண்ணுவதனால், கர்ணங்கள் தங்கள் கணக்குகளில அப்போதைக்கப்போது எல்லா மாறுதல்களையும் குறித்துவைக்கச் சாதகமாகும்படியாகத் தாலூகா உத்தியோகஸ்தர்கள் தக்க காலத்தில் உத்தரவுகள் ஜாரி செய்யலாம்.

2. பெய்கிறமழையின் அளவையும் பிரதிஜலாதாரத்தில வந்துசேரும் ஜலவருமானத்தையும் காண்பிக்கும் ரெஜிஸ்டரை (20-ம் நெ. கணக்கு) அதுபோலவே திருத்தமாகத் தயாரசெய்து நாளது தேதிவரையில் எழுதிச் சாகுபடிகணக்குகளுடனே ரெவினியு இன்ஸ்பெக்டருக்குக் கிரமமாக அனுப்பவேண்டும்; பயிரிடாமல் விடப்பட்ட நிலங்களையாவது சேதப்பட்ட பயிர்களையாவது தக்க காலத்தில் பரிசோதனைசெய்வதற்குச் சாதகமாயிருக்கும்படி, ஜலவருமானக்குறைவினாலோ அல்லது அதிகத்தினாலோ உண்டாகிற தீர்வை வஜாவைப்பற்றிய பாத்தியதைகளை உடனுக்குடனே ரெவினியு இன்ஸ்பெக்டர்களுக்கு ரிபோர்ட் பண்ணவேண்டும். அனுமதியில்லாமல் அனுபவிக்கப்பட்ட விஷயங்களையெல்லாம் தர்க்காஸ்து

த்துக்கொண்டிருக்கவும் வேண்டும், இந்தத்திற்காகிலும் மாறுதலுக்காகிலும் உத்தரவு கொடுக்கப்பட்ட கிராமஷட்டின் நம்பரையும் தேதியையும் அதில் குறிப்பிட்டுவைத்திருக்கவேண்டும்.

### 27. கிராமநத்தம்.

1. கிராமநத்தம் அல்லது வீட்டுமனைப்பட்டை என்பது புறம்போக்கு நிலம், அதாவது, குறிக்கப்பட்ட யாதொரு பொதுவான விஷயத்திற்காக ஏற்படுத்திவைக்கப்பட்ட நிலமென்பதையும், அதை வேறே காரியத்திற்காக உபயோகப்படுத்துவது - அவ்வாறு ஏற்பாடுசெய்து வைத்த நோக்கத்துக்கு விரோதமாயிருப்பதுமன்றி உத்தரவுகளுக்கும் விதிகளுக்கும் முரணாயிருக்கிறதென்பதையும் கிராம உத்தியோகஸ்தர்கள் மனதில் வைக்கவேண்டும்.

2. கிராமநத்தத்தை அனுமதிபெற்றுக்கொள்ளாமல் சொந்த உபயோகத்திற்காகக்கொள்ளக்கூடாது. அப்படி செய்துகொண்டால் அப்படிப்பட்ட அனுபோகத்தைக் குறித்து, நான்காவது விதிகளின் கீழ் குறிப்பிடப்பட்டிருக்கும் XXI-ம் அனுபந்தத்திற்கண்ட B நமூனாவின்படி ரிபோர்ட்பண்ணவேண்டியது கிராம உத்தியோகஸ்தர்களுடைய கடமையாகும்.

### A பிரிவு.—கிராமாந்தரப் பிரதேசங்கள்

3. பொதுவான உபயோகத்திற்காக வேண்டிய சமுதாய நிலமாயிராமல், கவர்ன்மெண்டார் வசத்திலிருக்கும் கிராமநத்தத்தின் பாகங்கள்-கலெக்டர்களால் நிஷ்கர்ஷை செய்யப்படும் ஸ்கேலை அனுசரித்து, வாஸ்தவத்தில் கட்டிடம் கட்டிக்கொள்ளவேண்டுமென்று விண்ணப்பம் செய்துகொள்ளுகிறவர்களுக்கு அந்தக் காரியங்களுக்காகத் தாசில்தார்களாலும் டிப்டி தாசில்தார்களாலும் கொடுக்கப்படும்.

4. வீடு கட்டிக்கொள்வதற்கான மனைகளுக்காகச் செய்துகொள்ளப்படும் விண்ணப்பங்களை முதலில் கிராம உத்தியோகஸ்தர்களிடத்திலாவது நேரில் தாசில்தார் அல்லது டிப்டி தாசில்தாரிடத்திலாவது கொடுத்துக்கொள்ளலாம். வேண்டியிருக்கும் நிலம் இன்னதென்றும், இன்ன காரியத்துக்காக அது வேண்டியிருக்கிறதென்றும், அதாவது கூரைபோட்ட, ஓடுபோட்டின அல்லது மேலதளம்போட்ட கட்டிடம் கட்டுவதற்காகவா, தேவாராதனை செய்வதற்கான இடத்தைக் கட்டுவதற்காகவா, யாதொரு பள்ளிக்கூடம் கட்டுவதற்காகவா அல்லது கால்நடைக்கொட்டில் முதலியவை ஏற்படுத்துவதற்காகவா அது வேண்டியிருக்கிறதென்றும் அந்த விண்ணப்பங்களில் ஸ்பஷ்டமாய்க் குறிப்பிடவேண்டும். கிராம உத்தியோகஸ்தர்கள் நேராகவாகிலும் தாசில்தார் அல்லது டிப்டி தாசில்தார் மூலமாகவாகிலும் விண்ணப்பங்களை பெற்றுக்கொண்டால், XXX-வது அனுபந்தத்தில் நிர்ணயிக்கப்பட்ட ரிஜிஸ்டரில் அவைகளை உடனே பதிவுசெய்யவேண்டும்; இந்த ரிஜிஸ்டரை கோர்த்துத் தைத்திருக்கும் ஒரு புஸ்தகமாக வைத்திருக்கவேண்டும்; இ

தப் புஸ்தகத்தின் பக்கங்களுக்குத் தொடர்ச்சியாய் இலக்கமிட்டிருக்கவேண்டும்; பிறகு, விண்ணப்பம் செய்திருக்கும் சங்கதியைக் கிராமத்தில் தண்டோரா மூலமாய்ப் பிரசித்தஞ்செய்யவேண்டும்; மேலும், அதைக்குறித்த XXXI-வது அநுபந்தத்தில் நிர்ணயிக்கப்பட்ட நமூனாப்படி, ஒரு நோடிஸை கிராமச்சாவடியிலும் வேண்டுமென்று விண்ணப்பம் செய்துகொண்டிருக்கும் மனையின்மேலும் பதினைந்துநாள்வரையில் ஒட்டிவைக்கவேண்டும். கிராமமானது 1884-ம் வருஷத்து சென்னபட்டணம் 5-வது ஆக்டின்படி ஏற்படுத்தப்பட்ட யூனியனிலிருக்கிறபட்சத்திலே, அந்த நோடிஸின் நகலொன்றை யூனியன் பஞ்சாயத்துக்கு அனுப்பவும் வேண்டும். இந்தக் கால அளவின் முடிவிலே, ஷை நோடிஸ் சகிதமாக ஒரு ரிபோர்ட் இரட்டைப் பிரதியாக ஆலஸ்யமின்றி தாசில்தாருக்கு அனுப்பப்படவேண்டும். இதில கர்ணமும் கிராமப் பெரியதனக்காரரும் கையெழுத்து செய்திருக்கவேண்டும்.

5. வீட்டுமனைகளைக் கொடுக்கக் கிராம உத்தியோகஸ்தர்களுக்கு அதிகாரமில்லை. ஆயினும், யாதொரு நபருக்கு வீட்டுமனை வேண்டியிருக்கிறபட்சத்திலே, அந்த மனையைத் தெரிந்தெடுக்கும் விஷயத்திலமாத்திரமல்லாமல் எந்த விதமாய் கிரமாசாரமாக விண்ணப்பம் செய்துகொள்ளவேண்டுமோ அதைப்பற்றி அவருக்குத் தெரிவிக்கும் விஷயத்திலுங்கூட, அவருக்கு வேண்டிய உதவியெல்லாம் செய்துகொடுப்பது கிராம உத்தியோகஸ்தர்களுடைய கடமையாகும்; மேலும், கிடைக்கக்கூடிய மனையொன்று தெரிந்தெடுக்கப்பட்ட பிறகு, கிரமாசாரமாய் செய்துகொள்ளவேண்டிய விண்ணப்பத்தை ஆலசியமின்றி செய்துகொள்ளும்படி செய்வதற்குக் கர்ணம் உத்தரவாதியாகக் கொள்ளப்படுவார். விண்ணப்பதாரர் ஏழையாயிருந்து அல்லது எழுதப்படிக்கத் தெரியாதவராயிருந்து, அவர் கிராம உத்தியோகஸ்தர்களிடத்தில் வாய்மொழியாக விண்ணப்பம் செய்துகொண்டால், அதைக் கர்ணம் உடனே எழுதிவைக்கவேண்டும்; அதன்பேரில் நடத்தவேண்டிய நடவடிக்கையைப் பிறபாடு நடத்தவேண்டும்.

6. புறக்கடைத் தோட்டங்களாகாத நத்தத்தைச் சாகுபடி செய்வது துர்விநியோகமென்பதற்குச் சந்தேகமில்லையாகையால், அதற்கு அனுமதிகொடுக்கக்கூடாது. நத்தத்தில சாகுபடி செய்தால், மேலே குறிப்பிடப்பட்ட B நமூனாவின்படி பெருத்த அபராதத்தை விதிக்கும்படியாக சிபாரிசு பண்ணவேண்டும். புறக்கடையில ஒப்புக்கொள்ளப்பட்ட அத்துகளுக்குள்ளாக காய்கறி, புகையிலை முதலானவைகளைப் பயிர் செய்யும் வழக்கத்துக்கு இடையூறுசெய்யக்கூடாது.

7. கிராமநத்தமானது அதிக விஸ்தீரணமுடையதாகவும், தற்கால பிற்கால ஆவசியகங்களுக்கு வேண்டிய அளவுக்கு மிகவும் அதிகமாகவும் இருக்கிற கிராமங்களிலே, இப்படிப்பட்ட அதிகமான பாகங்களைச் சாகுபடி செய்வதற்காக பட்டாவின்மேல் கொடுக்கலாமென்று கிராம உத்தியோகஸ்தர்கள் தாசில்தாருக்கு சிபாரிசு செய்யலாம்.

8. குடியிருக்கிற கிராமவாசிகளுடைய ஆவசியகங்களுக்காவது, கிராமத்தில் குடிவரப்போகிற பட்டாதாரர்கள், விவசாய உழைப்பாளிகள், கிராம ஊழியக்காரர்கள் ஆகிய இவர்களுடைய ஆவசியகங்களுக்காவது ஏற்றபடி பேவாரிசான கிராமநத்தம் கிடைக்காத பட்சத்திலே, தீர்வையில்லாத நிலங்களைக் கிராமநத்தங்களுடனே சேர்த்துக்கொள்ள உத்தரவு கொடுக்கப்படும்.

## B பிரிவு.—பட்டணங்கள்.

9. கலெக்டரால் "பட்டணங்கள்" என்று பிரசுரிக்கப்பட்ட கிராமங்களிலே, கவர்ன்மென்டார் வசத்திலிருக்கும் கட்டிடமனைகள் மனைத்தீர்வைக்குட்பட்டு ஏலத்தில் விற்கப்படும்.

10. மேலே 4-வது பாராவில் கண்ட கம்பனைகள் - (1) விண்ணப்பத்தைக் குறித்த நோட்டீஸைப் பிரசுரிக்கவேண்டிய அவசியமில்லையென்னும் திருத்தசகிதமாகவும், (2) XXX-ம் அனுபந்தத்தில் நிர்ணயிக்கப்பட்ட நமூனைப் படிக்குள்ள ரிபோர்ட்டை, 14-வது 16-வது கலங்களில் ஒன்றும் எழுதாமல் விட்டுவிட்டு, விண்ணப்பம் வரப்பெற்றுக்கொண்ட பிறகு கூடிய சீக்கிரத்திலே அனுப்பிவிடவேண்டுமென்னும் திருத்தசகிதமாகவும் பட்டணங்களுக்குப் பிரயோகப்படுகின்றன.

11. போது.—ஒரு பட்டணத்திலாவது கிராமத்திலாவது வீடுகட்டிக்கொள்ளுவதற்கான மனைகளைக் கொடுப்பதைக்குறித்த ஷரத்துகள் நிறைவேற்றப்படாவிட்டால், கிராம உத்தியோகஸ்தர்கள் அந்தப்படி கொடுத்திருப்பதை ரத்துசெய்விக்கும் நோக்கத்துடன், அதைப்பற்றி தாசில்தாரர் அல்லது டெபுடி தாசில்தாரருக்கு ரிபோர்ட் செய்யவேண்டும்.

## 28. ஸர்க்கார் கட்டுவேலைகள்.

1. எல்லா ஸர்க்கார் கட்டடங்களையும் நீர்ப்பாய்ச்சலுக்குரிய கட்டுவேலைகளுட்பட இதரமான கட்டடங்களையும் கிராம உத்தியோகஸ்தர்கள் பத்திரமாய்ப் பார்த்துக்கொள்ளவேண்டிய பொறுப்புடையவராவார்கள். இந்தக்கட்டடங்களுக்கு மராமத்து செய்யவேண்டியதாயிருக்கிற விஷயங்களையெல்லாம் அவர்கள் தாசில்தாரருக்கு ரிபோர்ட்பண்ணவேண்டும். யாதொரு ரெயில்வேமார்க்கத்திலுள்ள ஸர்க்கார் நீர்ப்பாய்ச்சல் கட்டுவேலைகளாவது தனி நபர்களின் நீர்ப்பாய்ச்சல் கட்டுவேலைகளாவது, ரெயில்வே மண்மேட்டுக்கு அபாயம் விளைக்கக்கூடியதாய மராமத்து செய்யவேண்டியவைகளாயிருக்குமாகில், அது சங்கதியை உடனே தாசில்தாரருக்கு ரிபோர்ட் பண்ணவேண்டும்.

2. நீர்ப்பாய்ச்சலுக்குரிய கட்டுவேலைகளுக்கும் ரோட்டுகளுக்கும் (ரஸ்தாக்களுக்கும்) வாராவதிகளுக்கும் பழுதுவராமல் பாதுகாப்பதும், மழைகாலத்திலாவது வெள்ளம்வரும்போதாவது அணைக் கட்டுபோடுவதும், மற்ற மேலான ஸர்க்கார் உத்தியோகஸ்தர்கள் இல்லாத காலத்தில் அபாயம் வரவொட்டாமல் தடுப்பதற்காகவும், அவசியமாயிருந்தால் துன்பத்தைப் பரிகரிப்பதற்காகவும் அவசிய

மான காரியங்களை அனுசரிப்பதும், கிராம உத்தியோகஸ்தர்களுடைய கடமையாகும்.

3. அவர்கள் பப்ளிக் வொர்க்ஸ் இலாக்காதாரருக்குச் சர்ப்பராக்களைச் சவதரிக்கவும், வேலையாள்களைச் சவதரிப்பது முதலியவைகளுக்காகவும் நியாயமான எல்லா உதவியையும் செய்யவேண்டும்.

4. நீர்ப்பாய்ச்சலுக்குரிய கட்டுவேலைகளின் மூடிகள் முதலானவைகளைப் பாதுகாப்பதற்காக வெவ்வேறு சிப்பந்திகள் இல்லாவிட்டால், அவர்கள் அவைகளை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்ள வேண்டும்.

5. அவர்கள் தங்கள் ஜில்லாவின் கலெக்டரால் விசாரித்தறிந்து நிஷ்கரிஷைசெய்யப்பட்டபடி, அவ்வவ்விடத்தில் வழக்கமாய் ஏற்பட்டிருக்கிற நீர்ப்பாய்ச்சல் கட்டுவேலைகளைப் பாதுகாப்பது மராமத்துசெய்வது என்னும் சில்லறைவேலைகளைச் செய்வதைக் கட்டாயப்படுத்தவேண்டும். ஆயினும், பின்வருவனவை, இந்த வேலைகளில் மிகச்சாதாரணமானவையென்று குறிக்கப்பட்டிருக்கின்றன :—

(i) கால்வாய்களின் கரைகளின்மேலும் ஏரிகளின் கரைகளின் மேலும் மழையினால் அறுப்பட்டு உண்டாயிருக்கும் சிறுகால்களையாவது, ஆடு மாடு முதலிய கால்நடைகள் மிதிப்பது முதலியகாரணத்தினாலுண்டாகிற பள்ளங்களையாவது தூர்ப்பது.

(ii) கரைகளின்மேல் நாகதாளியாகிலும் அதுபோன்ற வேறு மற்ற விஷப்பூண்டாகிலும் வளரவொட்டாமல் தடுப்பது.

(iii) ஏரிகளின் கரைகளுக்கு ஊனமானவையென்று அந்த வேலையின் விசாரணைக்குரிய எஞ்சினியரால் எண்ணப்படக்கூடிய கிழச்செடிகளைக் கரைகளினின்றும் நீக்கிவிடுவது.

(iv) புலங்களுக்கு ஜலம் பாய்வதற்குப் போதுமான அளவாய் இருக்கும்படியாக ஏரி மதகுகளினின்றும் ஆற்றுக்கால்களினின்றும் ஊற்றுக்கால்களினின்றும் வண்டலை எடுத்துவிடுவது.

(v) சிறு கால்வாய்களையும் கிளைக்கால்வாய்களையும் சேர்த்த மண்கட்டடங்களைப் பரிஷ்கரிப்பதும் மராமத்துசெய்வதும்; ஏரிகளிலிருந்து வருகிற கால்வாய்களிலெல்லாம் புலங்களுக்கு ஜலம் பாய்வதைத் தடைசெய்கிற வண்டல்களை எடுத்துவிடுவதும்.

(vi) அவ்வவ்விடத்தில் வழக்கத்தின்படி எவ்வளவுசெய்யக்கூடுமோ அவ்வளவாக, ஏரிகளின் வாய்க்கால்களை ஒழுங்காக வைத்திருப்பது.

(vii) மழைக்காலத்தில் எல்லா ஏரிகளின் கரைகளையும் ஜாக்கிரதையாய்ப் பார்த்துவருவதும், அலைகளால் மோதப்பட்டு ஒழுக்குடையனவாய்க் காணப்படும் பாகங்களுக்குக் கழுப்பறைகள் அடிப்பதும்; கலிங்கல்களைத் திறப்பதும் அடைப்பதும், [illegible], கரை உடைத்துக்கொள்ளாமலும் வேறு ஆபத்துகள் நேரிடாமலும் இருக்கத்தக்க இவ்விதமான சில்லறைவேலைகளைச் செய்வதும்.

(viii) கரை உடைத்துக்கொள்ளுகிற இடங்களில் விருத்தாகாரமான அணைக்கட்டுகளைப்போடுவதும், சாகுபடிகாலத்தில் அவசியமான இடங்களிலே ஏரிகளின் கரைகளைத் தற்காலத்துக்குப் பலப்படுத்துவதும்; பொதுவாக, அவ்வவ்விடத்திலுள்ள குடிகளே செலுத்தக்கூடிய இடைவிடாத ஜாக்கிரதையாலும் கவனத்தாலும், அவர்களுக்கும் சர்க்காருக்கும் பொதுவில் பொறுப்புள்ள நீர்ப்பாய்ச்சல் கட்டுவேலைகளை, பரிகரிக்காமல் விட்டுவிட்டால் பெருத்தநஷ்டத்தையும் செலவையும் உண்டாக்கத்தக்க எவ்வித ஆபத்துகள் நேரிடாதபடி, பாதுகாப்பதும்.

(ix) ஏரிக்கரைகளிலுள்ள மதகுகளுக்கு மராமத்து அவசியமாருந்தால், பப்ளிக் வொர்க்ஸ் இலாகா உத்தியோகஸ்தர்கள் அவைகளைப் பரிசோதிப்பதற்கு அநுகூலமாக, அந்த மதகுகளைத் திறப்பது.

6. பாதுகாப்பு விஷயத்திலும் மராமத்து விஷயத்திலும் சாலாயமான வேலைகளைச் செய்யாமல் அசட்டைபண்ணுவதனாலுண்டாகும் கஷ்டங்களுக்காகத் தீர்வையில் யாதொரு ரிமிஷனும் செய்யப்படமாட்டாதென்று கிராமத்தார்களுக்குக் கிராமப்பெரியதனக்காரர்கள் எச்சரிக்கை பண்ணவேண்டும்.

7. யாதொரு நீர்ப்பாய்ச்சல் கட்டுவேலைக்கு அபாயம் நேரிடத்தக்க யாதொரு காரியத்தைச் செய்யவொட்டாமல் தங்கள் தங்களுடைய கிராமத்து ரயத்துகளைக் கிராம உத்தியோகஸ்தர்கள் தடுக்கவும்வேண்டும்; இப்படிப்பட்ட அபாயத்தைத்தருவதற்கு உதாரணம் :—(கீழே 10-வது பாராவில் விதிக்கப்பட்டிருக்கிற திட்டத்தின்படிக் கன்றி மற்றபடி), ஜலத்தை உயர்ந்த மட்டமாகக் கட்டிவைக்கும்படி யாதொரு கலிங்கலின் எதிரிலே அணைபோடுவது; ஏரிகளின் கரைகளிலே சிறிதுகாலத்திற்கு வெட்டுப்போடுவது அல்லது சிறிதுகாலத்திற்கு மதகுபோட்டுக்கொள்வது. அவர்கள் இந்த விதியை அசட்டை செய்வதனாலுண்டாகும் யாதொரு நஷ்டத்திற்கு உத்தரவாதிகளாக எண்ணப்படுவார்கள்.

8. நீர்ப்பாய்ச்சல் கட்டுவேலைகளைப் பாதுகாப்பதற்காகப் பின்வருகிற விதிகளைக் கிராம உத்தியோகஸ்தர்கள் ஜாக்கிரதையாய்க் கவனிக்கவேண்டும் :—

(i) காலாந்தர மழைபெய்யத் தொடங்கும் சாலாயமான தேதிக்குக் குறைந்தபக்ஷம் இரண்டு வாரத்துக்குமுன்னே கலிங்கலகளையெல்லாம் பரிஷ்கரிக்கவேண்டும்.

(ii) ஏரிகளின் கரைகளை ஜாக்கிரதையாகப் பரிசோதித்து, துவாரங்களையாவது இதரமான எவ்வித சேதங்களையாவது நியதியான வழக்கத்தின்படி மராமத்து செய்யவேண்டும்.

(iii) கனமழை பெய்யும்போது கரைகளைக் காவல்காக்கும்படியும் ஏதாகிலும் அபாயம் தோற்றினால் அதை உடனே ரிபோர்ட் செய்யும்படியும் வெட்டியானுக்கு உத்தரவுசெய்யவேண்டும்.

(iv) கிராமப்பெரியதனக்காரராவது, அவரில்லாவிட்டால் இதரமான கிராம உத்தியோகஸ்தர்களாவது கூடியவரையில் அடிக்கடி ஏரிகளைப் பரிசோதிக்கவேண்டும்.

(v) யாதொரு இடத்தில் கரை உடைத்துக்கொள்ளும்போலக் காணப்பட்டால், கிராமக்கூலியாட்களை அழைத்து, அதைத் தடுப்பதற்கான வாலாயமான முகாந்தரங்களைச் செய்யும்படி அவர்களை வேலையில் அமர்த்திக்கொள்ளவேண்டும்.

(vi) பப்ளிக்வொர்க்ஸ் இலாகாவின் விசாரணையின் கீழிருக்கிற எல்லா ஏரிகளின் விஷயத்திலும், அந்த இலாகாவைச்சேர்ந்த அதி சமீபத்திலிருக்கிற கீழுத்தியோகஸ்தருக்கு வெகுசீக்கிரத்தில அபாயத்தைக்குறித்துத் தெரிவிக்கவேண்டும்.

(vii) வாஸ்தவத்திலே யாதொரு இடத்தில் கரை உடைத்துக்கொண்டால், சாகுபடியைக் காப்பாற்றுமபொருட்டு விருத்தாகாரமான அணையொன்றுபோடும்படி கிராமக்கூலியாட்களை உடனே அமர்த்திக்கொள்ளவேண்டும்.

9. 1858-ம் வருஷத்து 1-வது ஆக்டின்படி, யாதொரு ஏரி - ஆறு - அல்லது கால்வாயின் கரைக்கு ஆபத்து உண்டாயிருந்தாலும், கரை யாதொரு இடத்தில உள்ளபடி உடைத்துக்கொண்டிருந்தாலும், அதன் விசாரணை உத்தியோகஸ்தராவது, அவரில்லாதபட்சத்தில் தாசில்தாராவது, ஆபத்தானது பெரியதாயும அவசரமாயுமிருந்து, விசாரணை உத்தியோகஸ்தராகிலும தாசில்தாராகிலும இல்லாவிட்டால் அப்போது, கரை உடைத்துக்கொள்ளுமென்று எதிர்பார்க்கப்பட்ட அல்லது உடைத்துக்கொண்டிருக்கிற கிராமத்தின் பெரியதனக்காரராவது - உடைத்துக்கொள்ளவொட்டாமல் தடுக்கவோ அல்லது உடைத்துக்கொண்டதை மராமத்துசெய்யவோ அவசியமாயிருக்கிற வேலையை ஏகோபித்து நடத்தும்படியாக, தமமுடைய கிராமத்திலேயேயுள்ள உழைப்பாளிகளென்னும் வகுப்பைச்சேர்ந்த திடகாத்திரமான புருஷர்களையெல்லாம அழைக்கவும, அவசியமானால் இது காரியத்துக்காக அடுத்த கிராமங்களிலுள்ள உழைப்பாளிகளை அழைக்கும்படி அந்தக் கிராமங்களின பெரியதனக்காரர்களைக் கேட்டுக்கொள்ளவும அதிகாரங்கொடுக்கப்பெற்றிருக்கிறார்.

அப்படி அழைக்கப்பட்ட உழைப்பாளிவகுப்பைச் சேர்ந்த யாதொரு புருஷன் நியாயமான சமாதானம எதுவும் இல்லாமலே, அந்தப்படி வர மறுத்தாலும அசட்டைபண்ணினாலும், அவன் - மாஜிஸ்ட்ரேட்டின் முன்னிலையில குற்றவாளியென்று தீர்மானிக்கப்படுவதன்மேல், 100 ரூபாய வரையில் அபராதஞ்செலுத்தவாவது, ஒருமாதகாலம வரையில வெறுங்காவலில் வைக்கப்படவாவது, இந்த இரண்டு தண்டனைகளுக்குமாவது உட்படுவான்.

இந்தப்படி கேட்டுக்கொண்டதன்மேல் இப்படிப்பட்ட வேலையில் அமர்ந்திருக்கும பிரதி நபருக்கும், அவனுடைய உழைப்புக்காகப் பகலிலானால இப்படிப்பட்ட வேலைக்கு அயலில் கொடுக்கப்பட்ட மிகவும் உயர்ந்த வீதத்தின்படியாகவும், இரவில் அவனை வேலைசெய்யச்சொன்னால் இப்படிப்பட்ட வீதத்தில் இரட்டிப்பாகவும் கூலி கொடுக்கவேண்டும். உழைப்பாளிகளுக்குக் கொடுக்கவேண்டிய பணத்தை ஸர்க்கார் கஜானாவிலிருந்து பட்வாடாசெய்யவேண்டும்.

அப்படிப்பட்ட வேலைகள் நடக்கும இடங்களுக்குச் சமீபத்திலுள்ள கிராமக்குடிகளை, கரைகளில் உடைத்துக்கொண்ட இடங்களை

அடைப்பதற்கு அவசியமான மரங்கள் - தழைகள் - மூங்கில்கள் - வைக்கோல் முதலான சாமான்களைச் சர்ப்பராசெய்யும்படி உத்தரவுபண்ணலாம்: அவசியமாயிருந்தால், இப்படிப்பட்ட பொருள்களுக்கு எழுத்துமூலமாய் ரசீதுகொடுத்து, அவைகள் எவ்வெவ்விடங்களில் காணப்படுகிறதோ அவ்வவ்விடங்களில் அவைகளைக் கைப்பற்றிக்கொள்ளலாம் அல்லது வெட்டிக்கொள்ளலாம்; மேலும், அந்தப்படி சர்ப்பராசெய்யப்பட்டவைகளின் விலையை, அப்படிப்பட்ட பொருள்கள் அக்கம்பக்கத்தில் விற்பனையாகும் மிகவும் உயர்ந்த விலைகளின்படி, சர்க்கார் கஜானாவிலிருந்து கொடுக்கவேண்டும். மரங்கள் முதலானவைகளை வெட்டிக்கொள்வதனால் எந்த நபர்களுக்காகிலும் நஷ்டம் உண்டானால், அந்த நபர்களுக்குப் பிரதிபலன் கொடுக்கவேண்டும்; விவாதம் உண்டாகிற விஷயத்திலே, அப்படிப்பட்ட பிரதிபலன் தொகை இவ்வளவென்று, கிராமமுனிசிப் மூலமாய்க் கலெக்டருடைய உத்தரவினால் சேர்க்கப்படும் கிராமப்பஞ்சாயத்தாரால் சுருக்கவகையாய்த் தீர்மானிக்கப்படும். இப்படி உழைப்பாளிகள் அமர்த்தப்பட்ட அல்லது இப்படிப்பட்ட பொருள்கள் உபயோகிக்கப்பட்ட வேலையானது யாதொரு தனிநபரைச்சேர்ந்ததானால், கஜானாவிலிருந்து அட்வான்ஸ்பண்ணப்பட்ட தொகையை, யாதொரு நிலத்தீர்வையின்பாக்கியை வசூல்செய்கிற விதமாகவே அந்த நபரிடமிருந்து வசூல் செய்யவேண்டும். 1858-ம் வருஷத்து 1-வது ஆக்டின்படி கொடுக்கப்பட்ட அதிகாரங்களை அடிக்கடியாகிலும் அற்பவிஷயங்களுக்காகிலும் எவ்விதத்திலும் உபயோகிக்கக்கூடாது; ஆபத்தின் அவசரத்தை நோக்குமிடத்து அவசியமான உழைப்பாளிகளையாவது பொருள்களையாவது பெறுவதற்கான மற்ற சகல சாதனங்களையும் அனுசரிக்கக்கூடியதாயிருந்தால், அப்படிப்பட்ட சாதனங்களையெல்லாம் முந்தி அனுசரித்துப் பார்க்கிறவரையில் ஷை அதிகாரங்களை உபயோகிக்கலாகாது.

10. கலிங்குகளின் தலைப்பானது ஏரியின் நிறைமட்டத்துக்குத் தாழ்வாக இருக்கிறபட்சத்தில், அடியிற்கண்ட நிபந்தனைகளை அனுசரித்து ரயத்துகள் சர்க்கார் ஏரிகளைச்சேர்ந்த கலிங்குகளின்மேல் கொஞ்சகாலத்திற்கு அணைகளைப் போட்டுக்கொள்ளலாம்:—

(i) கலிங்குகளின் அணைக்கற்களுக்கிடையிலே உள்ள இடங்களை அடைப்பதற்காக உபயோகிக்கப்படும் வஸ்துக்கள் ஏரிக்கு அபாயம் வருகிறபட்சத்தில் சுலபமாய் எடுத்துவிடத்தக்கவைகளாகவாகிலும், ஜலம் உதைக்கிற வேகத்தினால் அடித்துக்கொண்டுபோகப்படத்தக்கவைகளாகவாகிலும் இருக்கவேண்டும்; மேலும், அவைகள் ஏரியின் நிறைமட்டத்துக்குமேல் 6 அங்குலத்துக்கதிகமான உயரமுடையவைகளாக இருக்கக்கூடாது,

(ii) காலாந்தரமழை பெய்யத்தொடங்குகிற காலத்திலும், மழை பெய்கிற அல்லது புயலடிக்கிற காலத்திலும் நீர்கட்டிகளும் மற்றவர்களும் ஏரிகளை ஜாக்கிரதையாக இரவும்பகலும் காத்துக்கொண்டிருக்கவேண்டும்.

(iii) ஏரிக்கு அபாயத்தைக் குறிக்கத்தக்கதான மட்டத்துக்கு ஜலம் வருமானால், தற்காலநிமித்தமாகப் போடப்பட்ட அணையைச்

சந்தர்ப்பத்துக்கேற்றபடி முழுமையுமாகிலும் சிறிதுமட்டிலாகிலும் எடுத்துவிடவேண்டும்.

(IV) அணைக்கற்களின் மத்தியில் அடைக்கப்பட்ட அடைப்பானது தக்ஷணமே எடுத்துவிடக்கூடாதபடியாவது ஜலம் உதைகிற வேகத்தினால் அடித்துக்கொண்டுபோகக்கூடாதபடியாவது கடினமாய்ப்போகவொட்டாமல் தடுப்பதற்காகக் கசிங்கல்களையெல்லாம் குறைந்தபக்ஷம் வருஷத்துக்கொருமுறையாகிலும் சுத்தஞ்செய்ய வேண்டும்.

(V) ஏரி பந்தோபஸ்தாயிருக்கிறதென்று நிச்சயிப்பதற்கு அவசியமாயுள்ள முன்னெச்சரிக்கையான ஏற்பாடுகளெல்லாம் செய்யப்படுவரும்படி பார்த்துக்கொள்வதற்கு கிராம உத்தியோகஸ்தர்களும் நீர்க்கட்டிகளும் உத்தரவாதியாயிருப்பவர்களாக எண்ணப்படுகிறார்கள்.

11. ஏரியின் நிறைமட்ட அளவிலுள்ள தலைப்புகளையுடையவையாய் அதிகப்படியான ஜலம் வழிந்துபோவதற்கான செய்கரைகளின் மேலேயாகிலும் எதிரேயாகிலும் அணைகளைப் போடுவதைப் பரிஹாரமாய்த் தடுக்கவேண்டும்.

12. ஏரிக்கரைகளின் கீழேயாகிலும் கால்வாய்க்கரைகளின் கீழேயாகிலும் நிலங்களை வைத்துக்கொண்டிருக்கிறவர்கள் அந்த ஏரி அல்லது கால்வாயின் கரைகளை ஆக்கிரமிக்காதபடி கிராம உத்தியோகஸ்தர்கள் பார்த்துக்கொள்ளவேண்டும்.

13. ஏரிகளின் நீர்ப்பரப்புகளுக்குப் புறம்பான ஓரத்தில், கருவேலமரங்களைப்போன்ற மரங்களையும், வீடுகளுக்குக் கூரைபோடவாவது ஆடுமாடுகளுக்கு உணவாகவாவது உபயோகமாகும் புல்வகைகளையும் கிராமத்தார் அவைகளில் தங்களுக்குச் சொத்துரிமை உண்டாவதில்லையென்கிற நிபந்தனையான ஏற்பாட்டின்மேல் பயிராக்க இஷ்டப்பட்டால், அதற்கவசியமான அனுமதி கொடுக்கும் நிமித்தமாக, அது சங்கதியை கிராமப்பெரியதனக்காரர்கள் தாசில்தார்களுக்குத் தெரிவிக்கலாம்.

14. சமுதாய பாத்தியதைகளுள்ள இடங்களில், ஏரிகள் வற்றியிருக்கும்போது அவைகளின் அடித்தரையை மேய்ச்சலுக்காக உபயோகித்தால், யாதொரு ஆக்ஷேபணையும் செய்யக்கூடாது.

15. ஏரிகள், கால்வாய்கள் - இவைகளின் கரைகளின்மேல் முளைத்திருக்கும் நாகதாளியைக் கவர்ன்மெண்டாருடைய செலவிலே ஆரம்பத்தில் ஒரு தடவை அப்புறப்படுத்தியிருந்தால், பிற்பாடு அவைகளைப் பரிஷ்கரிக்கும்போதெல்லாம் ரயத்துகளே தங்களுடைய சொந்தசெலவில் அவைகளைப் பரிஷ்கரிக்கும்படி கிராம உத்தியோகஸ்தர்கள் பார்த்துக்கொள்ளவேண்டும்.

29. சமுதாயவிட்ட சொந்த ஏரிகள்.

A பிரிவு.—ஏரிகளைச் சொந்தத்தில் ஏற்படுத்திக்கொள்வது.

1. **அனுமதிக்காக விண்ணப்பம் செய்துகொள்வது.**—ஏரிகளை ஏற்படுத்திக்கொள்ள விரும்பும் ரயத்துகள் அதற்கு அனுமதிபெறுவதற்காக முதலில் கலெக்டருக்கு விண்ணப்பம் செய்துகொள்ளவேண்டும்.

**2. இன்னபடிக்கானால் வேலை நிறுத்தப்படுவதற்கு உள்ளாகுமென்பது.**—ஆயினும், தூரப்பிரதேசங்களிலும் குடிஜனங்கள் ஸ்வல்பமாயுள்ள பிரதேசங்களிலும், சில சந்தர்ப்பங்களில் ரயத்துகள் முன்னதாய் அநுமதி பெற்றுக்கொள்ளாமலே வேலையை ஆரம்பிக்கும்படி நேரிடக்கூடும். அதனால் ஸர்க்கார் பாத்தியதைகளுக்குப் பாதகமுண்டாவதாகத் தெரியவருமானாலும், அதற்கு விரோதமாய் பிராதுகள் செய்யப்பட்டாலும், கிராம உத்தியோகஸ்தர்கள் அந்த வேலையை நிறுத்தி தாசில்தாருக்கு ஒரு ரிபோர்ட் செய்யவேண்டும்.

**3. நீர்ப்பரப்புக்கானத் தீர்வை விதிப்பது.**—யாதொரு சொந்த ஏரியின் நீர்ப்பரப்புக்குள் அடங்கியிருக்கும் நிலத்தில் சாகுபடி செய்யப்பட்டாலன்றி மற்றப்படி, அந்த நிலத்துக்குத் தீர்வை விதித்து வாங்கப்படமாட்டாது; ஆனால், அந்த ஏரியை ஏற்படுத்திக்கொள்ளுகிற ரயத்தானவன் நீர்ப்பரப்புக்குள் அடங்கியிருக்கும் நிலத்தில் எவ்வளவு பாகத்திலே அந்த ஏரியை ஏற்படுத்திக்கொள்வதற்கு அடுத்த முந்திய பத்து வருஷகாலத்துக்குள் சாகுபடி செய்யப்பட்டிருந்ததோ அவ்வளவு பாகத்துக்குரிய தீர்வையைக் கட்டுவதற்குள்ளாவான்.

**4. ஆயக்கட்டுக்குத் தண்ணீர்வரி இல்லாமல் நிவாரணை செய்வதும், அந்தப்படி செய்திருக்கும் நிவாரணை இன்னபடிக்கானால் ரத்துசெய்யலாமென்பதும்.**—ஏரியிலிருந்து நீர்பாயப் பெறுகிற நிலங்கள் அந்த ஏரி அபாயமற்ற ஸ்திதியிலிருக்கிறவரையிலே, தண்ணீர்வரி விதிக்கப்படுவதனின்றும் நிவாரணையாயிருக்கின்றன; ஆனால், யாதொரு பப்ளிக் வொர்க்ஸ் இலாகா உத்தியோகஸ்தர் அந்த ஏரியைப் பார்வையிட்டு அது அபாயமற்ற ஸ்திதியிலிருப்பதற்கு எவையேனும் சீர்திருத்தங்கள் செய்வது அவசியமென்று தெரிவித்திருந்து, கலெக்டரால் நிஷ்கரிஷை செய்யப்படக்கூடிய கால அளவுக்குள்ளே அவை செய்யப்படாமலிருந்தால், தண்ணீர்வரியில்லையென்று நிவாரணையாயிருப்பது ரத்து செய்யப்படும்; மேலும், அவசியமாயிருக்கிறபட்சத்தில் கவர்ன்மெண்டார் அந்த ஏரியை மராமத்து செய்து அதைத் தங்களுடைய விசாரணையின்கீழ் வைத்துக்கொள்ளுவார்கள்.

### B பிரிவு.—பழுதாய்விட்ட ஸர்க்கார் ஏரிகளை சொந்தத்தில் மராமத்துசெய்துகொள்வது.

**1. அனுமதிக்காக விண்ணப்பம் செய்துகொள்வது.**—ஆயக்கட்டைச் சேர்ந்த நிலத்துக்காக, அந்தந்த ஜில்லாவில் நிஷ்கரிஷை செய்யப்பட்ட பிரத்தியேகமான தீர்வை விகிதத்தை செலுத்துவதென்னும் ஷரத்தின்மேல், பழுதாய்விட்ட ஏரிகளைத் தனிநபர்கள் தங்களுடைய சொந்த செலவிலே மராமத்து செய்ய வழியை ஏற்றுக்கொண்டால், அது சங்கதியைக் கிராம உத்தியோகஸ்தர்கள் தாசில்தாருக்கு ரிபோர்ட் செய்யலாம்.

**2. பழுதாய்விட்ட ஏரி என்பதன் அர்த்தம்.**—ஐந்து வருஷத்துக்கு அதிகப்பட நிலைகுலைந்த ஸ்திதியிலிருந்து கவர்ன்மெண்டாரால் மராமத்துசெய்ய உத்தேசிக்கப்படாத ஏரிகள் பழுதாய்விட்ட ஏரிகள் என்று சொல்லப்படும். அவைகளின் கீழே செய்யப்படும் சாகுபடி

யானது நீர்ப்பாய்ச்சப்படத்தக்க விஸ்தீரணத்துக்கு நூற்றுக்கு 25 வீதமான பிரமாணமுடையதாயிருந்தால், அந்த ஏரிகளைப் "பழுதாயவிட்ட" வைகளென்று எண்ணக்கூடாது; இந்தக் காரியத்துக்காக, நீர்ப்பாய்ச்சப்படத்தக்க விஸ்தீரணம் என்னும் சொற்றொடருக்கு, சாதாரண சந்தர்ப்பங்களில் உள்ளபடி தண்ணீர் பாய்ச்சப் படத்தக்க விஸ்தீரணமென்று அர்த்தம் கொள்ளவேண்டுமேயல்லாமல், நாமமாத்திரமான ஆயக்கட்டு என்று கொள்ளலாகாது.

3. ஆயக்கட்டுக்காகச் செலுத்தத்தக்க தீர்வை.—ஏரிகளை வேறொருவர்பரம் செய்தால், 1-வது விதியில் குறிப்பிடப்பட்ட தீர்வை வீதத்தையாவது, ரீஸெட்டில்மெண்டில் (புனர்ப்பைசல்ஏற்பாட்டில்) நிஷ்கரிஷை செய்யப்படக்கூடிய திருத்தமான தீர்வை வீதத்தையாவது, அந்த ஏரி வேறொருவர்பரம் செய்யப்பட்ட காலத்திலே அதன் ஆயக்கட்டில் அடங்கியுள்ள நிலங்களில் நஞ்சைப்பயிர் சாகுபடி செய்யப்பட்டாலுஞ்சரி புஞ்சைப்பயிர் சாகுபடி செய்யப்பட்டாலுஞ்சரி அந்த நிலங்கள் தரமபு நிலங்களாய் விடப்பட்டாலுஞ்சரி அப்படிப்பட்ட சகல நிலங்களுக்காகவும் வசூல் செய்யவேண்டும். இரண்டாமபோக சாகுபடிக்கு நீர்பாய்ச்சிக்கொள்ளுவதற்காக ஏரியிலிருந்து ஜலத்தை உபயோகித்துக்கொண்டால் அதற்காகக் கட்டணம் விதித்து வாங்கக்கூடாது; மேலும், மேற் ஆயக்கட்டை விட அதிகமாக ஏரியிலிருந்து நீர் பாய்ச்சப்படும் நிலத்துக்காக விசேஷவீதப்படி கட்டணம் வாங்கவுங்கூடாது.

4. மராமத்து செய்துகொள்ளுவதற்காகக் கோரிக்கப்படும் அனுமதியானது இன்னபடிக்கானால் ரத்து செய்யப்படுவதற்கு உள்ளாகு மென்பது.—பழுதான ஸ்திதியிலிருக்கும் யாதொரு சுவானமெனட் நீர்பாய்ச்சற் கட்டுவேலையை மராமத்து செய்துகொள்ளுவதற்காக அனுமதி கொடுத்திருந்து, அதனால் மூன்றும நபர்களுக்குள்ள பாத்தியதைகளுக்கு பாதகம் உண்டாகுமென்று தெரியவந்தாலும், நிர்ணயிக்கப்பட்ட காலத்துக்குள்ளே அவர்கள் செய்ய ஒத்துக்கொண்டபடி அந்த ஏரி மராமத்து செய்யப்படாவிட்டாலும், பிறபாடு அந்த ஏரியை சரியான ஸ்திதியில் வைத்திராவிட்டாலும், அந்த அனுமதி ரத்துசெய்யப்படும்.

30. ஸர்க்கார் ஜலத்தைப் பகிர்வது

1. ரெவினியு இலாகாவின் விசாரணையிலுள்ள நீர்ப்பாய்ச்சல் கட்டுவேலைகளில் இருக்கிற ஜலத்தைத் தக்கபடி பகிர்வதை, மேலான அதிகாரியின் உத்தரவுகளின்படி, ஒழுங்குபடுத்துவதும் மேற்பார்வையிடுவதும் கிராமப் பெரியதனக்காரர்களுடைய கடமையாகும்.

2. புஞ்சை நிலங்களுக்காகிலும், ஏகபோக நஞ்சை நிலங்களில் இரண்டாமபோகம் சாகுபடி செய்வதற்காகிலும், கிராமப்பெரியதனக்காரரிடத்திலாவது ரெவினியு இன்ஸ்பெக்டரிடத்திலாவது மேலான அதிகாரியிடத்திலாவது அதற்கென்று அனுமதிபெற்றுக் கொள்ளாமல் ஸர்க்கார் ஜலத்தைப் பாய்ச்சிக்கொள்ளக் கூடாது. நஞ்சை நிலங்களுக்குப் போதுமான ஜலம் இல்லாவிட்டால், புஞ்

### 32. புராதன கட்டட முதலியவைகளைப் பாதுகாப்பது.

1. சாஸனக கற்பலகைகளையாவது புராதனமான கோயில்களையாவது இதர புராதனமான கட்டிடங்களையாவது கட்டடக காரியங்களுக்காக கன்ட்ராக்டர்களும் இதரமானவர்களும் அழிக்காமலிருக்கும்படி கிராம உத்தியோகஸ்தர்கள் பார்த்துக்கொள்ளவேண்டும். புராதனமாயிருந்தும் இன்னும் அழியாமல் நிற்கிற சில கட்டட முதலியவைகளின் காரியக்காரர்களையும் சொந்தக்காரர்களையும் அவைகளுக்கு யாதொரு பழுது உண்டாகாத விதம் ஜாக்கிரதையாக இருக்கும்படி கேட்டுக்கொள்ளவேண்டும்.

2. பூர்வ சரித்திர விஷயங்களை ஆராய்ச்சி செய்வதற்கு ஆதாரமாயிருக்கும் புராதனமான ஞாபகச்சின்னங்களும் அழியாமல் நிற்கும் அப்படிப்பட்ட கட்டட முதலியவைகளும் ஜாக்கிரதையாக பாதுகாக்கப்படும்படி பார்த்துக்கொள்வது கிராம உத்தியோகஸ்தர்களின் கடமையாகும். தனி நபர்களுடைய ஸ்வாதீனத்திலிருக்கும் புராதனமான கட்டடங்களையாவது சாஸனங்களையாவது இதர பழமையான பொருள்களையாவது இடித்துவிடவோ அல்லது உருவ மாற்றவோ எவரேனும் உத்தேசித்திருப்பதாகத் தங்களுக்குத் தெரியவந்தால், அவர்கள் அதைக்குறித்துக் கிரமமாய்த் தாசில்தாருக்குத் தெரிவிக்கவேண்டும். புராதனமான நிவேசனங்களையாவது மணமேடுகளையாவது தோண்டுவதற்காக கவர்ன்மெண்டாருடைய உத்தரவு பெறுகிறவரையில் அந்தப்படி தோண்டுவதற்கு அனுமதி கொடுக்கக்கூடாது.

### 33 கண்டெடுக்கப்பட்ட பொக்கிஷத்தைக் குறித்த 1878-ம் ௵ 6-வது (இந்தியா) ஆக்ட்.

தொகையிலாவது மதிப்பிலாவது 10 ரூபாய்க்கு அதிகப்பட்ட யாதொரு புதையல் காணப்பட்டிருக்கிறதாகக் கிராம உத்தியோகஸ்தர்களுக்குத் தெரியவரும்போதெல்லாம், அவர்கள் அது சங்கதியை அடியிற்கண்ட விவரங்களுடன் தாசில்தாருக்கு உடனே ரிபோர்ட் பண்ணவேண்டும் :—

(1) கண்டுபிடித்தவருடைய பெயர்.

(2) ஆராய்ந்தறியக்கூடியமட்டில், அப்படிப்பட்ட புதையலின் தன்மையும் அதனுடைய தொகை அல்லது சற்றேறக்குறைய சரியான மதிப்பும்.

(3) அது கண்டுபிடிக்கப்பட்ட இடம்.

(4) கண்டுபிடித்த தேதி.

'புதையல்' என்பது-பூமியிலாவது அதனுடன் சேர்க்கப்பட்டிருக்கிற யாதொன்றிலாவது மறைபட்டு யாதொரு மதிப்புடைய பொருள் என்று அர்த்தமாகும்.

### 34. நிலக்கற்களைக் கீண்டியெடுப்பதும் தாதுவஸ்துக்களைத் தோண்டியெடுப்பதும்.

1. மேலான ரெவினியு அதிகாரிகளிடத்திலிருந்து இதற்கென்று பிரத்தியேகமாய் உத்தரவுபெற்றுக்கொள்ளாமல் சாதாரணமாய்

நிலக்கற்களைக் கிண்டியெடுக்கவுங்கூடாது, நிரஸ்வஸ்துக்களைத் தோண்டியெடுக்கவுங்கூடாது. ஆயினும், பட்டாதாரர்கள் தங்கள் பட்டா நிலங்களில் கிணறு முழுகவும், அப்படி முழுகும்போது தோண்டியெடுக்கப்பட்ட பாறைகளையும் கற்களையும் தங்களிஷ்டம்போலச் செய்துகொள்ளவும் அவர்களுக்குள்ள ஸ்வதந்தரத்துக்கு, இதனால் எவ்விதத்திலும் பாதகமுண்டாகமாட்டாது. நிலமானது சாகுபடி காரியத்திற்கு முன்னிலும் எவ்விதமாயும் யோக்கியதை குறைந்துவிடும்படிச் செய்யப்படாத பக்ஷத்தில், யாதொரு பட்டாதாரர் குறித்த ஒரு காரியத்தின்பொருட்டுத் தம் சொந்த உபயோகத்துக்காக, வேலைகளை வரையறையின்றி நிரந்தரமாய் நடத்தவேண்டுமென்னும் எண்ணங்கொள்ளாமலே, சிறிதளவாகத் துருக்கல் முதலானவைகளைக் கிண்டியெடுத்துக்கொள்ள இஷ்டப்படும் விஷயங்களில் யாதொரு கட்டணமும் வாங்கப்படாது.

2. கலெக்டருடைய உத்தரவினால் பிரத்தியேகமாய் அடைப்பு செய்யப்படாத புறம்போக்குகளாகட்டும், காப்பாற்றிவைக்கப்படாத ஸர்க்கார் நிலங்களிலிருந்து, வாஸ்தவமாய வீட்டுக்காரியங்களுக்காகவாவது விவசாயக காரியங்களுக்காகவாவது வேண்டியிருக்கும் கல், பரல், துருக்கல் முதலானவைகளைச் சிறிய அளவாகப் பொதுஜனங்கள் எடுத்துக்கொண்டுபோகத் தடையில்லை. இந்தக் காரியங்களல்லாத வேறே காரியங்களுக்காக நிலக்கற்களைக் கிண்டியெடுத்தால் அதற்காக ஸீனியரேஜ் கட்டணமென்று சொல்லப்படும் அரசவுரிமைக் கட்டணம் விதித்து வாங்கப்படும்.

3. கட்டடத்துக்கு உதவத்தக்க கல் முதலானவைகளிருக்கும் அதிக உபயோகமான நிரஸ்வஸ்துக்கள் அல்லது கற்பாறைகளடங்கியிருக்கிற தரிசுநிலங்களைப் பட்டாவின்மேல் சாகுபடி செய்வதற்கு விடாமலிருக்கும்படி கிராம உத்தியோகஸ்தர்கள் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். அப்படிப்பட்ட நிலங்களுக்காக விண்ணப்பஞ் செய்துகொள்ளப்பட்டால், அவைகளில் கற்பாறைகளடங்கியிருக்கிற சங்கதியைத் தாக்கீஸ்து விதிகளின்கீழ் காட்டப்பட்டிருக்கிற A குறிப்பு யாதாஸ்தின் 15-வது கலத்தில் ஜாக்கிரதையாகக் குறிக்கவேண்டும்.

35. பேவாரிசான சொத்தும் அது ஸர்க்காரைச் சேருவதும்.

1. அசையும்பொருளாயிருந்தாலுஞ்சரி, அசையாப்பொருளாயிருந்தாலுஞ்சரி சொத்துக்களெல்லாம், சட்டசம்மதமான சொந்தக்காரர் இல்லாவிட்டால், ஸர்க்காருக்கு உரிமையாகுமென்பதைக் கிராம உத்தியோகஸ்தர்கள் ஞாபகத்தில் வைக்கவேண்டும்.

2. இராஜதானிப்பட்டணத்திலல்லாமல் வெளியூர்களிலுள்ள ஹிந்துக்களும் மகம்மதியர்களும் மற்றவர்களும் வாரசுகளில்லாத அசையும்பொருளை வைத்துவிட்டு உயில் என்னும் மரணசாஸனமெழுதிவைக்காமல் மரணமடைகிற விஷயங்களிலே, அந்தக் கேஸின் சங்கதிகளை டிஸ்டிரிக்ட் மாஜிஸ்டிரேட்டுக்கு ரிப்போர்ட் செய்வதற்குச் சாதகமாகும்படியாக, அந்த கிராமம் யாருடைய அதிகாரவரம்பைச் சேர்ந்ததோ அந்த மாஜிஸ்டிரேட்டுக்கு கிராம உத்தியோகஸ்தர்கள் அது சங்கதியை ரிப்போர்ட்பண்ணவேண்டும்.

3. ரஸ்தாக்களிலும், ஜனங்கள் போக்குவரவு செய்யும் இடங்களி லும் இதுமுதலான இடங்களிலும் சொந்தக்காரர் இன்னாரென்று தெரியாத சொத்துக்கள் காணப்படும்போது, அவைகள் தங்களி டம் கொடுக்கப்பட்டால் கிராம உத்தியோகஸ்தர்கள் - கண்டுபிடித் தவருடைய பெயரையும் கண்டுபிடித்தது சம்பந்தமான சந்தர்ப்பங் களையும் விவரமாக எழுதிய ரிபோர்ட்டுடனே அவைகளை பொலீ ஸுக்கு அனுப்பவேண்டும். சொத்துக்களைக் கண்டுபிடித்தவர்கள் ஒளித்துவிட்டால், அவர்கள் அக்கிரமமாய உபயோகித்துக்கொள்வ தெனனும் குற்றஞ்செய்ததற்காகப் பிராது தொடருவதென்னும் அபாயத்திற்குள்ளாவார்கள்.

4. அசையாப்பொருளை ஸர்க்காருக்குச் சேர்த்துவிடும் எல்லாக் கேஸுகளையுங்குறித்துக் கிராம உத்தியோகஸ்தர்கள் தாசில்தாரர்க ளுக்கு ரிபோர்ட் செய்யவும் வேண்டும்.

36. இதாமான ஸர்க்கார் சொத்து.

1. கிராமங்களுக்குள்ளும் சமீபத்திலுமிருக்கிற ரஸ்தாக்கள், வீதிகள், சதுக்கங்கள், வெளியிடங்கள் ஆகிய இவைகளைப்போலப் பொதுஜனங்களுக்கு உபயோகப்படுகிற நிலமுள்ள ஸர்க்கார் நிலத் தை, தனி நபர்கள் ஆக்கிரமிக்காதபடி பாதுகாப்பது கிராம உத்தி யோகஸ்தர்களுடைய கடமையாயிருக்கிறது.

2. கிராம உத்தியோகஸ்தர்கள் தங்கள் கிராமங்களின் எல்லை களுக்குள்ளே துருப்புகள் தங்குகிற இடங்களையும் டிராவலர்ஸ் பங்களாக்கள் முதலிய இடங்களையும் ஜாக்கிரதையாயப் பார்த்துக்கொள்வ தற்கு உத்தரவாதிகளாயிருக்கிறார்கள். யாதொரு ரெஜிமெண்ட இறங்கிப்போனபிறகு அந்தத் தங்குமிடம் பரிசுத்தமாகச் சுத்தி செய்யப்படும்படி அவர்கள் பார்த்துக்கொள்ளவேண்டும். வாந்தி பேதி கூடாரங்களை விட்டுத் துருப்புகள் போயவிட்டவுடனே அந்த இடங்களை உழுவிக்கவேண்டும். பணம் வேண்டியிருந்தால் தாசில் தாரரைக் கேட்கவேண்டும்.

3. ஸர்க்காருடைய தரிசு நிலங்களிலும் புறம்போக்கு நிலங்களி லுமுள்ள மரங்களைப்போன்ற ஸர்க்கார் சொத்துக்கு யாதொரு நஷ்டம் வந்தாலும் பழுது நேரிட்டாலும் அதை ரிபோர்ட் பண்ணு வது கிராம உத்தியோகஸ்தர்களுடைய கடமையாயிருக்கிறது.

4. க்ராண்டிடுனெய்ட் கோட் என்னும் திரவியசகாயச்சட்டத்தின் IX-A குறிப்பிட்ட அத்தியாயத்தின்படி திரவியசகாயம் பெற் றிருக்கும் ஒரு கிராமப்பள்ளிக்கூடமானது - கிராமசொத்தாயிருந் து வரவேண்டியதுமல்லாமல், கிராம முன்ஸிபின் மேற்பார்வை யிலும் இருக்கும்.

37. லோகல் பண்டுகள்

1. நிலவரி (லாண்ட்ஸெஸ்).—நிலத்தின் வருஷாந்தர வாடகை மதிப்பின்மேல் பிரதி ஜில்லாவுக்கும் இவ்வளவென்று நிஷ்கரிஷை

செய்யப்பட்டிருக்கிற விதப்படி (லாண்ட ஸெஸ்) நிலவரி வசூல்செய்யவேண்டும்; அது - ரயத்துவாரி நிலங்களின் விஷயத்தில ஸர்க்கார் தீர்வையும தண்ணீர்வரியுமாகும்: இனாம் நிலங்களின் விஷயத்தில் அவைகளின் பூரணமான தீர்வையும தண்ணீர்வரியுமாகும.

ரெயில்வே கம்பெனியார்களுடைய அனுபோகத்திலிருக்கும் நிலங்களுக்காக நிலவரி கட்டுவதினின்றும அவர்கள் நிவாரணைசெய்யப்பட்டிருக்கிறார்கள.

சிலவகை இனாங்களை ரயத்துவாரி நிலங்களைப்போல பாவிக்கவேண்டும்; அவைகளில சேர்க்கப்பட்ட தரிசு நிலத்தை இந்த வரியினின்றும நிவாரணைசெய்வது சாத்தியமாகாது. சிலவகை இனாங்களுக்கு ஜோடி வரி விதிக்கையிலே, புதிய ஸெட்டில்மெண்டில அனுசரிக்கப்பட்ட பிரிவினை ஏற்பாட்டையே அனுசரிக்கவேண்டும்; உதாரணமாக, யாதொரு இருபோக இனாம பூமியை ஸெட்டில்மெண்டில ஏகபோகமாக தரம பிரித்திருந்தால, அந்த பூமியிலே இருபோகம சாகுபடி செய்யப்பட்டாலன்றி மற்றபடி, ஜோடி வரியை ஏகபோகத்தீர்வையை அனுசரித்து விதிக்கவேண்டும; இருபோகம சாகுபடி செய்யப்படுகிறபக்ஷத்திலே, ஒன்றரைப்பங்கு தீர்வையின்பேரில ஜோடி வரியை விதிக்கவேண்டும. யாதொரு நஞ்சை இனாம நிலமானது புஞ்சையாகத் தரம பிரிக்கப்பட்டிருந்து, இனாம்தார ஸர்க்கார தண்ணீரைக்கொண்டு நஞ்சை மாமூல சாகுபடிசெய்தால, புஞ்சைத்தீர்வையுடன் தண்ணீர்வரியையும சேர்த்து அதன்பேரில கணக்கிட்டு நிலவரியை விதிக்கவேண்டும; மேலும, புஞ்சை இனாம நிலமானது நஞ்சையாகத் தரம பிரிக்கப்பட்டிருந்து, இனாம்தார தம்முடைய சொந்தக்கிணற்று ஜலத்தைக்கொண்டு புஞ்சை மாமூல சாகுபடிசெய்தால, ஜோடி வரியை நஞ்சைத்தீர்வையின்பேரில கணக்கிடவேண்டும.

தீர்வையில ஏதாவது வஜா செய்திருந்தால அதைக் கவனியாமலே மொத்த டிமாண்டின் மேலும செலுத்தவேண்டியதாயிருக்கும தண்ணீர்வரியின்மேலும நிலவரியைச் சேர்த்து வசூல்செய்யவேண்டும; வரி எதன்மேல கணக்கிடப்படுகிறதோ அந்தத்தொகை குறையும்படி வஜாசெய்யக்கூடாது. எந்த இருபோக நிலத்தின்மேல இருபோகத்தீர்வை ஒன்றாய்ச்சேர்க்கப்பட்டிருக்கிறதோ அல்லது அந்தத்தீர்வை விஷயமாய சலுகையான ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதோ அப்படிப்பட்ட இருபோக நிலத்துக்கு, இரண்டாம்போகத்தீர்வை வசூல்செய்யப்பட்டாலும சரி, வஜா செய்யப்பட்டாலும சரி, அப்படிப்பட்ட இருபோகத்தீர்வையின்பேரில வரிசெலுத்தவேண்டும.

நிலத்தீர்வையை வசூல்செய்யாமல நிறுத்திவைத்திருப்பதனால சாதாரணமாய் இந்த வரியையும வசூல்செய்யாமல நிறுத்திவைத்திருக்கவேண்டுமென்று ஏற்படமாட்டாது. ஆயினும, யாதொரு கிராமத்தின் நிலத்தீர்வையின் எந்த தவணையாவது முழுதிலும் வசூல செய்யாமல நிறுத்திவைக்கப்பட்டாலும வஜா செய்யப்பட்டாலும, இந்த வரியின் காரணமாய ஏற்படும டிமாண்டும வசூல் செய்யாமல

சிறிது காலத்துக்கு நிறுத்திவைக்கப்பட்டு, நிலத்தீர்வையின் அடுத்த தவணையுடன் கூட வசூல்செய்யப்படும.

க்விட்ரெண்ட், பூமிவாடகை (கவெர்ணமெண்ட் ரெண்ட்) அல்லது இதர தீர்வை செலுத்தி கைப்பற்றியிருந்து வந்தாலொழிய கிராம நத்தம் அல்லது வீட்டு மனையில அடங்கியிருக்கும நிலங்களின்பேரில் இந்த வரி விதித்து வசூல செய்யக்கூடாது. இந்த விஷயங்களிலே, கவிட் ரெண்ட் முதலியவைகளை அனுசரித்து மேற்படி வரியை விதிக்கவேண்டும்.

காட்டு உற்பத்தியையாவது ஸாககார தரிசுநிலங்களின்மேலும புறம்போக்கு நிலங்களின்மேலும பயிராயிருக்கும மரங்களையாவது குத்தகைக்கு எடுக்கிறவர்களிடமிருந்து சேரவேண்டியிருக்கும் குத்தகைத்தொகைகளின்மேல் இந்த வரி விதிக்கக்கூடாது. பிரத்தியேகமான மரவரி விதித்து வசூல்செய்யப்பட்டால, அதன்பேரில் நிலவரி விதிக்கக்கூடாது.

(ப்ரொஹிபிடரி) தடுக்கும்படியான தீர்வையாகிலும் தண்ணீர் வரியாகிலும விதிக்கப்பட்டால, நிலவரியை, அந்தத் தீர்வையை அல்லாமல சாதாரணமான தீர்வையையாவது தண்ணீர்வரியையாவது அனுசரித்துக கணக்கிடவேண்டும.

பூமிவாடகை அல்லது கவிட்ரெண்ட் செலுத்துவதற்கு உட்பட்டு தனி நபர்களைச் சேர்ந்த கலவனயிருக்கும பங்களாக்களும தோட்டங்களும யாதொரு நிலத்தில அடங்கியிருந்தால, இந்த நிலவரியை அப்படிப்பட்ட கவிட்ரெண்ட் முதலியவைகளின்மேல கணக்கிட்டு விதிக்கவேண்டுமேயன்றி, மற்றப்படி அந்த நிலத்துக்குச் செலுத்த வேண்டியதாயிருக்கும தீர்வையின்மேல கணக்கிட்டு விதிக்கக்கூடாது. சர்க்கார் கட்டிடங்கள இருக்கும் நிலங்களும இந்த வரி செலுத்த உட்பட்டவைகளாகும.

பப்ளிக் வொர்க்ஸ் இலாகாதாரருடைய விசாரணையிலிருந்து அனுபோகத்திலிருந்து வரும நிலங்களின்மேல விதித்து வசூல செய்யப்படும் குத்தகைத்தொகைகளை அனுசரித்து இந்த வரி செலுத்தத் தக்கதாகும்.

எவைகளுக்காக கிராமங்களில நிலங்கள பிரத்தியேகமாய விடப்பட்டு புறம்போக்கென்று தரம பிரிக்கப்பட்டிருக்கிறதோ அப்படிப் பட்ட சமுதாய காரியங்களைப்போன்ற பள்ளிக்கூடங்கள் ஆஸ்பத்திரிகள் முதலிய பொதுஜன காரியங்களுக்காக லோகல்போர்டார்கள் உபயோகித்துவரும் நிலங்கள இப்படிப்பட்ட நிலவரி செலுத்த வேண்டியதில்லையென்று தீர்மானம் செய்யப்பட்டிருக்கின்றன.

லோகல் பண்ட பங்களாக்களிருக்கும் மனைகளும் பிரயோஜனகரமான காரியங்களுக்காக லோகல் போர்டார்களின் அனுபோகத்திலிருந்து வரும் கிராம நத்த பூமிகளும் இந்த நிலவரி செலுத்த உட்பட்டவையல்ல.

தீர்வையில்லாமல் கைப்பற்றியிருந்துவரும் நிலங்களில் பயிராயிருக்கும் மரங்களைக் குத்தகைக்கு விடுவதனால் லோக்கல்போர்டார்களுக்கு வருகிற வருமானத்தின்மேல் வரி விதிக்க வாங்கத்தக்கதல்ல. ஆயினும், அந்த நிலங்கள் தீர்வை செலுத்துவதற்குட்பட்டு கைப்பற்றியிருந்து வந்தால், இந்த வரியை அந்தத் தீர்வையை அனுசரித்து விதித்து வசூல்செய்யவேண்டும்.

2. **வீட்டுவரி.**—லோக்கல்போர்டுகளின் சம்பந்தமாகச் சிப்பந்தி உத்தியோகஸ்தர்கள் செய்யவேண்டியிருக்கிற சில வேலைகளில் இன்னுமொரு அம்சமாவது வீட்டுவரியாம்.

யாதொரு யூனியனுடைய அதற்குள்ளேயிருக்கிற வீடுகளின்மேல், விளம்பரத்தில் குறிக்கப்பட்ட தேதியிலிருந்தும் நிஷ்கர்ஷை செய்யப்பட்ட விகிதங்களின் பிரகாரமும், வரிவிதித்து வசூல்செய்யப்படுமென்று, கவர்ன்மெண்டாருடைய அங்கீகாரத்தைப்பெற்றுக்கொண்டு அதைச்செய்ய டிஸ்டிரிக்ட் போர்டாருக்கு அதிகாரமுண்டு.

“ யூனியன் ” என்பது - போர்டாரால் பிறப்பிக்கப்பட்ட விளம்பரத்தின் பிரகாரம் யூனியன் என்று நிர்ணயிக்கப்படக்கூடிய யாதொரு ரெவினியு கிராமம் அல்லது கிராமங்களென்றாவது, அவைகளின் யாதொரு பாகம் அல்லது பாகங்களென்றாவது அர்த்தமாகும்.

யாதொரு யூனியனுக்காக ஏற்படுத்தப்பட்ட நபர்களின் கூட்டமானது பஞ்சாயத்து என்று சொல்லப்படும்.

யூனியனிலடங்கிய பிரதி ரெவினியு கிராமத்தின் அல்லது அப்படிப்பட்ட கிராம பாகத்தின் பெரியதனக்காரரும் உத்தியோக முறைமையில் பஞ்சாயத்தைச்சேர்ந்த மெம்பராவார்.

யாதொரு கிராமத்தின் அல்லது அந்த கிராமத்தைச்சேர்ந்த யாதொரு பாகத்தின் பெரிதனக்காரர் இன்னாரென்பதைப்பற்றி ஏதேனும் சந்தேகம் நேரிட்டால், அந்த டிவிஷன் விசாரணை ரெவினியு உத்தியோகஸ்தரானவர் அவ்விஷயத்தைத் தீர்மானஞ் செய்வார்.

யாதொரு யூனியனிலுள்ள பிரதி கிராமத்தின் கர்ணமும், அந்த யூனியன் பஞ்சாயத்தின் அக்கிராசனாதிபதியினுடைய வேண்டுகோளின்மேல், அவர் கர்ணமாயிருக்கிற கிராமத்திலாவது கிராமங்களிலாவதுள்ள எல்லா வீடுகளின் ஜாபிதா தயார்செய்து, அந்த ஜாபிதாவில் அந்த வீடுகளின் சொந்தக்காரர்கள் அநுபோகதாரர்கள் ஆகிய இவர்களுடைய பெயர்களைப் பதிவுசெய்து அதை அந்த அக்கிராசனாதிபதியினிடத்தில் கொடுப்பது அந்த கர்ணத்தின் கடமையாயிருக்கிறது.

இந்த வேலைக்காகக் கர்ணங்கள் - அந்த யூனியன்மேல் அதிகாரமுடைய தாலூகா போர்டின் அங்கீகாரத்திற்குட்பட்டு, பஞ்சாயத்தாரால் கூட்டத்தில் நிஷ்கர்ஷை செய்யப்படக்கூடிய பிரதிபலன் பெற்றுக்கொள்ள அர்ஹராவார்கள்.

யாதொரு பஞ்சாயத்தின் அக்கிராசனாதிபதியானவர் - லோகல் போர்டுகளாக்டின் காரியங்களில் யாதொன்றின்பொருட்டு, யூனியனைச்சேர்ந்த யாதொரு கிராமத்தைப்பற்றிய யாதொரு ஸ்டேட்மென்டையாவது, கணக்கையாவது, காலாந்தர கணக்கையாவது (ரிடர்ன்), யாதொரு நியாயமான காலத்திற்குள் தயார்செய்து கொடுக்கும்படி, அந்த யூனியன் எந்த டிவிஷனில் இருக்கிறதோ அந்த டிவிஷனைத் தம் வசத்திலுடைய ரெவினியு உத்தியோகஸ்தருடைய அங்கீகாரத்தின்மேல், எழுத்துமூலமான உத்தரவைக்கொண்டு அந்த கிராமத்தின் கர்ணத்தைக்கேட்க அந்த அக்கிராசனாதிபதிக்கு அதிகாரமுண்டு. அப்படிப்பட்ட வேண்டுகோளுக்கு இணங்கி நடப்பது கர்ணத்தின் கடமையாகும். நியாயமான காரணமில்லாமல் அப்படி செய்யத் தவறினால், யாதொரு மாஜிஸ்ட்ரேட்டின் முன்னிலையில் குற்றம் ஸ்தாபனமாகிற பக்ஷத்தில், 20 ரூபாய்க்கு அதிகப்படாமல் கர்ணம் அபராதத்திற்குள்ளாகவேண்டிவரும்.

3. மீன்பிடிக்கும் துறை.—லோகல்பண்டுகளைச் சேர்ந்த மூன்றாவது அம்சமாவது, மீன்பிடிக்கும் துறைகளைக் குத்தகைவிடுவதனால் வசூலாகிற வாடகையாம். கிராம உத்தியோகஸ்தர்கள் தங்களுடைய கிராமங்களிலுள்ள நீர்ப்பாய்ச்சல் கட்டுவேலைகளைச்சேர்ந்தவைகளாய் வாலாயமாகக் குத்தகைவிடப்படும் மீன்பிடிக்கும் துறையானது பிரதிவருஷமும் தகுந்தகாலத்தில் ஏலம்போடப்படுகிறதா என்று பார்க்கவேண்டும்.

4. பலவகைப்பட்டவை.—யாதொரு லோகல் போர்டார் அல்லது மியுனிசிபல் கௌன்ஸில் என்னும் சங்கத்தாரிடத்தில் சங்கிரமித்திராத ரஸ்தாக்கள் அல்லது வீதிகளின் விசாரணையானது ஜில்லா ரெவினியு அதிகாரிகளைப் பொறுத்ததாயிருக்கிறது. அப்படிப்பட்ட ரஸ்தாக்கள் அல்லது வீதிகளை ஆக்ரமிக்கும் விஷயத்தைக்குறித்துத் தாசில்தாருக்குத் தெரிவிப்பது கிராம உத்தியோகஸ்தர்களின் கடமையாகும். யூனியன்களில் அடங்கியிராத கிராமங்களின் எல்லைகளுக்குள்ளிருக்கும் லோகல்பண்ட் ரஸ்தாக்களின் பாகங்களின் விஷயத்திலுங்கூட, ஆக்ரமிப்பைத் தெரிவிக்கும் கடமையானது இது சம்பந்தப்பட்ட கிராம உத்தியோகஸ்தர்களைப் பொறுத்ததாயிருக்கிறது. மியுனிசிபாலிடிகளிலும் யூனியன்களிலும், இனி ஆக்ரமிக்க உத்தேசித்திருந்தாலுஞ்சரி இப்போது ஆக்ரமித்திருந்தாலுஞ்சரி அப்படிப்பட்ட ஆக்ரமிப்புகளைக்குறித்துத் தெரிவிக்கவேண்டிய பிரதம பொறுப்பானது - மியுனிசிபல் உத்தியோகஸ்தர்கள் அல்லது யூனியன் உத்தியோகஸ்தர்களைச் சேர்ந்ததாயிருக்கிறது; ஆயினும், எவரேனும் ஆக்ரமித்திருந்து அது தங்களுக்குத் தெரிய வந்திருக்கிற பக்ஷத்திலே, அதைக் கிராம உத்தியோகஸ்தர்கள் மியுனிசிபல் அல்லது யூனியன் அதிகாரிகள் கவனிக்கும்படிச் செய்யவேண்டும்.

கிராம உத்தியோகஸ்தர்கள் தங்களுடைய கிராமங்களின் எல்லைகளுக்குட்பட்ட மரச்சாலைகளுக்கு யாதொரு கெடுதியும் செய்யவொட்டாதபடி பார்த்துக்கொள்ளவேண்டும். ஷை சாலைகள் லோ

கல்பண்ட் என்ஜினியர்-அவருடைய சிப்பந்தி-ஆகிய இவர்களுடைய விசாரணையின்கீழ் வைக்கப்பட்டால், விழுந்துபோன மரங்களையும் பட்டுப்போன மரங்களையும் மிகவும் அநுகூலமாக விற்பனை செய்விக்கும் விஷயத்தில் அந்த லோகல்பண்ட் என்ஜினியருக்கும் அவருடைய சிப்பந்திகளுக்கும் உதவியாகவும் கிராம உத்தியோகஸ்தர்கள் இருக்கவேண்டும். ஜனங்கள் நடமாடும் இடங்களில் மரங்களை வைக்கவேண்டியது உசிதமாக இருந்தால் அதைக் குறித்து சம்பந்தப்பட்ட கிராமப்பெரியதனக்காரர் தாசில்தாருக்கு ரிபோர்ட் செய்யவேண்டும்.

யாதொரு கிராமப்பெரியதனக்காரர் - தன் கிராமத்திலே லோகல் போர்டுகளின் வசத்தில் ஒப்புவிக்கப்பட்ட சத்திரங்களையும் முசாபரி பங்களாக்களையும் கவனிக்கவேண்டும். அவைகளுக்காகச் சிப்பந்தி ஏதேனும் ஏற்படுத்தப்பட்டிருந்தால், அவர்கள் தங்களுடைய வேலையைக் கிரமமாகச் செய்கிறார்களா என்று அவர் பார்க்கவேண்டும். அந்தக் கட்டடங்களுக்கு ஏதாவது மராமத்து அவசியமாக இருந்தால், அது சங்கதியைத் தாசில்தாருக்கு ரிபோர்ட் பண்ணவேண்டும். முசாபரி பங்களாக்களின் விஷயத்தில், நிர்ணயிக்கப்பட்ட கட்டணம் கிரமமாய் வசூல்செய்யப்பட்டு தாலூகாவுக்கு இரிசால் செய்யப்படுகிறதா என்றும் அவர் பார்க்கவேண்டும்.

குடிப்பதற்காகத் தண்ணீர் மொள்ளப்படுகிற ஒருவருக்கேயுரிய யாதொரு ஜலாதாரமானது சுத்திசெய்யப்படவேண்டியதாக இருந்தாலும், அந்த ஜலாதாரமானது குடிப்பதற்காகத் தண்ணீர் மொண்டு உபயோகிக்கக் கூடாததாகக் காணப்பட்டாலும், அது சங்கதியைக் கிராமப்பெரியதனக்காரர் தாசில்தாருக்கு ரிபோர்ட் பண்ணவேண்டும்; அவர், தாலூகா போர்டின் ப்ரெஸிடெண்டுக்குத் தெரிவிப்பார்.

யாதொரு கட்டடமாவது நிலமாவது சௌகரியக்குறைவான ஸ்திதியிலாகிலும் அயலிலுள்ளவர்களுக்கு அருவருப்பைக் கொடுக்கத்தக்க ஸ்திதியிலாகிலும் இருந்தால், அது சங்கதியைத் தாசில்தாருக்கு ரிபோர்ட் பண்ணவேண்டும்; அவர் அந்தக் கட்டடத்தையாயினும் நிலத்தையாயினும் சுத்திசெய்விப்பார் அல்லது ஜலம் வற்றச் செய்விப்பார்.

கிராம உத்தியோகஸ்தர்கள் தங்களுடைய கிராமங்களிலுள்ள சுடுகாடுகளையும் (பிரேதங்களைப்) புதைக்கும் இடங்களையும் பார்வையிடவேண்டும்; மேலும், அவைகளில் ஏதாவது தாலூகா போர்டாரால் கொடுக்கப்படும் லைஸென்ஸ் இல்லாவிட்டால், அது சங்கதியைக் கிராம உத்தியோகஸ்தர்கள் உடனே தாசில்தாருக்குத் தெரிவிக்கவேண்டும்; இவர் இது சம்பந்தப்பட்ட தாலூகா போர்ட் ப்ரெஸிடெண்டுக்கு எழுதுவார். யாதொரு குடியிருக்குமிடம் அல்லது குடிப்பதற்கான தண்ணீர் கிடைக்கும் ஜலாதாரத்திலிருந்து 200 கெஜ தூரத்துக்குள்ளே, இது காரியத்துக்கென்று கிரமமாய் ரெஜிஸ்டர் செய்யப்பட்டோ அல்லது லைஸென்ஸ் கொடுக்கப்பட்டோ இருக்கிற இடங்கள் தவிர வேறே இடங்களில் பிரேதங்களைக்

கொளுத்துகிற அல்லது புதைக்கிற விஷயங்களையும் அவர்கள் மேலான அதிகாரிகளுக்குத் தெரிவிக்கவேண்டும்.

வித்தியா இலாகா உத்தியோகஸ்தர்கள் தற்காலத்திலுள்ள கிராமப்பாடசாலைகளை விருத்திசெய்யவும் புதுப்பாடசாலைகளை ஸ்தாபனஞ்செய்யவும் பிரயாசை எடுத்துக்கொள்ளும்போது கிராம உத்தியோகஸ்தர்கள் தங்களாலியன்ற உதவியையெல்லாம் அவர்களுக்குச் செய்யவேண்டும்.

டிஸ்ட்ரிக்ட் போர்டிலாவது தாலூகா போர்டிலாவது யாதொரு யூனியன் பஞ்சாயத்திலாவது மெம்பர்களாயிருக்கும் கிராம உத்தியோகஸ்தர்கள்-அந்த டிஸ்ட்ரிக்டின் கலெக்டருடைய எழுத்து மூலமான அநுமதியைப் பெற்றிருந்தாலொழிய, அப்படிப்பட்ட போர்டாரோடு செய்யப்பட்ட யாதொரு காண்ட்ராக்டில் நேராகவாவது வேறுவிதமாகவாவது ஆதாயசம்பந்தமுடையவர்களாயிருக்கக்கூடாது. அப்படிப்பட்ட அநுமதியில்லாமல் அவ்விதமாக ஆதாயசம்பந்தமுடையவர்களானால், அவர்கள் ஒருவருஷகாலத்திற்கு மேற்படாமல் வெறுங்காவலில் வைக்கப்படுவதற்காவது அபராதம் விதிக்கப்படுவதற்காவது இவ்விரண்டு தண்டனைகளுக்குமாவது உள்ளாகத்தக்க இந்தியன் பீனல் கோடின் 168-வது பிரிவின்படிக்கான யாதொரு குற்றத்தைச் செய்தவர்களாக எண்ணப்படுவார்கள்.

யாதொரு கம்பெனியில் பங்குக்காரராகவாகிலும் மெம்பராகவாகிலும் இருக்கிற காரணத்தினாலே, யாதொரு நபரானவர் - அப்படிப்பட்ட கம்பெனியில் டைரெக்டராயிருந்தாலொழிய அந்தக் கம்பெனிக்கும் லோகல் போர்டுக்கும் ஏற்பாடாயிருக்கும் யாதொரு காண்ட்ராக்டில் ஆதாயசம்பந்தமுடையவராக எண்ணப்படமாட்டார்.

### 38. கால்நடைகளின் பவுண்ட் என்னும் பட்டித்தொட்டிகள்.

1. கிராமப்பெரியதனக்காரர்கள் தங்களுடைய கிராமங்களில் கட்டப்பட்டிருக்கும் பவுண்டுகளுக்கு உத்தியோக முறைமையில் விசாரணை கர்த்தர்களாவார்கள்; மேலும், ஆடுமாடு முதலியவை அக்கிரமமாய் நுழைவதைக் குறித்த 1871-ம் வருஷத்து 1-வது ஆக்டிலும் ஸ்பெஷல் பண்ட் கோடிலும் கண்ட நிபந்தனைகளின் அடியிற் கண்ட சுருக்கத்தை அவர்கள் நன்றாக அறிந்திருக்கவேண்டும்.

2. **ஆடு மாடு முதலிய கால் நடைகளைப் பவுண்டில் அடைக்க அதிகாரம் கொடுக்கப் பெற்றிருக்கும் நபர்கள்.**—யாதொரு நிலத்தைச் சாகுபடி செய்கிறவராவது அதை அநுபவிக்கிறவராவது, யாதொரு நிலத்திலே பயிரிடுவதற்காகவாகிலும் அதிலுள்ள மாசூலுக்காகவாகிலும் முன்பணம் கொடுத்திருக்கிறவரெவராவது, அப்படிப்பட்ட பயிர் அல்லது மாசூலாகிலும் அதில் எவ்வளவாகிலும் எவருக்கு விற்கப்பட்டிருக்கிறதோ அல்லது எவரிடத்தில் கொடுத்து வைக்கப்பட்டிருக்கிறதோ அவராவது - அப்படிப்பட்ட நிலத்திலே அக்கிரமமாய் நுழைந்து அதற்காகிலும் அதிலுள்ள யாதொரு பயிர் அல்லது மாசூலுக்காகிலும் சேதம் உண்டுபண்ணுகிற எவையேனும் கால் நடைகளைப் பிடித்தாயினும், பிடிப்பித்தாயினும் அந்த நிலமிருக்கிற கிரா

மத்துக்காக ஏற்படுத்தியிருக்கிற பவுண்டுக்கு இருபத்திநான்கு மணி நேரத்துக்குள்ளாக அவைகளை அனுப்பலாம் அல்லது அனுப்பும்படிச் செய்யலாம்.

குறிப்பு.—கிராம ஊழியக்காரர்கள் உள்பட சகல போலீஸ் உத்தியோகஸ்தர்களும் - வேண்டியபோது, (a) அப்படி பிடிப்பதற்குத் தடை செய்யப்பட்டால் அதை விலக்குவதற்கும், (b) அப்படி பிடிக்கிறவர்களிடத்திலிருந்து விடுவித்துக்கொண்டு போவதை விலக்குவதற்கும் உதவிசெய்யவேண்டும்.

3. பொதுவான பாட்டைகளையும், உல்லாச பூமிகளையும், தோப்பு தோட்டங்களையும், கால்வாய்களையும், ஜலதாரை கட்டுவேலைகளையும், கரைகளையும், மற்றும் அப்படிப்பட்டவைகளையும் காத்துப் பாராவையிட்டுக்கொண்டிருக்கிறவர்களும், போலீஸ் உத்தியோகஸ்தர்களும் அப்படிப்பட்ட பாட்டைகள், பூமிகள், தோப்பு தோட்டங்கள், கால்வாய்கள், ஜலதாரை கட்டுவேலைகள், கரைகள் மற்றும் அப்படிப்பட்டவைகளுக்காவது, அப்படிப்பட்ட பாட்டைகள் கால்வாய்கள், ஜலதாரை கட்டுவேலைகள் அல்லது கரைகளின் பக்கங்களுக்காவது சரிவுகளுக்காவது சேதம் உண்டுபண்ணிக்கொண்டாவது அல்லது அவற்றின் மேல் கட்டியாய்த் திரிந்துகொண்டாவது இருக்கிற எவையேனும் கால்நடைகளைப் பிடிக்கலாம் அல்லது பிடிப்பிக்கலாம்; மேலும், அவர்கள் - அதி சமீபத்திலிருக்கிற பவுண்டுக்கு, இருபத்திநான்குமணி நேரத்துக்குள்ளாக அவைகளை அனுப்பவேண்டும் அல்லது அனுப்பும்படிச் செய்யவேண்டும்.

4. கால்நடைகள் பவுண்டில் அடைக்கப்படும்போது அனுசரிக்கவேண்டிய நடவடிக்கை முறை —யாதொரு பிராணி பவுண்டுக்குக் கொண்டுவரப்படுமேயானால், பவுண்ட்கீப்பர் - XXXIII-ம் கி. அப்பக்கத்திற்கண்ட சுறாப்படி மூன்று பிரதிகளாக உடனே ரசீது தயார்செய்யவேண்டும்; இவைகளில் ஒரு பிரதியைப் பவுண்டில் அடைத்தவருக்குக் கொடுத்துவிடவேண்டும்; மேலும், அவர் - XXXV-ம் கி. அப்பக்கத்திற்கண்ட சுறாப்படியுள்ள ரிஜிஸ்டரில் 1 முதல் 6 வரையிலுள்ள கலங்களில் எழுதவேண்டியதைச் சுத்தமாயும் ஜாக்கிரதையாயும் எழுதிவரவேண்டும். அதன் மேல், அந்தக் கால்நடைகள் ஒருவகை செய்யப்படுகிறவரையிலே, அவைகளுக்குத் தக்கபடி தீனிபோட்டு தண்ணீர் காட்டும் விஷயத்தில் அவர் உத்தரவாதியாவார்.

5. அபராதங்கள் —பவுண்டில் அடைக்கப்பட்ட ஒவ்வொரு பிராணிக்காகவும், பவுண்ட்கீப்பர் பின்வருகிற விகித நிர்ணயப்படி அபராதம் வசூல் பண்ணவேண்டும் :—

| | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|
| யானை .. ... ... | 2 | 0 | 0 |
| ஒட்டகம் அல்லது எருமை .. | 0 | 8 | 0 |
| ஆண்குதிரை, பெண்குதிரை, விரையடித்த குதிரை, மட்டக்குதிரை, ஆண் குதிரைக்குட்டி, பெண்குதிரைக்குட்டி, கோவேறு கழுதை, ரிஷபம் அல்லது எருது, பசு அல்லது கடாரி ... ... ... | 0 | 4 | 0 |

| | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|
| கன்றுக்குட்டி, கழுதை அல்லது பன்றி | 0 | 2 | 0 |
| ஆட்டுக்கடா, பெட்டை ஆடு, செம்மறியாடு, செம்மறியாட்டுக்குட்டி, வெள்ளாடு அல்லது வெள்ளாட்டுக் குட்டி ... ... ... | 0 | 1 | 0 |

குறிப்பு.—(1) குறித்த யாதொரு விஸ்தீர்ணத்துக்காக ஆலோசனை சபையிலுள்ள கவர்னர் அவர்கள் பிரத்தியேகமாய் அபராதவீதங்களைப் பிரசித்தஞ் செய்திருந்தால், அந்த வீதங்களை விதித்து வசூல்செய்யவேண்டும்.

(2) கால்நடை என்பதன் அர்த்தத்தில் மான்களைச் சேர்க்கவில்லை யாகையால், அவைகள் அபராதத்தினின்றும் நிவாரணைசெய்யப் பட்டிருக்கின்றன.

6. தீனிச்செலவுகள்—பவுண்டில் அடைக்கப்பட்ட கால்நடைகளின் விஷயத்திலே தீனிபோட்டதற்காகவும் தண்ணீர் காட்டினதற்காகவும் வாங்கப்படும் கட்டணங்களை வசூல்செய்யவேண்டிய வீதங்கள் டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்ட்ரேட்டால் நிர்ணயிக்கப்படும். இந்த வீதங்களை உச்சவீதங்களாக எண்ணவேண்டும்; பவுண்ட்கீபர் தனக்கு வாஸ்தவமாய்ப் பிடித்திருக்கும் செலவுக்குத் தக்கபடி இவைகளுக்கு மேற்படாமல் வசூலிக்கவேண்டும்.

குறிப்பு.—(1) பவுண்டில் அடைக்கப்பட்ட கால்நடைகளின் சொந்தக்காரர்களை அந்தப் பிராணிகள் பவுண்டில் இருக்கும்போது அவைகளுக்குத் தீனிபோடும்படி விடக்கூடாது. இது பவுண்ட்கீபர் செய்யவேண்டியகாரியம்.

(2) வாஸ்தவமாய்ச் செலவு செய்திருந்தாலொழிய தீனிபோட்டதற்காக கட்டணம் எதுவும் வாங்கக்கூடாது.

7. அபராதங்களையும் கால்நடைகளுக்குத் தீனிபோட்டுத் தண்ணீர் காட்டுவதற்கான கட்டண வீதங்களையும் குறித்த ஒரு ஜாபிதாவை, ஒவ்வொரு பவுண்டிலுமாவது அதற்குச் சமீபத்திலாவது எல்லாருக்கும் தெரியும்படியான ஓரிடத்திலே ஒட்டிவைக்கவேண்டும்.

8. அபராதங்களையும் தீனிச்செலவுகளையும் வசூல்செய்வது.—யாதொரு கால்நடையை விடும்படி கேட்டவுடனே, பவுண்ட்கீபர் அந்தப்படி கேட்பவர் அந்தக் கால்நடையின் நியாயமான சொந்தக்காரரென்றாவது அவருடைய ஏஜெண்டென்றாவது தெரிந்து திருப்தியடைந்த பிறகு, நிர்ணயிக்கப்பட்ட அபராதமும் டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்ட்ரேட்டால் நிர்ணயிக்கப்பட்ட வீதத்துக்குட்பட்டு தனக்கு வாஸ்தவமாய்ப் பிடித்திருக்கும் தீனிச்செலவும் செலுத்தப்படுவதன் மேல், அவரிடத்தில் அந்தப் பிராணியை ஒப்பித்துவிடவேண்டும். அந்தப்படி செலுத்தப்பட்ட தொகைக்காக, XXXIV-ம் நெ. அனுபந்தத்திற்கண்ட நமூனாப்படி மூன்று பிரதிகளாக ரசீது தயார்செய்து, ஒரு பிரதியை அந்தப் பிராணியை விடுவித்துக்கொண்டுபோகிறவரிடத்தில் கொடுத்து, அவர் கால்நடையை விடுவித்துக்கொண்டு போனதற்கு அடையாளமாக எதிரிடைப் பிரதியின் பின்புறத்திலாவது XXXV-ம் நெ. அனுபந்தத்திற்கண்ட நமூனாப்படிக்குள்ள

ரெஜிஸ்டரில் இதற்காக விடப்பட்டிருக்கும் கலத்திலாவது அவருடைய கையெழுத்தை வாங்கவேண்டும். அதன்பிறகு அந்த ரெஜிஸ்டரில் அவசியமாய்ச் செய்யவேண்டிய பதிவுகளை பவுண்ட்கீபர் ஜாக்கிரதையாய்ச் செய்யவேண்டும்.

9. **ஸ்டேஷன் ஹௌஸ் ஆபீஸருக்கு ரிபோர்ட் செய்வது முதலியவை.**—பவுண்டில் அடைக்கப்பட்ட யாதொரு கால்நடையை அது பவுண்டில் அடைக்கப்பட்ட தேதியிலிருந்து ஏழு தினத்துக்குள்ளாக விட்டுவிடும்படி எவரும் கேட்காமலிருந்தால், பவுண்ட்கீபர் - XXXV (a) நெ. குறிப்பிட்ட அநுபந்தத்திற் கண்ட நமூனைப்படி மூன்று பிரதிகளாக ஒரு ரிபோர்ட் தயாரசெய்து, மேலேயுள்ள பிரதியை அதிசமீபத்திலுள்ள ஸ்டேஷன் ஹௌஸ் ஆபீஸருக்காவது, இது விஷயமாய் டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்ட்ரேட்டால் நியமிக்கப்படும் வேறே யாதொரு உத்தியோகஸ்தருக்காவது அனுப்பவேண்டும். ஆயினும், இந்தப்பிராணி வாஸ்தவமாய் விற்பனைக்கு வேண்டியிருக்கிறவரையிலே, அதைப் பவுண்டிலேயே வைத்திருக்கவேண்டும்.

**குறிப்பு.**—பேவாரிசாயுள்ள கால்நடைகளை வாஸ்தவமாய் விற்பனை செய்வதற்கு முன்னே அவைகளை 14 தினம்வரையில் பவுண்டில் வைத்திருக்கவேண்டுமென்று சட்டத்தில் கண்டிருக்கும் நிபந்தனைகளை, அந்தப் பிராணிகளின் விலைமதிப்பானது அவைகளை அந்தக்காலம்வரையில் வைத்துக் காப்பாற்றும் செலவுக்கு சரிக்கட்டிப் போவதற்கு போதுமானதாயிராவிட்டாலுங்கூட அனுசரிக்கவேண்டும்.

10. XXXV (a) நெ. குறிப்பிட்ட அநுபந்தத்திற்கண்ட நமூனைப்படி பவுண்ட்கீபரிடமிருந்து ரிபோர்ட் வந்துசேர்ந்தவுடனே, அதை வரப்பெற்றுக்கொள்ளும் உத்தியோகஸ்தர்—

(a) கால்நடைகளின் சங்கியையும் விவரமும்,
(b) அவைகள் பிடிக்கப்பட்ட இடமும்,
(c) அவைகள் பவுண்டில் அடைக்கப்பட்ட இடமும்

கண்டெழுதியுள்ள ஒரு நோட்டிஸைத் தன்னுடைய ஆபீஸில் எல்லாருக்கும் தெரியும்படியான ஒரு இடத்திலே ஒட்டவேண்டியதுமல்லாமல், அவைகளை பிடித்த இடத்துக்கு அதிசமீபத்திலுள்ள கிராமத்திலும் தண்டோராபோட்டு அவைகளைக் குறித்துப் பிரசித்தஞ்செய்யவும்வேண்டும்.

11. **விற்பனைக்குமுன் செய்யப்படும் தாவாக்கள்.**—பவுண்டில் அடைக்கப்பட்ட கால்நடைகளின் சொந்தக்காரராவது அவருடைய ஏஜெண்டாவது அவைகள் பவுண்டிலிருந்துகொண்டுவரப்படுவதற்கு முன்னே வந்து அவைகளை விடும்படி கேட்கிறபட்சத்திலே, ஸ்டேஷன் ஹௌஸ் ஆபீஸராவது இதர உத்தியோகஸ்தராவது அவரைப் பவுண்ட்கீபரிடம் போகச் சொல்லவேண்டும்; ஆனால், அந்தப் பிராணிகள் ஏற்கனவே விற்பனைக்காக வரப்பெற்றுக்கொள்ளப்பட்டிருந்தால, அபராதமும் செலுத்தவேண்டிய இதர கட்டணங்களும் செலுத்தப்படுவதன்மேல் அவைகளை ஸ்டேஷன் ஹௌஸ் ஆபீஸராவது இதர உத்தியோகஸ்தராவது விடுதலைசெய்யவேண்டும். அந்தப்பிரகாரம் விடும்படி பவுண்ட்கீபரிடம் போய்க்கேட்டால், அவர்-

நிர்ணயிக்கப்பட்ட அபராதத்துடனும் தீனிச்செலவுடனும் கீழே 13-வது பாராவில் கண்டபடி செலவாயிருக்கும் ஏதேனும் தொகையும் சேர்த்துச் செலுத்தப்படுவதன்மேல் அந்தக் கால்நடைகளை விடுதலைசெய்யவேண்டும். ஆயினும், பவுண்ட்கீபர் - யாருக்கு ஏற்கனவே ரிபோர்ட் அனுப்பப்பட்டிருக்கிறதோ அந்த உத்தியோகஸ்தருக்கு அந்தப்படி விடுவித்த சங்கதியைக் குறித்து உடனே தெரிவிக்கவேண்டியதுமல்லாமல், XXXV (a) ஷை. குறிப்பிட்ட அனுபந்தத்திற்கண்ட நமூனாப்படிக்குள்ள (கவுண்டர்பாயிலின்) எதிரிடைப் பிரதியினமேலும், XXXV-ம் ஷை. அனுபந்தத்திற்கண்ட நமூனைப்படிக்குள்ள ரெஜிஸ்டரிலும் அதைக் குறித்துக்கொள்ளவும்வேண்டும். கால்நடைகளைவிடும்படி கேட்டும் செலுத்தவேண்டிய தொகைகளைச் செலுத்தாமலிருந்தால், கீழே 13-வது பாராவில் நிர்ணயிக்கப்பட்ட நடவடிக்கை முறையை அனுசரிக்கவேண்டும்.

குறிப்பு.—விற்பனைக்கு வேண்டியிருக்கும் கால்நடைகளை, விற்பனை நடத்தவேண்டியிருக்கிற இடத்துக்குக் குறிப்பிட்ட மணிநேரத்துக்குச் சற்று முன்தான பவுண்டிலிருந்து கொண்டுவரவேண்டும்.

12. கால்நடைகளை ஒருவகை செய்வது.—நோடிஸ்தேதி முதல் ஏழு தினங்களுக்குள்ளாக அந்தக் கால்நடைகளை எவரும் வந்து விடும்படி கேட்காவிட்டால், பொலீஸ் உத்தியோகஸ்தராவது இது காரியத்துக்காக நியமித்து அனுப்பப்படும் அவருடைய சிப்பந்தியைச் சேர்ந்த யாதொரு உத்தியோகஸ்தராவது - பொதுவான உத்தரவினாலாவது பிரத்தியேகமான உத்தரவினாலாவது அப்போதைக்கப்போது டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்ட்ரேட்டால் கட்டளையிடப்படக்கூடிய இடத்திலும் காலத்திலும் அந்தப்படி கட்டளையிடப்படக்கூடிய திட்டங்களுக்குட்பட்டும், அவைகளை பகிரங்கமான ஏலத்தில் விற்கவேண்டும். ஆனால், அப்படிப்பட்ட எவையேனும் கால்நடைகள் மேற்சொல்லியபடி விற்கப்பட்டால் தகுந்தவிலை கிடைக்கும் போலில்லையென்று டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்ட்ரேட் அபிப்பிராயப்படும் பட்சத்தில், அவைகளை அவருக்கு யுக்தமாகத் தோற்றுகிறபடி ஒருவகை செய்யலாம்.

13. கால்நடைகளை விடும்படியாகக் கேட்டும், விற்பனைக்காகக் குறிப்பிடப்பட்ட காலத்துக்குள்ளே அபராதங்களும் தீனிச் செலவுகளும் செலுத்தப்படாவிட்டாலும் கட்டிவைக்கப்படாவிட்டாலும் அந்தக் கால்நடைகளையாவது அவைகளில் எத்தனை கால்நடைகளை விற்பது அவசியமாயிருக்குமோ அத்தனை கால்நடைகளையாவது மேலே குறிப்பிடப்பட்ட விதமாய் பகிரங்கமான ஏலத்தில் விற்கவேண்டும். வசூல்செய்யத்தக்க அபராதங்களையும், தீனிபோட்டுத் தண்ணீர் காட்டுவதற்குண்டான செலவுகளையும் விற்பனைச்செலவு ஏதாவதிருந்தால் அதையுங்கூட, விற்பனைக்கிரயத்திலிருந்து கழித்துக்கொண்டு, அந்த விற்றமுதலில் மிகுதியிருக்கும் தொகையையும் கால்நடைகள் எவையேனும் மிகுந்திருந்தால் அவைகளையும் சொந்தக்காரரிடமிருந்தாவது அவருடைய ஏஜென்டினிடமிருந்தாவது எழுத்துமூலமான ரசீது பெற்றுக்கொண்டு அவரிடத்தில் ஒப்பித்து

விடவேண்டும். அப்படிப்பட்ட விஷயங்களில் சொந்தக்காரருக்குக் கீழ்கண்ட நமூனாப்படி ஒரு கணக்கு கொடுக்கவும்வேண்டும்:—

(a) பிடிக்கப்பட்ட கால்நடைகளின் சங்கியை;
(b) அவைகள் பவுண்டில் அடைக்கப்பட்டிருந்த கால அளவு;
(c) அபராதத்தொகையும் தீனிச்செலவும் இதர செலவுகளும்;
(d) விற்கப்பட்ட கால்நடைகளின் சங்கியை;
(e) விற்றுவந்த பணம்;
(f) விற்றுவந்த மேற்படி பணமானது இன்னவகை செய்யப்பட்டிருக்கிறதென்பது.

14. கால்நடைகளுக்குத் தகுந்தவிலை கிடைக்காவிட்டாலும், அவைகளை ஏலத்தில் கேட்பவர் இராவிட்டாலும், அது சங்கதியைப் பற்றி தாசில்தாருக்காவது டெபுடி தாசில்தாருக்காவது ரிபோர்ட் செய்யவேண்டும்.

15. கால்நடைகளை விற்றுவந்த பணத்தை இரிசால்செய்வது.—விற்பனை நடத்தும் உத்தியோகஸ்தர் தன்வசத்தில் சேர்ந்திருக்கும் யாதொரு தொகையை விற்பனையினால் கிடைத்த தொகையிலிருந்து கழித்துக்கொண்டபிறகு மிகுதியை, XXXVI-ம் நெ. அனுபந்தத்திற்கண்ட நமூனாப்படி ஒரு கணக்கு சகிதமாகவும் விற்பனை ஜாபிதா ஏதாகிலுமிருந்தால் அது சகிதமாகவும் பவுண்ட்கீப்பரிடம் கொடுத்துவிடவேண்டும். பவுண்ட்கீப்பரானவர் தன்னிடம் கொடுக்கப்பட்ட தொகைக்கு, XXXIV-ம் நெ. அனுபந்தத்திற்கண்ட நமூனாப்படி ஒரு ரசீது கொடுக்கவேண்டும். அவர் அந்த ரசீது கொடுக்கும்போதே XXXV-ம் நெ. அனுபந்தத்திற்கண்ட நமூனாப்படிக்குள்ள தன்னுடைய ரெஜிஸ்டரில் அவசியமான பதிவுகளைச் செய்யவேண்டும்.

16. பிரதிபலன் விகிதம்—பவுண்ட்கீப்பர்கள்.—பவுண்ட்கீப்பர்களுக்குக் கொடுக்கவேண்டிய சம்பளமானது - அடியிற்கண்ட வரையறைகளுக்குட்பட்டு, ஒவ்வொரு மாசத்தில் வசூல் செய்யப்பட்ட அபராதத்தில் நூற்றுக்கு 50 வீதப்படி சாதாரணமாய் கணக்கிடப்படுகிறது. மாதத்தின் மொத்த வசூலானது ஒரு ரூபாய்க்குக் குறைவாயிருந்தால், வசூல்செய்யப்பட்ட மொத்தத்தொகையையும் அடையப் பவுண்ட்கீப்பருக்கு பாத்தியமுண்டு; அந்த வசூல் ஒரு ரூபாய்க்கு மேற்பட்டும் இரண்டு ரூபாய்க்குக் குறைவாகவும் இருந்தால், அவருக்கு ஒரு முழு ரூபாய் கொடுக்கப்படும்; மேலும், அது இரண்டு ரூபாய்க்கு மேற்பட்டிருந்தால், அவர் வசூலில் நூற்றுக்கு 50 வீதம் பெறுவார்; இப்படி அவருக்குக் கிடைக்கும் தொகை 5 ரூபாய்க்கு மேற்படக்கூடாது.

குறிப்பு—(1) சில அசாதாரணமான சந்தர்ப்பங்களில், மாதாந்தர வசூலானது சராசரியில் 200 ரூபாய் முதல் 100 ரூபாய் வரையிலிருந்தால் மாதம் ஒன்றுக்கு 6 ரூபாய்க்கு மேற்படாமலும், 400 ரூபாய்க்கு மேற்பட்டால் 7 ரூபாய்க்கு மேற்படாமலும் டிஸ்டிரிக்ட் மாஜிஸ்டிரேட் சம்பளம் கொடுக்கலாம்.

(2) கால்நடைகளிருக்க பவுண்ட்கீப்பர்களே இடம் ஏற்படுத்திக் கொடுக்கும்போது, அவர்கள் வசூலில் நூற்றுக்கு 25 வீதம் அதிகப்படியாய்க்

கமிஷன் பெற்றுக்கொள்ளலாம்; இந்தப்படி அவர்கள் பெறும் தொகையானது ஒரு ரூபாய்க்கு மேற்படக்கூடாது.

**17. கீழ்த்தர ஊழியக்காரர்கள்.**—பவுண்டுகளைச் சுத்தப்படுத்தும் வேலையிலாவது கால்நடைகளைக் காப்பாற்றும் வேலையிலாவது அமர்த்திக்கொள்ளப்பட்டிருக்கும் கீழ்த்தர ஊழியக்காரர்களின் விஷயத்திலே, அவர்களுக்கு பிரதிபலனை கொடுக்கவேண்டுமா என்பதைக் கலெக்டர்களே தீர்மானிக்கும்படி விடப்பட்டிருக்கிறது; ஆயினும், எந்த விஷயத்திலும் கமிஷனானது வசூலிக்கப்பட்ட அபராதத் தொகையில் நூற்றுக்கு 15 வீதத்துக்கு மேற்படக்கூடாது; ஆனால் இந்த கமிஷனானது 2 ரூபாய்க்கு அதிகமாய்ப் போகக்கூடாது. சாத்தியப்படும்போதெல்லாம், கமிஷனை அல்லது சம்பளம் கொடுப்பதைத் தவிர்த்து, பவுண்டில் சேர்க்கப்படும் எருவை அந்த ஊழியக்காரனுக்குப் பிரதிபலனாகக் கொடுத்துவிடவேண்டும்.

**குறிப்பு.**—சில விசேஷ சந்தர்ப்பங்களில், பெருக்குகிறவர்களுக்கு போர்டாருடைய அங்கீகாரத்தைப் பெற்றுக்கொண்டு நிச்சயமான சம்பள வீதப்படி சம்பளம் கொடுக்கலாம்.

**18. எருவைச் சேர்ப்பது.**—பெருக்குகிறவர்களுக்கும் இதர கீழ்த்தர ஊழியக்காரர்களுக்கும் கமிஷனை அல்லது சம்பளம் கொடுக்கப்படும் பவுண்டுகளிலே, பவுண்ட்கீப்பர் அந்த எருவைச் சேர்த்து அதைச் சௌகரியமான காலத்துக்கு ஒருமுறை விற்கவாவது வேண்டும், அல்லது அதைச் சேர்த்து அப்புறப்படுத்தும் பாத்தியதையை ஒரு கண்ட்ராக்டருக்கு குத்தகை விடவாவது வேண்டும். இந்த இரண்டு விஷயங்களில் எதிலும், விற்பனை ஜாபிதாவையாவது குத்தகை உடன்படிக்கையையாவது ஊர்ஜிதம் செய்யும்பொருட்டு, பின்வரும் பாராவில் விவரித்திருக்கிறபடி, தாசில்தாருக்காவது, சுயேச்சையான விசாரணைவகிக்கும் டெப்யுடி தாசில்தாருக்காவது அனுப்பவேண்டும்.

**19. எரு, மரம் முதலியவைகளை விற்பது.**—எருவையாவது பவுண்ட் வளவுக்குள்ளிருக்கும் மரங்களின் பலனை அனுபவிக்கும் பாத்தியதையையாவது அந்த மரங்களிலிருந்து வெட்டப்படும் கிளை முதலியவைகளையாவது விற்கவேண்டியிருந்தால், விற்கப்படவேண்டிய வஸ்துக்களின் உத்தேச மதிப்பைக் கண்டு தாசில்தாருக்காகிலும், சுயேச்சையான விசாரணைவகிக்கும் டெப்யுடி தாசில்தாருக்காகிலும் ரிபோர்ட் செய்யவேண்டும். இது சம்பந்தப்பட்ட உத்தியோகஸ்தர் விற்பனையை நடத்தும்படி உத்தரவு செய்தால், பவுண்ட்கீப்பர் அதைப்பற்றிக் கிரமமாய்ப் பிரசித்தஞ்செய்யவேண்டும்; மேலும், விற்பனைக்காக நியமிக்கப்பட்ட தேதியிலே அந்த வஸ்துக்கள் பகிரங்கமான ஏலத்தில் விற்கப்படவேண்டும். கிரயதாரர்களை விற்பனை ஜாபிதாக்களில் தங்களுடைய கையெழுத்துப் போடும்படியாவது கைநாட்டுப் போடும்படியாவது செய்யவேண்டும். ஏலத்தில் கேட்டிருக்கும் பற்பல விலைகளைக் காட்டும் விற்பனை ஜாபிதாவைப் பிறகு தாசில்தாருக்காவது டெப்யுடி தாசில்தாருக்காவது அங்கீகாரத்திற்காக அனுப்பவேண்டும்; அந்த ஜாபிதா திரும்பிவந்த பிறகு அந்த வஸ்துக்களை ஏலத்தில் எடுத்தவருக்குக் கொடுத்துவிட்டு,

அந்த விலைப்பணத்தை வசூல் செய்யவேண்டும். இந்தப்படி வசூலான தொகையை இதர வசூல் தொகைகளுடன்கூட மாதக்கடைசியில் கஜானாவுக்கு இரிசால் செய்யவேண்டும்; கீழே 22-வது பாராவைப் பார்க்க.

20. கணக்குகளை முடிவுசெய்வது.—மாதக் கணக்குகளை முடிவு செய்வதற்காக தாலூகா ஆபீஸால் நிர்த்தரிக்கப்படும் தேதியன்றைக்கே, பவுண்டுகீப்பர் XXXV-ம் நெ. அனுபந்தத்திற்கண்ட நமூனாப்படியுள்ள ரெஜிஸ்டரில் கடைசியாகச் செய்திருக்கும் பதிவுக்குக் கீழே குறுக்காக ஒரு கோடு கிழித்து, 17-வது, 18-வது பாராக்களின்படி சேரவேண்டிய கமிஷன் எவ்வளவென்று கணக்கிடும் பொருட்டு பற்று வரவு கலங்களைக் கூட்டவேண்டும். பிறகு அவர் முந்திய மாதக் கணக்குகள் முடிவு செய்யப்பட்ட தேதிமுதல் நடந்த சகல வியவகாரங்களையும் விவரமாய்க் காட்டி, தாலூகா ஆபீஸுக்கு அனுப்புவதற்காக XXXV-ம் நெ. அனுபந்தத்திற்கண்ட நமூனாப்படி இந்த ரெஜிஸ்டரிலிருந்து ஒரு எக்ஸ்ட்ராக்ட் தயார் செய்யவேண்டியதுமல்லாமல், அந்த நமூனாவில் அச்சிட்டிருக்கும் கமிஷன் முதலியவைகளை பட்டுவாடா செய்வது விஷயமாயுள்ள ஸர்டிபிகேட்டுகளில் எழுதவேண்டியதைப் பூர்த்தியாய் எழுதி அவைகளில் கையெழுத்துப்போடவேண்டும்.

21. கஜானாவுக்கு இரிசால் செய்வது.—20-வது பாராவில் விவரித்திருக்கும் மாதாந்திர கணக்குகள் முடிவு செய்யப்பட்டவுடனே, கஜானாவுக்கு இரிசால் செய்யவேண்டிய தொகைக்காக XXXVIII-ம் நெ. அனுபந்தத்திற்கண்ட நமூனாப்படி மூன்று பிரதிகளாக சலான் தயார்செய்து, பணத்தையும் இரண்டு சலான் பிரதிகளையும் மாதாந்தரக் கணக்குகளுடன் தாலூகா ஆபீஸுக்கு அனுப்பவேண்டும். வசூலிக்கப்பட்ட தீனிச் செலவுகளைத் தவிர பவுண்டுகீப்பரால் வசூல்செய்யப்படும் சகல தொகைகளும் மேலே கண்டபடி இரிசால் செய்யவேண்டிய தொகையில் அடங்கும்; தீனிச்செலவுகளை கஜானாவுக்கு இரிசால் செய்யவேண்டிய அவசியமில்லை. ஒரு சலான் பிரதி கஜானா உத்தியோகஸ்தரால் கிடைத்ததென்று கிரமமாய் எழுதப்பட்டு திரும்பவும் வரப்பெற்றவுடனே, அந்த ரசீது கிரமமாயிருக்கிறதாவென்று பார்ப்பதற்காக மேற்படி பிரதியைப் பரிசோதித்து, பிறகு அதற்குச் சரியான எதிரிடைப் பிரதியுடன் அதை ஒட்டவேண்டும்.

22. கணக்குகளைத் தாலூகா ஆபீஸுக்கு அனுப்புவது.—அடியிற்கண்டவை மாதாந்தரம் தாலூகா ஆபீஸுக்கு அனுப்பவேண்டிய கணக்குகளும் இதர தஸ்தவேஜுகளுமாகும். அவைகளைச் சரியான காலத்தில் ரவானா செய்வதற்காக சகல முயற்சிகளும் செய்யவேண்டும்; அந்தப்படி ரவானா செய்வதில் ஏதேனும் தாமதம் நேரிட்டால், அதற்கு XXXV-ம் நெ. அனுபந்தத்திற்கண்ட நமூனாப்படிக்குள்ள எக்ஸ்ட்ராக்டில் சமாதானம் எழுதவேண்டும்:—

(a) XXXV-ம் நெ. அனுபந்தத்திற்கண்ட நமூனாப்படியுள்ள பவுண்ட் ரெஜிஸ்டரிலிருந்து எடுத்த எக்ஸ்ட்ராக்ட் (20-வது பாரா).

(b) அந்தந்த மாதத்தில் பிறப்பிக்கப்பட்ட XXXIII, XXXIV, XXXV (a) ஃபா. அனுபந்தங்களிற்கண்ட நமூனுப்படிக்குள்ள ரசீதுகளின் பிரதிகள் (4, 8, 15-வது பாராக்கள்).

(c) இரட்டைப் பிரதியாக இரிசால சலான் (21-வது பாரா).

**குறிப்பு.**—பவுண்டுகீபர் தனக்குச் சேரவேண்டிய கம்மிஷன் முதலியவைகளைப் பெற்றுக்கொள்ள பேரில் தாலூகா ஆபீஸுக்கு வரது ஆஜராக சௌகரியப்படாவிட்டால், அவர்-XXXV-ம் ஃபா. அனுபந்தத்திற்கண்ட நமூனுப்படிக்குள்ள எக்ஸ்ட்ராக்டில் எழுத்து மூலமாகத் தன்னுடைய வஜெண்டைக் குறிப்பிடவேண்டும்; மேலும், இந்த வஜெண்டானவர் பணம் பெற்றுக்கொள்ளும்போது, அந்தப்படி பணம் பெற்றுக்கொண்டதாக ஒப்புக்கொள்ளவேண்டும்.

(d) விற்பனை ஜாபிதாக்கள் எவையேனுமிருந்தால் அவை (19-வது பாரா).

(e) XXXV (a) ஃபா. அனுபந்தத்திற்கண்ட நமூனுக்களின்படியுள்ள பிரதிகளும், XXXVI-ம் ஃபா. அனுபந்தத்திற்கண்ட ரிபோர்ட்டுகளும், பவுண்டிலடைக்கப்பட்ட காலநடைகளை விற்பனை செய்த உத்தியோகஸ்தரிடமிருந்து எவையேனும் விற்பனை ஜாபிதாக்கள் வரப்பெற்றுக்கொள்ளப்பட்டிருந்தால் அவைகளும் (15 - வது பாரா).

23. **கம்மிஷன் பட்டுவாடா செய்வது.**—கஜானாவிலிருந்து தொகை வரப்பெற்றுக்கொண்டதன்மேல், பவுண்டுகீப்பரானவர் தனக்குச் சேரவேண்டிய கம்மிஷனை எடுத்துக்கொண்டு, பிறபாடு கீழ்த்தர ஊழியக்காரர்களுக்குக் கொடுக்கவேண்டிய தொகைகள் எவையேனுமிருந்தால் அவைகளை பட்டுவாடா செய்யவேண்டும்; இது காரியத்துக்காக வைக்கப்பட்டிருக்கும் ரெஜிஸ்டரில் ஒவ்வொரு விஷயத்திலும் அவசியமான ரசீதுகளிலே கையெழுத்து செய்யவேண்டும். அடுத்த மாதத்தின் XXXV-ம் ஃபா. அனுபந்தத்திற்கண்ட நமூனுப்படிக்குள்ள எக்ஸ்ட்ராக்ட் ரெஜிஸ்டரில் இருக்கும் ஸெர்டிபிகேட்டில் எழுதவேண்டியதையெல்லாம் எழுதும்போது, வாஸ்தவமாய் வாங்கி பட்டுவாடா செய்திருக்கும் தொகைமாத்திரம் எழுதியிருக்கிறதாவென்று ஜாக்கிரதையாய்ப் பார்க்கவேண்டும்.

24. **விசேஷ சந்தர்ப்பங்களில் தீனிச்செலவுகளுக்காகச் செய்யப்படும் தாவாக்கள்.**—யாதொரு பிராணியானது பவுண்டில் இறந்துபோனாலும், அல்லது பவுண்டில் அடைக்கப்பட்ட காலநடைகளை விற்பனையிலே கிடைத்த தொகையானது அவைகளுக்காகப் பிடித்திருக்கும் தீனிச்செலவுகளுக்குச் சரிக்கட்டப்போவதற்குப் போதுமானதாகாவிட்டாலும், இந்த ஆக்ட் 22-வது பிரிவின்படி யாதொரு மாஜிஸ்ட்ரேட் அல்லது ஸிவில் கோர்ட்டாருடைய உத்தரவுகளை அனுசரித்தாவது இந்த ஆக்ட் 14-வது பிரிவின்படி டிஸ்டிரிக்ட் மாஜிஸ்ட்ரேட்டாலாவது காலநடைகள் விடுதலை செய்யப்பட்டாலும், பவுண்ட்கீபர்-தான் செலவு செய்திருக்கும் தொகை தனக்குச் செலுத்தப்படவேண்டுமென்று தாசில்தாருக்கு விண்ணப்பம் செய்துகொள்ளவேண்டும்; அதன்மேல் தாசில்தாரானவர்-கிரமமாய் விசா

39. கால்வாயும் துறைத்தோணியும்.

ஸர்க்கார் செலவிலே சம்பாதிக்கப்பட்ட துறைத்தோணிகள் கிராம உத்தியோகஸ்தர்களுடைய வசத்திலே ஒப்பிக்கப்பட்டால், யாதொரு தோணியானது எந்த நபரின் வசத்தில் விடப்பட்டிருக்கிறதோ அந்த நபர் வேண்டுமென்று அசட்டையாயிருந்ததனாலாவது அஜாக்கிரதையாயிருந்ததனாலாவது அந்தத் தோணிக்கு யாதொரு சேதம் உண்டாகிறபக்ஷத்தில், அதற்கு அவர்கள் உத்தரவாதிகளாக இருப்பதோடுங்கூட அந்த நஷ்டத்தைக் கட்டிக்கொடுக்கவும் வேண்டும். தோணியைப் பார்த்துக்கொள்ளும்படி யாதொரு கிராம ஊழியக்காரனையாகிலும் வேறே யாரையாகிலும் நியமிக்க ஏற்பாடுசெய்வது கிராம உத்தியோகஸ்தர்களுடைய கடமையாகும்.

40. ஜனனமரணங்களை ரெஜிஸ்டர்செய்வது.

1. கிராமக்கணக்குகளைப்பற்றிய (மானுயல்) சட்டபுஸ்தகத்தில் நிர்ணயித்திருக்கும் நமூனாக்களின்படி பெரியதனக்காரர் ரெஜிஸ்டர்களைத் தயார்செய்யவும் வைத்திருக்கவும் வேண்டும்.

2. கிராமத்தில் சம்பவிக்கிறவைகளையெல்லாம் அறிந்துகொள்ள வேண்டிய கிராம வெட்டியானும் தலையாரியும் நேரிட்டிருக்கிற ஜனனங்களையோ அல்லது மரணங்களையோ அறிந்து, அதுசங்கதியை அந்தந்த காலத்தில் ரெஜிஸ்ட்ரார்ராயிருக்கும் பெரியதனக்காரர் அன்றாடம் பதிவுகளைச் செய்வதற்குச் சாதகமாகும்படி உடனே அவரிடத்தில் ரிப்போர்ட் பண்ணவேண்டும். ஆயினும், இந்த ஏற்பாட்டினால், பெரியதனக்காரர் தாமே சங்கதிகளை விசாரித்தறியும் கடமையினின்று நிவர்த்தியாகமாட்டார்.

3. அதது சம்பவிக்கிற தேதியில் அதனைத் தவறாமல் பதிவுசெய்யவேண்டும்; யாதொரு தினத்திலே ஜனனங்களாவது மரணங்களாவது இல்லாவிட்டால், அந்தத் தேதிக்கு எதிரில் ஒன்றுமில்லை என்று பதிவுசெய்யவேண்டும்.

4. வயிற்றிலே செத்துப் பிறந்த குழந்தைகளை ஜனனரெஜிஸ்டர், மரண ரெஜிஸ்டர் ஆகிய இரண்டிலும் பதிவுசெய்யவேண்டும். சின்னம்மை அல்லது விளையாட்டம்மையால் நேரிடுகிற மரணங்களை வைசூரி என்னும் கலத்திலே சேர்க்காமல் "இதரமான எல்லாக்காரணங்கள்" என்ற கலத்தில் சேர்க்கவேண்டும்.

5. பிரதி மாதமும் முடிவானபிறகு, மொத்தம் தைத்து, 19-A, 19-B கீ. கிராம நமூனாக்களின்படி அப்ஸ்ட்ராக்டுகளை (கோஷவாராக்களை) அடுத்தமாதம் 1௳ தாசில்தாருக்கு அனுப்பவேண்டும். ஜனனங்களாவது மரணங்களாவது நேரிடாவிட்டால், அடியிற்கண்ட நமூனாப்படி ஒரு சுருக்கமான குறிப்பை அனுப்பலாம்:—

19 -ம் ௵ மீ௳த்தில்

தாலூகாவைச்சேர்ந்த கிராமத்தில் ஜனனமரணங்களின் ரிடர்ன் (விவரக்கணக்கு) பூஜ்ஜியம்.

(கையெழுத்து)________

[பெரியதனக்காரர்.]

குறிப்பு.—1899-ம் ௵த்துச் சென்னபட்டணம் 3-வது ஆக்ட் செலாவணியாய்க்கொண்டிருக்கிற பிரதேசங்களுக்காக, அந்த ஆக்டின் நிபந்தனைகளையும் இந்த ஆக்ட் 20-வது பிரிவின்படி செய்யப்பட்ட விதிகளையுங்கூட அனுசரிக்கவேண்டும். அவை 11-வது, 12-வது அனுபந்தங்களில் அச்சிடப்பட்டிருக்கின்றன.

6. செனிடரி இன்ஸ்பெக்டர்களும் செனிடரி இலாகாவையாவது (அம்மைகுத்தும் சிப்பந்திகளுடன்) மெடிகல் இலாகாவையாவது சேர்ந்த எல்லா உத்தியோகஸ்தர்களும் கிராமத்தைப் பார்வையிட வரும்போது அந்த ரெஜிஸ்டர் சரியாக இருக்கிறதா என்று பார்க்கும்பொருட்டு அதை அவர்களிடம் காட்டவேண்டும்.

41. அம்மைகுத்தாத குழந்தைகளைப் பற்றிய ரெஜிஸ்டர்.

கிராமப் பெரியதனக்காரர்கள் தங்கள் தங்கள் கிராமங்களிலிருக்கும் அம்மைகுத்தாத குழந்தைகளைக் குறித்து பேர்வாரி ஜாபிதா ஒன்றை இனிமேல் வைத்துவரவேண்டும்.

42. கால்நடைகளின் வியாதி.

1. யாதொரு கிராமத்தின் பெரியதனக்காரராவது, அவருக்கு எழுதப்படிக்கத் தெரியாவிட்டால், அந்தப் பெரியதனக்காரரால் சங்கதி தெரிவிக்கப்பட்டதன்மேல் கர்ணமாவது அவருடைய கிராமத்தில் யாதொரு கால்நடைகளின் வியாதி கண்டிருக்கும்போது, XL-வது அனுபந்தத்தில் நிர்ணயித்திருக்கும் நமூனாப்படி பிரதிமாதத்தின் 10-உயும் 20-உயும் முடிகிற கால அளவுகளில் சம்பவித்திருக்கிற மரணங்களின் சங்கியையைக் குறித்த கோஷ்வாரா ஒன்றைத் தயார்செய்து அதே தேதியன்று தாசில்தாருக்கு அனுப்பவேண்டும்.

அநேகமான மரணங்களை உண்டுபண்ணுகிற யாதொரு வியாதி எந்த கிராமத்திலாவது காணப்பட்டால், அதைப்பற்றி உடனே தாசில்தாருக்குத் தெரிவிக்கவேண்டும், அவர் அந்த சங்கதியை தக்ஷணமே ஸிவில் வெடெரினரி டிபார்ட்மெண்ட் ஸூபரின்டெண்டெண்டுக்கு ரிபோர்ட் செய்வார். ஐந்து மரணங்கள் ஒரு கிராமத்தில் ஒரு வாரத்துக்குள் நேரிடுமானால், விசேஷ ரிபோர்ட் அனுப்புவதற்கு வேண்டிய சங்கியையென்று அதை எண்ணலாம்.

சகல கிராம உத்தியோகஸ்தர்களும் - உத்தியோக அலுவலாய்த் தங்களுடைய கிராமங்களைப் பார்க்கவரும் வெடெரினரி உத்தியோகஸ்தர்களுக்கு உதவி செய்யவேண்டியதுமல்லாமல், அவர்கள் சொல்லும் விஷயங்களைக் குறிப்பாய்க் கவனித்து அவைகளைச் சாத்தியமானவரையில் நிறைவேற்றவும் வேண்டும்.

2. கால்நடைகளைக் குறித்த பலவகைக் கணக்குத்திட்டுகளை ரெஜிஸ்டர்செய்வதற்குச் சம்பந்தப்படுகிற கணக்குகள் கிராமக் கணக்குகளைக் குறித்த சட்டபுஸ்தகத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

3. மியுனிஸிபாலிடிகளின் விஷயத்திலே, யாதொரு மியுனிஸிபாலிடியில் அடங்கியிருக்கிற கிராமங்களின் கர்ணங்கள் டெத் ரெஜிஸ்டரை வைத்து, (ரிடர்ன்) மாதாந்தரக்கணக்கை, நிர்ணயிக்கப்பட்ட காலத்திலே, அதாவது அந்தக் கணக்கு எந்த மாதத்துக்குரியதோ அதற்கடுத்த மாதத்தின் 5-உயில், கொடுப்பது அந்தக் கர்ணங்களின் கடமையாகும்.

4. பின்வருபவை வெகு சாதாரணமாய்க் காணும் வியாதிகளாக இருக்கின்றன :—

**அந்த்ராக்ஸ் (அடைப்பான்).**—இது ரத்தசம்பந்தமான ஒரு வியாதி; இது சகல பிராணிகளுக்கும் விசேஷமாய் மரணம் உண்டு

பண்ணக்கூடியதாயிருக்கிறது. இதன் முக்கிய குறிகள் அடியிற் கண்டவைகளாகும். இந்த வியாதி கண்ட பிராணி தீனியை உட்கொள்வதில்லை; அதன் உடலும், கொம்புகளும், காதுகளும் மிகவும் சூடாயிருக்கும்; வாய் உலர்ந்துபோகும், மலம் கெட்டியாயும், அடிக்கடி சீதமும் ரத்தமும் கலந்தும் இருக்கும். இந்த வியாதி 36 மணிநேரமுதல் 48 மணிநேரம்வரையில் நீடித்திருக்கும்; இந்த வியாதி கண்ட பிராணியானது பல தடவைகளில் இன்னும் சீக்கிரமாகவும் திடீரென்று செத்துப்போய்விடுகிறது. இந்த வியாதி கண்டு சொஸ்தமடைகிற பிராணிகள் மிகு சொற்பத்திலும் சொற்பம்; மேலும், இந்த வியாதியால் பிடிக்கப்பட்ட பிராணிகளுக்கு வைத்தியம் முதலியவை செய்வதற்காகக் கிட்ட இருப்பவர்களின் கைகளில் இரணமாவது காயமாவது இருக்கும்பட்சத்தில், அவர்களுக்கும் அந்த வியாதி கண்டு மரணத்துக்கு ஏதுவாய் முடியக்கூடும். இந்த வியாதி கண்ட பிராணிகள் இறந்தபிறகு அவற்றின் உடலை அறுத்துச் சோதித்துப்பார்த்தால், அடிவயிற்றை மூடிய ஜவ்வின் பேரிலும் மார்பின் உட்பக்கத்துத் தோலின்பேரிலும் இரத்தசாயத்தின் பேரிலும் கறுத்த பருக்கள் காணப்படுகின்றன; இந்தப் பருக்களிலிருந்து மஞ்சள் நிறமான பசையுள்ள ஒரு பதார்த்தம் கசிவதனால் அது அவைகளைச் சாதாரணமாய்ச் சூழ்ந்திருக்கிறது. இரத்தம் மிகவும் கறுத்த நிறமாயிருக்கிறது. தற்கால சாஸ்திரத்தில் இதற்குப் பரிகாரமாக ஒருவகையான ஸீரம் என்னும் மாமிசநீர் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இதை இந்த வியாதி கண்டிருக்கும் கிராமத்திலுள்ள பிராணிகளின் உடலுக்குள் செலுத்தினால், இந்தக் கொள்ளைநோய் நின்றுபோய்விடும். இந்த வியாதி மிக்க உக்கிரமாயும் சொற்பகாலவரையிலுமே நீடித்துமிருப்பதால், மேலே சொன்ன மாமிசநீர் அதைச் சொஸ்தப்படுத்தும் விஷயத்தில் உபயோகப்படுவதில்லை.

ஷார்பன் ஸிம்படமாடிக் அல்லது பளாக் க்வாட்டர் (சப்பைநோய்) என்பது ஒரு தோளிலாவது தொடையிலாவது சாதாரணமாய்த் தோன்றும் ரத்த சம்பந்தமான ஒரு வியாதி. தொத்திக்கொள்ளுந்தன்மை, உக்கிரம் ஆகிய இரண்டு இலட்சணங்களும் இந்த வியாதிக்குண்டு. கால்கள் முற்றிலும் முடமாய்விடுவதும், தோள் அல்லது தொடை வீங்குவதுமே இந்த வியாதியின் முக்கியமான குறிகள். வீக்கம் மிகவும் நோவுடையதாயிருக்கும்; விரல்களால் அதைத் தட்டினால், தோலின் கீழ் உண்டாகும் வாயுவினால் நறநற வென்று சப்தமுண்டாவதுபோலிருக்கும். பள்ளத்தாக்கான சதுப்பு நிலத்தில் மேய்கிற பிராணிகளுக்குச் சாதாரணமாய் இந்த வியாதி காண்கிறது. இந்த வியாதி வராமல் தடுப்பதற்கு ஒரு உபாயமும் இருக்கிறது; தாழ்ந்த நிலங்களிலும் இந்த வியாதி அடிக்கடி காணும் இடங்களிலும் பிராணிகளை மேய்க்கும் கிராமத்தார்கள் தங்கள் பிராணிகளுக்கு இந்த வியாதி வரவொட்டாதபடி பாதுகாப்பு ஏற்படுத்தவேண்டும். இதற்கு ஏற்பட்டிருக்கும் சிகிச்சையினால் பிரத்தியக்ஷமாய்ப் பிராணிகளுக்குப் பாதகம் உண்டாவதில்லை; இந்தப் பிராணிகளை வழக்கம்போல வேலைக்கு அனுப்பலாம்; அந்தப்படி அனுப்புவதனால் கெடுதியொன்றும் உண்டாகமாட்டாது.

**கடூரமான தொண்டைநோய் (மலிக்னெண்ட் ஸோர்த் ரோட்).**—இந்த வியாதியானது வெகுசாய் இளம் வயதுள்ள பிராணிகளுக்கும் எருமைக்கன்றுகளுக்கும் உண்டாகிறது. இதன் குறிகள் மிகவும் திடீரென்று தோன்றும், தொண்டையில் மிகவும் அதிகமான வீக்கம் உண்டாகிறது. சுவாசம் அதிகமாயிருப்பதனால், இந்த வியாதி கண்ட பிராணிகள் கஷ்டத்துடன் மூச்சுவிடுகிறது. கண்களிலிருந்தும் வாயிலிருந்தும் நீர் வடிகிறது; நாக்கு கழுத்து வாயிலிருந்து பிதுங்கி வருகிறது; அதன்மேல் அந்தப் பிராணியானது சாதாரணமாய் மூச்சுவிட முடியாமல் திக்குமுக்காடி செத்துப்போகிறது. கழுத்திலும் தோள்களிலும் வீக்கங்கள் ஏற்படுவதுண்டு; ஆனால், அதைத் தொட்டால் பட்டவென்று சப்தம் உண்டாகாததே இதற்கும் ப்ளாக்க்வாட்டர் என்னும் சப்பைநோய்க்குமுள்ள பேதம்; மேலும், அந்த வீக்கத்தில் விரலை வைத்து அழுத்தினால், பள்ளம் உண்டாகிறது.

செம்மறியாடுகளுக்கும் வெள்ளாடுகளுக்கும் ஆந்த்ராக்ஸ் (அடைப்பான்) வியாதி அதிகமாய் உண்டாகக்கூடியது; அதன் குறிகள் ஏற்கனவே விவரிக்கப்பட்டவைகளைப்போலவே இருக்கும்.

ரிண்டர்பெஸ்ட் (வெக்கை) அல்லது கால்நடைப் பெருவாரி யானது இந்த தேசத்தின் பல பாகங்களில் அடிக்கடி வருவதும் மரணத்தை உண்டுபண்ணுவதுமான வியாதியாக இருக்கிறது. ஒரு பிராணியை இந்த வியாதி தொத்திக்கொண்டபிறகு ஒருவாரமுதல் இரண்டுவாரத்துக்குள்ளாக அந்தப் பிராணி வியாதியாய்விடுகிறது: பின்பு இவ்வியாதி சீக்கிரத்தில் பரவுகின்றது. ஆதி ஆரம்பத்தையில் இந்த வியாதியை இன்னதென்று சரியாக நிதானித்தறிவது கஷ்டம்; ஆனால் சில நாளான பிறகு கண்டறியக்கூடிய குறிகள் தோன்றுகின்றன; இவைகளில், தலையோடுதலையாய்ப் படுத்துக்கொள்ளும் சக்தியை அடையும் அதிக பலஹீனமும், தேகத்தின் தசைநாம்புகளில் விசேஷமான உபத்திரவமும், அதிக தூக்கத்தும் ஒருவகையான நாற்றமுங்கூடியதாய் வெகுசாய் இரத்தக்கலப்புள்ள கடூரமான கழிச்சலும், மூக்கு-வாய்-பெண்குறிகளையும் பால்சுரக்கும் மடியையும் மூடிக்கொண்டிருக்கிறதைப்போன்ற தோலின் சிலபாகங்கள்-என்னும் இவைகளின் உள்பக்கத்து ஜவ்வில் கொப்புளங்கள் புறப்படுவதும், வெகு விந்தையான இருமலும் பெரும்பான்மையாய்க் காணப்படும். மரணமடைந்தபிறகு குடல்களும் தீனிப்பைகளும் முக்கியமாய் நோய்கொண்டிருப்பதாய்க் காணப்படுகின்றன: உதிரக்குழாய்களிலிருந்து தப்பியோடிய இரத்தத்தின் பெரிய படலங்கள் உடலின் பல பாகங்களில் காணப்படுகின்றன. மாடுகளுக்கு இந்த வியாதி உண்டாகிறது; அது அவைகளிடத்திலிருந்து ஆடுகளுக்குத் தொத்திக்கொள்ளும்; அது வெகு துரிதமாய்த் தொத்திக்கொள்ளத்தக்கதாக இருக்கிறது. இது, வாயில் கொப்புளம் எழும்புதலில்லாத வெறும் இரத்தக் கழிச்சலுடனேயாவது, அதிலும் குறைந்த கொடூரமுடையதான அடுத்துச் சொல்லப்படுகிற வியாதியுடனேயாவது ஒரு தன்மையானதென்று மயங்கக்கூடாது.

இந்த வியாதிக்காக ஏற்பட்டிருக்கும் புதிய சிகிச்சை மிகவும் சித்தியுள்ளதாயிருக்கிறது; இந்த வியாதி கொடூரமாய் உண்டால

தை இந்த விதமாகத் தடுக்கக்கூடுமே. எப்படியென்றால், இதற்கென்றே தயார்செய்யப்பட்ட ஸீரம என்னும் மாமிசநீரைக்கொண்டு அம்மை குத்தவேண்டும். இதில் சிறிதளவு தோலின்கீழ் உட்செலுத்தப்படுகிறது; அதனால் கால்நடைகளுக்கு ஒருவித அசௌகரியமும் உண்டாவதில்லை; அப்படி உண்டானாலும வெகு சொற்பமாகவேயிருக்கும; ஆகையால மூன்றுநாளைத்துக்குப் பிறகு வழக்கம் போல் அவைகளைக்கொண்டு வேலை வாங்கலாம. ஒரு கிராமத்தில் அநேக மரணங்கள் சம்பவித்தால, அந்த சங்கதியை உடனே ஸிவில் வெடெரினரி டிபார்ட்மெளட் ஸுபரின்டெண்டெண்டுக்குத் தாசில்தார் மூலமாய ரிபோர்ட் செய்யவேண்டும; அதன்பிறகு அவர் ஒரு வெடெரினரி அஸிஸ்டென்ட் உத்தியோகஸ்தரை கிராமத்திலுள்ள எல்லா கால்நடைகளுக்கும் ஊசி அம்மை குத்தும்படி அனுப்புவார்; இப்படி செய்துவந்தால பின்னால மரணங்கள எவையும் சம்பவிக்க மாட்டா. பெரியம்மை விஷயத்தில் அம்மை குத்துவது எப்படி பிரயோஜனப்படுகிறதோ அதே மாதிரி இந்த மாமிசநீரைக குத்துவதும் பிரயோஜனபபடுகிறது.

எபிஜூடிக் ஆப்தா அல்லது கால்நோய் வாய்நோய்.—இது எல்லா விதமான பிராணிகளுககும இலேசில தொத்திககொள்ளத்தக்கதும் ஒட்டிக்கொள்ளத்தக்கதுமான வியாதி—யானைகளுககும மனிதருக்குங் கூட அது வருகிறதுண்டு; அது சாதாரணமான கோழி வாத்து முதலியவைகளுககு விசேஷமாய் மரணத்தை உண்டாககுகிறது. அதனுடைய பெயரினால தெரியவருவது போலவே, அது வாயிலும் பாதத்திலும் உண்டாகிற கொப்புளமாம; ஆனால, சில விஷயங்களில வாயிலமாத்திரமும மற்றவிஷயங்களில காலகளில் மாத்திரமும் அது காணகிறதுண்டு. ஆயினும், அது அனேக பிராணிகளுக்குக் கண்டால், சிலவற்றிற்கு அவசியம் வாயும் பாதங்களும் ஆகிய இரணடிலும உண்டாகிறது. வாயில் தோனறும் கொப்புளங்களானவை வெளுத்த கொப்புளங்களாயிருககினறன; அவைகளை உடைக்கலாம; உடைத்தால சிவப்பான தோல நிற்கிறது; அவைகள் நாக்கிலும் மேலவாயிலும் ஈறுகளிலும மற்ற இடங்களிலும் உண்டாகின்றன. பாதங்கள் வீங்கிப்போகினறன: பிராணி முடமாய்விடுகிறது: சீக்கிரத்திலே குளமபுக்குளமபைச் சுற்றிலும் முக்கியமாய குளமபுகளின இடையிலே உளள பிளவிலும் இரணஙகள் காணுகினறன. பிராணியானது அடிக்கடி பாதங்களை உதறிக்கொணடிருககும்; அதன வாயிலிருந்து எச்சில கம்பிகம்பியாகத் தொங்கிககொணடிருக்கும். அது தீனியின்மித்தம் வெகு தூரம் போகமுடியாத அவவளவு முடமாய்விடுவதோடுங்கூட, தீனியைத் தாராளமாய்த் தினனமுடியாத அவவளவு வாயில் புண்ணும உண்டாய்விடுகிறது; அதனால் அதற்கு திடக்குறைவு உண்டாகக்கூடியதாயிருககிறபடியால, அதிக புஷ்டியான ஆகாரம் அதற்கு வேணடியதாயிருக்கிறது. இந்தியாவில் இந்த நோயினாலே மரணமுண்டாவதற்குக் காரணம் பெரும்பான்மையாய் தீனியில்லாமல் பட்டினியாக இருப்பதேயாம்: ஏனென்றால், இங்கிலாந்தில் கால்நோய் வாய்நோயினால் மாடுகள் மரணமடைவது அதிக அபூர்வமாயிருக்கின்றது. இந்த வியாதியினால் பால்சுரப்பு குறைந்துபோய்விடுகிறது; கொஞ்சமாய்க் கொடுக்கப்பட்ட

பாலும் குழந்தைகளுக்குக் கடுமையான பேதியை உண்டுபண்ணலாம். பாதத்திலுள்ள இரணங்களுக்குள் புழுக்கள் வாராதபடி ஜாக்கிரதையாய்த் தடுக்கவேண்டும். வேகவைத்த கருவேலம்பட்டை இதை ஆற்றுவதற்கு நல்லமருந்து; சீத்தாமரத்தின் இலைகளாலும் புழுக்கள் நசித்துப்போகின்றன.

வாரியோலா அல்லது ஆட்டம்மை என்பது மனிதனுக்குக்காண்கிற பெரியம்மையை வெகுவாய் ஒத்திருக்கும் வியாதி; இது இந்தியாவில் அடிக்கடி வருகிறது; தொடைகளின் உட்புறத்திலும், உதடுகளின்மேலும், வாயிலும், மூக்குத்துவாரங்களிலும், உள்ளபடி தோல் மெதுவாயிருக்கிற எல்லா இடங்களிலும், முக்கியமாய் தேகத்தின் ஜவ்வுகளிலும் சும ஆமணைபோன்ற கொப்புளங்கள் புறப்படுவது இந்த வியாதிக்குக் குறியாகும். மூக்குத்துவாரங்களிலிருந்து சளி ஒழுகும்; கசிவிருக்கும்; அதிக பலவீனமும் காய்ச்சலும் உண்டாகும். கொப்புளங்கள் நெருக்கமாகவும் தூரதூரமாகவும் இருக்கலாம், அல்லது ஒன்றுசேர்ந்து பெரிய புண்களாகலாம். நோயகண்ட ஆடுகளோடுகூட மற்ற ஆடுகள் இருந்தால் ஏறக்குறைய 10 நாட்களில் காய்ச்சல் உண்டாகிறது; அது சராசரியில் இரண்டுவாரத்துக்கு மேற்பட்ட காலம்வரையில் இருக்கும்; பலஹீனத்தினால் மரணம் உண்டாகலாம். ஆட்டம்மையானது ஆடுகளுக்குள்ளே வெகுலேசாகத் தொற்றிக்கொள்ளத்தக்கதாயிருக்கிறது; ஆனால், அது பெரியம்மை அல்லது பசுவைசூரியைப்போன்ற வியாதியல்ல.

க்ளான்டேர்ஸ் என்னும் குதிரைகளுக்குக் காணும் கம்பா வியாதி.—க்ளாண்டெர்ஸ் என்னும் வியாதியை வெகு நிச்சயமாய்த் தீர்மானிக்கத்தக்க அசாதாரணமான குறிகள் எவையென்றால்:—

(a) மூக்குத்துவாரங்களிலிருந்து சளி ஒழுகுதல்.—இது வஜ்ஜிரப்பசைபோல இருக்கிறது; இது மூக்குத்துவாரங்களைச் சுற்றிலும் ஒட்டிக்கொள்ளுகிறது; இது மஞ்சள் நிறமாக அநேகமாய் ஒரு பக்கத்திலிருந்து மாத்திரம் ஒழுகுகிறது.

(b) ஸப்மாக்ஸில்லரி க்ளான்ட்ஸ் (கீழ்த்தாடையின்கீழ் உள்ள தசிரகோளங்கள்) வீங்குவது—தாடைகளுக்கிடையிலுள்ள இந்த தசிரகோளங்கள் கெட்டியாயும் வீங்கியிருப்பதாயும் காணப்படும். ஒரு மூக்குத்துவாரத்திலிருந்து மாத்திரம் சளி ஒழுகினால், அந்தப்பக்கத்திலுள்ள தசிரகோளங்கள் மாத்திரமே அநேகமாயப் பெரிதாயிருப்பதாகக் காணப்படும்.

(c) மூக்கிலுள்ள சீதஜவ்வு புண்ணாயிருப்பது.—அடிக்கடி சளி ஒழுகுகிற மூக்குத்துவாரத்தைப் பரிசோதித்துப் பார்த்தால், திட்டமான முனைகளுள்ள சில புண்கள் காணப்படும். அநேகமாய் இவைகள் கண்ணால் பார்க்கமுடியாதபடி மூக்குத்துவாரத்தில் அதிக உயரத்திலிருக்கும்.

பார்ஸி (Farcy குதிரைகளுக்குக்காணும் ஒரு வியாதி)—இது க்ளாண்டெர்ஸைப்போன்ற வியாதியே; இது வேறொரு ரூபமாய்க் காணுகிறது. இந்த வியாதியின் குறிகள் எவையென்றால்—

வியாதிகண்ட பிராணிக்கு வெகுசாய்ப்பின்காலில் வீக்கம் இருப்பதாகக் காணப்படுகிறது; இந்த வீக்கம் அடிக்கடி விசேஷ நோ

வைக் கொடுக்கக்கூடியதாயிருக்கிறது; ஜுரம் அதிகமாயிருக்கும்; காலின் விம்ப் என்னும் கீழ் நீரோடும் நரம்புகள் சுருட்டிக்கொண்டு முடிச்சுள்ளவைகளாயிருக்கும் இந்த முடிச்சுகள் சீக்கிரத்தில் பார்ஸி மொட்டுகள (farcy buds) என்று சொல்லப்படும் கொப்புளங்களாகி, உடையவும் உடைகின்றன; அப்போது சிறு ரணங்கள் ஏற்பட்டு, சீழ் வருகிறது. தாமதப்பட்டு குணமடையும் புண்கள் மாத்திரமிறகும; அவைகளைச சொஸ்தப்படுத்துவது கஷ்டமாயிருக்கும்; அவைகளிலிருந்து சீழ் வடிந்துகொண்டேயிருக்கும்.

இந்த வியாதிக்குச் சிகிச்சையில்லை; இது மனிதர்களைத் தொத்திக்கொள்ளக்கூடியதாயிருக்கிறபடியாலும் அந்தப்படி தொத்திக் கொண்டால் அவர்கள் பிழைப்பதரிதாகையாலும், நோய்கண்ட பிராணியைக் கொன்று, தொத்திக்கொள்ளக்கூடிய வஸ்துவானது அடியோடு அழியும்பொருட்டு அதன் உடலைக கொளுத்திவிடுவது நல்லது.

ஸர்ரா என்னும் வியாதியானது - நுட்பமான சுறுசுறுப்புள்ள ஒரு வஸ்து இரத்தத்தில் இருப்பதனால் உண்டாகிறது; இதனால், அநேக பலஹீனமும் கடைசியில் மரணமும உண்டாகிறது. நோய் கண்ட பிராணி நாளுக்குநாள் இளைத்துவரும்; கால்கள் வீங்கும்; கண்ணிலுள்ள சித ஜவ்வில கறுத்த புள்ளிகள் காணப்படும். இந்த நோயக்குச் சிகிச்சையொன்றும கண்டுபிடிக்கப்படவில்லை.

லிம்பாஞ்ஜிடிஸ் எபிஜூடிகா.—உடலின் பற்பல பாகங்களில், முக்கியமாயக் கால்களின் உட்புறங்களில, வரிசையாயக் கட்டிகள உண்டாகி, பிறகு வெகுகாலம வரையில் சீழ் வந்துகொண்டிருந்து, மிக மெதுவாயச் சொஸ்தமாகின்றன. கூர்மையான ஒரு இரும்பைக் காயவைத்து இந்தக் கொப்புளங்களுக்குள் செலுத்தி, தொத்தக்கூடிய விஷத்தை நாசப்படுத்துவதே இந்த வியாதிக்கு மிகச் சிறந்த சிகிச்சையாகும்.

இரத்த மூத்திரம் (ரெட்-வாடர்).—மூத்திரம் கருஞ்சிவப்பாயிருப்பதே இந்த நோயின முக்கிய குறியாகும். இந்த நோய்கண்ட பிராணிக்கு ஸ்வல்பஜுரம உண்டாகும்; இது தீனியைத் தள்ளிவிடுகிறது. இது சீக்கிரத்தில் இரத்தமற்று மிக இளைத்துப்போய் 8 அலலது 10 நாட்களில் இறந்துவிடும். மலேரியா என்னும விஷஜுரக் கிருமியினால் இந்த நோய் உண்டாகிறது; இந்தக் கிருமி இரததாணுக்களில் புகுந்து அவைகளை நாசப்படுத்துகின்றன அமெரிகாவிலும் ஆஸ்திரேலியாவிலும இந்த நோயினால் அநேக பிராணிகள் செத்துப்போயிருக்கின்றன; இதற்கு அம்மை குத்துவதுதான் மிகச் சிறந்த சிகிச்சையென்று கண்டறியப்பட்டிருக்கிறது.

5. இந்த வியாதிகளிலெல்லாம், வியாதியைச் சொஸ்தம்பண்ணுவதைப்பார்க்கிலும் வியாதிக்கு இடம் கொடுக்காமல் இருக்கிறதே மேலான காரியம்; இதன்பொருட்டு பின்வருகிற திட்டங்களை ரயத்துகளுக்கு விவரமாகச் சொல்லவேண்டும்:—

(1) திரிந்துகொண்டிருக்கும் பிராணிகளையெல்லாம் உங்களுடைய கால்நடைகளுடன் சேரவொட்டாமல் தடுக்கவேண்டும்.

(2) புதிதாக வாங்கப்பட்ட சகல பிராணிகளையுமாவது, கொஞ்சகாலத்திற்குமுன் ரஸ்தாக்களின் வழியாய்ப் பிரயாணம் போய் வந்த சகல பிராணிகளையுமாவது, பிரயாணத்திலாகிலும் சந்தையிலாகிலும் கடையிலாகிலும் புதிதான பிராணிகளுடனே கலந்துவந்தனவென்று தெரியவருபவைகளையாவது, மற்றவைகளுடனே கலக்கவொட்டாமல் பிரத்தியேகமாக வைத்திருக்கவேண்டும்.

(3) யாதொரு பிராணியினிடத்தில் எவ்விதமான வியாதியின் குறிகளாகிலும் காணப்பட்டால், அதை வியாதியில்லாதவைகளிலிருந்து பிரத்தியேகப்படுத்தி வேறே வைத்திருக்கவேண்டும்; அதற்குக் குடிக்கத் தண்ணீரை அதனிடத்தில் கொண்டுவந்து வைக்கவேண்டும்.

(4) தொத்திக்கொள்ளத்தக்க யாதொரு வியாதி யாதொரு பிராணிக்குக் கண்டிருப்பதாகத் தெரியவந்தால், அதை உடனே மற்றவைகளிலிருந்து பிரத்தியேகப்படுத்தி, எந்த திசையை நோக்கி காற்று வீசுகிறதோ அந்த திசையில் மற்ற எல்லாப் பிராணிகளிலிருந்தும் அதமம் 100 கஜ தூரத்தில் பரிஷ்காரமாய் வேறாகவே வைத்திருக்கவேண்டும். அதனுடனேகூடி சம்பந்தப்பட்டிருக்கும் அதனுடைய படுக்கை-சாமான்-சாணம் முதலானவைகளைச் சுட்டெரித்து அழித்துவிடவேண்டும். வியாதியாயிருக்கிற பிராணிகளுக்கு ஜாக்கிரதையாய் உபசரணை செய்யும்படி இரண்டொரு ஆள்களின் வசத்தில் அவைகளை விட்டுவைக்கவேண்டும்; எந்த விதத்திலும் அவைகளை மற்றக் காலநடைகளுடனே கலக்கவொட்டாமல் பார்த்துக்கொள்ளவேண்டும். நாய் முதலானவைகளைக் கூடியவரையில் வியாதியாயிருக்கும் பிராணிகளோடு சேராமல் அப்புறம் இருக்கும்படி வைத்திருக்கவேண்டும்.

(5) வியாதியாயிருக்கும் பிராணியிருந்த கொட்டகையிலிருந்து, இன்ஸ்பெக்டரால் உமக்கு விவரித்துச்சொல்லப்பட்ட விதமாக பூர்த்தியாய்த் தொத்துவியாதி சம்பந்தத்தை நீக்கவேண்டும்; அல்லது அந்த இடத்துக்குச் சமீபத்தில் கந்தகத்தைக் கொளுத்தி, சுவர்களின்மேலும் தரையிலும் யாதொரு தொத்துவியாதி முறி மருந்தைத் தெளிக்கவேண்டும். தரையில் கொஞ்சம் வைக்கோலைத் தூவி அதைக் கொளுத்தவேண்டும். தொத்துவியாதி கிருமிகளை அழிப்பதற்கு இப்போது தெரிந்திருக்கும் சாதனங்களுக்குள் நெருப்புதான் மிகவும் பிரயோசனகரமானது. எல்லா மரச்சாமான்களையும், சுவர்கள் முதலானவைகளையும் சுத்திசெய்து வெள்ளையடிக்கவேண்டும்.

(6) வியாதியாயிருந்த பிராணிகளுடன் கலந்திருந்த பிராணிகளையெல்லாம் பரிஷ்காரமாய்க் கழுவவேண்டும். மந்தையிலுள்ள மற்ற பிராணிகளிலிருந்து அவைகளைப் பிரத்தியேகமாக வைத்து, வியாதியின் ஆதி ஆரம்பக்குறிகள் உண்டா என்று தெரிந்துகொள்ளும் பொருட்டு, தினந்தோறும் பரிசோதிக்கவேண்டும்; அந்தக் குறிகள் தோன்றினால், உடனே அவைகளை இன்னும் வியாதிகாணாத பிராணிகளிலிருந்து பிரத்தியேகமாய் வைத்திருக்கவேண்டும்.

(7) கிராமத்திலுள்ள பிராணிகளில் எதற்கும் வியாதி காணுமலிருக்கிறதா என்று நிச்சயமாய்த் தெரிந்துகொள்ளும்பொருட்டு அவைகளையெல்லாம் அடிக்கடி பரிசோதிக்கவேண்டும்.

(8) பிரயாணம் செய்யவேண்டிய பிராணிகளை மற்றவைகளுடன் கலக்கும்படி விடக்கூடாது. அவைகளை வெகு தூரமாயாவது, வெகு கஷ்டப்படுத்தியாவது, பகல் வெயிலிலாவது ஓட்டக்கூடாது: அவைகளுக்கு மூன்றும் தீனிபோடவேண்டும்: பாட்டையில் ஜாக்கிரதையாய்த் தண்ணீர்காட்ட வேண்டும்.

(9) வியாதியாயிருந்து தேறினவைகளை நன்றாய்க் கழுவி குறைந்தது ஒரு மாதகாலம் வரையில் மந்தையோடு கலவாமல் மேய்ப்பிக்கவேண்டும்.

(10) வியாதியாயுள்ள பிராணிகளுக்கு வைத்தியம் செய்யும்போது உபயோகிக்கப்பட்ட எல்லா வஸ்துக்களும் எல்லாப் படுக்கைகளும், சாணமும், இரணத்துக்குக் கட்டின சீலை* முதலியவைகளும் கொளுத்தப்படவேண்டும்.

(11) ஆந்த்ராக்ஸ் (அடைப்பான்), ரிண்டெர்பெஸ்ட் (வெக்கை) முதலிய தொத்துவியாதி கண்டு இறந்துபோன பிராணிகளின் தேகத்தைக் கொஞ்சங்கூட தாமதமில்லாமல், தோலுரிக்காமலாவது வெட்டாமலாவது முழுசாய்ப்புதைத்து, நீறாக்காத சுண்ணாம்பு போட்டு ஆறு அடிக்குக்குறையாமல் மண்போட்டு நன்றாய் மூடிவிடவேண்டும்.

தொத்துவியாதி கண்டு இறந்துபோன ஒரு பிராணியின் தேகம் ரஸ்தாவின் மேலாவது வேறே பொதுவான இடத்திலாவது காணப்பட்டால், கிராமப்பெரியதனக்காரர் அதை கவர்ன்மெண்ட் செலவில், மேலே (11) குறிப்பிட்ட பகுதியில் சொல்லியபடி தாமதமில்லாமல் புதைப்பதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யவேண்டும்.

### 43. இனாங்கள்.

1. இனாங்களானவை—

(1) மதசம்பந்தமானவை,
(2) தருமசம்பந்தமானவை,
(3) சொந்த உபயோகத்துக் கானவை,
(4) கிராம ஊழியத்துக்கானவை

என நான்கு வகுப்புகளாய் இருக்கின்றன.

2. முதல் இரண்டு வகுப்புகளைச் சேர்ந்த இனாங்களானவை - கோயில்கள், மசூதிகள், காலேஜ் என்னும் கல்விச்சாலைகள், சத்திரங்கள், இதரமான கட்டடங்கள் அல்லது ஸ்தாபனங்களின் பெயரிலே கைப்பற்றியிருந்து வாந்தாலுஞ்சரி, அவைகளில் ஊழியம் செய்யும் நபர்களின் பேயரில் கைப்பற்றியிருந்து வந்தாலுஞ்சரி, அந்தக் கோயில்கள் முதலிய ஸ்தாபனங்களை ஆதரிப்பதைப்போன்ற மதசம்பந்தமான காரியங்களுக்காவது தருமசம்பந்தமான காரியங்களுக்காவது, அந்தக் கோயில்கள் முதலியவைகளில் செய்யப்படும் ஊழியங்களுக்காவது சம்பந்தப்படுகின்றன. அந்தக் கட்டடங்களாயினும் ஸ்தாபனங்களாயினும் செம்மையான ஸ்திதியில் வைத்து ஆதரிக்கப்பட்டும், ஊழியங்களானவை ஏற்பட்ட இனாம் நிபந்தனைகளின்படி செய்யப்பட்டும் வருகிற வரையிலே, அந்த இனாங்களின்

ஜோலிக்குப்போவது கூடாது. அதே மாதிரியாக, ஏரிகள் கால்வாய்கள் முதலியவைகளைக் கட்டுவதற்கும் மராமத்து செய்வதற்கும் கொடுக்கப்பட்ட இனுங்களானவை, அவைகள் எந்த நிபந்தனைகளின்மேல் கொடுக்கப்பட்டனவோ அந்த நிபந்தனைகள் குறைவற நடத்தப்பட்டும், அந்தக் கட்டுவேலைகள் சரியான ஸ்திதியில் வைக்கப்பட்டும் வருகிறவரையில், அவைகளின் ஜோலிக்குப்போவது கூடாது.

3. மேலேகண்ட இரண்டு விஷயங்களில் எதிலும் எந்த நிபந்தனைகளின்படி இனுங்கள் கொடுக்கப்பட்டனவோ அந்த நிபந்தனைகளை எவராகிலும் மீறி நடப்பதைக்குறித்தும், இனுமதாரருடைய ஸ்வாதீனத்திலிருந்து இனுங்கள் பராதீனம் செய்யப்பட்டிருக்கும் சகல விஷயங்களைக்குறித்தும் கிராம உத்தியோகஸ்தர்கள் தாசில்தாரருக்கு ரிபோர்ட்செய்யவேண்டும்.

4. கைவிடப்பட்டிருக்கிற அல்லது பன்னிரண்டு வருஷகாலத்துக்கு மேற்பட்டுப் பாழான ஸ்திதியிலிருந்து வருகிற கோயில்கள், மசூதிகள் முதலியவைகளின் அனுபவத்திலிருக்கும் சகல இனுமநிலங்களைக்குறித்தும் ரொக்கவர்த்தனைகளைக்குறித்தும் தாசில்தாரருக்கு ரிபோர்ட் செய்வது கிராம உத்தியோகஸ்தர்களின் கடமையாகும்.

5. மதசம்பந்தமான அல்லது தாமசம்பந்தமான ஊழிய இனுங்களின்மேலாகிலும் ஊழிய நிபந்தனை நிவர்த்தியாகாத சொந்த உபயோகத்துக்கான இனுங்களின்மேலாகிலும் கவர்ன்மெண்டுக்குச் செலுத்தப்படத்தக்க கவிட்டுரெண்டாவது ஜோடியாவது பாக்கியாயிருக்கிற விஷயங்களிலே, ரெவினியு விற்பனை மூலமாக பாக்கியை வசூல்செய்யும் சாதாரண முறையானது பிரயோகப்படத்தக்கதல்ல என்பதை கிராம உத்தியோகஸ்தர்கள் கவனிக்கவேண்டும். அப்படிப்பட்ட விஷயங்களை முக்கியமாய்த் தாசில்தாரருக்கு ரிபோர்ட் செய்யவேண்டும். ஊழிய நிபந்தனையின்னும் நிவர்த்தியான இனுங்களின் விஷயத்தில் கவிட்ரெண்ட வசூல்செய்வதற்காக அனுசரிக்கப்படும் நடவடிக்கை முறையானது-ரயத்வாரி நிலங்களின் தீர்வையை வசூல்செய்வதற்காக அனுசரிக்கப்படும் முறையேயாகும்

6. சொந்த உபயோகத்துக்கான இனுங்கள்.—ஊழிய நிபந்தனை நிவர்த்திசெய்யப்பட்ட சொந்த உபயோகத்துக்கான இனுங்களானவை-சந்ததி உரிமை, உட்பிரிவு, விற்பனை முதலான விஷயங்களில் ரயத்வாரி நிலங்கள் எந்த நிலைமையில் இருக்கின்றனவோ சரியாய் அந்த நிலைமையிலேயே இருக்கின்றன. ஊழிய நிபந்தனை நிவர்த்தியாகாத சொந்த உபயோகத்துக்கான இனுங்கள் பராதீனம்செய்வது மூலமாய் ட்ரான்ஸ்பர் செய்யப்படத்தக்கவையல்ல. பாம்பரை ஆட்சியின் மேல் ஊர்ஜிதம் செய்யப்பட்டிருக்கும் இனுங்களின் விஷயத்திலே, சந்ததி உரிமையானது-அவிபக்தர்களான சகோதரர்களுக்கும், கடைசி ஆட்சிதாரருடைய நேர் பரம்பரை வழியான வாரிசுகளுக்கும், அவர்கள் இல்லாதபட்சத்திலே, ஆதியில் இனும் கொடுக்கப்பெற்றவருடைய நேர் பரம்பரை வழியான வாரிசுகளுக்கும் மாத்திரம் உண்டு. இரண்டு அல்லது மூன்று தலைமுறைகளுக்கென்று

கொடுக்கப்பட்டிருக்கும் இனுங்களின விஷயத்திலே, முதல் தலை முறைக்குப்பின் வரும் தலைமுறையை இரண்டாம் தலைமுறையாக வும், அதற்குப்பின் வரும் தலைமுறையை மூன்றும தலைமுறையாகவும் கொள்ளவேண்டும். உதாரணமாக, எ-என்பவருக்கு மூன்று தலை முறைகளுக்கென்று ஆதியில் இனும கொடுக்கப்பட்டிருந்து அவர் ஸி, டி, இ என்று மூனறு பிள்ளைகளை விட்டுப்போனுல் அந்தக் குடுமபமானது அவிபக்தகுடும்பமாயிருக்கிற பக்ஷத்திலே, அந்தப்பிள் ளைகளுக்குள் கடைசியாக ஜீவித்திருப்பவர் இரண்டாம்தலைமுறையா வார்; மேலும், ஸி, டி அல்லது இ என்பவருடைய பிள்ளைகளில் கடைசியாக வெகுகாலம் ஜீவித்திருக்கும் பிள்ளைகள் மூனறுவது தலை முறையாவார்கள இந்த விதிகள நிச்சயமாய் அனுசரிக்கப்படும் படி பார்த்துக்கொள்ளும்பொருட்டு, கிராம உத்தியோகஸ்தாகள்-ஊழிய நிபந்தனை நிவர்த்தியாகாத சொந்த உபயோகத்துக்கான இனும் வைத்திருப்பவருககு மரணம் நேரிட்டவுடனே, அப்படிப பட்ட ஒவ்வொருவருடைய மரணத்தைக்குறித்தும் அவருடைய வாரிசுகளைப்பற்றிய ஜாபிதா சகிதமாய தாசில்தாரருக்கு ரிபோர்ட் செய்யவேண்டும.

7. கிராமஊழிய இனுங்கள்.—இவை - (a) ரெவினியு அல்லது பொ லீஸ் சேவகத்தின் பொருட்டுக் கிராம உத்தியோகஸ்தர்களால் அனுபவிக்கப்பட்டவை யென்றும் (b) கிராமத்தார்களுககுச் செய் யப்பட்ட ஊழியத்தின்பொருட்டுக் கம்மாளா முதலான தொழிலாளி களால் அனுபவிக்கப்பட்டவை யென்றும் இரண்டு வகைப்படும். ஊழிய நிபந்தனை நிவர்த்தியானவைகள ரயத்வாரி நிலங்களின் நிலை மையிலிருக்கின்றன. ஊழிய நிபந்தனை நிவாத்தியாகாத ஊழிய இனுங்களைப் பராதீனப்படுத்தவாவது கொதுகை வைக்கவாவது கூடாது; அப்படி செய்யப்பட்டாலும, ஊழியங்கள் செய்யப்படா விட்டாலும், அவைகளை மீணடும கைக்கொள்வதற்கான முயற்சி களைச் செய்யும்பொருட்டுக் கிராம உத்தியோகஸ்தர்கள் அதுசங கதியைத தாசில்தாரருக்குத தெரிவிக்கவேண்டும.

8. பாத்தியதையை விட்டுவிடுவதனுலாவது, ஸர்க்காரைச் சேர் வதனுலாவது, வேறுவிதமாகவாவது ஸாக்காருக்கு மறுபடியும் சேர் ந்துவிடுவதான (ஊழிய நிபந்தனை நிவாரணையானவைகளும ஊழிய நிபந்தனை நிவாரணையாகாதவைகளுமான) கிராம ஊழிய இனுங் களையெல்லாம் கணக்குகளில் ரயத்வாரி நிலஙகளாகப் பதிவுசெய்து, அவைகளின் தீர்வையை லாண்ட் ரெவினியுவில வரவுவைக்க வேண்டும்.

9. ஊழியநிபந்தனை நிவாரணையான இனுங்களை உட்பிரிவுசெய் யும்படியாகவாவது, ஊழியநிபந்தனை நிவாரணையான இனுங்களையா கிலும் ஊழியநிபந்தனை நிவாரணையாகாத இனுங்களையாகிலும் விட் டுவிடுவதற்காகவாவது செய்துகொள்ளப்படும விண்ணப்பங்களை வாங்கிக்கொள்ளக் கிராம உத்தியோகஸ்தர்களுக்கு அதிகாரமில்லை. அப்படிப்பட்ட விண்ணப்பங்களை டிவிஷனல் ஆபிஸாகளிடத்திலாவ து தாசில்தாரர்களிடத்திலாவது கொடுத்துக்கொள்ளவேண்டும்.

44 பென்ஷன்தாரர்களும் யோமியாதாரர்களும்.

1. நேராய் ஊராஜராவதினின்றும் கிவாரணை செய்யப்பட்டிருக்கிற பென்ஷன்தாரர்களும் யோமியாதாரர்களும் தங்களுடைய வர்த்தனைகளைத் தங்களுடைய ஏஜென்டுகளின் மூலமாய்க் கொடுக்கும்படி விண்ணப்பம் செய்துகொண்டால், அவர்கள் ஜீவித்திருக்கிறார்களென்று கொடுக்கப்படும் (XLI-வது அனுபந்தத்திற்கண்ட நமூனாவைப் பார்வையிடுக) லைவ் ஸெர்டிபிகேட்டில் மேற்கையெழுத்து செய்ய யாதொரு கிராமப்பெரியதனக்காரருக்காவது கர்ணத்துக்காவது அதிகாரமுண்டு.

2. தாங்கள் எந்தெந்த பென்ஷன்தாரர்களுடைய அல்லது யோமியாதாரர்களுடைய லைவ் ஸெர்டிபிகேட்டில் மேற்கையெழுத்து செய்துவந்தார்களோ அந்த பென்ஷன்தாரர்களிலாவது யோமியாதாரர்களிலாவது எவராகிலும் மரணமடைந்தால் அதைக் கிரமமாய் ரிபோர்ட் செய்யக் கிராம உத்தியோகஸ்தர்கள் ஜவாப்தாரிகளாவார்கள்.

45. காடுகளும் தோப்புகளும்.

1. கிராமத்தின் ஊறத்துகளுக்குள்ளாக இருப்பவைகளும், தோப்புகளில் இருந்தாலுஞ்சரி, ரஸ்தாக்களின் பக்கங்களில் இருந்தாலுஞ்சரி, வனத்தில் இருந்தாலுஞ்சரி, காப்பாற்றிவைக்கப்பட்ட காடுகளிலாகிலும் காப்பாற்றிவைக்கப்பட்ட நிலங்களிலாகிலும் அடங்காதவைகளுமான ஸர்க்கார் மரங்களையெல்லாம் பார்த்துக்கொள்ளுவது கிராம உத்தியோகஸ்தர்களுடைய கடமையாகும். அப்படிப்பட்ட மரங்களில் திருட்டினாலாவது மற்றப்படியாவது நஷ்டமேதாவது நேரிட்டால், அது சங்கதியைக் கிராமப்பெரியதனக்காரர் - அதைப் பற்றிய சந்தர்ப்பங்களைப் பூர்த்தியாய் விவரித்தெழுதி சம்பந்தப்பட்ட ரெவினியு இன்ஸ்பெக்டர் மூலமாக தாசில்தாருக்கு உடனே ரிபோர்ட்செய்யவேண்டும். மேலும், கிராமத்தின் ஊறத்துகளுக்குள்ளாக இருக்கும் காம்பு நிலங்களிலும் புறம்போக்கு நிலங்களிலும் எந்த மரங்களாகிலும் பட்டுப்போயிருந்தாலும், காற்றடித்து விழுந்துபோயிருந்தாலும், அந்த மரங்களைக் குறித்தும் கிராமப் பெரியதனக்காரர் தாசில்தாருக்குத் தெரிவித்து, அவைகளை உடனே விற்பதற்காக அவருடைய உத்தரவின்படி ஏற்பாடுசெய்யவேண்டும்.

2. கிராம உத்தியோகஸ்தர்கள் - தனிநபர்களை மரங்களையும் தோப்புகளையும் வைத்துப்பயிராக்கும்படி உற்சாகப்படுத்துவதில் தங்களால் கூடிய பிரயாசை எடுத்துக்கொள்வதுமல்லாமல் கவர்னமென்டார் அதுகாரியத்துக்காக கவுலின்மேல் நிலம் விட பிரியப்படுகிறார்களென்பதை அந்த நபர்களுக்குத் தெரியப்படுத்தவும் வேண்டும்.

3. காட்டிலாகாவைச் சேர்ந்த உத்தியோகஸ்தர்கள் தங்களுடைய அலுவல்களை நடத்துவதில அவர்களுக்குக் கூடியமட்டில் உதவிசெய்வது கிராம உத்தியோகஸ்தர்களுடைய கடமையாகும். காப்பாற்றிவைக்கப்பட்ட காடுகளிலும் காப்பாற்றிவைக்கப்பட்ட நிலங்களிலும் அனுமதியின்றி எவராகிலும் சாகுபடி செய்வதைக் கவனிப்பதற்காக கிராம உத்தியோகஸ்தர்கள் வெளியேயிருக்கும் காடுகளைச் சுற்றிப்பார்த்து வரவேண்டுமென்பது இல்லாவிட்டாலும்,

அவர்கள் தங்களுடைய சாதாரண அலுவல்களைச் செய்யும்போது அந்தப்படி சாகுபடி செய்திருப்பதைக் கவனித்தால், அதைத் தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அனுமதிச்சீட்டுகளை விற்பதனால் கிடைக்கும் காட்டுத்தீர்வையை வசூல்செய்ய கிராம உத்தியோகஸ்தர்களுக்கு அதிகாரம் கொடுக்கலாம். அவர்கள் விற்பனை செய்திருக்கும் அனுமதிச்சீட்டுகளின் விலைமதிப்பின்மேல் அவர்கள் கம்மிஷன் பெறுவார்கள்.

4. யாதொரு காட்டிலாவது அதன் சமீபத்திலாவது நெருப்பு பற்றிக்கொண்டதாகவாகிலும், காட்டைக்குறித்த யாதொரு குற்றம் செய்யப்பட்டதென்றாகிலும், செய்ய உத்தேசமிருக்கிறதென்றாகிலும் தமக்குத் தெரிந்திருக்கும் யாதொரு சங்கதியைத் தாமசமில்லாமல் அதி சமீபத்திலுள்ள பாரெஸ்ட் ஆபிஸருக்கோ அல்லது பொலீஸ் ஸ்டேஷன் ஹௌஸ் ஆபிஸருக்கோ தெரியப்படுத்துவதும்,

அப்படிப்பட்ட காடுகளில் பற்றிக்கொண்டிருக்கிற நெருப்பை அவிப்பதிலும்,

அப்படிப்பட்ட காட்டின் சமீபத்தில் பற்றிக்கொள்ளுகிற நெருப்பை அந்தக் காடுவரையில் பரவவொட்டாமல் தடுப்பதிலும்,

அப்படிப்பட்ட காட்டில் யாதொரு காட்டைக்குறித்த குற்றத்தைச் செய்யவொட்டாமல் தடுப்பதிலும், அப்படிப்பட்ட காட்டில் அவ்வகையான குற்றம் செய்யப்பட்டிருக்கிறதாக நம்புவதற்கு முகாந்தரமிருந்தால், குற்றவாளியைக் கண்டுபிடிப்பதிலும் மறியல்செய்வதிலும்,

உதவிசெய்யும்படி கேட்கிற யாதொரு பாரெஸ்ட் ஆபிஸருக்காவது பொலீஸ் உத்தியோகஸ்தருக்காவது உதவிசெய்வதும், பிரதி கிராம உத்தியோகஸ்தருடைய கடமையாக இருக்கிறது.

5. காப்பாற்றப்பட்ட காடுகளுக்கு வெளியிலே ஸர்க்கார் வசத்திலுள்ள நிலங்களிலிருக்கும் மேய்ச்சலையும் இயற்கையான உற்பத்திப் பொருள்களையும் உபயோகிப்பதைக்குறித்து ஒழுங்கேற்படுத்துவதற்காக காட்டைப்பற்றிய ஆக்டின் 26-வது பிரிவின்படி கவர்ன்மெண்டாரால் பிறப்பிக்கப்பட்ட விதிகளைக் கிராமப் பெரியதனக்காரர்கள் நன்றாய் அறிந்துகொள்வதுமல்லாமல், அவைகளை தங்கள் கிராமக்குடிகளுக்கும் விவரித்துச் சொல்லவேண்டும். யாதொரு கிராமத்திலே காப்பாற்றிவைக்கப்படாத நிலத்திலெல்லாம், கால்நடைகளை மேய்ப்பதற்கும், புல்வெட்டுவதற்கும், உலர்ந்த விறகையும் முட்களையும் காப்பாற்றிவைக்கப்படாமலிருக்கும் மரங்கள், செடிகள் இவைகளின் இலைகளையும் சேகரிப்பதற்கும், காப்பாற்றிவைக்கப்பட்ட அல்லது இனம் பிரிக்கப்பட்ட மரங்களின் ஜாபிதாக்களில் அடங்கினவைகளல்லாத வேறே மரங்களை வெட்டுவதற்கும் கட்டணம் வாங்காமலே அனுமதி கொடுக்கப்படும்; ஆனால் அந்தப் புல, விறகு, முட்கள், இலைகள் அல்லது மரங்கள் விவசாய காரியங்களுக்காகவோ வீட்டுக்காரியங்களுக்காகவோ அந்தக் கிராமத்தின் குடிகளுக்காகிலும் அடுத்த கிராமங்களின் குடிகளுக்காகிலும் வேண்டியவைகளாய் இருக்கவேண்டும். தரிசு நிலங்களின் உற்பத்திப்பொருள்களை இலவசமாய் அனுபவித்துக்கொள்ளும் விஷயத்தில் இந்த விதிகளின்படி ரயத்துகளுக்கு உண்டாயிருக்கும் சுதந்

தாங்களே தூர் உபயோகப்படுத்தாமல் பார்த்துக்கொள்ள கிராம பெரியதனக்காரர்கள் உத்தரவாதிகளாய்க் கொள்ளப்படுவார்கள்; மேலும், அவர்கள் அந்த சுதந்தரங்களுக்கு விரோதமாக எவராகிலும் நடந்தால் அதைப்பற்றித் தெரிவிக்கவும் வேண்டும். அல்லாமலும், ஜில்லா கெஜெட்டில் பிரசுரிக்கப்படும் காட்டிலாகா சம்பந்தமான ஏடுகளை அடங்கிய காகிதங்களைக் கிரமமாய்ச் சோத்துவைத்திருந்து, அவைகளில் வரும் முக்கியமான விளம்பரங்களையெல்லாம் கிராமத்தாருக்கு விவரமாய்ச் சொல்லவும் வேண்டும்.

6. தோப்புகளையாவது மரங்களையாவது குத்தகையெடுக்க எவரும் பிரியப்படாவிட்டால், உற்பத்தியாகும் பொருள்களை தாசில்தாருடைய உத்தரவு பெற்றுக்கொண்டு சேகரித்து விற்பனைசெய்வது கிராம உத்தியோகஸ்தருடைய கடமையாயிருக்கிறது.

46. இன்கம்டாக்ஸ் என்னும் வருமானவரி.

1. 1886-ம் வருஷத்து 2-வது ஆக்டின்படி, விவசாயம் தவிர மற்ற எல்லா முகாந்தரங்களாலும் கிடைக்கிற 1,000 ரூபாயும் அதற்கு மேற்பட்டதுமான வருஷாந்தர வருமானங்களெல்லாம் வரிக்குட்பட்டவைகளாக இருக்கின்றன. பர்ம் என்னும் வாத்தகக் கூட்டங்களும் அவிபக்த குடும்பங்களுமுட்பட, 1,000 ரூபாயும் அதற்கு மேற்பட்டதுமான வருமானங்களையுடைய எல்லா நபர்களின் பெயர்களையும் தாசில்தார்களுக்குத் தெரிவிப்பதும், அவர்களுடைய சரியான வருமானங்களை இவ்வளவென்று நிஷ்கரிஷையாக அறியும் பொருட்டு வரிவிதிக்கும் உத்தியோகஸ்தர்களுக்கு அவசியமான சங்கதிகளையெல்லாம் கூடியமட்டில் தெரிவிப்பதும் கிராம உத்தியோகஸ்தர்களுடைய கடமையாயிருக்கிறது.

2. வரி விதிக்கப்பெறுகிறவர்களுக்குச் சேர்ப்பிக்கும்படியாக (G குறிப்பிட்ட) அஸெஸ்மெண்ட் நோடிஸ் நமூனாக்கள் கிராம உத்தியோகஸ்தர்களிடம் அனுப்பப்பட்டால், வரிவிதிக்கப்பெறும் பற்பல நபர்களுக்கு அவைகள் அனுப்பப்படும்படியும், பின்புறத்தில் ஒவ்வொருவருடைய கையெழுத்தும் வாங்கப்படும்படியும் பார்த்துக்கொள்வது அவர்களுடைய கடமையாயிருக்கிறது.

3. இந்த வரியை வசூல்செய்யும் வேலை கிராம உத்தியோகஸ்தர்கள் வசத்தில் விடப்பட்டால், அவர்கள் - நிலத்தீர்வையின் வசூலுக்காக ஏற்படுத்தியிருக்கிற ஒழுங்குகளை அனுசரித்து, அந்த வேலையைத் தாமசமில்லாமல் செய்யவேண்டும்.

47. உப்பு.

1. உப்பானது—ஸால்ட் - அப்காரி - ஸெபரேட் ரெவினியு கமிஷனரால் கொடுக்கப்படும் லைஸென்ஸுகளின்படி, (பாக்டரிகள்) உப்புச்சாலைகள் என்று சொல்லப்படும் அடைப்பு அடைத்துள்ள வளவுகளில் உற்பத்தி செய்யப்படுகிறது; இந்தியா கவர்ன்மெண்டாரால் நிஷ்கரிஷை செய்யப்படும் (இப்போது $82\frac{2}{7}$ ராத்தல் கொண்ட ஒரு இந்திய மணங்குக்கு ஒரு ரூபாய்) விதத்தின்படி தீர்வை செலுத்தி அந்த உப்பை உபயோகத்துக்காக அந்த சாலைகளிலிருந்து எடுத்துக்

கொண்டுபோகலாம். அந்த உப்பும், அதே விதத்தின்படி கஸ்டம் தீர்வை செலுத்தியிருக்கும் உப்பும் நியாயமான உப்பாகும்; மற்ற உப்பெல்லாம் கள்ள உப்பாகும். கள்ள உப்பு என்பது - லைஸென்ஸில்லாமல் உற்பத்தி செய்யப்படுகிற, அல்லது அந்தந்த காலத்தில் செலாவணியாய்க்கொண்டிருக்கிற யாதொரு சட்டதிட்டத்துக்கு விரோதமாகவாகிலும், அதன்படி பிறப்பிக்கப்பட்ட யாதொரு உத்தரவு, அனுமதிச்சீட்டு, அல்லது லைஸென்ஸுக்கு விரோதமாகவாகிலும், அதை அனுசரித்துச் செய்யப்படும் யாதொரு விதிக்கு விரோதமாகவாகிலும் யாதொரு நபர் வியாபாரம் செய்கிற உப்பென்றாவது, உவர்வஸ்துக்களென்றாவது, உவர்மண்ணென்றாவது, பொட்டிலுப்பு என்றாவது அர்த்தமாகும்; ஆனால், கள்ள உப்பு என்பதிலே சமுத்திர ஜலம் என்பது அடங்காது. எந்தப்பிரதேசங்களில் உவர்மண்ணானது ஆலோசனை சபையிலுள்ள கவர்னரவர்களுடைய விளம்பரத்தின்படி கள்ள உப்பாகும் என்று பிரசித்தம் செய்யப்படுகிறதோ, அந்தப் பிரதேசங்களிலே விவசாய சம்பந்தமான காரியங்களுக்காகவோ கட்டிட சம்பந்தமான காரியங்களுக்காகவோ உவர்மண் தோண்டியெடுக்கப்பட்டது, சேகரிக்கப்பட்டது, அல்லது வைத்திருக்கப்பட்டது என்று எண்பிக்கப்பட்டாலன்றி மற்றப்படி அந்தப்படி தோண்டியெடுப்பது முதலியது குற்றமாகும். ப்ரெஸிடென்ஸியின் மற்ற பாகங்களிலே, உவர்மண்ணைத் தோண்டியெடுப்பது, சேகரிப்பது அல்லது வைத்திருப்பது எந்த சந்தர்ப்பங்களிலும் குற்றமாகமாட்டாது. தீர்வை செலுத்தாமல் சமுத்திரமார்க்கமாகவோ தரைமார்க்கமாகவோ இறக்குமதி செய்யப்பட்ட உப்பு கள்ள உப்பாகும்.

2. உதவி செய்யவேண்டுமென்று தெரிவிக்கப்பட்டாலுஞ்சரி கேட்டுக்கொள்ளப்பட்டாலுஞ்சரி, ரெவினியு இலாகாவையும் பொலீஸ் இலாகாவையும் சேர்ந்த கிராம உத்தியோகஸ்தர்களெல்லாம், 1889-ம் ஞு 4-வது ஆக்டாகிய சென்னபட்டணம் உப்பு ஆகடின் நிபந்தனைகளை நிறைவேற்றுவதில், ஒருவருக்கொருவர் உதவி செய்யவும், உப்பு - பொலீஸ் - லாண்ட் ரெவினியு - அபகாரி - கஸ்டம்ஸ் என்னும் இலாகாக்களைச் சேர்ந்த எல்லா உத்தியோகஸ்தர்களுக்கும் உதவிசெய்யவும் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

3. தங்களுடைய கிராமங்களின் ஹத்துக்குள்ளாக எவரும் கள்ள உப்பை உற்பத்திசெய்யவொட்டாமலாவது, வைத்திருக்கவொட்டாமலாவது, விற்பனைசெய்யவொட்டாமலாவது பார்த்துக்கொள்வது அவர்களுடைய கடமையாயிருக்கிறது.

4. யாதொரு கிராமப்பெரியதனக்காரர் தமமுடைய கிராமத்தில் கள்ள உப்பு உற்பத்திசெய்யப்படுகிறதென்றாவது, விற்பனைசெய்யப்படுகிறதென்றாவது, வைக்கப்பட்டிருக்கிறதென்றாவது நம்பத்தக்க சமாசாரத்தைக் கேள்விப்பட்டால், அப்படிப்பட்ட உப்பு எந்த இடத்தில் உற்பத்திசெய்யப்படுகிறதென்றாவது, விற்பனை செய்யப்படுகிறதென்றாவது, வைக்கப்பட்டிருக்கிறதென்றாவது நம்பப்படுகிறதோ அந்த இடத்தில் சூரியோதயமுதல் சூரியாஸ்தமனம்வரையில் எப்போதேனும் சோதனைசெய்யலாம்: அவருக்கு அகப்படும் அப்படிப்பட்ட உப்பையும் பறிமுதலுக்குள்ளாகத்தக்க வஸ்துக்களையு

மெல்லாம் கைப்பற்றிக்கொண்டுபோய், உடனே அவர் - அவைகள் எந்த சந்தர்ப்பங்களில் யாரிடத்திலே காணப்பட்டனவோ அந்த சங்கதிகளைக்கண்ட ரிபோர்ட் சகிதமாய் அவைகளை அதிக சமீபத்திலுள்ள உப்புச்சாலைக்காவது பொலீஸ் ஸ்டேஷனுக்காவது அனுப்பவேண்டும்.

5. சாத்தியப்படுமபொழுது, அவர் - அப்படிப்பட்ட சோதனைகள் செயவதற்கு முனனே, அந்த ரேஞ்ஜைச் சேர்ந்த ஸால்ட் ஆபிஸர்களின் சகாயம பெறவேணடும. அல்லாமலும, அவர் - யாதொரு வீடு, கட்டிடம் அல்லது அடைப்பு அடைத்திருக்கும் இடத்தில் காணப்படும் கள்ள உப்பெல்லாம அந்த வீடு, கட்டிடம் அல்லது இடத்தின் அனுபோகதாரருடைய ஸ்வாதீனத்திலே இருப்பதாகக் கொள்ளக்கூடாதென்று ருஜு செய்யப்படுகிறவரையிலே, அந்த அனுபோகதாரருடைய ஸ்வாதீனத்திலிருப்பதாகவே கொள்ளப்படுகிறதென்பதை அவர் ஞாபகத்திலே வைத்துக்கொண்டு, அதற்குத்தக்கபடி நடக்கவேண்டும்.

6. மேலே பிரஸ்தாபிக்கப்பட்ட சோதனையை கிரிமினல் ப்ரொஸீஜர் கோடின் நிபந்தனைகளின்படி பின்வருமாறு நடத்தி, அது சங்கதியை, அதிகாரவாம்புடைய மாஜிஸ்ட்ரேட்டுக்கு இருபத்திநான்குமணி நேரத்துக்குள்ளாக ரிபோர்ட்செயயவேணடும் :—

(i) யாதொரு ஸ்திரீயை சோதனை செய்யவேண்டிய அவசியமிருக்கும்போதெல்லாம், மரியாதைக்கு எவ்வளவும பழுதுவராமல வேறொரு ஸ்திரீயைக்கொண்டு சோதனை செய்விக்கவேணடும்.

(ii) சோதனை செய்வதற்குமுன்னே கிராமப பெரியதனக்காரர் - சோதனையை நேரில்வந்து பார்த்திருக்கும்படியாக சோதனை செயயப்போகிற இடம் எங்கேயிருக்கிறதோ அந்த இடத்தில் குடியிருக்கிற இரண்டு அல்லது அதிகமான கௌரவமுள்ள நபர்களை அழைக்கவேண்டும்.

(iii) அவர்களுக்கு எதிரிலே சோதனைசெய்யவேண்டும் : அப்படி சோதனைசெய்கையிலே கைப்பற்றப்பட்ட சகல வஸ்துக்களையும், அவைகள் முறையே எங்கெங்கே காணப்படுகின்றனவோ அந்தந்த இடங்களையும் குறித்து ஒரு ஜாபிதாவைத் தயார்செயது, அதில் அப்படிப்பட்ட சாக்ஷிகளின் கையெழுத்துக்களை வாங்கவேண்டும : ஆனால், யாதொரு சோதனையைச் சாக்ஷியாக வந்து பார்த்துக்கொண்டிருக்கிற நபரை, கோர்ட்டார் பிரத்தியேகமாய் ஸம்மன் செய்தாலொழிய, சோதனைக்கு சாக்ஷியாகக் கோர்ட்டுக்கு வரும்படி சொல்லக்கூடாது.

(iv) சோதனைசெய்யப்பட்ட இடத்தின் அனுபோகதாரராவது அவர்சார்பில் யாதொரு நபராவது சோதனைகாலத்திலே நேரில் வந்திருக்கும்படி பிரதி விஷயத்திலும் அவருக்கு அனுமதிகொடுக்கவேண்டும் ; மேலேசொன்னபடி தயாாசெயயபபட்டுச் சாக்ஷிகளால் கையெழுந்து பண்ணப்பட்ட ஜாபிதாவின் பிரதி யொன்று தமக்கு வேண்டுமென்பதாக அந்த இடத்தின் அனுபோகதாரராவது அவர் சார்பில் மேற்படி நபராவது கேட்டால் அவருக்கு அப்படியே ஒரு பிரதியைக் கொடுக்கவேண்டும்.

(v) சோதனை நடத்தும் உத்தியோகஸ்தர்கள் யாதொரு வீட்டுக்குள் கள்ளவஸ்துக்களைக் கொண்டுவந்து போடாதபடி தடுப்பதற்கு முன்னெச்சரிக்கையாக, இந்த உத்தியோகஸ்தர்கள் வீட்டில் பிரவேசிக்கும்போது அரைத்துணியைத் தவிர வேறொன்றும் உடுத்திக்கொண்டிருக்கக்கூடாது.

(vi) சோதனை நடத்துவதற்குச் சம்பந்தமாய் நடத்தவேண்டும் நடவடிக்கையைக் குறித்த விதிகளை வெகு கவனிப்பாய் அனுசரிக்க வேண்டுமென்று கிராம உத்தியோகஸ்தர்களுக்குக் கட்டளையிடப்படுகிறது. சோதனை நடத்தும் உத்தியோகஸ்தர் கள்ளவஸ்துக்களைக் கொண்டுவந்து போடாதபடி தடுப்பதற்கு முன்னெச்சரிக்கையாக, அந்த உத்தியோகஸ்தர் வீட்டில் பிரவேசிப்பதற்கு முன்னே அவருடைய தேகத்தைச் சோதனைக்கான சாட்சிகளின் முன்பாகப் பரிசோதிக்கவேண்டும். மேலும், சோதனை நடத்துகிற உத்தியோகஸ்தராவது நபராவது வீட்டைப் பரிசோதிக்கும்போது அவருடன்கூட இரண்டொரு கௌரவமுள்ள சாட்சிகள் வந்திருக்க வேண்டும். ஒரு தனி நபர் உள்ளே பிரவேசித்து வாஸ்தவமாய் சோதனை நடத்திக்கொண்டிருக்கும்போது கிராம உத்தியோகஸ்தர்களும் சோதனைக்கான சாட்சிகளும் வெளியே நின்றுகொண்டிருக்கும் வழக்கம் அடிக்கடி அனுசரிக்கப்பட்டு வருகிறது; இப்படி ஒருபோதும் செய்யவே கூடாது. கிராம உத்தியோகஸ்தர்கள் சோதனைகளைப்பற்றி ரிபோர்ட் செய்யும்போது, கள்ளவஸ்துக்கள் வாஸ்தவமாய்க் காணப்பட்ட இடத்தையும் அந்தக் கள்ளவஸ்துக்களை வெளியிலிருந்து எந்த வழிமூலமாய் உள்ளே போட்டிருக்கக்கூடுமோ அப்படிப்பட்ட யாதொரு ஜன்னல், வெளிச்சம் வருவதற்கான வழி அல்லது வேறே துவாரம் இருப்பதையும் ஜாக்கிரதையாய்க் குறிப்பிட்டு எழுதவேண்டும். சோதனை முடிந்தவுடனே ஆலசியமில்லாமல் சோதனை ஜாபிதாக்களைத் தயார்செய்து அவைகளில் கையெழுத்துப் போடவேண்டும். இந்த முக்கியமான தஸ்தவேஜு தயார்செய்வதைக் கிராம உத்தியோகஸ்தர்கள் எந்தக் காரணத்தைக் கொண்டும் நிறுத்திவைக்கவிடக்கூடாது.

7. பின்வருகிற வஸ்துக்கள் ஆக்டின்படி பறிமுதலுக்குள்ளானவைகளாகும் :—

எல்லாக் கள்ள உப்பும்;

எதெதன் விஷயத்தில் உப்பு சம்பந்தமாக யாதொரு குற்றம் செய்யப்பட்டிருப்பதாய் ருஜுவாகிறதோ அப்படிப்பட்ட எல்லா உப்பு, பொட்டிலுப்பு, உவர்வஸ்துக்கள் அல்லது உவர்மண்ணும்;

அவைகளை உற்பத்திசெய்யவாவது, வாங்கவாவது, விற்பனைசெய்யவாவது, வைத்திருக்கவாவது, ஒளிக்கவாவது, கொண்டுபோகவாவது, அவைகளை வேறே ஏதேனும் செய்யவாவது உபயோகிக்கப்பட்ட எல்லா மரக்கலங்களும், வண்டிகளும், சாமான்களும், கருவிகளும், தட்டுமுட்டுகளும், பிராணிகளும், சிப்பங்களும், மூடிகளும்.

8. யாதொரு கிராமப் பெரியதனக்காரர் - கள்ள உப்பு உற்பத்திசெய்யப்படுகிறதென்றாவது, விற்பனை செய்யப்படுகிறதென்று

வது, வைக்கப்பட்டிருக்கிறதென்றாவது நமபுவதற்கு நியாயமான காரணமில்லாமல், யாதொரு வீட்டையாகிலும், கட்டடத்தையாகிலும், மரக்கலத்தையாகிலும், அடைபபுள்ள இடத்தையாகிலும் சோதனைசெய்யும் காரியங்களுக்காக அதில் பிரவேசித்தாலும், அல்லது கள்ள உப்பைக் கைப்பற்றுவதாகவாவது, அதற்காகச சோதனை செய்வதாகவாவது, சாக்கிட்டுக்கொண்டு யாதொரு வஸ்துவை வீண் தொந்தரைக்கிடமாகவும் அனாவசியமாகவும் கைப்பற்றினாலும, அல்லது யாதொரு நபரை வீண தொந்தரைக்கிடமாகவும அனாவசியமாகவும் நிறுத்திவைத்தாலும் சோதனைசெயதாலும பிடித்தாலும, போய்க்கொண்டிருககிற வண்டிகளையாவது மரககலங்களையாவது நிறுத்தினாலும் அல்லது நிறுத்திவைத்தாலும, அலலது வேறே யாதொரு விதத்தில் வீண் தொந்தரைககிடமாகத் தமமுடைய நியாயமான அதிகாரங்களுககு மிஞ்சிநடந்தாலும், அவர் - குற்றவாளியென்று தீர்மானிக்கப்படுவதன்மேல், ஐந்நூறு ரூபாயககு மேறபடாமல் அபராத தணடனையாவது, ஆறுமாதத்திற்கு மேறபடாமல காவல் தண்டனையாவது, இரணடு தணடனைகளுமாவது விதிக்கப்படத்தக்கவராவார்.

9. யாதொரு கிராமப் பெரியதனக்காரர் ஆக்டின்படி கைப்பற்றப்பட்ட எந்த வஸ்துவையாகிலும் ஸால்ட-அப்காரி-கஸ்டமஸ் இலாகா இன்ஸ்பெக்டரி த்துக்காவது அதி சமீபத்திலுளள பொலீஸ் ஸ்டேஷன் விசாரணை உத்தியோகஸ்தரிடத்துக்காவது அனுப்புவதில் வீண் தொந்தரைககிடமாகவும் அனாவசியமாகவும தாமதஞ்செய்தால, அவருக்கு இருநூறு ரூபாயககு மேறபடாமல் அபராததணடனை விதிக்கப்படும்.

10. ஸால்ட்-அப்காரி-கஸ்டம்ஸ் இலாகாவைச் சேர்ந்த யாதொரு உத்தியோகஸ்தர் சோதனையின்பொருட்டாவது வேறே காரியத்தின்பொருட்டாவது உதவிசெய்யும்படி கேட்குமபோது, அவருக்கு எழுதமுடியாவிட்டால் அவா கிராமப பெரியதனக்காரரை நேரில கேட்டுக்கொள்ளவேண்டும்; அவருககு எழுதமுடியுமானால் கிராமப் பெரியதனக்காரருக்கு இதுவிஷயமாயக கடிதம எழுதவேணடும். இநதக கடிதம் வரபபெற்ற தேதியையும மணியையும் கிராமப் பெரியதனக்காரர் உடனே பதிந்துகொண்டு, வேண்டிய உதவி பண்ணியபிறகு விவரங்களையெல்லாம் கணடு தாசில்தாரருககு ரிபோர்ட் செயயவேண்டும்.

48. எக்ஸைஸ் (அப்காரியும் அபினியும்).

I. அப்காரி.

1. கிராம உத்தியோகஸ்தர்களெல்லாம் - ஆக்டிற்கண்ட நிபந்தனைகளில் எதையாகிலும் எவராவது மீறிநடந்தால் அப்படி மீறி நடந்திருக்கும் சகல விஷயங்களைக்குறித்தும யாதொரு அப்காரி உத்தியோகஸ்தருக்கு உடனே சங்கதி தெரிவிக்கவும, தங்கள் தங்களுடைய கிராமங்களின் எல்லைகளுக்குள்ளாக அப்படிபபட்ட குற்றங்கள் எவையேனும் நடக்கப்போகின்றனவென்றாவது வெகுசாய்

நடக்கும்போலிருக்கின்றனவென்றாவது தங்களுக்குத் தெரியவந்தாலும், தாங்கள் நம்புவதற்கு முகாந்தரமிருந்தாலும், அவைகளை நடக்கவொட்டாமல் தடுக்க முயற்சிசெய்யவும் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

2. யாதொரு லைஸென்ஸ் அல்லது அனுமதிச்சீட்டில்லாமலாவது, இந்த ஆக்டின்படி பெறப்பட்ட யாதொரு லைஸென்ஸ் அல்லது அனுமதிச்சீட்டிற்கண்ட ஷரத்துகளுக்கு விரோதமாகவாவது யாதொரு சாராயத்தையாகிலும் கஞ்சாச்செடியிலிருந்து தயார் செய்யப்பட்ட யாதொரு லாகிரிவஸ்துவையாகிலும் உற்பத்திசெய்வதோ, இறக்குமதிசெய்வதோ, ஏற்றுமதிசெய்வதோ, ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்திற்குக் கொண்டுபோவதோ, விற்பனைசெய்வதோ, விற்பனைக்காக வைத்திருப்பதோ, தம்வசத்தில் வைத்திருப்பதோ சட்டவிரோதமாகும். லைஸென்ஸில்லாமல் சாராயம் வடிப்பதும், சாராயம் வடிப்பதற்காகவேண்டிய சாமான்கள் அல்லது உபகரணங்களை வைத்திருப்பதும், கஞ்சாச்செடியைப் பயிரிடுவதும், புளிப்புகள்ளுக்காக கள்ளுண்டாகும் யாதொரு மரத்தின் பாளை தட்டிப் பதப்படுத்துவதுங்கூட சட்டவிரோதமாகும். யாதொரு சாராயம் அல்லது லாகிரிவஸ்துவின் போதைத்தன்மையை அதிகப்படுத்தும்பொருட்டு யாதொரு லைஸென்ஸ்தாரர் அந்த சாராயம் அல்லது லாகிரிவஸ்துவுடன் எந்த அந்நிய வஸ்துவையாகிலும் சேர்ப்பதும், தீர்வை செலுத்தியிராத அல்லது சட்டப்படி பெறப்பட்டிராத யாதொரு சாராயத்தையாகிலும் லாகிரிவஸ்துவையாகிலும் அவர் தம்மிடத்தில் வைத்துக்கொண்டிருப்பதும் கூடாதென்று தடுக்கப்பட்டிருக்கின்றன.

3. (i) சாராயம் வடிப்பதற்காக லைஸென்ஸ் பெற்றிருப்பவர்கள் மாத்திரமே தங்களுடைய ஒப்பந்தப் பிரதேசங்களிலுள்ள கடைகளுக்கு சாப்பராசெய்வதற்காக நாட்டு (ஸ்பிரிட்) சாராயத்தை உற்பத்திசெய்யலாம். நிர்ணயிக்கப்பட்ட மரவரி விகிதங்களைச் செலுத்துவதன்மேல் ஸால்ட்-அப்காரி-கஸ்டம் இலாகாவைச் சேர்ந்த உத்தியோகஸ்தர்களால் அடையாளம் செய்யப்படும் மரங்களிலிருந்து புளிப்புக் கள் இறக்கப்படுகிறது. கள் புளித்துப் பொங்குவதை அடக்கும்பொருட்டு உள்ளே சுண்ணாம்பு பூசியிருக்கும் பானைகளில் பனமரங்களிலிருந்து பனஞ்சாறு இறக்கவேண்டும். மலையாளம் ஜில்லாவில மரவரி செலுத்தும் விஸ்தீர்ணங்களிலும், தென்கன்னடம் கோதாவரி ஜில்லாக்களிலும், மதராஸ் டௌன் ஸர்க்கிளிலும், கிருஷ்ணா ஜில்லாவைச் சேர்ந்த நரஸாபூர், பீமாவரம், தணுக்கு, ஏலூர், எர்ணகுடம் தாலூகாக்களிலும் பனஞ்சாறுக்காக பாளை தட்டிப் பதப்படுத்துகிறவர்களுக்கு இலவசமாய் லைஸென்ஸ் கொடுத்து அந்தப்படி பாளைதட்டிப் பதப்படுத்துவதை தற்காலத்தில கவர்ன்மெண்டார் தங்கள் விசாரணையில் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். மற்றப் பிரதேசங்களிலே, பனஞ்சாறுக்காக பாளைதட்டிப் பதப்படுத்துவது விசாரணையிலில்லை.

(ii) “கஞ்சா” என்பது - பயிரிடப்பட்ட பெண்கஞ்சாச் செடிகளின் உலர்ந்த புஷ்பித்திருக்கும் நுனிகள் என்று அர்த்தமாகும். “பங்க்” என்பது - கஞ்சாச்செடி ஆண்செடியாயிருந்தா

லும் பெண்செடியாயிருந்தாலும் அந்தச் செடியின் உலர்ந்த இலைகள் என்று அர்த்தமாகும். "சாரஸ்" என்பது - செடி புஷ்பித்திருக்கும் நுனிகளின்மேல் உண்டாகும் குங்கிலியம்போன்ற வஸ்து என்று அர்த்தமாகும்.

(iii). மிகச்சாதாரணமாயச் செய்யப்படும் குற்றங்களாவன,—சட்டத்துக்கு விரோதமாய சாராயத்தினுசுகளை வடிப்பது; யாதொரு அப்காரி உத்தியோகஸ்தரால் அடையாளம் செய்யப்படாத மரங்களிலிருந்தாவது அல்லது பனஞ்சாறுக்காக பாளை தட்டிப் பதப்படுத்துவதாய்ச் சாக்கிட்டுக்கொண்டாவது புளிப்புக் கள் இறக்குவது; லைசென்ஸ் இல்லாமலாகிலும் லைசென்ஸ் கொடுத்திருக்கும் அளவுக்கு வெளியிலாகிலும் சாராயத்தையாவது லாகிரி வஸ்துக்களையாவது விற்பனை செய்வது; புளிப்புகளுடன் சாற்றைக் கலப்பது; குறைந்த தீர்வை விதிக்கும் பிரதேசத்திலிருந்து அதிக தீர்வை விதிக்கும் பிரதேசத்துக்காகிலும் யாதொரு அந்நிய தேசத்திலிருந்தாவது சுதேச ஸமஸ்தானத்திலிருந்தாவது ப்ரிடிஷ ராஜ்ஜியத்துக்காகிலும் சாராயம் அல்லது லாகிரிவஸ்துக்களைக் கள்ளத்தனமாய்க் கொண்டுபோவது. சாராயம் வடிப்பதற்காக சாதாரணமாய உபயோகிக்கப்படும் வாலேயெனும் குந்திரங்கள், குழாய்கள், பானைகள் அல்லது வேறே பாத்திரங்களைப்போன்ற சாராயம் வடிப்பதற்கான உபகரணங்கள் இருப்பதைக்கொண்டும் "வலம" பட்டை முதலியவைகளைப்போன்ற புளித்துப் பொங்கவைப்பதற்கான வஸ்துக்களிருப்பதைக்கொண்டும் சட்டவிரோதமாயச் சாராயம் வடிக்கப்பட்டிருக்கிறதென்று கண்டுபிடிக்கலாம். செலவாயிருக்கும் கழுநீரையாவது புளித்துப் பொங்கியிருக்கும் வெல்லக் கழுநீரையாவது கண்டுபிடித்தால், சமீபகாலத்தில சாராயம் வடிக்கப்பட்டிருக்கிறதென்றாகிலும் வடிக்கப்படப்போகிறதென்றாகிலும் தெரிந்துகொள்ளலாம. வீட்டுப் புழைக்கடைகளிலும் தோட்டங்கள் முதலியவைகளிலும் கஞ்சாச்செடி சட்டவிரோதமாய்ப் பயிரிடப்படுகிறதாவென்று ஜாக்கிரதையாயக் கவனிக்கவேண்டும்; மேலும், தானாகவே முளைத்திருக்கும் சகல கஞ்சாச்செடிகளையும உடனே வேரோடு பிடுங்கிப்போட்டுவிடும்படி கிராம உத்தியோகஸ்தர்கள பார்த்துக்கொள்ளவேண்டும்.

4. சாராயத்தையாவது கஞ்சாச்செடியிலிருந்து தயார்செய்த லாகிரிவஸ்துக்களையாவது (குறிப்பிட்ட பிரதேசங்களில் தவிர மற்ற பிரதேசங்களிலே) லைசென்ஸில்லாமலாகிலும அனுமதிச்சீட்டு இல்லாமலாகிலும் ஏககாலத்தில் யாதொரு நபர் சாதாரணமாய் எவ்வளவு வைத்துக்கொண்டிருக்கலாம் அல்லது ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்துக்குக் கொண்டுபோகலாமென்றால்:—

(i) ஆரக் என்னும் சாராயம் - ஒரு காலனில் ஆறில் ஒரு பங்கு;
(ii) கள் ஒரு காலன்;
(iii) ஐந்து தோலா எடை கஞ்சா அல்லது சாரஸும், ஒரு சேர் பங்கும், ஷை அளவுகள் சேர்த்துத் தயார்செய்திருக்கும் அல்லது கலந்திருக்கும் வஸ்துக்களும்;

(iv) கொகேனும் அதைப்போன்ற மூலிகைகளும் உலர்ந்திருந்தால் ஆறு க்ரெயினும் கரைத்து திரவரூபமாய் இருந்தால் இருபத்தைந்து க்ரெயினும்.

குறிப்பு.—ஒரு வஸ்து கொகேன்தானாவென்று கண்டறிவதற்கு வேண்டிய திட்டங்கள் XLI (A) குறிப்பிட்ட அனுபந்தத்தில் அடங்கியிருக்கின்றன.

5 கவர்னமெண்ட் தரிசிலும் புறம்போக்கிலுமுள்ள கள் உண்டாகும் மரங்களை குத்தகையெடுத்திருப்பவர்கள் - தங்களால குத்தகையெடுக்கப்பட்ட மரங்களை, யாருக்கு அப்காரி அதிகாரிகள அவசியமான லைஸென்ஸுகளை கொடுத்திருக்கிறார்களோ அந்த நபர்கள் தவிர மற்றவர்களைக்கொண்டு பாளைதட்டி பதப்படுத்துவதற்கு இடம் கொடாதபடி பார்த்துக்கொள்வது கிராம உத்தியோகஸ்தர்களுடைய கடமையாகும்.

6. எந்தப் பிரதேசங்களில் இன்ஸ்பெக்டர்கள் லைஸென்ஸ் கொடுப்பதற்கு முன்னமே மரங்களுக்கு அடையாளம் செய்ய அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிறதோ அந்தப் பிரதேசங்களிலே, கர்ணமாவது கிராமப் பெரியதனக்காரராவது - T. T.-6 குறிப்பிட்ட நமூனாப்படியுள்ள விண்ணப்பத்தின் பின்புறத்தில் லைஸென்ஸ் ஒப்பிக்கப்பட்டிருக்கும் சங்கதியைக்குறித்து உறுதிமொழி கூறவேண்டும்.

## II அபினி.

7. அபினி ஆக்டின்படிக்கான குற்றங்களைச்செய்யவொட்டாமல் தடுப்பதும், அப்படிப்பட்ட சகல குற்றங்களைக்குறித்தும் பொலீஸ் உத்தியோகஸ்தர்களுக்காவது அப்காரி உத்தியோகஸ்தர்களுக்காவது சங்கதி தெரிவிப்பதுங்கூட கிராம உத்தியோகஸ்தர்கள் செய்ய வேண்டிய காரியமாக எண்ணப்படுகிறது.

8. (1) கசகசா பயிரிடுவதும், (2) யாதொரு லைஸென்ஸ் அல்லது பாஸ் இல்லாமலாவது மேற்படி ஆக்டின்படி பெற்றிருக்கும் யாதொரு லைஸென்ஸ் அல்லது பாஸிற்கண்ட ஷரத்துகளுக்கு விரோதமாகவாவது அபினியையும் அபினியிலிருந்து செய்யப்படும் லாகிரி வஸ்துக்களையும் உற்பத்திசெய்வதும் இறக்குமதிசெய்வதும் ஏற்றுமதிசெய்வதும் ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்துக்குக் கொண்டுபோவதும் வைத்துக்கொண்டிருப்பதும் விற்பதும் சட்டவிரோதமாகும்.

9. கஞ்சம், விசாகபட்டணம், கோதாவரி ஏஜென்ஸி பிரதேசங்கள் தவிர மற்றப் பிரதேசங்களிலே,—

(i) மார்பியா (morphia) அல்லது கோடீன் (codeine) அல்லது அவைகளிலிருந்து தயார்செய்யப்பட்ட வஸ்துக்களல்லாமல், புகை குடிப்பதற்காக உபயோகிக்கப்படுகிறவைகளல்லாத வேறே லாகிரி வஸ்துக்களையாகிலும் அபினியையாகிலும் ஒரு தோலாவுக்கு அதிகமாகவும்,

(ii) மார்பியா, அல்லது கோடீன அல்லது அவைகளிலிருந்து தயார்செய்யப்பட்ட வஸ்துக்களைப் பத்து க்ரெயினுக்கு அதிகமாகவும்,

(iii) புகை குடிப்பதற்காக உபயோகிக்கப்படும் லாகிரி வஸ்துக்களை அரை தோலாவுக்கு அதிகமாகவும்,

லைசென்ஸ் இல்லாமலாகிலும் பாஸ் இல்லாமலாகிலும் வைத்துக் கொண்டிருப்பதற்கோ ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்துக்குக் கொண்டுபோவதற்கோ எவருக்கும் அனுமதி கொடுக்கப்படமாட்டாது.

10. புகை குடிப்பதற்காக உத்தேசித்து அபினியிலிருந்து செய்யப்பட்ட லாகிரிவஸ்துக்களைத தயாரசெய்வதற்கோ விற்பதற்கோ எந்த லைசென்ஸ்தாரருக்கும் அனுமதி கொடுக்கப்படமாட்டாது.

11. லைசென்ஸ் இல்லாமலாவது லைசென்ஸ் கொடுக்கப்பட்டிராத யாதொரு இடத்திலாவது விற்பதும், லைசென்ஸ் இல்லாமல் ஒரு தோலாவுக்கு அதிகமாய அபினியை ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்துக்குக் கொண்டுபோவதும் அல்லது வைத்துக்கொண்டிருப்பதும் அபினி சம்பந்தமாய் மிகச சாதாரணமாய்ச் செய்யப்படும் குற்றங்களாகும்.

12. அப்காரி கடைகளையும் அபினிக் கடைகளையும எலத்தில் கேட்கவாவது அவைகளில் யாதொரு பாத்தியதை வைத்திருக்கவாவது கிராம உத்தியோகஸ்தர்களுக்கு அனுமதி கொடுக்கப்படமாட்டாது.

13. எக்சைஸ் தீர்வையை வசூல்செய்ய கிராம உத்தியோகஸ்தர்களுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கும் பிரதேசங்களிலே, கிஸ்தியையும் கட்டண முதலியவைகளின் தவணைத்தொகைகளையும அவர்கள் வசூல்செய்யலாம். மரத்தின் பாளைதட்டிப் பதப்படுத்துவதற்கான லைசென்ஸ் கட்டணங்களைக் கிராம உத்தியோகஸ்தர்கள் வசூல்செய்வதற்கு டிவிஷனல் ஆபிஸர் உத்தரவு கொடுத்திருந்தால், டிஷ கிராம உத்தியோகஸ்தர்கள்-தங்களிடம தொகை செலுத்தப்படும்போது T. T.-7a குறிப்பிட்ட நமூனைப்படி ரசீதுகள் கொடுதது, மத்தியபாகம வெளியிலுள்ளபாகம ஆகிய இரண்டையும் விண்ணப்பதாரரிடம் கொடுத்துவிடவேண்டும. தொகை செலுத்தப்பட்டிருப்பது விஷயமாகவாவது இன்னும் செலுத்தவேண்டிய தவணைத்தொகைகள் விஷயமாகவாவது முறையே விண்ணப்பநமூனாவிலாகிலும T.T.-7 a குறிப்பிட்ட நமூனாவின் பின்புறத்திலாகிலும் கிராம உத்தியோகஸ்தாகள் எவ்விதமான பதிவும் செய்யக்கூடாது.

49. 1878-ம்ளூ ததிய 11-வது ஆக்டாகிய இந்துதேசத்து ஆயுத ஆக்ட்.

1. (பிரத்தியேகமாய் நிவாரணை செய்யப்பட்டவர்கள் தவிர மற்ற) கிராமக்குடிகள் லைசென்ஸுகளை வாங்கிக்கொள்ளத் தவறினால் பிராதுதொடரப்படுவதற்குள்ளாவார்களென்று கிராமப் பெரியதனக்காரர்கள் அவர்களுக்கு எச்சரிக்கை செய்யவேண்டும. டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்ட்ரேட்டுக்கென்று மேல்விலாசம் போட்டு விண்ணப்பமெழுதி அதை யாதொரு ஸப்மாஜிஸ்ட்ரேட்டின் ஆபிஸில் கொடுத்து

நிர்ணயிக்கப்பட்ட * கட்டணங்களைச் செலுத்தினால் டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்ட்ரேட்டினிடத்திலிருந்து லைஸென்ஸ் பெற்றுக்கொள்ளலாம்.

2. குடிகளை ஆயுதம் தரிக்கவொட்டாமல் தடுக்கவேண்டுமென்கிற அபிப்பிராயம் கவர்ன்மெண்டாருக்கு இல்லையென்றும், குற்றவாளிகளென்று தீர்மானிக்கப்பட்டவர்களும் சந்தேகிக்கப்பட்ட நபர்களும் துர்நடத்தையுள்ள நபர்களும் தவிர மற்றவர்களுக்கெல்லாம் ஆயுதங்களை வைத்திருக்கவும், வேட்டையின் பொருட்டும் பந்தோபஸ்தின் பொருட்டும் காட்சியின் பொருட்டும் ஆயுதம் தரித்துக்கொண்டு போகவும் லைஸென்ஸுகள் கொடுக்கப்படுமென்றும் கிராமக் குடிகளுக்கு விவரமாய்ச் சொல்லவேண்டும். குற்றவாளிகளென்று தீர்மானிக்கப்பட்டவர்கள் முதலானவர்கள் லைஸென்ஸுகளுக்காக விண்ணப்பம் செய்துகொண்டால், அவர்களுடைய யோக்கியதையைக்குறித்து ஸப்மாஜிஸ்ட்ரேட்டுகளுக்குத் தெரிவிப்பது கிராம உத்தியோகஸ்தர்களுடைய கடமையாகும்.

3. கிராமப் பெரியதனக்காரர்களும் அவர்களுடைய தலையாரிகளும் ஆயுதங்களை வைத்திருக்க விரும்பினால், அவர்கள் மற்றவர்களைப்போலவே லைஸென்ஸ் வாங்கிக்கொள்ளவேண்டும்.

| | ஒரு வருஷத்துக்கு (ஸ்டாம்ப்) முத்திரா ரூபமாக கட்டணம். |
|---|---|
| | ரூ. |
| ஆயுதங்களையாவது மருந்து குண்டு முதலிய ராணுவ சாமான்களையாவது உற்பத்திசெய்யவாகிலும் உருமாற்றவாகிலும் விற்பனை செய்யவாகிலும் வைத்திருக்கவாகிலும் லைஸென்ஸ். | 20 |
| ஆயுதங்களையும் மருந்து குண்டு முதலிய ராணுவசாமான்களையும் வைத்திருக்கவும் விற்பனை செய்யவும் லைஸென்ஸ். | 10 |
| ஆயுதங்களையாவது மருந்துகுண்டு முதலிய சாமான்களையாவது வைத்திருக்கவும், வேட்டையின் பொருட்டாவது பந்தோபஸ்தின் பொருட்டாவது காட்சியின் பொருட்டாவது ஆயுதம் தரித்துச் செல்லவும் லைஸென்ஸ். | ஆயுதம் தரிக்கக்கூடாதென்று ஏற்பாடுசெய்திருக்கிற ஜில்லாக்களில் பிரதி ஆயுதத்துக்கு எட்டணாவும், மற்ற ஜில்லாக்களில் பிரதி ஆயுதத்துக்கு 4 அணாவும். |
| ஆயுதம் தரிக்கக்கூடாதென்று ஏற்பாடாகாத யாதொரு ஜில்லாவில் துப்பாக்கி முதலிய சுடுகருவிகளையாவது மருந்துகுண்டு முதலிய சாமான்களையாவது ராணுவசாமான்களையாவது வைத்திருக்க லைஸென்ஸ். | யாதொரு கட்டணமுமில்லை. |

(ஆயுதம் தரித்துக்கொண்டு போவதற்காவது ஆயுதங்களை எடுத்துக்கொண்டு போவதற்காவது இந்த லைஸென்ஸினால் லைஸென்ஸ்தாரருக்கு அதிகாரம் உண்டாகமாட்டாது.)

4. மனிதர்களுக்காவது கால்நடைகளுக்காவது சாகுபடிக்காவது சேதத்தை உண்டாக்குகிற காட்டுமிருகங்களை அழிப்பதற்கு வேண்டிய ஆயுதங்களை வைத்திருக்க விரும்புகிறவர்களுக்கு யாதொரு கட்டணமுமில்லாமல் ஐந்துவருஷகாலத்துக்கு லைசென்ஸுகள் கொடுக்கப்படும்.

50. தபால் இலாகா.

1 கடிதங்களைப் போடும்படியாக அதிகமாய்த் தபால்பெட்டிகளை ஸ்தாபிப்பதனாலும், தபால்காரனை எல்லாக் கிராமங்களையும், முக்கியமாய்த் தபால்பெட்டிகள் வைக்கப்பட்டிருக்கிற கிராமங்களை, வேளை தவறாமலும் முன்னிலும் கிரமமாகவும் போய்ப் பார்வையிடும்படி செய்வதனாலும், வெகுதூரத்திலுள்ள கிராமங்களிலே தபாலினால் உண்டாகிற சௌகரியங்களைப் பரவச்செய்யும்படி தபால் இலாகாதாரர் பிரயத்தனங்கள் செய்துவருகிறார்கள்.

2. புதிய தபால்பெட்டிகள் சாதாரணமாய்க் கிராமப்பெரியதனக்காரர்களுடைய வசத்தில் வைக்கப்படும்; அதாவது, அந்தப் பெட்டிகள் அவர்களுடைய வீட்டுமுகப்பில் எல்லாரும் வரக்கூடிய இடத்திலே அடித்துவைக்கப்படும். ஆயினும், அவர்கள் அவைகளைத் திறக்கவேண்டியுமிராது, அவைகளுக்குள் இருப்பவைகளை ஒருவகைசெய்யவேண்டியுமிராது. இந்தக் காரியம் கிராமத்தபால்காரர்களால் செய்யப்படும்; அந்தத் தபால்பெட்டிகளின் சாவிகள் அவர்களிடத்தில் இருக்கும். கிராமத் தபால்காரர்கள் கிராமங்களுக்குக் காலக்கிரமம் தவறாமல் சரியாக வருகிறார்களா என்றும், தபால்பெட்டிகளின் மேல் பிரசித்தம் பண்ணியிருக்கிற கிழமைகளில் பெட்டிகளைத் திறந்து அவைகளில் இருப்பவைகளை எடுத்துக்கொண்டு போகிறார்களா என்றும் கிராமப்பெரியதனக்காரர்கள் ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளவேண்டும்: தபால்காரர்கள் அந்தப்பிரகாரம் செய்யாவிட்டால், அதுசங்கதியைத் தபாலாபீஸுகளின் இன்ஸ்பெக்டருக்காவது தப்பிதஞ்செய்த கிராமத்தபால்காரன் எந்த ஆபீஸைச் சேர்ந்தவனோ அந்த ஆபீஸின் போஸ்டமாஸ்டருக்காவது கடிதமூலமாகவாகிலும், பிராதுசெய்யப்பட்ட கிராமப்பிசகின் தன்மையை விஜிட் புஸ்தகத்தில் சுருக்கமாகக் குறிப்பிட்டாகிலும் ரிபோர்ட் செய்யவேண்டும். தபால்காரர்களிடத்தில் இதற்கென்று விஜிட் புஸ்தகங்கள் சர்ப்பரா செய்யப்பட்டிருக்கும்: அந்தப் புஸ்தகத்தில் பிரதி கிராமப்பெரியதனக்காரரும் தமது பெயரைக் கையெழுத்துசெய்து, தபால்காரன் வருகிற தேதியை அதற்குரிய கலத்தில் கூடியமட்டிலே குறிக்கவேண்டும் யாதொரு கிராமத்தபால்காரன் நியமிக்கப்பட்ட தேதியில் வராமலிருப்பது, தன்னுடைய விஜிட் புஸ்தகத்தைக் காட்டத் தவறுவது, அல்லது இதைப்போன்ற கிரமப்பிசகுகளைக் கண்டால், கிராமப் பெரியதனக்காரர் உடனே அதுசங்கதியைப்பற்றி மேலே சொல்லப்பட்ட உத்தியோகஸ்தர்களுக்குத் தெரிவிக்கவேண்டும். தபால் விஷயங்களைக்குறித்துத் தபால் அதிகாரிகளுக்கு எழுதப்பட்ட கடிதங்களை லகோடாவின்மேலே "போஸ்டல் ஸெர்வீஸ்" என்கிற வார்த்தைகளையெழுதி, கீழே இடதுகைப்பக்கத்து மூலே

யில கிராமப்பெரியதனக்காரருடைய கையெழுத்துடன் தபால் கட்டணமில்லாமலே அனுப்பலாம.

3. மழை - வெள்ளம் முதலான காலங்களில் தபால் (எடுத்துக் கொண்டு ஓடுகிற ஆளகள்) ரன்னாகள தபால்களை எடுத்துக்கொண்டுபோவதற்குச் சாதகமான ஒத்தாசை செயயும்படி வேண்டினல், அந்த ரன்னாகள் போகிற ரஸ்தாவின் அக்கம்பக்கத்திலுள்ள கிராமப்பெரியதனக்காரர்கள் அவர்களுக்கு ஒவ்வொரு வகையான உதவியையும செய்யவேண்டும. யாதொரு கிராமத்தைப பார்வையிட வருகிற தபால் இலாகாவைச சேர்ந்த உயாந்த உத்தியோகஸ்தர்கள் கேட்கிற எல்லா உதவியையும் செயவதோடுங்கூட. அவர்களுக்கு வேணடிய சஙகதிகளைத் தெரிவிக்கவும வேண்டும்.

4. தபால்காராகள, ரன்னாகள் முதலான வேலைகளுககு நம்பிக் கையானவர்களாகவும் தகுதியானவாகளாகவும இருப்பவர்களைத் தெரிந்தெடுத்துசசொலலுமபடி தங்களைக் கேட்டால் கிராம உத்தியோகஸ்தர்கள தபாலதிகாரிகளுககு உதவிசெய்து சஙகதிதெரிவிக்க வேண்டும. இதுவுமல்லாமல அவர்கள்-மணியார்டர்கள் எந்தெந்த நபர்களுக்குச் சேர்ப்பிக்கபபடவேணடுமோ அந்தந்த நபர்களை இன்னாரின்னாரென்று காட்டி கிராமத்தபால்காராகளுக்கு உதவிசெய்ய வேண்டும்; மேலும், அந்த மணியார்டர்கள் தஙகள் முன்னிலையில் கொடுக்கபபட்டால், தொகை செலுத்தபபட்டதற்காக அத்தாக்ஷிக் கையெழுத்து செய்யவேணடும. தபால் இலாகாவைச் சேர்ந்த கீழ்த்தர உத்தியோகஸ்தர்களுககு ஜாமீன்தாராகளாய் வருபவர்களுடைய திரவிய ஸ்திதியைககுறித்து கிராம உத்தியோகஸ்தர்களை ரிபோாட்செய்யும்படி கேட்டால, அவாகள்-அநத ரிபோாட்டுகளை நிரணயிக்கப்பட்ட நமூனாவில தாசில்தாரர்மூலமாக அனுப்பவேண்டும.

5. கிராமத தபால்காராகள மணியாாடர்களுக்காகப பணம் கொடுக்கும்படி கையில் பணத்தை வைத்துக்கொண்டு பிரயாணஞ்செய்யுமபோது இரவில யாதொரு கிராமத்திலே தங்குமபடி நேரிட்டு, அந்த ராத்திரியில் பணத்தைப் பத்திரமாக வைப்பதைப்பற்றிக் கிராமப்பெரியதனக்காரரைக் கேட்டுககொண்டால, அவர் கூடிய மட்டில் அவர்களுக்கு அதுவிஷயத்தில உதவிசெய்யவேண்டும்.

51. எடுத்தலளவைகளும் முகத்தலளவைகளும்.

1. ஷாப் வைத்துக்கொணடிருக்கிறவர்கள, கடைக்காரர்கள் முதலானவர்கள் அங்கீகரிககப்பட்ட அளவைப்பிரமாணங்களுக்கொத்தபடி வைத்துக்கொண்டிருககும உலோகத்தினுற் செய்த எடுத்தலளவைகளும முகததலளவைகளும-பிரதி ஜில்லாவிலும், ஸ்வல்ப கட்டணம செலுத்தப்படுவதனமேல், அதறகெனறே ஏற்படுத்தியிருக்கிற சிப்பந்திகளால் முத்திரை போடப்படும்; நகை வியாபாரிகளுடைய எடுத்தலளவைகள் எவைகளுககும முத்திரை போடப்பட மாட்டாது.

2. அந்த சிப்பந்திகள் தாசில்தார்களுடைய அல்லது டெப்யுடி தாசில்தார்களுடைய மேல்விசாரணையின்கீழ் வேலைபார்த்துவருவார்கள். எடுத்தலளவைகளையும முகத்தலளவைகளையும் தயார் செய்வதைப்பற்றியும் விற்பனைசெய்வதைப்பற்றியும் நேராகவாவது வேறுவிதமாகவாவது அந்த சிப்பந்திகளுக்கு யாதொரு சம்பந்தமுமில்லை ; அந்த அளவைகளைப் பூர்த்தியாய்ச் சரியானவைகளாயிருக்கசெய்வதற்கு ஏதாகிலும் ஸ்வலபமான ஏற்றக்குறைச்சல் இருந்தால் அதைமாத்திரம் அளவைப்பிரமாணக்கின்படி சரிப்படுத்துவது அந்தச் சிப்பந்திகளின் வேலையாம் ; அதற்காகப் பிரத்தியேகமாய் யாதொரு கட்டணமும் வாங்கக்கூடாது ; அதிகமான ஏற்றக்குறைச்சலைச் சரிப்படுத்துவதானலை அதை விண்ணப்பதாரரே செய்துகொள்ளவேண்டும். மேலே சொல்லப்பட்ட விஷயங்களைக் கிராமஉத்தியோகஸ்தர்கள் தங்கள தங்கள் கிராமங்களிலுள்ள ஷாப்காரர்களுக்கும் கடைக்காரர்களுக்கும் இதரமானவர்களுக்கும் விவரமாய்ச்சொல்லி, அங்கீகரிக்கப்பட்ட அளவைப் பிரமாணங்களுக்கு ஒத்திருந்து கிரமப்படி முத்திரை போடப்பட்டிருக்கும உலோகத்தினற் செய்த எடுத்தலளவைகளையும் முகத்தலளவைகளையும் உபயோகிப்பது யுக்தமென்பதைப்பற்றி அடிக்கடி அவர்களுக்கு வற்புறுத்தவேண்டும்.

52. காட்டுமிருகங்களைக் கொல்வதும் அவைகளாலும் பாம்புகளாலும் உண்டாகிற மரணங்களை ரிபோர்ட்செய்வதும்.

1. காட்டு மிருகங்களைக் கொல்வதில் ஒத்தாசைசெய்யும்படியாக ஷிகாரிகளென்னும் வேட்டைக்காரர்களையும் இதரமானவர்களையும் கிராமப் பெரியதனக்காரர்கள் உற்சாகப்படுத்தவேண்டும் ; அல்லாமலும், அவைகளைக் கொல்வதற்காக அடியிற்கண்ட உத்தமத்தொகையான இனாம்களை கவர்னமெண்டார் ஜாரிசெயதிருக்கிற சங்கதியை கிராமக்குடிகளுக்கெல்லாம் தெரியப்படுத்தவேண்டும் :—

| ஜில்லாக்கள். | வேங்கை. | புலி, சிவிங்கி அல்லது சிறுத்தை. | கரடி. | செந்நாய். |
|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| விசாகபட்டணம் ... | 100 | 25 | 5 | 10 |
| தென்னனடம்... ...<br>மலையாளம் ... ...<br>கஞ்சம் ...<br>கோதாவரி .. ... | 70 | | | |
| கடப்பை ... ...<br>சேலம்... ... ... | 50 | | | |
| இதர ஜில்லாக்கள் ... | 35 | | | |

யாதொரு ஜில்லாவின் சந்தர்ப்பங்களைக் கவனிக்கும்போது மேலே சொன்ன சகல மிருகங்களின் விஷயமாகவாவது யாதொரு மிருகத்தின் விஷயமாகவாவது இந்த வீதங்களைக் குறைப்பதாகிலும்

இனும் கொடுப்பதை அடியோடு நிறுத்திவிடுவதாகிலும் யுக்தமாயிருக்கிறபட்சத்திலே, கவர்ன்மெண்டார் இந்த வீதங்களைக் குறைத்துவிடலாம்; அல்லது இனும் கொடுப்பதை அடியோடு நிறுத்திவிடலாம்.

2. எதற்காக இனும் கேட்கப்படுகிறதோ அந்த மிருகத்தின் கபாலத்தையும் பற்களையும் பதனுகாத தோலையும் கால் நகங்களையும் இதுவிஷயத்தில் சம்பந்தப்பட்ட கிராமப்பெரியதனக்காரர் தம்முடைய கிராம எல்லைக்குள் குறிப்பிடப்பட்ட தேதியிலே அந்த மிருகம் கொல்லப்பட்டதென்று கொடுத்த ஸெர்டிபிகேட்டையும், கலெக்டரிடத்திலாவது டிவிஷனல் ஆபிஸரிடத்திலாவது கொண்டுவந்து காட்டி இனும்களைப் பெற்றுக்கொள்ளலாம்.

3. கொல்லப்பட்ட பிரதி மிருகத்தையும் கூடியசீக்கிரத்தில் தம்முடைய பரிசோதனைக்காகக் கொண்டுவரும்படி கிராமப்பெரியதனக்காரர் ஷிகாரிகளிடத்திலும் இதரமானவர்களிடத்திலும் சொல்லவேண்டும். அந்த மிருகத்தைக் கொன்ற சந்தர்ப்பங்களைப் பற்றி எல்லா விவரங்களையும விசாரித்து, விசாரணையின் முடிவை மேலே குறிப்பிடப்பட்ட ஸெர்டிபிகேட்டில் சேர்த்தெழுதி அதை இனும் பெறுவதற்கு அக்குதாரனுன நபரின் கையில் கொடுக்கவேண்டும்.

4. வேங்கைக்காக சில ஜில்லாக்களில் கொடுக்கப்படும் இனும்களைக் காட்டிலும் வேறு சில ஜில்லாக்களில் அதிக இனும்கள் கொடுக்கப்படுவதனுலே, அம்மிருகங்கள் எந்த இடத்தில் கொல்லப்பட்டனவென்று கிராமப்பெரியதனக்காரர்கள் தாங்கள் ஸெர்டிபிகேட்டில் கையெழுத்துசெய்வதற்கு முன்னே பிரத்தியேகமாய் விசாரிக்கவேண்டும்.

5. ஈசுவரார்ப்பணம் செய்வதற்காகத் தோல்வேண்டியிருக்கிற அரண்ணிய ஜாதியாரின் விஷயத்திலே, தோலைக்கொண்டுவந்து காட்டச்சொல்லி கேட்கக்கூடாது; மேலும, மிருகத்தைக்கொன்றவன் அதன் கபாலத்தையும் தோலையும் வெற்றிக்குறிகளாய் வைத்துக்கொள்ள விரும்புவாணுல், அவைகளை ஒப்பித்து விடும்படி நிர்ப்பந்தப்படுத்தக்கூடாது; ஆனுல், அப்படிப்பட்ட விஷயங்களிலே அந்தத் தோலின் விலையானது கொடுக்கப்படும் இனும் தொகையிலிருந்து கழித்துக்கொள்ளப்படும்.

6. யானைகளானவை மனிதர்களைக் கொல்பவைகளாகவாவது பயிர்களை அழிப்பவைகளாகவாவது இருப்பதாகத் தெரியவந்தால் கிராமப்பெரியதனக்காரர் அதுசங்கதியைத் தாசில்தாரருக்கு ரிபோர்ட் செய்யவேண்டும்; அவர் அவைகளைக் கொல்லுவதற்கு இனுங்களைக்கொடுப்பதாகச்சொல்லும்படி கலெக்டரை கேட்டுக்கொள்வார்.

7. யானைகளைத் துப்பாக்கியால் சுடுவதற்காக லைஸென்ஸுகளை ஜாரிசெய்யக் கவர்ன்மெண்டாருக்கு மாத்திரம் அதிகாரமுண்டு. யானைகள் திருட்டுத்தனமுள்ளவைகளாகவாகிலும், அபாயம விளைக்கக்கூடிய அத்தனையாகவாகிலுமிருந்தாலன்றி மற்றப்படி, அவைகளைச் சுடுவதற்கு அனுமதி ஒருபோதும் கொடுக்கப்படமாட்டாது.

8. பாம்புகடியினாலே உண்டாகிற மரணங்களைக் குறைக்கும் பொருட்டு, கிராமப்பெரியதனக்காரர் கிராமத்தின் அக்கம்பக்கங் களிலே விஷப்பூச்சிகள் தங்க இடமுண்டாகும் நாகதாளி முதலிய கெட்ட பூண்டுகளைக் கூடியமட்டில் கிராமக்குடிகள் அழித்துவிடும்படி பார்க்கவேண்டும்.

9. காட்டுமிருகங்கள் முதலானவைகளை நிர்மூலஞ்செய்வதற்காக அனுசரிக்கப்பட்ட ஏற்பாடுகளின் பலனைக் காட்டும் XLII - வது அனுபந்தத்தில் நிர்ணயிக்கப்பட்ட நமூனாவின்படி கிராமப் பெரிய தனக்காரர் ஒரு ரெஜிஸ்டர் வைத்திருக்கவேண்டும்: மேலும், அவர் அதிலிருந்து எடுக்கப்பட்ட ஒரு எக்ஸ்ட்ராக்டைப் பிரதிமாதத்தின் முடிவிலும் தாசில்தாருக்கு அனுப்பவேண்டும்; அப்படி செய்வதனால், தாசில்தாரானவர் தாலூகா முழுமைக்கும் தொகுப்பான ஸ்டேட்மென்டைத் தயார்செய்வித்துப் பிரதி சவுரவருஷத்தின் முடிவிலும் அதை ஹுஜூருக்கு அனுப்புவிக்கச் சாதகமாகும். அந்த ரெஜிஸ்டரில் அன்றுடம் எழுதவேண்டியவைகளை எழுதிவிட வேண்டும்; பாம்புகடிகளால் நேரிடுகிற மரணங்களைப் பதிவதில விசேஷ ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்.

10. வேங்கைகளாலாவது இதரமான காட்டுமிருகங்களாலாவது மனிதர்களுக்காகிலும் கால்நடைகளுக்காகிலும் உண்டாகிற எந்த பிராணச்சேதத்தையும் கிராமப்பெரியதனக்காரர் தாமசமில்லாமல் அதிசமீபத்திலுள்ள பொலீஸ் ஸ்டேஷனைச் சேர்ந்த ஸ்டேஷன் ஆபிஸருக்குத் தெரிவிக்கவும் வேண்டும்.

53. வெட்டுக்கிளிகள்.

1. இந்தப் பூச்சிகள் பயிர்களுக்கு விசேஷ கெடுதியை உண்டு பண்ணுகிறவைகளாயிருக்கின்றன; அவைகள் கிராமத்தில் காணப் பட்டால் அதுசங்கதியைக்குறித்து உடனே தாசில்தாருக்கு ரிபோர்ட் அனுப்புவது கிராம உத்தியோகஸ்தர்களுடைய கடமையாயிருக்கிறது.

2. அவைகள் யாதொரு கிராமத்தில் காணப்பட்டவுடனே, அவைகளைக் கொம்புகளாலும் கிளைகளாலும் அடித்தாவது, புல்லிலிருந்தாகிலும் இளம்பயிரிலிருந்தாகிலும் துணிகளாலோ அல்லது கோணிப்பைகளாலோ அவைகளைப் பெருக்கியாவது அவைகளை அழித்துவிடும்படி பிரயாசை எடுத்துக்கொள்ளும்பொருட்டுக் கிராமத்தாரெல்லோரையும் தூண்டுவதில் கிராம உத்தியோகஸ்தர்கள் பின்வாங்கக்கூடாது. அவைகள் குளிரினால் விறைத்திருக்கிற சமயமாகிய அதிகாலையே இந்த வேலையைச் செய்வதற்கு மிகவும் ஏற்ற காலமாகும். யாதொரு துண்டுநிலத்தில் பெட்டை வெட்டுக்கிளிகள் பெருங்கூட்டமாகக் காணப்பட்டால், அந்த நிலத்தை ஏர்கட்டி உழுது அதனால் முட்டைகளை அழித்துவிடுவது உத்தமம். அவைகள் அடைகாக்கிற கால அளவு ஆறுவாரமாகும்.

3. பயிர்களை அழிக்கிற வெட்டுக்கிளிகளின் சில மாதிரிகளை அப்போதைக்கப்போது கிராம உத்தியோகஸ்தர்கள் தாமதமில்லாமல்

தாசில்தாராருக்கு அனுப்பவேண்டும் ; அவைகளை ரூபிக்கும்பொருட்டுக் கவர்ன்மெண்ட் ம்யூஜியம் என்னும் பலபொருட்காட்சிச்சாலையின் ஸூபரின்டெண்டென்டுக்கு அனுப்புவதற்காக அவைகளை அரக்குச்சாராயமுள்ள சிறு புட்டிகளில் ஜாக்கிரதையாகச் சேமித்து வைக்கவேண்டும்.

4. தோட்டப் பயிர்களுக்காவது புலத்திலுள்ள பயிர்களுக்காவது பழ விருக்ஷங்களுக்காவது இதர பூச்சிகளால் பிரமாதமான கெடுதி உண்டாவதாய்க் காணப்பட்டால், அப்படிப்பட்ட விஷயங்களையுங்கூட தாசில்தாராருக்குத் தெரிவிக்கவேண்டும்.

5. கூடுமானபோதெல்லாம், உயிருடனிருக்கும் பூச்சிகள், சேமித்து வைக்கப்பட்டிருக்கும் பூச்சிகள் ஆகிய இவ்விருவகையையும் எல்லா தசைகளிலும் ஏராளமாய் அனுப்பவேண்டும்.

6. **உயிருடனிருக்கும் பூச்சிகளின் மாதிரிகள்.**—இவைகளை அனுப்பும போது, பிரயாணமானது இருபத்திரண்டு மணி நேரத்துக்கு அதிகமாகப் பிடிக்குமானால், அவைகளுக்காக தீனிவைத்து காற்று போவதற்காக ஏற்பாடு செய்து, கூடுமானவரையில் அவைகளை இயற்கையான நிலைமையில் அனுப்பவேண்டும். பூச்சி மண்ணில் வசிப்பதாயிருந்தால், அதை சிறிது மட்டில் ஈரமாயிருக்கும் மண்ணில் வைத்து அனுப்பலாம். சிப்பத்துக்குள் இருக்கும வஸ்துக்கள் எவ்விதமாகவாகிலும் அசைவதனால் பூச்சிகள் நசுங்கிப் போகாதபடியாவது அவைகளுக்குக் கெடுதி உண்டாகாதபடியாவது வெகு ஜாக்கிரதையாகச் சிப்பஞ்செய்யவேண்டும்.

7. **சேமித்துவைக்கப்பட்டிருக்கும் பூச்சிகளின் மாதிரிகள்.**—கம்பளிப் பூச்சிகளைப்போன்ற மிருதுவாயுள்ள உடலையுடைய பூச்சிகளையெல்லாம் உறைப்புக் குறைவாயிருக்கும ஸ்பிரிட்டிலாவது விஸ்கி என்னும் சாராயத்திலாவது சேமித்துவைத்திருக்கலாம். அவைகளை சிறு புட்டியில் அனுப்புவது உத்தமம் ; ஆனால், அவைகளை இரண்டு நாள்வரையில் சாராயத்தில் ஊறவைத்திருந்து, சாராயத்தில் ஊற வைத்த ப்ளாட்டிங் காகிதத்திலாவது இறுக்கமாயுள்ள பெட்டி அல்லது தகரத்திலாவது வைத்தும அனுப்பலாம்.

8. வண்டுகளைப்போல் கெட்டியாயிருக்கும் பூச்சிகளை மெதுவான காகிதத்தில் சுருட்டிவைக்கலாம். அவைகளை குண்டூசியினால் குத்திக்கட்டக்கூடாது ; மேலும், அவைகள் உருளாதபடி அவைகளைச் சிப்பங்கட்டவேண்டும். வெகுதூரம் போகவேண்டியிருந்தால், அவைகள் வெகுசாய பூஞ்சாளம பிடித்துப்போகுமாகையால் அவைகளை முதலில் உலர்த்திவிடவேண்டும் ; இல்லாவிட்டால், நாப்தலினையாவது கார்பாலிக் திராவகத்தில் ஊறவைத்த ப்ளாட்டிங் காகிதத்தையாவது அவைகளோடு சிப்பத்தில் வைக்கலாம். வண்ணாத்திப் பூச்சிகளையும தும்பிமுதலியவைகளைத்தின்னும் பூச்சிகளையும் சிறகு மூளைத்திருக்கும் இடத்துக்குக் கீழே கிள்ளி அவைகளைச் சுலபமாய்க் கொன்றுவிடலாம். பிறகு அவைகளின் சிறகுகளை உடலுக்குமேலே திருப்பி மடித்து, பூச்சிகளை ஒரு சிறு லகோடாவிலாவது ாகிதமடிப்பிலாவது தட்டையாயிருக்கும்படி வைக்கவேண்டும்.

9. பூச்சிகளைக் கொட்டாத பஞ்சுடன் படும்படியாக வைத்து ஒரு போதும் சிப்பம் கட்டக்கூடாது. பூச்சிகளுக்கும் இந்த பஞ்சுக்கும் மத்தியில் காகிதம் வைக்கவேண்டும். செதிளுள்ள பூச்சிகளையும் ஆபிடீ (aphidæ) என்னும் பூச்சிகளையும் இதர சிறு பூசசிகளையும் சிறு பெட்டிகள் அல்லது தகரங்களிலே அவைகள் இன்னும் செடியில் வைத்து அனுப்புவது மிகச்சுலபம்.

10. ஆண் பெண் என்னும் ஒவ்வொரு ஜாதியிலும் சில பூச்சிகளின் மாதிரிகளை இந்தியன் ம்யூஜியம் என்னும் பல பொருட்காட்சிச் சாலைக்கும் ஐரோப்பாவுக்கும் ரூபிக்கும்பொருட்டு அநேக சந்தர்ப்பங்களில் அனுப்பவேண்டியிருக்கிறபடியால், மாதிரிகளை ஏராளமாய் அனுப்பவேணடும்.

11. மாதிரிகள் அனுப்பும்போது XLIII-வது அனுபந்தத்திற் கண்ட நமூனாப்படி ஒரு ரிபோர்ட்டும் அனுப்பவேண்டும்.

54. துருப்புகளுக்கும் ஸர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கும் பிரயாணிகளுக்கும் சர்ப்பரா செய்வது.

1. துருப்புகள் இடம்விட்டு இடம் போகும்போது போஜன பதார்த்தங்களை சர்ப்பரா செய்கிற விஷயத்தில மேலான அந்தஸ்துடைய ரெவினியு உத்தியோகஸ்தாகளுக்கு சகல உதவியையும் செய்வது ஒவ்வொரு கிராமப் பெரியதனக்காரருடைய கடமையாகும்.

2. மேலும், கவர்ன்மெண்ட் உத்தியோகஸ்தாகளுக்கு வண்டிகளையும் சாமான் முதலியவைகளைக் கொண்டுபோவதற்கு அவசியமாயுள்ள இதர சாதனங்களையும் சம்பாதித்துக்கொடுக்கும் விஷயத்திலும், உத்தியோககாரியமாயச் சுற்றுப்பிரயாணம் செய்யும் கவர்ன்மெண்ட் உத்தியோகஸ்தர்களுக்கும இதர பிரயாணிகளுக்கும் போஜன பதார்த்தங்களையும் தேவையாயிருக்கும் மற்ற வஸ்துக்களையும் சர்ப்பராசெய்விக்கும் விஷயத்திலும் உதவிசெயயும்படி கிராமப் பெரியதனக்காரரைக் கேட்கும்போது அவாகளுக்கு நியாயமான சகல உதவியையும் செய்வது கிராமப் பெரியதனக்காரருடைய கடமையாகும். உத்தியோகஸதர்கள் தங்களுக்குத் தேவையாயிருக்கும் வஸ்துக்களைக் குறித்து நியாயமான காலத்துககுமுன்னே நோடிஸ் கொடுக்கவேண்டும். போதுமான காலமிருக்கிறபட்சத்திலே, அவர்கள் தாங்கள் கிராமத்துக்கு வரும் தேதியையும், வேகுசாய் வேண்டியிருக்கும் வஸ்துக்களையும் கண்டு கிராமப் பெரியதனக்காரருக்கு முன்னதாக ஒரு தாக்கீது அனுப்பும்படி தாசில்தாரருக்குத் திட்டம் செய்யவேண்டும். சர்ப்பராவுக்காக அனுப்பும் இண்டென்டுகளெல்லாம் கூடுமானவரையில் எழுத்துமூலமாயிருக்கவேண்டும். எழுத்துமூலமாய்க் கேட்டிருந்தாலொழிய கிராமப் பெரியதனக்காரர்கள் சர்ப்பராசெய்யக்கூடாது; இநதப்படி எழுதியிருக்கும் காகிதங்களை, அவர்கள் செய்திருக்கும் சர்ப்பரா விஷயமாய் அனுப்பும் பில்லுக்கு ஆதாரமான வெளச்சர்களென்னும் ஆதாவுச் சீட்டுகளாய் ஹாஜர்ப்படுத்தவேண்டும்; மேலும், அவர்கள் - தாங்கள் சர்ப்பரா செய்திருப்பதற்காகத் தங்களுக்குப் பூராவாய்த் தொகை செலுத்தப் படாவிட்டால், இதுசம்பந்தப்பட்ட உத்தியோகஸ்தருக்காவது

இதர மேலான அதிகாரிக்காவது ஆலசியமில்லாமல் பிராது பண்ண வேண்டும். சர்ப்பரா செய்யப்பட்ட ஒவ்வொரு வஸ்துவும் யாரிடத்திலிருந்து வாங்கப்பட்டதோ அதற்காக யாருக்குத் தொகை செலுத்தவேண்டுமோ அப்படிப்பட்ட ஷாப்புக்காரர் அல்லது வேறே விற்பனைதாரருடைய பெயரை அவர்கள் தவறாமல் எப்போதும் பில்லில் பதியவேண்டும். உள்ளூரில் செய்யப்பட்ட அல்லது விற்கப்பட்ட வஸ்துக்களைத் தவிர வேறே எந்த வஸ்துக்களையும் சர்ப்பரா செய்யக்கூடாது. விசேஷ காரணங்களிருந்தாலன்றி மற்றப்படிக்கும் விசேஷ சந்தர்ப்பங்களிலன்றி மற்றப்படிக்கும், யாதொரு கவர்ன்மெண்ட் உத்தியோகஸ்தா நெடைக்வார்ட்டரில் (ஆபிஸின் தலைமை ஸ்தானத்தில்) இருக்கும்போது எந்த சாமானையும் சர்ப்பரா செய்யும்படி கேட்கக்கூடாது. உத்தியோக காரியமாய்ச் சுற்றுப்பிரயாணம் செய்யும் உத்தியோகஸ்தர்கள் எவ்வகையான வஸ்துக்களையும் விலை கொடுக்காமல் சர்ப்பராசெய்யப்பெறக்கூடாதென்றும், கிராம உத்தியோகஸ்தர்கள் அப்படிப்பட்ட வஸ்துக்களுக்காகப் பணம் பெற்றுக்கொள்ளாமல அவைகளை சர்ப்பரா செய்வதாகச் சொல்லக்கூடாதென்றும கண்டிபபாய்த் தடுக்கப்படுகிறது.

55. ரெயில்வேகள் (இருப்புப்பாதைகள்).

1. யாதொரு ரெயில்வேக்குச் சமீபத்திலுளள கிராமங்களின் பெரியதனக்காரர்கள்—

(a) போக்குவரவுக்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் ரெயில்வே கேட்டுகளின் ஜோலிக்குப் போகக்கூடாதென்றும்,

(b) ஸிக்னல்களென்னும் குறிகாட்டும் கருவிகள், ஸிக்னல் கம்பிகள் அல்லது வேறே இசைப்புகளுக்குச் சேதமுண்டாக்கக்கூடாதென்றும், அல்லது அவைகளின் ஜோலிக்குப் போகக்கூடாதென்றும்,

(c) (ரெயில்களிலும்) தண்டவாளக் கம்பிகளிலும் அவைகளுக்கு அடியிலுள்ள ஸ்லீபர் கட்டைகளிலும் இருக்கும் போல்ட்டுகள் (அச்சாணிகள்) அல்லது வேறே கட்டுகளை அப்புறப்படுத்தக்கூடாதென்றும், அல்லது அவைகளின் ஜோலிக்குப் போகக்கூடாதென்றும்,

(d) தண்டவாளக் கம்பிகளின்மேல் கற்களையாவது இதர தடங்கல்களையாவது வைக்கக்கூடாதென்றும், அல்லது போய்க்கொண்டிருக்கும் ட்ரெயின்களினமேல் கல் எறியக்கூடாதென்றும்,

இந்தக் காரியங்களில் எதையாகிலும் செய்தால் இன்ன தண்டனைகள் விதிக்கப்படுமென்றும் தங்களுடைய கிராமக் குடிகளுக்கு எச்சரிக்கை செய்வது கிராமப் பெரியதனக்காரர்களுடைய கடமையாயிருக்கிறது.

2. மேற்படி குற்றங்களில் எதையாகிலும் செய்திருக்கும் நபர்களின் பெயர்களைத் தேடிக் கண்டுபிடிப்பதில் உதவிசெய்வதும் அவர்களுடைய கடமையாயிருக்கிறது.

3. ரெயில்வே வாராவதிகளை ராதாரி பாட்டையாக உபயோகிப்பது சட்டவிரோதமான காரியமென்பதையும், அந்தப்படி உபயோகிப்பதனால் அவர்களுக்கு நேரில் உண்டாகக்கூடிய அபாயம் இன்னதென்பதையும் கிராமப் பெரியதனக்காரர்கள் தங்களுடைய கிராமக் குடிகளின் மனதில் பதியும்படி சொல்லவேண்டும்.

4. மேலும், ரெயில்வே வேலிகளிலுள்ள சகல குறைவுகளைக் குறித்தும் தாமசமில்லாமல் ரெயில்வே அதிகாரிகளுக்குத் தெரிவிப்பதும், அந்த வேலிகளுக்குச் சேதமுண்டுபண்ணும் நபர்களையெல்லாம் தண்டனைசெய்விப்பதும அவர்களுடைய கடமையாகும்.

5. கால்நடைகள் லைன்மேல் ஹத்துமீறிப் போகும்படி விடப்பட்டால், அவைகளின் சொந்தக்காரர்களின்மேல் பிராது தொடரும்பொருட்டு அவர்களைக் கண்டுபிடிக்கும் விஷயத்தில் ரெயில்வே அதிகாரிகளுக்கு உதவிசெய்வது கிராமப் பெரியதனக்காரர்களுடைய கடமையாகும்.

6. ரெயில்வே நிலத்தில் ஆக்கிரமிக்கவொட்டாமல் தடுப்பது கிராம உத்தியோகஸ்தர்களின் கடமையாகும். எல்லையிலே எல்லாக் காலங்களிலும் ரெயில்வே வேலி போடப்படுவதில்லை ; அந்த எல்லை சாதாரணமாயக் கற்களைக்கொண்டு குறிப்பிடப்படுகிறது. சரியான எல்லை இன்னதென்பதைக் குறித்து கிராம உத்தியோகஸ்தருக்குச் சந்தேகம் உண்டாகும்போது, அவர் ரெயில்வே பெர்மனென்ட்வே இன்ஸ்பெக்டரைக் கேட்கவேண்டும்.

7. வெகுசாய ரெயில்வேயிலிருந்து திருடப்பட்டிருக்கக்கூடிய சொத்து கிராமத்தாருடைய வசத்தில் இருக்கக் காணப்பட்டால், அவைகளைக் குறித்து கிராம உத்தியோகஸ்தர்கள் ரெயிலவே அதிகாரிகளுக்கு ரிபோர்ட் செய்யவேண்டும்.

8. விசேஷ மழை பெய்யும் காலங்களிலும் ரெயில்வே லைனை பாதிக்கும் ஏரிகள் நிரம்பியிருக்கும்போதும், அந்த ஏரிகளையெல்லாம் கவனித்துவருவதற்காக கிராமப் பெரியதனக்காரர்கள் ஏற்பாடு செய்யவேண்டும் ; கரைகளில் உடைப்பு எடுக்கும்படியான குறிகள் எவைகளாயினும் காணப்பட்டால், உடனே ரெயில்வே உத்தியோகஸ்தர்களுக்குத் தெரிவிக்கவேண்டும்.

9. யாதொரு ட்ரெயினுக்குத் தற்செயலாய் கெடுதி நேரிட்டாலும் ரெயில்வேக்கு சேதம் நேரிட்டாலும், கிராமப் பெரியதனக்காரர்கள் ரெயில்வே உத்தியோகஸ்தர்களுக்குத் தங்களால் செய்யக்கூடிய உதவியையெல்லாம் செய்யவேண்டும்.

56. கவர்ன்மெண்டாரால் கொடுக்கப்படும் கடன்கள்.

(a) நிலவிருத்தி சம்பந்தமான கடன்களைக்குறித்த ஆக்டின்படி.

1. ஜமீன்தாரிகளிலுள்ள இனும்தாரர்களும் அனுபோக ரயத்துகளும் உட்பட நிலத்துக்குடையவர்களுக்கும் பயிரிடுகிறவர்களுக்கும் (நிலத்தை) விருத்தி செய்வதற்காக கவர்ன்மெண்டார் கடன் கொடுக்கிறார்கள் ; விருத்தி செய்வதென்றால், நிலத்தின் வாடகை மதிப்பை அதிகமாக்குகிற யாதொரு வேலைசெய்வதென்று அர்த்தமாவதுமல்

லாமல், அந்த வார்த்தையிலே அடியிற்கண்டவைகளும் அடங்கும் :—

(a) விவசாயகாரியங்களுக்காகவாவது விவசாயவேலையில் அமர்ந்திருக்கிற மனிதர்களுக்கும் கால்நடைகளுக்கும் உபயோகப்படுவதற்காகவாவது தண்ணீரைச் சேர்த்துவைப்பதற்காகவாகிலும் சர்ப்பரா செய்வதற்காகவாகிலும் பகிர்வதற்காகவாகிலும துரவுகளையும் ஏரிகளையும் இதரமான கட்டுவேலைகளையும் ஏற்படுத்துவது ;

(b) பாய்ச்சலின்பொருட்டு நிலத்தைப் பண்படுத்துவது ;

(c) விவசாயகாரியங்களுக்காக உபயோகிக்கப்பட்ட நிலத்திலாவது பண்படுத்தக்கூடிய தரிசுநிலத்திலாவது தண்ணீர் வடியச் செய்வது, ஆறுகளினின்றாகிலும் இதரமான நீர் நிலைகளினின்றாகிலும் அப்படிப்பட்ட நிலத்தை மீட்பது அல்லது வெள்ளத்தினின்றாயினும் தண்ணீரினால் அறுத்துவிடப்படுவதினின்றாயினும் தண்ணீரினாலுண்டாகும் இதரமான சேதத்தினின்றாயினும் ஷை நிலத்தைப் பாதுகாப்பது ;

(d) விவசாயகாரியங்களுக்காக நிலத்தைத் திருத்துவது, பரிஷ்கரிப்பது, அடைப்பு அடைப்பது அலலது நிலையானதாகிய விருத்திசெய்வது ;

(e) மேலே சொல்லப்பட்ட கட்டுவேலைகளில் யாதொன்றைப் புதுப்பிப்பது அல்லது திரும்பக் கட்டுவது, அல்லது அவைகளில் மாறுதல் செய்வது அல்லது அவைகளைப் பெரிதாகக் கட்டுவது ;

(f) பிரதேச கவர்ன்மெண்டார் இந்த ஆக்டின் காரியங்களுக்காக விருத்திகளென்று பிரதேச ஸர்க்கார் கெஜெட்டில் அப்போதைக்கப்போது விளம்பரமூலமாய் நிர்ணயிக்கும் இதரமான கட்டுவேலைகள்.

2. கடன்கள் வேண்டியதாயிருக்கிற நபர்கள் ரெவினியு இன்ஸ்பெக்டருடைய அந்தஸ்துக்குக் கீழ்ப்பட்டிராத யாதொரு ரெவினியு உத்தியோகஸ்தருக்கு விண்ணப்பம் செய்துகொள்ளலாம்.

3. 50 ரூபாய்க்குக் குறைந்த தொகைகளாகக் கடன கொடுக்கப்படமாட்டாது.

4. வட்டிவீதமானது வருஷம் ஒன்றுக்கு நூற்றுக்கு $6\frac{1}{4}$ ஆகும் ; மேலும் வருஷாந்தரத் தவணைத்தொகை ரூபமாகவோ மற்றப்படியோ இருக்கும வாய்தாக்கள் இருபது வருஷத்துக்கு அதிகப்படாமல் சில வருஷங்களாயிருக்கும்படி கடன்தொகைக்கேற்ற பிரகாரம் நிரவிப் பங்கீடுசெய்யப்படும். ஆயினும் துரவுகளைக் கட்டுவதற்காகவாவது அவைகளுக்கு மராமத்து செய்வதற்காகவாவது கொடுக்கப்படும் கடன்கள் விஷயத்திலே, வாங்கியிருக்கும் கடனைத் திருப்பிச் செலுத்துவதற்காகக் கொடுக்கப்படும் உச்ச கால அளவானது முப்பது வருஷமாகும்.

**(b) விவசாயக்காரர்களுக்குக் கடன்கொடுப்பதைப்பற்றிய ஆக்டின்படி.**

1. சாகுபடி செய்யத்தக்க நிலத்தின் சொந்தக்காரர்களும் அநுபோகதாரர்களும் விண்ணப்பம் செய்துகொள்வதன்மேல், அடியிற்கண்ட காரியங்களுக்காக பிரதி விஷயத்திலும் கீழே குறிப்பிடப்ப

ட்ட தொகைக்கு மேற்படாமல் கடன்களைப் பெற்றுக்கொள்ள லாம் :—

(a) விதைத்தானியம், உழவுக்கால்நடைகள் விரையடியாத குதிரைகள் இவைகளைக் கிரயத்துக்கு வாங்குவதற்காகவாவது நெருப்பு, அல்லது வெள்ளத்தினால் அழிந்துபோன வீடுகளை மறுபடியும் கட்டுவதற்காகவாவது :—உச்சத்தொகை ரூ. 1,000.

(b) கிருஹ கிருத்தியங்களுக்காகவும் விவசாய காரியங்களுக்காகவும் உபயோகமாகத்தக்க கால்நடைகளுக்குத் தீனிவாங்குவது, கரும்பாலைகளையும் நிலத்தொட்டிகளையும் விவசாயசம்பந்தமான பண்படுத்தாத மாகூல்விஷயமாய்ப் பிரவர்த்திப்பதற்கு வேண்டிய மேற்கண்ட மாதிரியான உபகரணங்களையும் அமைப்பது, தண்ணீர் மொள்ளுவதற்காக இரட்டைக்கவலை அல்லது வேறே உபகரணங்களை ஏற்படுத்துவது, குடியிருப்புக்காகவும விவசாயத்துக்காகவும் நூதனமாய்க் கிடைக்கும்படி செய்யப்பட்ட பிரதேசங்களில் விவசாயக்காரர்கள் வீடுகளைக் கட்டிககொள்வது, இவைபோன்ற விவசாய சம்பந்தமான வேறே காரியங்களுக்காக :—உச்சத்தொகை ரூ. 2,000.

(c) துன்பம் நேரிட்டிருக்கிறதென்று பிரதேச கவர்னமெண்டார் ஒப்புக்கொண்டிருக்கும்போது நிலத்தின் சொந்தக்காரர்களும அனுபோகதாரர்களும் அவர்களைச் சார்ந்திருப்பவர்களும் அடுத்த மாகூல் பலிதமாகிறவரையில் ஜீவிககககூடியவர்களாயிருக்கும்பொருட்டு அந்தத் துன்பத்தின் பரிகாரத்துக்காக :—உச்சத்தொகை ரூ. 200.

2. நிலவிருத்தி சம்பந்தமான கடனகளைக்குறித்த ஆக்டின்படி கொடுக்கப்படும் கடன்கள் விஷயத்திலெப்படியோ அப்படியே, இந்தக் கடன்களுக்காகவும் ரெவினியு இன்ஸ்பெகடருடைய அந்தஸ்துக்குக் கீழ்ப்பட்டிராத யாதொரு ரெவினியு உத்தியோகஸ்தருக்கு விண்ணப்பங்கள் செய்துகொள்ளலாம். வருஷாந்தரவட்டிவீதமானது நூற்றுக்கு $6\frac{1}{4}$ ஆகும் ; ஆனால், துன்பநிவர்த்திக்காகக் கொடுக்கப்படும் கடன்களின் விஷயத்திலே, வருஷத்துக்கு நூற்றுக்கு 3 வீதம் வட்டி வாங்கப்படும்.

3. இந்த ஆக்டின்படி வாங்கப்படும் கடனைத் திருப்பிச் செலுத்துவதற்காகக் கொடுக்கப்படும் கால அளவு என்னவென்றால் :—

| | | |
|---|---|---|
| 1. (a) சாதாரணமாய் விதை வாங்குவதற்காக வானால் | ... ... ... | 1 வருஷம். |
| (b) அதைவிட குறைந்த காலத்துக்குள் பலிதமுண்டாகமுடியாத விதை வாங்குவதற்காகவானால் | ... ... ... | 6 ,, |
| 2. துன்ப நிவர்த்திக்காகவானால் | ... ... | 3 ,, |
| 3. வேறே யாதொரு காரியத்துக்காகவானால் | ... | 10 ,, |

4. மேற்படி ஆக்டுகளின் பிரகாரம் கடன்களைக் கொடுப்பதைப் பற்றிய விவரமான விதிகள் அப்போதைக்கப்போது ஜில்லா கெஜெட்டிலும் பிரசுரிக்கப்படும் ; மேலும், கவர்ன்மெண்டார் செய்வதாகச் சொல்லும் உதவியை ரயத்துகள் பெற்றுக்கொள்ளவேண்டுமென்னும் நோக்கத்தோடு அந்த நிபந்தனைகளைக் கிராம உத்தியோகஸ்தர்கள் ரயத்துகளுக்கு விவரமாகச் சொல்லவேண்டும்.

# 2-ம் பாகம்.—கிராம சுகாதாரம்.

## 1. பொது.

### ஜலம்.

மனிதர்களின் சுகத்துக்கும் மிருகங்களின் சுகத்துக்கும் சுத்த ஜலம் அவசியமானதாயிருக்கிறது. தண்ணீர் சர்ப்பரா செய்யும் ஜலாதாரமானது குளமாயிருந்தாலுஞ்சரி கிணறுயிருந்தாலுஞ்சரி, ஆறுயிருந்தாலுஞ்சரி - அந்த ஜலாதாரத்தை மலவிஸர்ஜனமான பிறகு சுத்திசெய்துகொள்வது, உடுப்புகளைத் தோய்ப்பது, ஜலதாரைகள், சாக்கடைக்குழிகள், எருமுதலிய குப்பைக் குவியல்கள், தோல் பதனிடுஞ்சாலைகள், ஆடுமாடு முதலியவை அடிக்கும் தொட்டிகள், கக்கூஸுகள், மலவிஸர்ஜனம செய்வதற்கான இடஙகள, பிரேதங்களைப் புதைக்கும இடங்கள் ஆகிய இவைகளால் அசுசியாகாதபடி வைத்திருக்கவேண்டும். இந்தப்படி அசுசியாக்கப்பட்ட தண்ணீரைக் குடிப்பதனால், வாந்திபேதி, ரத்தபேதி, அதிசாரபேதி, நாக்கப்பூச்சி முதலிய குடற்கிருமிகள் ஆகிய இவைகளும், சில அபாயகரமான வகைகளைச் சேர்ந்த ஜுரமும, அஜீரணமும், பொதுவாய் தேக அசௌக்கியமும் உண்டாகின்றன. ஜலமானது குடிப்பதற்காகவாகிலும் சாதாரணமான வீட்டுக்காரியங்களுககாகவாகிலும் மனிதர்களால் உபயோகிக்கப்பட்டாலுஞ்சரி, கால்நடைகளுக்குத் தண்ணீர் காட்டுவதற்காக உபயோகிக்கப்பட்டாலுஞ்சரி, மேலே கண்டபடி உண்டாகும் அசுத்தங்கள் அதில் இருக்கக்கூடாது. இந்தப்படி அசுசியாக்கப்பட்ட ஜலத்தைத் தவிர வேறே எந்த ஜலமும் யாதொரு நபருக்குக் கிடைப்பது சாத்தியமாயிராதபோதும், கிராமத்திலாகிலும் அக்கம்பக்கத்திலாகிலும வாந்திபேதி கண்டிருக்கும் காலத்தில் எப்பொழுதும், ஜலத்தை உபயோகிப்பதற்குமுன் பொங்கக்காய்ச்ச வேண்டும்.

யாதொரு கிராமத்துக்கு மேல்மட்டத்திலுள்ள அருவியிலாகிலும், துணி தோய்ப்பதற்கென்றே பிரத்தியேகப்படுத்திவைக்கப்பட்டிராத யாதொரு கிணற்றிலாகிலும் குளத்திலாகிலும் வண்ணுரையும் தனி நபர்களையும் துணிதோய்க்கவொட்டக்கூடாது.

### கிணறுகள்.

குளங்களுக்கும் ஆறுகளுக்கும், நேராக மேகங்களினின்று பெய்யும் மழையினுலும் அவைகளில் போய்விழுகிற அருவிகளினுலும் ஜலம் கிடைக்கிறது ; ஆனுல், யாதொரு கிணறறுக்கு ஜலம் போய்ச் சேருவதற்குமுன்னே அந்த ஜலமானது கொஞ்சதூரம்வரையில் பூமியில் ஊறி பிற்பாடு கிணற்றுக்குப் போகிறது ; மேலும், யாதொரு சாதாரணமான கிராமக் கிணற்றைச் சுற்றிலும் 200 கெஜதூரத்திற்குட்பட்ட பூமியில் ஊறுகிற ஜலம் அந்தக் கிணற்றுக்குக் கிடைக்கிறது.

ஆகையால், பிரேதங்களைப் புதைக்கும் இடமாவது, சாக்கடைக் குழியாவது, ஜலதாரையாவது, எருக்குப்பையாவது யாதொரு கிணற்றினின்றும் 200 கெஜதூரத்துக்குள்ளாக இருக்குமானல், அந்தக்

கிணற்றின் ஜலமானது அசுத்தமாய்விடவேண்டுமென்பதை சுலபமாக அறிந்துகொள்ளலாம்.

உள்ளே நீர்மட்டம் வரையிலே மனிதர்கள் இறங்கி ஜலத்தை மொண்டுகொள்ளும்படியாகக் கிணறுகளைக் கட்டக்கூடாது. அப்படி இறங்குவதனால எப்படியும் மனிதர்கள் தங்களுடைய பாதங்கள ஜலத்தில் படாமல் தடுத்துக்கொள்ளமுடியாது; வெகு சுத்தமானவர்களுடைய பாதங்களும் யாதொரு அசுத்தத்தை - வாந்திபேதிக்குக் காரணமான விஷத்தைக்கூட - கிணற்று ஜலத்தில் கொண்டுபோய்விடலாம்.

உள்ளே தும்பு தூசி விழாதபடி கிணறுகளுக்கெல்லாம் மேல்மூடி போட்டிருக்கவேண்டும்; மேலும், சகல கிணறுகளுக்கும் கல்லினால் செவ்வையாய்க் கட்டப்பட்டும் கபிகள் அமைத்துமுள்ள கைப்பிடி சுவர்களும், சுமார் முப்பதடி தூரத்திலுள்ள ஒரு இடத்தில் போயவிழக்கூடிய ஜலதாரைகளுடன கூடிய மேடைகளும் இருக்கவேண்டும்.

குளங்கள், அருவிகள், ஆறுகள்.

யாதொரு கிராமத்துக்கு யாதொரு அருவியாவது ஆறுவது குளமாவது ஜலாதாரமாக இருக்குமாகில, அந்த ஜலாதாரத்தின் பக்கமாய் வாட்டமாகச் சரிந்திருக்கும் தரையைச் சுத்தமாக வைத்திருக்கவேண்டியது மிகவும் முக்கியமாகும்; அப்படிக்கில்லாவிட்டால், மழைபெய்யும்போது பலவித அசுசியான வஸ்துக்களையெல்லாம் அதில் அடித்துக்கொண்டுபோயவிடும்; அந்த அசுத்தங்கள் - வாந்திபேதி அல்லது ரத்தபேதியின மலமுதலியதாகவாகிலும், யாதொரு துர்க்கந்தமான ஜலதாரையின கலமஷமாகவாகிலும், யாதொரு செத்த பிராணியின் மலமூத்திரமுதலியதாகவாகிலும் மாமிசமாகவாகிலும் இருக்கலாம.

நீரவரவைச் சேகரிப்பது.

நலல ஜலம கிடைப்பது அருமையாயிருக்குமானால், குடிப்பதற்கு மிகவும் ஆரோக்கியமான மழைஜலத்தை வீடுகளின் கூரைகளினின்றும் சேகரித்துக்கொள்ளலாம்.

கழிகடை ஜலம்.

கழிகடை ஜலமென்பது-வீட்டுக்குள்ளே எவ்வகைப் பொருளையும் கழுவின ஜலமென்றும், குதிரைலாயங்களையும் மாட்டுத்தொழுவங்களையும் கழுவின ஜலமென்றும், சாதாரணமாய் மனித மிருக ஜாதிகளின் மூத்திரமென்றும் அர்த்தமாகும்.

இந்த ஜலமானது சாதாரணமாய்ப் பூமியில் ஊறும்படி விடப்படுகின்றது; அல்லது, வீட்டின் வெளிப்புறத்தில் அதிக சமீபத்திலாவது புழைக்கடையிலாவது உள்ள யாதொரு சாக்கடைக்குழியில் போய்விழும்படி விடப்படுகிறது; அப்படி அந்தக் குழியில் விழுகிற ஜலமானது பூமியில்தானே ஊறிப்போய்விடுகிறது; ஆகவே, அக்கம்பக்கத்திலுள்ள கிணற்று ஜலம் அசுத்தமாய்விடுகிறது.

நீர்கசியாத நல்ல சாக்கடைக்குழியொன்றை வீட்டுக்குச் சுமார் 20 அடி தூரத்துக்கப்பால் பின்வருகிற விதமாகக் கட்டிக்கொள்ளலாம்.

வேண்டிய அளவுக்கு ஒரு குழியைத் தோண்டி, அதனடியில் நல்ல தடிப்பான களிமண்ணை ஓரடி கனம் இருக்கும்படி பூசி, அதன்பிறகு குழியின் அடியிலிருந்து நுனிவரையில் ஓரடி கனத்தில் கருங்கல்லினாலாவது செங்கல்லினாலாவது ஒரு சுவரை எழுப்பி, அடியில் ஓரடி கனதகிலே கருங்கல்லால தளவரிசை போடவும். செங்கல்லை உபயோகப்படுத்தினால், கட்டுவதற்குமுன்னே ஒவ்வொரு செங்கல்லையும் கொதிக்கிற தாரில் தோய்க்கவேண்டும்.

சுவருக்கும களிமண் பூச்சுக்கும் மத்தியில் ஒன்பது அங்குல இடத்தைக் காலியாக விட்டுவைத்து, அதில் எவ்வளவு களிமண்ணை கெட்டனை செய்யக்கூடுமோ அவ்வளவு களிமண்ணைக் கெட்டனை செய்யவும்.

சாக்கடைக்குழிக்கு மரத்தினால் மேலமூடி செய்துபோடலாம, அல்லது கற்பலகைகளை உபயோகிக்கலாம.

சாக்கடைக்குழியில் சேகரமாகிற கலமஷங்களை இரண்டுநாளைக்கொருதரமாவது மூன்றுநாளைக்கொருதரமாவது சட்டிகளில வாரிக்கொண்டுபோய, பயிரிடப்பட்ட நிலங்களிலாவது மரங்களின் வேர்களுக்குச் சமீபத்திலாவது கொட்டிவிடவேணடும.

கழிகடை ஜலம் அதிகமாய ஒழித்துப்போடவேண்டியிருந்து, ஜல சர்ப்பரா ஆதார ஸ்தானங்களுக்குத் தூரமாயுள்ள இடத்திலே அதற்காக பூமியும் கிடைக்கும்பட்சத்தில், அடியிற்கண்டபடி ஏற்படுத்தப்பட்ட ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்டுள்ள காலவாய்களில் அது போய்விழுந்து, அந்தக காலவாயின வழியாய் ஊறி பூமியில் போய்ச்சேரும்படி விடலாம அந்தக காலவாயின் பககத்தில் நெடுக செடிகள் பயிராகும்படி விதைவிதைக்கலாம்.—"இந்தக் காலவாய்கள் 18 அங்குல அகலமும், 18 அங்குல ஆழமும், ஒழித்துப்போடவேண்டிய ஜலத்தின் அளவை அனுசரித்து எவ்வளவு நீளம் இருப்பது அவசியமென்று காணப்படுமோ அவவளவு நீளமும் உள்ளவைகளாயிருக்கவேண்டும். இந்தக் காலவாயின் அடித்தரையை கட்டப்பாரைகளால் தளாச்சியாயிருக்கும்படிச் செய்யவேண்டும்; இந்தப்படி தயார்செய்யப்பட்ட அடித்தரையின்மேல், 4 அங்குலததுக்கு கரடுமுரடாயுளள கல் அல்லது உலோகத்துண்டுகளையும், அதன்மேல் 6 அஙகுலத்துக்கு மண இல்லாமல் கழுவியெடுக்கப்பட்ட பருக்கைக் கற்களையும், அதன்மேல் 6 அங்குலத்துக்கு மணலையும் போட்டு, அந்த மணல ஒரே நிலையிலிருககும்பொருட்டு அதன்மேல கரடுமுரடாயுள்ள கல்லையாகிலும் உலோகததையாகிலும் ஒரு வரிசை பரபபவேணடும"

மலத்தைச் சேகரித்து ஒருவகை செய்வது.

தெருக்களைச் சுத்தியாக வைத்திருப்பதற்கு ஆயிரம் ஜனங்களுக்கு ஒரு குப்பைக்காரன் போதும்.

பொதுஜனங்களுக்கு உபயோகமாகும் கக்கூஸுகளிலிருந்து மலத்தை அப்புறப்படுத்துவதற்கு ஐந்நூறு ஜனங்களுக்கு ஒரு தோட்டி போதும்.

பொதுஜனங்களுக்கு உபயோகமாகும் கக்கூஸுகளையும் வீட்டுச் சொந்த கக்கூஸுகளையும் சுத்திசெய்யவேண்டுமானால், இருநூறு குடிகளுக்கு ஒரு தோட்டி வேண்டும்.

வீட்டுச் சொந்த கக்கூஸுகள்.

மலத்தையும் மூத்திரத்தையும் பிரதியேகமாய் வைத்திருப்பது அவசியம்; இல்லாவிட்டால், தேகசௌக்கியத்துக்கு அபாயகரமான துர்க்கந்தங்கள் சீக்கிரமாக உண்டாகும்: மேலும், மலமும் மூத்திரமும் விழும் தரையானது கீழே ஊறாதபடி கெட்டியாக இருக்க வேண்டியது முக்கியமாகும். பிரதிநபரும் தன்னுடைய மலத்தின் மேல் உலர்ந்த மண்ணைப் போட்டுவிட்டால், கொஞ்சங்கூட துர்க்கந்தம் உண்டாகமாட்டாது. தோட்டியானவன மலத்தைக் கொண்டு போய், ஜலசர்ப்பரா ஆதாரஸ்தானத்துக்கு தூரத்திலுள்ள பயிர் நிலத்திலே [18 அங்குல ஆழத்துக்கு மேற்பட்டிராமல்] வெட்டப் பட்டிருக்கும் கால்வாய்களில் போட்டுப் புதைத்துவிடவேண்டும்.

வீட்டுச் சொந்த கக்கூஸின் நல்ல உருவபடம் ஒன்று அநுபந்தத்தில் அச்சிட்டிருக்கிறதைக் காணலாம்.

பொதுஜனங்களுக்கு உபயோகமாகும் கக்கூஸுகள்.

பொதுஜனங்களுக்கு உபயோகமாகும் யாதொரு கக்கூஸை சுலபமாகவும அதிகப் பணச்செலவில்லாமலும் செய்துகொள்ளவேண்டுமானால், வீடுகளுக்கும் ஜல சர்ப்பரா ஆதாரஸ்தானத்துக்கும் தூரமாயுள்ள யாதொரு ஸ்தானத்தில் ஆறடி அகலமும் வேண்டுமான நீளமுமுள்ள இடத்தைச் சுற்றிலும் கால்கள் நட்டு மூங்கில் கட்டிப் பனையோலைகளால் அடைப்படைத்துக்கொள்ளலாம். அந்தப்படி அடைப்படைத்திருக்கும் இடம் முழுவதிலும் 18 அங்குலம் ஆழத்துக்கு மேல்மண்ணை எடுத்துவிட்டு, அடியிலிருந்து 4 அங்குலத்துக்கு கரடுமுரடாயுள்ள கல்லையும் உலோகத்தையும், அதன்மேல் 8 அங்குலத்துக்கு பருக்கைக் கற்களையும், மேற்பரப்பில் 6 அங்குலத்துக்கு சுத்தமான பரும்படியான மணலையும் போட்டு நிரப்பினால், மணல்மேல் நேராகப போக்கியிருக்கும் மலத்தைச் சுலபமாய் அப்புறப்படுத்திவிடலாம்; மேலும், மூத்திரமும் மலவிஸர்ஜனமான பிறகு சுத்திசெய்துகொண்ட ஜலமும் அசங்கியம அல்லது சங்கடமில்லாமல் மறைந்துபோய்விடும்.

தோட்டிகளில்லாவிட்டால், நல்லமாதிரியான கிராமக் கக்கூஸைப் பின்வருகிறமாதிரியாக ஏற்படுத்திக்கொள்ளலாம்:—ஓரடி அகலமும் ஒன்றரை அடி ஆழமும் இருபத்தைந்து அடி அல்லது அதற்குமேற்பட்ட நீளமுமுள்ள ஒரு கால்வாயைத் தோண்டி, தோண்டப்பட்ட மண்ணை அந்தக் கால்வாயின் ஒரு பக்கத்தில் போடவும்; மேலும், மறைவாயிருக்கும்பொருட்டு இரண்டு பக்கங்களிலும் நெடுக மரக்கிளைகளையாவது தட்டிகளையாவது எந்தமாதிரியாகவாகிலும் வைத்துக்கொள்ளவும்.

கிராமக்குடிகள் அந்தக் கால்வாயில் மலவிஸர்ஜனம் செய்துகொள்ளலாம் : பிரதிநபரும் மலவிஸர்ஜனம் செய்துகொண்ட பிறகு, தன் மலத்தின்மேல் கால்வாயின் பக்கத்திலுள்ள மண்ணில் கொஞ்சம் எடுத்துப்போடவேண்டும். அவர் தமமுடைய காலினலே கால்வாயில் மண்ணைத் தள்ளிவிடக்கூடும். உச்சியிலிருந்து ஆறு அங்குலம்வரையில் அந்தக் கால்வாய் நிரம்பிவிட்டால், அதை அறுதியாக மண்ணைப்போட்டு மூடிவிடவேண்டும். இந்த விதமாக மூடியிருக்கும் யாதொரு கால்வாயை ஆறுமாதம் கழிந்தவுடன் திறந்தால், அதிலுள்ள மண்ணனது சுத்த மண்ணைபபோலவே துர்க்கந்தம் வீசாமல இருக்கும். பிறகு அதை அப்புறப்படுத்தி புலங்களுக்காவது தோட்டங்களுக்காவது எருவாக உபயோகிக்கலாம் ; அல்லது அந்தக் கால்வாயிலுள்ளதை அப்புறபபடுத்தாமலே அந்தக் கால்வாயை உழுது பூமியில் விதைவிதைக்கலாம். இந்த இரண்டு முறைகளையும் அனுசரிப்பதனால நல்ல மாசூல் கிடைக்கும்.

யாதொரு கிராமத்தான் ஒரு புலத்தில மலவிஸர்ஜனம் செய்துகொள்ளும்போது, அவன் முதலில் ஒருஜாண் ஆழத்திலும் ஒருஜாண் அகலத்திலும் ஒரு குழியைக் கூர்மையான ஒரு தடியினலாவது கூர்மையான முனையுள்ள ஒரு இரும்புத்துண்டினலாவது தோண்டவேண்டும். அந்தக் குழியிலிருந்து எடுத்த மண்ணை பக்கத்தில வைத்திருக்கவேண்டும் ; அந்தக் குழியின்மேல் குந்தியிருந்து மலவிஸர்ஜனம் செய்தானபிறகு, அவன் தன் காலினல் மண்ணைத் தள்ளி குழியிலுள்ளதை மூடிவிடவேண்டும். எந்த நிலத்தில் அப்படிப்பட்ட குழிகள் அதிகமாகச் செய்யபபட்டிருககின்றனவோ அந்த நிலத்தில் பயிரிட்டால், மெத்தவும் நல்ல மாசூல் கிடைக்கிறது.

பணம் கிடைப்பதாயிருந்தால், யாதொரு கால்வாயில் மலவிஸர்ஜனம் செய்துகொள்ளும்போது, சக்கரங்களின்மீது ஏற்றியிருக்கும் சுருக்குகளாகச்செய்த இரும்புச்சட்டத்தினலான மறைவு ஒன்றை அந்தக் கால்வாயின் மேல் வைத்துக்கொள்ளலாம் ; இதனல் வெயிலுக்கும் மழைக்கும் நல்ல ஆதரவும் ஒதுங்க மறைவும் ஏற்படும்.

பொதுஜனங்களுக்கு உபயோகமாகும் கக்கூஸுகளிலும் வீட்டுச் சொந்தக் கக்கூஸுகளிலும் சேகரமாகிற மலத்தையும் மூத்திரத்தையும், தோட்டங்களிலாவது நிலங்களிலாவது ஒவ்வொரு அடி இடையில் காலியாக விட்டு ஒரு அடி அகலமும் ஒரு அடி ஆழமுமாகத் தோண்டப்பட்ட கால்வாய்களில் கொணடுபோய்ச் சேர்க்கவேண்டும். மலத்தைக் கால்வாயில் மூன்றங்குல ஆழமாகக் கொட்டி, மூன்றங்குல மலமும் ஒன்பதங்குல மண்ணுமாக இருக்கும்படி அந்த மலத்தின்மேல் மண்ணைப்போட்டு மூடவேண்டும். சில மாதகாலத்துக்கப்புறம இந்த நிலத்தைப் பயிரிட்டால், பயிர் அதிக செழிப்பாக வளரும்.

எருகுவியல்கள்.

எருக்குவியல்களையும் கிராமத்திலுள்ள குப்பைக் குவியல்களையும் கிராமத்திலிருந்து குறைந்தது முன்னூறு கஜதூரத்துக்கு அப்பாலுள்ள இடங்களிலே சேர்த்துவைக்கவேண்டும் ; அல்லது, இந்த எருவை உபயோகிக்கவேண்டியிருக்கிறவரையிலே, நீளமான கால்

வாய்களில் புதைத்துவைத்திருக்கலாம். மூன்று நாளுக்கொருதரம் அந்த எருவின்மேல் இரண்டு அல்லது மூன்றங்குலம் உலர்ந்த மண்ணைப் போட்டுக்கொண்டுவந்தால் துர்க்கந்தம் வீசாது; மேலும், பயிர்செய்யும் காரியங்களுக்காக, இந்த எருவானது திறந்துவைத்திருந்தால் எவ்வளவு சத்துள்ளதாயிருக்குமோ அதைவிட அதிக சத்துள்ளதாயிருக்கும்.

புதைக்குமிடங்கள்.

யாதொரு கிராமத்திலிருந்து அரைமைல் தூரத்துக்குள்ளாக புதைக்குமிடங்களை நூதனமாய் ஏற்படுத்த அனுமதிகொடுக்கக்கூடாது.

அருவிகளின் சமீபத்திலாவது கிணறுகளின் சமீபத்திலாவது யாதொரு புதைக்குமிடத்தை ஏற்படுத்த உத்தரவுகொடுக்கக்கூடாது.

யாதொரு புதைக்குமிடமானது ஆறடி ஆழமிருக்கவேண்டும்.

பிராணிகளின் பிரேதங்கள்.

யாதொரு பிராணி சாகுமானால், அதைப் புதைத்துவிடவேண்டும். அது யாதொரு தொத்துவியாதி கண்டு இறந்திருக்குமாகில், அதைச் சாத்தியப்பட்டால் கொளுத்திவிடவேண்டும்; இப்படிச் செய்ய முடியாவிட்டால், அதைப் பத்தடி ஆழத்தில் புதைத்துவிடவேண்டும். நோய்கண்ட பிராணியின் தோலை உரித்தெடுக்கக்கூடாது. இந்த வியாதியானது இதர பிராணிகளுக்குப் பரவவொட்டாமல் தடுக்கும்பொருட்டு, அது செத்துப்போன இடத்தின்மேலும் அதன் இரத்தமாகிலும் சாணியாகிலும் காணப்படும் இடங்களின்மேலும், வைக்கோலையாவது வரட்டியையாவது போட்டுக் கொளுத்தவேண்டும். அடைப்பான் வியாதி கண்டிருக்கும் யாதொரு பிராணியின் இரத்தமாவது மலமூத்திர முதலியவைகளாவது மனிதர்களின் சர்மத்தின்மேல் படவொட்டாதபடி வெகு ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்ளவேண்டும்.

2. பெருவாரி வியாதிகளும் இதர வியாதிகளும்.

யாதொரு கிராமத்திலே எவருக்காகிலும் வாந்திபேதியாவது பெரியம்மையாவது வேறே பெருவாரி வியாதியாவது கண்டால், கிராமப் பெரியதனக்காரராகிலும் அவரில்லாதபோது கர்ணமாகிலும் - அது சங்கதியைக்குறித்து உடனே தாசில்தாருக்கு அல்லது டெப்யுடி தாசில்தாருக்கு ரிபோர்ட் பண்ணவேண்டும். யாதொரு மியுனிஸிபல் பட்டணத்திலிருந்து ஐந்துமைல் தூரத்துக்குள்ளாக இருக்கும் கிராமங்களின் விஷயத்திலே, அந்த ரிபோர்ட்டின் நகலொன்றை மியுனிஸிபல் சங்கத்தின் அக்கிராசனாதிபதிக்கு அதே காலத்தில் அனுப்பவேண்டும். அதிசீக்கிரமாய்ப் போய்ச்சேரக்கூடிய மார்க்கமாக, அதாவது தந்திமூலமாக அல்லது தபால்மூலமாக அல்லது பிரத்தியேகமான ஆள்மூலமாக, இந்த ரிபோர்ட்டை அனுப்பவேண்டும். 187-வது பக்கத்தில் கண்ட 102-ம் கூ. ஸ்டாண்டிங் ஆர்டர் என்னும் நிலையான உத்தரவின் (i) குறிப்பிட்ட பாராவைப் பார்க்க.

2. கிராமத்திலே எவ்வகையான அசாதாரணமான வியாதியாகி லும் கண்டால், கிராமப் பெரியதனக்காரர் டிவிஷனல் ஆபிஸருக் கும் டிஸ்ட்ரிக்ட் மெடிகல் ஸானிடரி ஆபிஸருக்கும் சங்கதி தெரி விக்கும்பொருட்டு அதைப்பற்றி தாசில்தாரருக்கு ரிபோர்ட் செய்ய வேண்டும்.

## பிரிவு 1.—வாந்திபேதி.

### அக்கம்பக்கத்தில் வாந்திபேதி கண்டிருக்கும்போது முன்னெச்சரிக்கை யாய்ச் செய்யவேண்டிய விஷயங்கள்.

வாசஸ்தானம்.

1. ஒவ்வொரு வீட்டையும் எருவில்லாமலும் அழுக்குத் தண் ணீரில்லாமலும் எவ்வகையான அழுக்கும் இல்லாமலும் சுத்திசெ ய்யவேண்டும்.

2. வீட்டுச் சொந்த கக்கூஸுகளைப் பிரதிதினம் இரண்டுதரம் சுத்திசெய்யவேண்டும்.

3. சாக்கடைக்குழிகளையும் காலநடைகளின் மூத்திரம் விழுகிற குழிகளையும் பிரதிதினம் அவைகளிலுள்ளதை எடுத்துவிட்டுச் சுத்தி செய்யவேண்டும்.

மனித தேகம்.

1. அதிசாரபேதியை உண்டுபண்ணத்தக்க சகலமான காய்கறி களையும் பழங்களையும் உண்ணாமல் நிவர்த்திக்கவேண்டும்.

2. உப்பை வேண்டியவரையில் தாராளமாய் உபயோகிக்கவே ண்டும்.

3. குடிக்கும் ஜலத்தையும் பாலையும் பொங்கக் காய்ச்சி உபயோ கிக்கவேண்டும்.

4. பேதியாகத்தக்க மருந்துகளை உட்கொள்ளக்கூடாது.

5. அதிசாரபேதி கண்டால் அதை உடனே கண்டிக்கவேண்டும்.

6. ஆகாரத்தின்மேல ஈக்கள் மொய்க்காதபடி ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்ளவேண்டும்.

7. சற்றுமுன்பு சமைத்து, உட்கொள்ளும்போது சூடாயிருக் கும் ஆகாரத்தையே உட்கொள்ளவேண்டும்.

ஆறுகள்.

யாதொரு ஆற்றிலிருந்தாவது அருவியிலிருந்தாவது ஜலம் ஏர்ப் பாடு செய்யப்படுமானால், ஸைன் போர்டுகளை (அடையாளக்குறிப் புப் பலகைகளை) நாட்டிவைத்தாகிலும், ஆற்றின் குறுக்கே கம்பி களையேனும் கயிறுகளையேனும் கட்டிவைத்தாகிலும், ஆற்று ஜலத் தை மூன்று பிரிவுகளாகப் பிரித்துவைக்கவேண்டும் :—

முதலில் இருப்பதும் மற்றவைகளைக்காட்டிலும் உயர்தரமா யிருப்பதுமான பிரிவிலுள்ள ஜலத்தை வீட்டுக்காரியங் களுக்காகவும்,

இரண்டாவது பிரிவிலுள்ள ஜலத்தைக் கால்நடைகளுக்காகவும்.

மூன்றாவது பிரிவிலுள்ள ஜலத்தைக் குளித்தல், சுத்திசெய்தல் முதலான காரியங்களுக்காகவும்

உபயோகிக்கவேண்டும்.

பட்டணத்திலிருந்து வரும் எந்த ஜலதாரையும் மூன்றாவது பிரிவுக்குமேல் ஆற்றில் பிரவேசிக்கக்கூடாது.

## கிணறுகள்.

கிணற்றுத் தண்ணீரை சட்டிகளாலாவது இரும்புப் பாத்திரங்களாலாவது பித்தளைப் பாத்திரங்களாலாவது மொள்ளவேண்டும்.

கிணறுகளுக்குப் படி வைத்திருக்கிற இடங்களிலே, அசுசியான பாதங்களினாலும் ஜனங்கள் வஸ்திரங்களைத் தோய்ப்பதனாலும் ஜலம் வெகுசாயக் கெட்டுப்போகுமாகையால், அந்தப் படிகளில் எவரும் இறங்கவொட்டாமல் வழியைத் தற்காலம் கொம்புகளாலாகிலும் முட்களாலாகிலும் அடைத்துவைப்பது நலலது.

## குளங்கள்.

ஜனங்கள் ஜலத்தில் இறங்கியாவது வஸ்திரங்களைத் தோய்த்தாவது மலவிஸர்ஜனம் செய்தபிறகு சுத்திசெய்தாவது ஜலத்தை அசுசியாக்காமல தடுக்கும்பொருட்டு, கிணறுகளை எவ்வளவு ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளவேண்டுமோ அவ்வளவு ஜாக்கிரதையாகவே குளங்களையும் பார்த்து காத்துவரவேண்டும. மேலே கண்டபடி அசுசியாககுவதனால் வாந்திபேதி விஷமானது சிறிதளவு ஜலத்தில சேர்ந்துவிடுமாகில், அது ஒரு பெரிய குளத்தைக்கூட விஷமாககிவிடும்.

## அசுசியாககப்பட்ட கிணறுகளும் குளங்களும்.

வாந்திபேதியை ஒத்திருக்கும் கடுமையான அதிசாரபேதி கண்டிருக்கும யாதொரு நபர் மலவிஸர்ஜனம செயதபிறகு யாதொரு குளத்திலாகிலும் கிணற்றிலாகிலும சுத்திசெய்துகொணடதாகக கண்டறியப்பட்டாலும், தொத்துவியாதி சம்பந்தப்பட்டிருக்கும் யாதொரு வீட்டிலுளளவர்களைச் சேர்ந்த எந்த வஸ்திரங்களாவது யாதொரு குளக்கரையிலாகிலும் யாதொரு குளத்திலாகிலும் கிணற்றிலாகிலும் தோய்க்கப்பட்டாலும், தூரமாயுள்ள வேறே யாதொரு ஜலாதாரத்திலிருந்து தண்ணீர் கொண்டுவருவது கஷ்டமாயிருந்தபோதிலும் அப்படிப்பட்ட ஜலாதாரம் கிடைப்பது சாத்தியமாயிருக்கிறபட்சத்திலே, யாதொரு வைத்திய உத்தியோகஸ்தராவது ஸெர்டிபிகேட் பெற்றிருக்கும ஸானிடரி இன்ஸ்பெக்டராவது அந்தக் கிணற்றிலிருந்தாகிலும் குளத்திலிருந்தாகிலும் தொத்துவியாதி சம்பந்தத்தை நீக்குகிறவரையில், அதை உடனே மூடிவைக்கவேண்டும். குடிக்கும் ஜலம் கிடைக்கும்படியான ஜலாதாரம் ஒன்றே இருக்குமானால், அந்தக் கிணற்றண்டை காவலாள் ஒருவனை ஏற்ப

டுத்திவைக்கவேண்டும்; அவன் - அந்த ஜலத்தைக் குடிப்பதற்காக வோ வேறே யாதொரு வீட்டுக் காரியத்துக்காகவோ உபயோகிக்கும்போது அதைப் பொங்கக்காய்ச்சி உபயோகிக்கும்படி ஒவ்வொருவருக்கும் எச்சரிக்கை செய்யவேண்டும்.

ஜலதாரைகள்.

ஜலதாரைகளைத் தினந்தோறும் ஜலத்தை நிறைய விட்டுக் கழுவியும் பெருக்கியும் சுத்தப்படுத்தவேண்டும்.

குப்பையை இன்னது செய்வது.

சகலவிதமான குப்பையையும் அன்றாடம் அப்புறப்படுத்திவிடவேண்டும். குப்பையை அப்புறப்படுத்துவதற்கு அதிகப் பணச்செலவு செய்யவேண்டியதாகக் காணப்பட்டால், குப்பையின் பெரும்பாகத்தை, 'சுண்ணாம்புக் காளவாயைப்' போல் செய்யப்பட்டிருக்கும் சுட்டெரிப்பதற்கான சிறிய மண் தொட்டிகளில் போட்டுக் கொளுத்திவிடக்கூடும்; ஆனால் அவைகளின் வாய் இன்னும் சிறியதாயிருக்கவேண்டும். சுட்டெரிப்பதற்கான அந்தத் தொட்டிகளிலுள்ள சாம்பலை உலர்ந்த மண்ணோடு கொட்டிக் கலந்துவிடலாம், அல்லது பயிரிடப்படும் நிலத்தில் கொண்டுபோய்ப்போடலாம்.

வீட்டிலுள்ளவர்கள்.

வாந்திபேதி கண்டிருக்கும்போது பேதியாகிறதையும் வாந்தியாகிறதையும் சட்டிகளில் பிடித்துக்கொள்ளவேண்டும்; இன்னும் நல்ல தொத்துவியாதிமாற்றிமருந்து கைக்குக் கிடைக்கிறதாயிராவிட்டால், அந்தப் பாத்திரங்களில் புது சுண்ணாம்பைத் தயாராக வைத்திருந்து, பிறகு மலத்தின்மேல் இன்னும் கொஞ்சம் சுண்ணாம்பைப் போட்டு மூடவேண்டும்.

வாந்தியும் பேதியும் தரையின்மேலாயவிட்டால் அவைகளின் மேல் சுண்ணாம்பைப் போட்டு, பிறகு அந்தத் தரையைத் தோண்டியெடுத்துவிடவேண்டும். நோயாளி தன்னுடைய வீட்டுக்குப் போய்ச் சேருவதற்குமுன்னே எந்த இடங்களிலாகிலும் வாந்தி எடுத்திருக்கிறானா அல்லது அவனுக்கு பேதியாயிருக்கிறதா என்பதை ஜாக்கிரதையாக அவனை விசாரித்தறியவேண்டும்; மேலும், அவனுடைய சொந்த வீடும் இம்மாதிரி அசுசியாக்கப்பட்டிருந்தால், ஒவ்வொரு ஸ்தானத்திலும் மேலே கண்டபடி செய்யவேண்டும், அல்லது வரட்டிபோட்டுக் கொளுத்திவிடவேண்டும். மலவிஸர்ஜனம் செய்தபிறகு சுத்திசெய்வதனாலாகிலும் தன்னுடைய வஸ்திரத்தைத் தோய்ப்பதனாலாகிலும் அவன் யாதொரு கிணற்றையாவது குளத்தையாவது அசுசியாக்கியிருந்தால், அந்தக் கிணறு அல்லது குளத்தின் விஷயத்தில் மேலே சொன்ன காரியத்தைச் செய்யவேண்டும்.

நோயாளியின் தேகத்தைத் துடைக்க கந்தைகளை உபயோகித்து, பிறகு அவைகளை மலத்தோடு போட்டுவிடவாவது வேண்டும், உடனே சுட்டெரித்துவிடவாவது வேண்டும்.

வாந்தியும் பேதியுமான வஸ்துக்களை இன்னது செய்வது.

கிராமத்திலிருந்து கால்மைலுக்குக் குறையாத தூரத்திலும், அருவிகள் குளங்கள் அல்லது கிணறுகளுக்கு வெகு தூரத்திலும் ஐந்தடிககுக் குறையாத ஆழமாக குழிகளைத் தோண்டி, அந்தக் குழி களிலே வாந்தியானதையும் பேதியானதையும, அப்படிப்பட்ட வாந்திபேதியினுல் அசுசியாக்கப்பட்டிருக்கும் தரைகளிலிருந்தாவது வேறே இடங்களிலிருந்தாவது அப்புறப்படுத்தப்பட்ட மண்ணையும் போட்டுப் புதைத்துவிடவேண்டும்; அல்லது பேதியானதையும் வாந்தியானதையும நெல்லுமி அல்லது வாள்தூளுடனும் சிறிதளவு கெரொஸின் எண்ணையுடனும் கலந்து கொளுத்திவிடவேண்டும்.

தொத்துவியாதி சம்பநதபபட்டிருந்த வஸ்திரங்கள்.

நோயாளிகளின வஸ்திரங்கள் அசுசியாக்கப்பட்டு வேறே வஸ்திரங்கள் உபயோகிக்கப்படுகிற ஒவ்வொருதடவையிலும், நோய் கண்டு இறந்துபோனவர்களுடைய வஸ்திரங்களை வைத்துக்கொள்ளவேண்டியிருக்கிறபட்சத்திலும், அப்படிப்படட வஸ்திரங்களைக் கு - றந்தது இரண்டுமணிநேரமாகிலும் வேகவைக்கவேணடும் ; 1000 ல் 1 ஆகக் கலந்திருக்கும் மெர்க்யுரி பெர்க்ளோரைட் கலப்புநீா கிடைக்கக்கூடுமானல், ஷை வஸ்திரங்களை முன்னதாக இந்தக் கலப்புநீரில் அரைமணிநேரம் தோய்த்துவைத்திருக்கவேணடும. உபயோகமற்ற கந்தைகளையெல்லாம் கொளுத்திவிடவேண்டும்.

நோயாளிகளைப் பிரத்தியேகப்படுத்துவது.

யாதொரு வெளியான இடத்தில் ஆஸ்பத்திரி கொட்டகைகளை ஏற்படுத்தி, சொந்த இடமில்லாதவர்களை அவைகளில் சேர்த்துக் கொண்டு சிகிச்சை செய்யவேண்டும்.

நோயாளிகள் தங்கள் வீட்டிலேயே இருந்தால, குடிக்கும் ஜலம் கிடைக்கும்படியான ஜலாதாரத்திலே அவர்களுடைய துணையாள்களைப் பாத்திரங்களைத் தோய்க்கவிடக்கூடாது அவர்களுடைய பாத்திரங்களிலே தண்ணீர் வார்ப்பதற்கு கிராமப் பெரியதனக்காரர் அவர்களுடைய ஜாதியைச் சேர்ந்த தகுதியான ஆள் ஒருவனை ஏற்படுத்தவேண்டும்.

யாதொரு வீட்டிலிருந்து தொததுவியாதி சம்பந்தத்தை நீககும் விதம்.

யாதொரு நோயாளி சொஸ்தமடைந்தாலும் இறந்துபோனுலும், சகல வஸ்துக்களையும் வீட்டிலிருந்து அப்புறப்படுத்தி வெயிலில் திறந்துவைக்கவேண்டும். கதவுகளையும் ஜன்னல்களையும் குறைந்தபட்சம நான்குமணிநேரமாகிலும் நன்றாய்த் திறந்துவிடவேண்டும். சகல மர சாமான்களின் மேலும் கொதிக்கும் தண்ணீரை ஊற்றவேண்டும்; நோயாளி தொட்டுக்கொண்டிருந்த சகல போஜன பாத்திரங்களையும், கையில் தொடமுடியாதபடி சூடு உண்டாகிற வரையிலே நெருப்பின்மேல் வைத்துக் காய்ச்சவேணடும்.

அந்த வீட்டின் சொந்த உபயோகத்துக்காக ஒரு கிணறு இருக்கிற பட்சத்திலே, யாதொரு வைத்திய உத்தியோகஸ்தராவது

ஸெர்டிபிகேட் பெற்ற ஸானிடரி இன்ஸ்பெக்டராவது அதிலிருந்து தொத்து வியாதி சம்பந்தத்தை நீக்குகிறவரையில், அந்தக் கிணற்றை உபயோகிக்கக்கூடாது. சொற்ப விலைமதிப்புள்ள சகல படுதாக்களையும் படுக்கைச் சாமான்களையும் வஸ்திரங்களையும் கொளுத்திவிடவேண்டும்; விலையுயர்ந்த அம்மாதிரியான சகல வஸ்துக்களையும் இரண்டுமணிநேரம் வேகவைக்கவேண்டும்.

வாந்திபேதி சம்பந்தப்பட்ட வாந்தியாவது பேதியாவது மண் தரையில் பட்டுக் கறைப்படுத்தியிருந்தால், அந்தப்படி கறைப்படுத்தியிருக்கும் பாகங்களை நாலங்குல ஆழம் வெட்டியெடுத்து, எல்லாவற்றையும் மேலே சொன்னபடி அப்புறப்படுத்தி புதைத்துவிட்டு, அந்த பாகங்களில் புது மண்ணைப் போடவேண்டும். அந்த வீட்டின் அக்கம்பக்கத்திலுள்ள பூமியின் எந்த பாகங்களாவது இம்மாதிரியே கறைப்படுத்தப்பட்டிருக்குமானால், அவைகளின் விஷயத்திலும் மேலேகண்டபடி செய்யவேண்டும். யாதொரு மண் சுவரின் பாகங்கள் மேலேகண்டபடி கறைப்படுத்தப்பட்டிருக்குமானால், அந்த பாகங்களையும் இரண்டங்குலத்துக்குச் சுரண்டிவிடவேண்டும். கெட்டியாயிருக்கும் சுண்ணும்புச்சுவரின் பாகங்கள் இம்மாதிரி கறைப்படுத்தப்பட்டிருக்குமானால், அவைகளின்மேல் கொதிக்கும் தண்ணீரை ஊற்றவேண்டும். கறைப்படுத்தப்பட்டிருக்கும் பாகங்கள் விஷயத்தில் மேலே கண்டபடி செய்தபிறகு, அறையின் உட்புறத்திலெல்லாம் புதிதாய்த் தாளித்த சுண்ணும்பைக்கொண்டு சுண்ணும்பு அடிக்கவேண்டும்.

அந்த வீட்டிலிருந்து வெளியேபோகும் சகல ஜலதாரைகளையும், 500 ல் 1 பங்காகச் சேர்த்திருக்கும் மெர்க்யுரி பொக்ளோரைட் கலப்பு நீரை நிறைய ஊற்றிச் சுத்திசெய்யவேண்டும்; இந்தக் கலப்புத்தண்ணீர் கிடைக்காத பட்சத்திலே, புதிதாய்த் தாளித்திருக்கும் சுண்ணும்பை அரிசிநொய்க் கஞ்சியைப்போல் கனமாகத் தண்ணீரில் கலந்து அந்த ஜலதாரைகளில் நிறைய ஊற்றிச் சுத்திசெய்ய வேண்டும்.

*பிரேதங்களுக்குத் தொத்துவியாதி முறிப்புசெய்வது.*

ஜாதியாசாரப்படி ஆக்ஷேபனையில்லாவிட்டால், யாதொரு பிரேதத்தைத் தெருக்களின்மூலமாக எடுத்துக்கொண்டுபோவதற்குமுன்னே, அதன்மேல் 1,000-ல் 1-ஆக மெர்க்யுரி பொக்ளோரைட்கலப்புநீரில் தோய்த்த ஒரு துப்பட்டியைப் போட்டு மூடவேண்டும்.

*பிரேதங்களை இன்னது செய்வது.*

ஜாதியாசாரப்படியாவது குலாசாரப்படியாவது ஆக்ஷேபனை எதுவும் இல்லாவிட்டால், பிரேதங்களைத் தகனஞ்செய்வதே உத்தமம்; அப்படிக்கில்லாவிட்டால், அவைகளை ஆறடி ஆழத்தில் புதைக்கவேண்டும்.

## பிரிவு 2.—பெரியம்மை.

அம்மை குத்தப்படாமலிருந்து பெரியம்மை காணுகிறவர்கள் ஏறக்குறைய மூன்றிலொருவர் வீதமாக மரணமடைகிறார்கள்.

சாகாமல் பிழைக்கிறவர்களும ஆயுள்முழுவதும் பெரும்பான்மை யாகக் குருடர்களாய்விடுகிறுர்கள ; இந்த அருவருப்பான வியாதி யிஞல பலவிதமான அங்கஹீனங்களும் அஸ்தியைப்பற்றிய வியாதி களும் உண்டாகின்றன.

நன்ருய் அம்மை குத்தப்பட்டிருந்தால் பெரியம்மை காண்கிற வர்களில நூற்றில் ஒருவர்கூடச சாகிறதிலலே ; அம்மை குத்தப் பட்ட பிறகு உண்டாகிற பெரியம்மையானது சில தினங்கள் வரை யில்மாத்திரமிருந்து, ஸ்வலப ஜ்வரத்தைமாத்திரம் உண்டுபண் ணும்

ஆகையால், யாதொரு கிராமத்தில் பெரியமமை கணடால், குடிகளே அமமைகுத்திக்கொள்ளுமபடி வற்புறுத்துவது கிராமப் பெரியதனக்காரருடைய கடமையாயிருக்கிறது ; அவர் உடனே அது சஙகதியைத் தாசிலதாாருக்குத் தெரிவித்து, அம்மைகுத்துகிற வர்களே அனுப்பும்படி கேட்டுககொள்ளவேண்டும.

அம்மை தொததிககொளளுமபடியான நிலேமையிலிருந்தாலுங் கூட, அம்மை குத்திககொண்டால் அம்மை வராமல் சாதாரண மாய்ப் பாதுகாப்பு உண்டாகும் ; அம்மைகண்டாலுங்கூட பலமா யிராதென்பது நிசசயம்.

## அம்மை குத்துவது.

பெரியம்மையானது வரவொட்டாமல் அறுதியாய்த் தடுக்கக்கூ டிய வியாதியாக இருககிறது ; மேலும, ஒவவொருவருக்கும் தக்க படி அம்மை குத்தபபடுமாகில பெரியம்மை அடியோடு அற்றுப் போயவிடும.

இது வாஸதவமான சங்கதியென்று தெரிந்திருப்பதஞலே துரைததனத்தார் - அதிக பணச்செலவுசெயது குடிகளின் நனமை ககாகவே வாக்ஸினேஷன் (அமமைகுத்தும்) இலாகாவை ஏற்படு த்தியிருக்கிறுாகள் ; யாதொரு கட்டணமும் வாங்காமலே அம்மை குத்துவது அந்த இலாகாதாரருடைய கடமையாக இருக்கிறது.

அம்மை குத்துகிறவர் யாதொரு கிராமத்துக்கு வரும்போதெல் லாம், கிராமப் பெரியதனக்காரர் - அவரோடுகூட கிராமத்தைச் சுற்றி வரவேண்டும் ; மேலும், அம்மைகுத்துகிறவர் ஒவ்வொரு தரமும் வந்து போனபிறகு, கிராமப் பெரியதனக்காரா - 2-ம் அனு பந்தத்தில் நிரணயிக்கப்பட்ட நமூஞைப்படி ஒரு ஸ்டேட்மென்டை, தாலூகா தாசிலதாரர் மூலமாக வாக்ஸினேஷன் டெப்யுடி இன்ஸ் பெக்டருக்கு அனுப்பவேணடும. அம்மைகுத்துகிறவர் கிராமத்தை விட்டுப் போவதற்குமுன்னே அவருக்கு இந்த ஸ்டேட்மென்டின் நகலொன்றைக் கொடுக்கவும வேண்டும். 189-வது பக்கத்திலு ள்ள 103-ம்டு. ஸ்டாண்டிங் ஆர்டரென்னும் நிலேயான உத்தரவின் (ii) குறிப்பிட்ட பகுதியைப் பார்க்க.

அம்மைகுத்துகிறவர் கிராமத்துக்கு வரும் ஒவ்வொரு சமயத்தி லும் கிராம முன்ஸிபுகள் தங்கள் தங்களுடைய கிராமங்களிலே மொத்தத்தில் எத்தனேபேருக்கு அம்மைகுத்தப்பட்டதோ அந்த

மொத்த சங்கியையைச் சரிபார்த்து, அவருடைய ஜாபிதாவில் கண்ட மொத்த சங்கியையானது சரியாயிருக்கிறதென்பதைக்குறித்து உறுதிமொழி கூறும்படி உத்தரவு செய்யப்படும்போதெல்லாம், அந்தப்படியே சரிபார்த்து உறுதிமொழிகூற கிராமமுனிஷிபுகள் கடமைப்பட்டவர்களாயிருக்கிறார்கள்.

**நன்றாய் அம்மைகுத்துவதனால் தோன்றும் குறிகள்.**—இரண்டாம நாளிலாவது மூன்றும் நாளிலாவது கொப்புளம கிளம்பியிருக்கும் ; எட்டாம நாளில தெளிவான சீழ் உணடாகும ; பத்தாம் நாளில் அந்த சசீழ் கருநிறமடையும் ; பதினன்கு அலலது பதினேநதாம் நாளில் பக்கு கட்டிக்கொணடிருக்கும். பககு உதிர்ந்துவிட்டபிறகு, வட்டமான வடிவு உண்டாகி அதில் சிறுகுழிகள் நிறைந்திருக்கும் ; இந்தக் குறிதான நன்றாய் அம்மை குத்தியிருக்கிறதெனபதறகு நிச்சயமான அடையாளம்

ஒவவொரு கையிலும் மூன்று குறிகள இருககவேண்டும் : மூனறுக்கு குறைந்திருபபது போதாது.

பிறந்த ஆறுவாரத்துககுமேல் மூனறுமாதத்துக்குளளாக எப்போதும் குழந்தைகளுக்கு அம்மை குத்திவிடவேணடும ; புதிதாயப் பிறந்த குழந்தைக்குப் பெரியமமை தொத்திககொளளத்தக்க சந்தர்ப்பமாக இருந்தால, கால தாமசமிலலாமல அந்தக் குழந்தைக்கு அமமை குத்திவிடவேணடும ; அதனால் எவவித கெடுதியும உணடாகமாட்டாது.

எலலோரும (காமநுகாச்சிக்குரிய) பக்குவவயதை அடையும் போது, அவர்களுக்கு இரண்டாந்தரம் அமமை குத்தப்படவேண்டும.

அமமை குத்தபபட்டிருக்கும குழந்தைகளுடைய கைகளின மேல இலைகளையும பசுவின் சாணத்தையும இதர மருநதுகளையும் போடககூடாதெனறு கிராமப பெரியதனக்காரா வற்புறுத்திச் சொலலவேண்டும். அமமை குத்தினபிறகு குழநதைகளின விஷயத்தில கவனிக்கவேணடியதெலலாம, கைகளை வெகு சுத்தமாய வைத்திருககும்படியும, கொபபுளஙகள உடையுமபடியாக அவைகளைத் தேய்த்துவிடாதபடியும பாரத்துககொளவதுதான. ஜவரககுறிகள காணப்பட்டால், குழநதைகளை வெயிலில வைத்திருககககூடாது. கொப்புளங்களை அபபடியே விட்டுவிட்டால, அவை தாமாகவே பககு கட்டி உலாந்துபோயவிடும ; இநதப பக்குகளின கீழிருககும புண ஆறிபபோயவிட்டால, அவை உதிர்ந்துபோய்விடும. அந்தப் பக்குகளின மேஜாலிககுப்போனல், புண ஆறுவதறகு வெகுநாள பிடிககும.

## பிரிவு 3.—மலேரியா என்னும் விஷஜுரம்.

மனிதனுடைய இரத்தத்தில் உயிருள்ள ஒரு சிறு கிருமி இருப்பதனுல் மலேரியா என்னும் விஷஜுரம் உண்டாகிறது. யாதொரு வகையைச் சேர்ந்த கொசுவானது மனிதனுடைய இரத்தத்தை

உறிஞ்சும்போது, அது இரத்தத்துடன்கூட விஷஜ்வரக் கிருமியையும் தன்னுடைய இரைப்பைக்குள் கொண்டுபோகிறது. கொசுவின் உடலுக்குள்ளே, இக் கிருமியானது சில மாறுதல்களை அடைகிறது; இந்த மாறுதல்களினால் இக் கிருமியானது கொசுவின உறிஞ்சுகுழை வழியாகச் சென்று, அந்தக் கொசு யாருடைய இரத்தத்தைக் குடிக்கிறதோ அந்த மனிதனுடைய தேகத்துக்குள் செலவது சாத்தியமாயிருக்கிறது. இவ்விதமாக, விஷஜ்வரத்துக்குக் காரணமாயுள்ள வஸ்துவானது மனிதர்களுள் ஒருவரிடத்திலிருந்து இன்னொருவரிடத்துக்கு மாறக்கூடும். ஆகவே, யாதொரு கிராமத்தில் விஷஜ்வரமுண்டாவதற்கு வேண்டியதெல்லாம், மனிதர்களுடைய தேகத்தில இரத்தத்தைக் குடித்துப் பிழைத்திருக்கும கிருமியும, இந்தக் கிருமிகள தன்னிடத்தில மாறுதல அடைவதற்கு அனுகுணமாயுள்ள விசேஷ வகையான கொசுவும் இருப்பதுதான். இதனால் விஷஜ்வரத்தை இரண்டு விதமாகத் தடுக்கக்கூடுமென்று ஏற்படுகிறது; முதலாவது, ஜீவித்திருக்கும் மனிதனுக்குக் கெடுதியுண்டாகாமல அவனுடைய இரத்தத்திலிருக்கும கிருமியைக் கொல்வதனாலும், இரண்டாவது, கிருமியைக் கொணடுபோகக்கூடியவைகளாயிருக்கிற கொசுக்களைக் கொல்லுவதனாலும் இஷ ஜ்வரம வரவொட்டாதபடி தடுக்கக்கூடும். கிருமியைக் கொல்வதற்கு க்வினைன் மெத்தவும் பிரயோசனகரமாயிருக்கிறது; மேலும், ஏககாலத்தில் கிராமத்திலே விஷஜ்வரம் கண்டிருப்பவர்கள் எல்லோரும் க்வினைனை உபயோகித்தால் அது முக்கியமாய்ப் பிரயோசனகரமாயிருக்கும். தபாலாபிஸ்களிலே கிடைக்கும் க்வினைனை வயதுவந்தவர்கள் அடியிற்கண்டபடி உபயோகிப்பது நல்லதென்று சொல்லப்படுகிறது :—

க்வினைனை ஒரு கலப்பு மருந்தாய்ச் செய்து உட்கொள்ள வேண்டும; கருவியான ஒரு பெட்டியில் க்வினைன் சூர்ணத்தை வைத்திருக்கவேண்டும்; வேண்டியிருக்கிறபடி அப்போதைக்கப்போது க்வினைனை சாரம் குறைவாயிருக்கும் புளிப்புத் திராவகத்திலும் தண்ணீரிலும் போட்டுக் கரைத்து இஷ கலப்பு மருந்து தயார்செய்துகொள்ளவேண்டும். சாரம் குறைந்திருக்கும் கந்தகத் திராவகத்தில் க்வினைனைக் கரைப்பது மெத்தவும் உத்தமம்; ஒரு க்ரெயின எடையுள்ள க்வினைனுக்கு ஒரு துளி திராவகத்தை உபயோகிக்கவேண்டும்; ஒரு தடவையில பதினைந்து க்ரெயினுக்குக் குறையாமலும் இருபது க்ரெயினுக்கு மேற்படாமலும் க்வினைனை மேலேகண்டபடி கலந்து, விஷஜ்வரத்தைச் சொஸ்தப்படுத்துவதற்கான மருந்தாக உபயோகிக்கவேண்டும; ஜ்வரம் நிற்கிற வரையிலே பிரதி தினமும் இம்மாதிரி ஒரு தரம் கொடுத்துவரவேண்டும். விஷஜ்வரம் வராதபடி தடுப்பதற்காக, ஒவ்வொரு தடவையும் பத்து க்ரெயின க்வினைனை மேலேகண்டபடி கரைத்து வாரத்துக்கு இரு முறை கொடுத்துவரவேண்டும்.

குழந்தைகளுக்குக் கொடுக்கும்போது, அவைகளின் வயதுக்குத் தக்கபடி இந்த அளவுகளைக் குறைக்கவேண்டும்.

கொசுவானது பறக்கக்கூடிய நிலைமையை அடையும்போது அவைகளைக் கொல்வது மெத்தவும் கஷ்டமான காரியமாயிருக்கும். ஆகவே, அவைகள் வளர்ந்து இந்த தசை அடைவதற்கு முன்னே அவைகளைக் கொல்ல எத்தனிப்பது நல்லது. இந்தப்படி செய்வதற்கு மிகச் சிறந்த மார்க்கம் எதுவென்றால், கிராமத்துக்குள்ளும் அதற்கு அக்கம்பக்கத்தில் குறைந்தது நானூறு கஜதூரம் வரையிலும் அசைவற்று தேங்கிநிற்கும் தண்ணீருள்ள குட்டைகளையெல்லாம் ஒழித்துவிடுவதுதான்; கிராமத்தைச் சுற்றிலும் அரைமைல் தூரத்துக்கு இம்மாதிரி செய்வது இன்னும் நல்லது. பிரயோசனமற்ற குட்டைகளாயிருந்தால், அவைகளை வடித்துவிட்டு அவைகளிலுள்ள குழிகளை தூர்த்து குறைந்தது வாரத்துக்கொருமுறை அவைகளின் ஜலத்தை எடுத்துவிட்டால் அக்குட்டைகள் ஒழிந்துபோய்விடும். அருவிகளில் நீரோட்டமானது மந்தமாயிருந்தால், தண்ணீர் எவ்வளவு வேகமாய்ப் போகக்கூடுமோ அவ்வளவு வேகமாய்ப் போகும்படி செய்வதற்காக அவைகளில் படிப்படியாய் ஏற்றத் தாழ்வு உண்டாக்கவேண்டும்; மேலும், தண்ணீரானது தங்கியிருக்கக்கூடியதாகவோ அருவியின் மத்தியில் உள்ள வேகத்தைக்காட்டிலும் குறைந்த வேகத்துடன் போகக்கூடியதாகவோ அவைகளின் பக்கங்களில் மேடு பள்ளங்கள் இருக்கக்கூடாது. கொசுக்கள் முட்டையிட்டுக் குஞ்சுபொரித்து வளர்வதற்கு இடமாயிருக்கும் ஜலாதாரங்களையெல்லாம் கொசுக்களுக்குக் கிடைக்காதபடி மேலேகண்டவிதமாய் ஒழித்துவிட்டால், அவைகளின் சங்கியை நாளாவர்த்தியில் ஓரேமாதிரியாய்க் குறைந்துபோகத்தான்வேண்டும். ஆனால், கிராமத்துக்குச் சமீபத்தில் அநேக குட்டைகள் இருந்து அவைகளை மேலேகண்டபடி ஒழித்துவிடுவதற்காகப் பிடிக்கும் செலவுக்குப் பணம் போதாமையாயிருக்கலாம். இப்படிப்பட்ட விஷயத்திலே, சிறு கொசுக்களை அதிகப் பணச் செலவில்லாமல் கொல்லுவதற்கு ஒரு மார்க்கம் இருக்கிறது; அதாவது, எல்லா குட்டைகளின்மேலும் கெரோஸின் எண்ணெயை இலேசாய் ஊற்றிவைப்பதே. மெத்தவும் விலைக்குறைவான வகையைச்சேர்ந்த எண்ணெயை உபயோகிக்கலாம்; அல்லாமலும், அந்தக் குட்டையின் மேற்பரப்பு முழுவதையும் சவ்வுபோல் மூடிக்கொண்டிருப்பதற்கு எவ்வளவு எண்ணெய் வேண்டுமோ அவ்வளவு இருந்தால் போதும். இந்த இரண்டு முறைகளையும் அனுசரித்தால், யாதொரு கிராமத்தில் விஷஜுரத்தை ஒழித்துவிடுவது சாத்தியமாயிருக்கும்.

கால்நடைகளைக் கட்டிவைத்திருக்கும் வீடுகளின் இருட்டான மூலைகளிலும் கொசுக்கள் அநேகமாய் இருக்கின்றன. ஆகவே, சகல குடியிருப்புவீடுகளின் உட்புறத்திலும் கால்நடைக் கொட்டில்களின் உட்புறத்திலும் பெரிய ஜன்னல்களும் கதவுகளும் வைத்து விசேஷ வெளிச்சமும் காற்றும் இருக்கும்படி ஏற்பாடு செய்வது உசிதமாகும். அப்போதைக்கப்போது சுவர்களையும் முக்கியமாய் மூலைகளையும் துடைப்பதும் அதன்பிறகு அவைகளுக்குச் சுண்ணும்பு அடிப்பதும் மெத்தவும் பிரயோசனகரமாய் இருப்பதாகக் காணப்படும்.

**விஷஜுரம் வராதபடி முன்னெச்சரிக்கையாய் நேரில் அனுசரிக்க வேண்டிய ஏற்பாடுகள்.**

1. சீதளம படவொட்டாமல் தேகத்தைக் காககவேணடும்.

2. ஒருபோதும் தரையில் படுத்துத் தூங்காமல், கட்டிலின் மீதாவது திண்ணையின மீதாவது படுததுத் தூங்கவேண்டும்.

3. ஜலத்தைக் குடிபபதற்குமுன எப்போதும் பொங்கக் காய்ச்சியே குடிக்கவேணடும்.

4. தண்ணீா பாய்ச்சபபட்ட புலஙகளிலிருந்து தணணீரைக கொண்டுபோகும வாய்ககால்களில ஒருபோதும ஜலபானம் பண்ணக்கூடாது.

5. கூடியமட்டில ஓதமிலலாமல உலர்ந்த மணணுள்ள தரையினமேல் கட்டியிருககும வீடாகப் பார்த்து அதில் குடியிருக்கவேணடும்.

6. கொசுத்திரைகளைப் போட்டுககொணடு நித்திரை செய்ய வேண்டும.

7. பூர்த்தியாய வளாந்திருக்கும கொசுக்களை குடியிருப்புவீடுகளில தங்கவொட்டாதபடி முனனெச்சரிக்கையான ஏற்பாடுகளை அனுசரிக்கவேண்டும. அறைகளில் காற்றோட்டத்துக்குத் தடையுண்டாகும்படியாக வஸ்திரங்களையும் இதர வஸ்துககளையும் தொங்கவிட்டிருககும் இடங்களைப்போன்ற இருட்டாகவும் காறறோட்டம் குறைவாகவுமுள்ள மூலைகளிலேயே அவை முக்கியமாய் வசிக்கின்றன.

8. மேலேகண்டபடி க்வினைனை உபயோகிக்கவேண்டும்.

## பிரிவு 4.—இரத்தபேதியும் அதிசாரபேதியும் கிருமிகளும்.

இரவிலே வெளியிடங்களில் நித்திரைசெய்வதனால் வயிற்றின் மேல சீதளம தாக்கும்படி திறந்துவைத்திருப்பதனாலும், சாப்பாட்டில் பிசகுகள் நேரிடுவதனாலும, முககியமாய் அழுகிப்போகும் மாமிசத்தையாவது பாலையாவது காய்கறிகளையாவது உபயோகிப்பதனாலும், அசுத்தமான ஜலத்தைக் குடிபபதனாலும, அலலது அழுக்குள்ள தும்புதூசும பாதங்களில் அழுக்குடன ஈக்களும ஆகாரத்திலும பாலிலும் ஜலத்திலும் போய்ச் சேரும்படியாக, மனிதாகளின் மலமும பிராணிகளின மலமும இதர அசுத்தமான வஸ்துக்களும் வீட்டின் அருகாமையிலிருக்கும்படி விடுவதனாலும் அதிசாரபேதியும இரத்தபேதியும் உண்டாகின்றன.

ஏற்கனவே நோய் கண்டிருக்கும் நபர்கள் மலவிஸர்ஜனமான பிறகு ஜலத்தில் சுத்திசெய்துகொள்வதனாலாவது, மலவிஸர்ஜனமானபிறகு அரைகுறையாய்ச் சுத்திசெய்யப்பட்ட தங்களுடைய கைகளை அந்த ஜலத்தில் தோய்ப்பதனாலாவது, தங்களுடைய அழுக்குத் துணிகளை அந்த ஜலத்தில் தோய்ப்பதனாலாவது, அப்படிப்பட்ட நபர்களின் மலம் மழைத்தண்ணீரினால் குளங்களிலும் கிணறு

களிலும் அடித்துக்கொண்டு போகப்படுவதனாலாவது அசுத்தியாக்கப்பட்டிருக்கும் ஜலத்தைக் குடிப்பதனால் குடலில் கிருமிகளும் உண்டாகின்றன.

ஜலத்தைப் பொங்கக் காய்ச்சிவிடுவதனால் இந்தப் பிராணிகளின் முட்டைகள் அழிக்கப்படுவதுமன்றி, அதிசாரபேதியும் இரத்தபேதியும் காணாதபடி பாதுகாப்பும் உண்டாகிறது.

## பிரிவு 5.—கினிவொர்ம் என்கிற கிருமி.

கினிவொர்ம் என்கிற கிருமியானது கிணறுகளிலும் குளங்களிலும் காணப்படுகின்றது; இந்தக் கிருமிகள் இருக்கும் தண்ணீரைக் குடிக்கிறவர்களுக்கு அல்லது அதில் ஸ்நானம் செய்கிறவர்களுக்கு வெகுசாய் கினிவொர்ம் என்கிற நரம்புச் சிலந்தி உண்டாகும். குறித்த யாதொரு கிணற்றின் ஜலம் அந்த நோய்க்குக் காரணமாயிருப்பதாகக் காணப்பட்டால், அந்த ஜலத்தைப் பலமுறை இறைத்துவிடவேண்டும்; அல்லது, அக்கிணற்றுக்கு வெளியே போதுமான ஜலம் கிடைக்கக்கூடுமானால், அந்தக் கிணற்றை மூடிவிடவேண்டும்.

அந்தக் கிணற்றிலுள்ள தண்ணீரை இறைத்து அதைச் சுத்தப்படுத்துகையிலே, வண்டுகளைப்போலிருக்கும் சகல பூச்சிகளையும் தேடியெடுத்து அப்புறப்படுத்திவிடவேண்டும், ஏனென்றால், இந்தப் பூச்சிகளில் சில கினிவொர்ம் என்னும் கிருமிகளைச் சேர்ந்த சிறு கிருமிகள் இருப்பதற்கு இடம் கொடுக்கின்றன.

ஜலத்தைப் பொங்கக் காய்ச்சிவிட்டால் ஷை கிருமிகள் சேருவதற்கு இடமிராது; ஜலத்தைக் காய்ச்சுவதனாலே, வாந்திபேதியும் இரத்தபேதியும் அதிசாரபேதியும், குடலில் காணப்படும் கிருமிகளும், சிறிதுமட்டில் மலேரியா என்னும் விஷஜ்வரமும் உண்டாக இடமிராது.

நரம்புச் சிலந்தி கண்டிருக்கும் யாதொரு நபரை யாதொரு குளத்திலாவது கிணற்றிலாவது இறங்கும்படியாகிலும், யாதொரு காரியத்திற்காக அதை உபயோகிக்கும்படியாகிலும், குளங்களுக்கு அருகாமையில் அவருடைய வஸ்திரங்களைத் தோய்க்கும்படியாகிலுங்கூட விடக்கூடாது, ஏனென்றால், இந்தப்படிச் செய்வதனால் ஏற்கனவே இந்த வியாதி சம்பந்தப்பட்டிராத ஜலத்தில் மிகச் சிறிய இளங்கிருமிகள் பிரவேசிக்கக்கூடும்.

## பிரிவு 6.—(ப்ளேக்) மஹாமாரி.

மஹாமாரி என்பது மெத்தவும் மரணத்துக்கு ஏதுவான வியாதி; விடாமல் கடுமையாய் ஜ்வரம் காய்வதும், நாக்கில் மெத்தவும் அழுக்குப்படிந்திருப்பதும், தலையிலும் தேகத்திலும் நோய் காணுவதும், அரைப்பூட்டு - அக்குள் அல்லது கழுத்தில் மிருதுவான வீக்கங்கள் அல்லது பூபோ என்று சொல்லப்படும் கட்டிகள் காணுவதும் இந்த வியாதியின் லக்ஷணங்களாகும். சில வேளைகளில் ஜ்வரம் அவ்வளவு கடுமையாய்க் காய்ந்து ஷை கட்டிகள் காணப்படுவதற்கு முன்னமேயே நோயாளி இறந்துபோகிறான்; சில சமயங்களில் கட்டிகள் உண்டாவதற்குப் பார்த்தியாக, இந்த நோயினால் சுவாசப்பை

(நுரையீரல்) பாதிக்கப்பட்டு, கடுமையான இருமலும் இரத்தம் உமிழ்வதும் சுவாஸம் விடும்போது கஷ்டமும் உண்டாகும். இந்தக் கேஸுகள் மெத்தவும் அபாயகரமானவை; ஏனென்றால், இந்தப் படி வியாதி காணும்போது தொத்துவியாதி சம்பந்தமானது நேரே நோயாளியினிடமிருந்து அவனைச் சுற்றிலும் உட்கார்ந்திருப்பவர்களுக்குப் போகக்கூடும்.

மஹாமாரியானது வெகு நுட்பமாயுள்ள ஒரு அங்குரக்கிருமியினால் உண்டாகிறது; இது மஹாமாரி சம்பந்தப்பட்டிருக்கும் எலிகளின் உடல்களில் முக்கியமாய் அவைகளின் இரத்தத்தில் வளர்கிறது; மேலும், இது பிராணியின் உடலுக்கு வெளியே வந்து ஜீவித்திருக்கமுடியாது. எலி செத்துப்போய் விழுந்தால், அந்த எலியின் உடலில் மஹாமாரிக் கிருமிகள் நிறைந்திருக்கும். எலிகளினிடத்தில் அனேக தெள்ளுப்பூச்சிகள் இருக்கின்றன; இந்தப் பூச்சிகள் எலிகளின் இரத்தத்தைக் குடித்து ஜீவித்திருக்கின்றன. யாதொரு பிராணி செத்துப்போகும்போது, அந்தப் பிராணியின் உடலில் சூடு குறையக்குறைய தெள்ளுப்பூச்சிகள் அதைவிட்டுப் போய் விடுகின்றன. யாதொரு வீட்டில் எலி செத்து விழும்போது, தெள்ளுப்பூச்சிகள் செத்துப்போன எலியை விட்டுவிட்டு, அந்த வீட்டின் தரையில் மெல்ல நகர்ந்துகொண்டிருக்கின்றன; அந்த தெள்ளுப் பூச்சிகள் - மஹாமாரிக் கிருமிகள் இருக்கும் எலியின் இரத்தத்தை நிறையக் குடித்துவிட்டிருக்கும்; இந்த மஹாமாரிக் கிருமிகள் தெள்ளுப்பூச்சிகளுக்குள்ளே பலநாளவரையில் சக்தியுள்ளவைகளாயிருக்கும். தெள்ளுப்பூச்சிகள் உயிரோடிருப்பதற்கு இரத்தத்தை அடிக்கடி குடிக்கவேண்டியிருக்கிறது; அவைகள் பசியோடிருக்கும் போது, அவைகள் முதலில் காணும் மனிதனையாகிலும் பிராணியையாகிலும் கடித்து அவனுடைய அல்லது அதனுடைய இரத்தத்தை உறியும்; மேலும், அவை இந்தப்படி செய்யும்போது சில மஹாமாரிக் கிருமிகள் மனிதனுடைய தேகத்துக்குள் போகும். இந்த விதமாகத்தான் மனிதர்களுக்கு மஹாமாரியின் சம்பந்தம் உண்டாய் விடுகிறது.

நாய் வெறியென்பது நாய்களுக்கும் நரிகளுக்கும் காணும் வியாதியாகும்; ஆனால், இந்தப் பிராணிகள் மூலமாக மனிதர்களுக்கும் இந்த வியாதி தொத்திக்கொள்ளக்கூடும்.

அடைப்பான் என்பது காலநடைகளுக்குக் காணும் வியாதியாகும்; ஆனால், இந்த வியாதியானது அப்போதப்போது மனிதர்களுக்கும் தொத்திக்கொள்ளுகிறது

இவ்விதமாகவே மஹாமாரியென்பது எலிகளுக்குக் காணும் வியாதியாகும்; ஆனால், மனிதர்களும் அணிற்பிள்ளைகளும் குரங்குகளும் மஹாமாரி சம்பந்தப்பட்டிருக்கும் எலிகளுக்கு அருகாமையில் வசித்துக்கொண்டிருந்தால், அவைகளுக்குங்கூட இந்த வியாதி தொத்திக்கொள்ளக்கூடும்.

ஆகவே, மஹாமாரி யென்னும் பெருவாரி வியாதியானது யாதொரு கிராமத்தில் காணும்போது, ஒரு எலியின் உடலிலாவது

மனிதனுடைய தேகத்திலாவது தெள்ளுப்பூச்சியின் உடலிலாவது மஹாமாரிக் கிருமிகள் கிராமத்துக்குள் கொண்டுவரப்பட்டிருக்க வேண்டுமென்று தெரிகிறது; ஆகவே, மஹாமாரி வரவொட்டாமல் தடுப்பதற்கான சகல ஏற்பாடுகளையும் இதை அனுசரித்தே செய்யவேண்டும். மேலும், கிராமத்தில் எலிகள் இல்லாமலிருந்தால், இந்த வியாதி பரவமுடியாதென்று ஸ்பஷ்டமாய் ஏற்படுகிறது. எலிகள் குறைவாயிருந்தால், மஹாமாரி வியாதியும் சில நபர்களுக்கே காணும்; எலிகள் அதிகமாயிருந்தால், இந்தப் பெருவாரி வியாதி கடுமையாயிருக்கும். இந்த வியாதி வந்தபிறகு சிகிச்சை செய்வதைக்காட்டிலும் இந்த வியாதி வரவொட்டாமல் தடுப்பதே நல்லதென்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டும். ஒரு தடவை ஒரு கிராமத்தில் மஹாமாரி கண்டுவிட்டால், அதை ஒழிப்பது கஷ்டமாயிருப்பதுமல்லாமல் அது மறுபடியும் மறுபடியும் காணுவதற்கும் இடமுண்டாகும். ஆயினும், அதை வரவொட்டாமல் தடுப்பது சுலபம். எலிகளுக்குத் தொத்துவியாதி சம்பந்தம் உண்டாகாதிருக்கிறவரையிலே அபாயமொன்றுமில்லை; அந்த சம்பந்தம் உண்டாய் விட்டபிறகோ, அபாயம் அதிகம்.

மஹாமாரி வரவொட்டாமல் தடுப்பதற்காக அனுசரிக்கவேண்டிய முக்கியமான விதிகள் எவையென்றால்:—

(1) தொத்துவியாதி சம்பந்தப்பட்டிருக்கும் இடத்திலிருந்து மனிதர்களும், எலிகள் - தெள்ளுப்பூச்சிகள் ஆகிய இவை இருக்கக்கூடிய வியாபாரச் சரக்கும் கிராமத்துக்குள் வருவதற்கு அனுமதி கொடுக்கக்கூடாது; அப்படி அனுமதிகொடுத்தாலும் வெகு கண்டிப்பான ஷரத்துகள் ஏற்படுத்தியே அனுமதி கொடுக்கவேண்டும்.

மஹாமாரி சம்பந்தப்பட்டிருக்கும் கிராமங்களிலிருந்து இதர இடங்களைப் பார்க்க வருபவர்களும் ஷை கிராமங்களிலிருந்து வரும் விருந்தாளிகளும் அந்நியர்களும் இந்த நோய் காணுகிருக்கும் கிராமத்தில் பிரவேசித்து அதனால் அநேகருக்கு மஹாமாரி கண்டு மரணம் நேரிடாதிருக்கும்பொருட்டு, அவர்கள் சிறிதுகாலம் வசிக்கும்படியாக கிராமத்துக்கு வெளியே இரண்டொரு தங்குமிடங்களைச் சுலபமாய் ஏற்படுத்தலாம். அவர்கள் வெளியே ஐந்து நாள் தங்கியிருந்து தங்களுடைய வஸ்திரங்களையும் சொத்தையும் ஒவ்வொரு தினமும் வெயிலில் வைத்தபிறகு, அவர்களைக் கிராமத்துக்குள் பிரவேசிக்கும்படிவிட்டால் ஜன சௌக்கியத்திற்குக் கெடுதி உண்டாகாமலிருக்கும். மஹாமாரி சம்பந்தப்பட்டிருக்கும் கிராமங்களிலிருந்து வரும் சகல நபர்களுக்கும் ராதாரிசீட்டுகள் கொடுக்கவேண்டும்; இவைகளைக் கிராமப் பெரியதனக்காரர் பிரதிதினமும் பரிசோதனை செய்யலாம்.

தொத்துவியாதி சம்பந்தப்பட்ட யாதொரு இடத்திலிருந்து தானியம் கொண்டுவரப்படும்போது அந்தத் தானியத்தில் எலிகள் இருப்பதற்கும் அந்தத் தானியப்பைகளில் தெள்ளுப்பூச்சிகள் இருப்பதற்கும் இடமுண்டாகிறது. கிராமத்துக்குள் கொண்டுவருவதற்கு இடங்கொடுப்பதற்கு முன்னே, அந்தப் பைகளை காலிசெய்து தானி

பத்தை வெயிலில் பரப்பிவைக்கவேண்டும் ; பிற்பாடு காலியாயிருக்கும் பைகளை பொங்கக் காய்ச்சின ஜலத்தில் தோய்த்து எடுக்கலாம் ; இந்தப் பைகள் உலர்ந்தபிறகு, அவைகளில் மறுபடியும் தானியத்தைப் போட்டுவைக்கலாம். இவ்விதம் செய்தால் எலிகளும் தெள்ளுப்பூச்சிகளும் இராதபடி செய்வது சாத்தியமாயிருப்பதுமல்லாமல், வீட்டிலிருப்பவர்களுக்கு இந்தக் கொடுமையான வியாதி காணுமென்னும் பயமில்லாமலே தானியத்தை வீடுகளில் சேர்த்தும் வைக்கலாம்.

இவ்விதமாகவே தொத்துவியாதி சம்பந்தத்துக்கு வெகுசாய் உட்பட்டிருக்கக்கூடிய வஸ்திரங்களையும் படுக்கைச் சாமான்களையும் சிறிதுகாலமவரையில் கொதிக்கும் ஜலத்தில் போட்டுவைக்க வேண்டும் அல்லது வெயிலில் வைத்திருக்கவேண்டும்.

**யாதொரு கிராமத்தில் எலிகள் இராவிட்டால், மஹாமாரி பரவாது.**— ஆகவே, எலிகளின் சங்கியையைக் கூடியமட்டில் குறைப்பது அவசியமாகும். எலிகளை மூன்றுவகையாய்ப் பிரிக்கலாம் :—

(1) வீட்டின் கூரையிலாவது உட்புறத்தில் யாதோரிடத்திலாவது கூடுகட்டிக்கொண்டு வீட்டில் வசிப்பவை ;
(2) சாக்கடைக்கால்களிலும் வெளிப்புறத்துவீடுகளிலும் யாதொரு வீட்டுக்கு அடுத்துச் சுற்றிலுமுள்ள இடங்களிலும் வசித்து வெளியே எறிந்துவிடப்படும் கழிகடைப் பொருள்களைத் தின்று ஜீவிப்பவை ;
(3) புலங்களில் வசிப்பவை ;

முதல் சொன்ன வகையைச் சேர்ந்த எலிகள் யாதொரு வீட்டில் வசிப்பவர்களுக்குள் மஹாமாரியைப் பரவச்செய்கின்றன ; இரண்டாம் வகையைச் சேர்ந்த எலிகள் இந்த வியாதியை ஒரு வீட்டிலிருந்து இன்னொரு வீட்டுக்குப் பரவச்செய்வதற்குக் காரணமாயிருக்கின்றன. மஹாமாரி சம்பந்தப்பட்ட மட்டிலே மூன்றும் வகையைச் சேர்ந்தவை அவ்வளவு முக்கியமானவைகளல்ல.

எலிகள் நல்ல காற்றோட்டமிராமல் இருட்டாயுள்ள அறைகளிருக்கும் வீடுகளில் வசிக்க இஷ்டப்படுகின்றன. அவைகளுக்குத் தீனி விசேஷமாய்க் கிடைக்கும் இடங்களில், அதாவது, விசேஷமாய்க் கழிவு ஏற்படக்கூடியதாக தானியத்தை ஒழுங்கீனமாகச் சேர்த்துவைத்திருக்கும் இடங்களைப்போன்ற இடங்களிலே அவைகள் வசிக்க இஷ்டப்படுகின்றன ; மேலும், பூனைகளாலாவது நாய்களாலாவது எலிப்பொறி வைத்தோ எலிவிஷம் வைத்தோ பிடிக்க முயலும் மனிதர்களாலாவது அவைகளுக்குத் தொந்தரை உண்டாகாத இடத்திலே வசிக்க அவைகள் இஷ்டப்படுகின்றன. ஆகாரம் விசேஷமாகவும் மலிவாகவும் கிடைக்கும் பிரதேசங்களில் மனிதர்கள் ஒன்றுக்கூடி கிராமங்கள் ஏற்படுத்திக்கொள்வதைப்போல, மேலே சொன்ன சந்தர்ப்பங்கள் பொருந்தியிருக்கும் இடங்களிலே எலிகள் மிகவும் அதிகமாய்க்கூடி எலிகள்போய்த் தங்குவதற்கான பிரதேசங்களை ஏற்படுத்திக்கொள்ளும். ஆகவே, யாதொரு இடத்தை எலிகள் தங்குவதற்கு அசௌகரியமாயச் செய்துவிட்டால், அவைகள் அந்த

இடத்தைவிட்டுப் போய்விடும். வீடுகளில் கொஞ்சங்கூட அழுக்கில்லாமல் சுத்தமாக வைத்திருந்து; சூரிய வெளிச்சத்தையும் நல்ல காற்றையும் உள்ளேவிட்டு, எலிகள் போகமுடியாத இடங்களிலே தானியத்தைச் சேர்த்துவைத்து, பூனைகளை வளர்த்து எலிப்பொறியையும் வைத்திருக்கவேண்டும்; மேலும், வீட்டில் ஒழுங்காய்த் தளவரிசைசெய்து, எலிவளைகளைக் கண்டுபிடித்தவுடனே அவைகளை யெல்லாம் அடைத்துவிடவேண்டும்.

எலிகளைப் பொறிவைத்துப் பிடித்காவது அவைகளுக்கு விஷமிட்டாவது அவைகளைக் கொன்றுவிடலாம். எலிகளை உயிருடன் பிடிக்கும் பிண்டிமாதிரிப் பொறிதான் உத்தமமானது. எலிகள் அதிக தந்திரமும் சந்தேகமுமுள்ள பிராணிகள்; ஆகவே, அவைகளைப் பிடிப்பதற்காக வைக்கும் இரையை அடிக்கடி மாற்றிக்கொண்டுவரவேண்டும்; பொரித்த மீனையும், வெங்காயத்தையும், தேங்காயையும், இறைச்சியையும் உபயோகிக்கலாம். எலிகள் விழுந்திருக்கும் பொறியை நன்றாயக் கொதிக்கும் ஜலத்தில் தோயத்து அந்த எலிகளைக் கொல்லவேண்டும்; பிற்பாடு அவைகளைக் கொளுத்திவிடவேண்டும். எலிகளுக்கு விஷம வைப்பது மிகவும் ஜாக்கிரதையுடன் செய்யவேண்டிய காரியமாகும்; ஜனங்கள் வீடுகளை விட்டுப் போனபிறகு இந்தப்படிசெய்வது மெத்தவும் நல்லது. விஷத்தை அடைகளின்மேல் பூசவேண்டும்; பிற்பாடு இந்த அடைகளை ஒரு சதுர அங்குல அளவுள்ள துண்டுகளாக அறுக்கவேண்டும். ஒரு சிறு அறைக்குக் குறைந்தபட்சம் இருபது துண்டுகள் விழுக்காடு அநேக துண்டுகள் வேண்டியிருக்கின்றன. அவைகளை ஐந்தைந்து துண்டுகளாக சாயங்காலத்தில் போட்டு, அந்தப்படி ஒவ்வொரு அறையிலும் வைத்திருக்கும் துண்டுகள் இத்தனையென்றும், அவைகளில் மிகுதி நின்று மறுபடியும் எடுத்துக்கொண்டிருக்கும் துண்டுகள் இத்தனையென்றும் ஜாக்கிரதையாய்க் கவனிக்கவேண்டும்; எலிக்கு இரையாகவைத்திருந்து உபயோகிக்கப்படாமலிருக்கும் துண்டுகளை யெல்லாம் அடுத்தநாள் காலையில் எடுத்து அழித்துவிடவேண்டும்.

மற்ற மருந்துகளைக்காட்டிலும் பாஸ்பரஸ் என்னும் நிமாக்கினி சேர்த்துத் தயார்செய்திருக்கும் மருந்துகளை உபயோகிப்பதால் எலிகள் அதிகமாய்ச் செத்துப்போகின்றன; ஆனால், எலிகள் குறித்த யாதொரு மருந்தை சீக்கிரத்தில் தெரிந்துகொண்டு அதைத் தின்னாமல் தள்ளிவிடுமாதலால், எலியைக் கொல்வதற்கு வேண்டிய விஷவகைகளெல்லாவற்றையும் உபயோகித்துப் பார்க்கவேண்டும். விஷம் வைப்பதனால் எலிகள் மெத்தவும் சீக்கிரமாய நாசமடைகின்றன; ஆயினும், இதனால் உண்டாகும் பலனானது சிறிதுகாலத்துக்கு மாத்திரமே இருக்கிறது. எலிகளை இடைவிடாமல் பொறிவைத்துப் பிடிக்கும் வகையொன்றினால்தான் அவைகளை சாசுவதமாய் ஒழித்துவிடக்கூடும்.

யாதொரு கிராமத்தில் மஹாமாரி காண ஆரம்பிக்கும்போது, இது சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு உடனே சமாசாரம் தெரிவிக்கவேண்டும்; அடியிற்கண்ட ஏற்பாடுகளைச் செய்யவேண்டிய

தாயிருக்கும் :—(1) வீடுகளைவிட்டுப்போவது, (2) எலிகளைக் கொல்வது, (3) மஹாமாரி குத்திக்கொள்வது, (4) தேகத்தையும் வஸ்திரங்களையும் வீடுகளையும் சுத்தியாய் வைத்துக்கொள்ளும் விஷயத்தைக் கண்டிப்பாய்க் கவனிப்பது, (5) நோயாளிகளைப் பிரத்தியேகப்படுத்திவைப்பது. இந்தப் பெருவாரி வியாதியானது மனிதர்களுக்குக் கண்டு அவர்களை வருத்தும் காலமும் எலிகளுக்குக் கண்டு அவைகளை வருத்தும் காலமும் ஒரே மாதிரியாயிருக்கின்றன. ஒரு சிறு கிராமத்திலே இந்த வியாதி சுமார் இரண்டுமாதகாலம் நீடித்திருக்கும். யாதொரு வீட்டில் எலி செத்து விழும்போது, அந்த வீட்டிலுள்ளவர்களுக்கு சீக்கிரத்தில் அந்த நோய் காணுமென்னும் அபாயமிருக்கிறபடியால் அவர்கள் அதை உடனே காலி செய்யவேண்டும்.

ஒவ்வொருவரும் இரண்டுமாதகாலம் கிராமத்தைவிட்டு வெளியே போயிருந்தால், அவர்கள் மறுபடியும் க்ஷேமமாய்த்திரும் பிவரலாம்; ஆனால், இந்தப்படி செய்வது அநேகமாய் சாத்தியமல்ல. யாதொரு வீட்டிலுள்ள எலிகளும் தெள்ளுப்பூச்சிகளும் ஒழிவதற்கு எவ்வளவு காலம் வேண்டுமோ அவ்வளவு காலத்துக்கு அந்த வீடு காலிசெய்யப்பட்டால், அந்த வீட்டிலுள்ளவர்கள் பிற்பாடு க்ஷேமமாய்த் திரும்பிவரக்கூடும். யாதொரு வீடு காலியாயிருக்கும்போது, எலிகளை விஷம வைத்துக் கொன்றுவிடவேண்டும்; பிறகு (சூடாயிருக்கும ஜலத்தில் ஸோப்பைக் கரைத்துப் பிற்பாடு மெத்தவும் விலை சாசமாயிருக்கும் கெரொஸின் எண்ணெயில் கலந்து தயார் செய்யப்பட்ட) கெரொஸின் எமல்ஷன என்னும் மருந்தினால் தரையில் இருக்கும் தெள்ளுப்பூச்சிகளைக் கொல்லவேண்டும். வீட்டிலுள்ளவர்கள் திரும்பிவந்தால, எலிப்பொறிகளை அடிக்கடி உபயோகித்துவரவேண்டும்; பின்னும் எலி செத்துவிழுந்தால் மறுபடியும் வீட்டைக் காலிசெய்யவேண்டும்.

ஒருவகையான மருந்தை சருமத்துக்குள்ளே செல்லும்படி குத்தினால் இந்த நோய் காணும் சந்தர்ப்பங்கள் மெத்தவும் குறைவுபடுகின்றனவென்று கண்டறியப்பட்டிருக்கிறது; மேலும், இந்த நோய் கண்டாலுங்கூட நோயாளி வெகுசாய் சொஸ்தமடைந்துவிடுவான். மஹாமாரி குத்திக்கொளவது இந்த நோய் வரவொட்டாமல் தடுப்பதனபொருட்டேயலலாமல் நோய்கண்ட பிறகு சிகிச்சைசெய்துகொள்வதன்பொருட்டல்ல வென்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டும; ஆகவே, மஹாமாரி தொத்திக்கொள்ளும் அபாயமிருக்கிறபட்சத்திலே எவ்வளவு சீக்கிரத்தில் சாத்தியப்படுமோ அவ்வளவு சீக்கிரத்தில் மஹாமாரி குத்திக்கொள்ளவேண்டும். மஹாமாரி குத்திக்கொள்கிறவர்களுக்கு குருடு, வீரியமின்மை முதலியவை உண்டாவதாகச் சொல்லப்படுகிறது; இது முற்றிலும் பொய்; இதனால் சிறிதும் கெடுதியுண்டாவதில்லை.

யாதொரு கிராமமெங்கும் மஹாமாரி பரவிவிட்டால், அந்த கிராமத்திலுள்ளவர்கள் பிழைப்பதற்குரிய ஓரேவழி என்னவென்றால் அவர்கள் அந்தக் கிராமத்தைவிட்டுப்போய் மஹாமாரி குத்திக்கொள்வதுதான்; அந்த சந்தர்ப்பத்தில் சகலமான இதர ஏற்பாடுகளினாலும் சிறிதும் பிரயோசனம் உண்டாகாது.

**மஹாமாரி கண்டவர்களுக்கு சிகிச்சை செய்வதைக் குறித்து:**—மஹாமாரி சிகிச்சை செய்வதற்காக ஒரு ஆஸ்பத்திரியிருந்து, நோயாளி அவ்விடத்திற்குக் கொண்டுபோகப்படுவதற்கேற்ற நிலைமையிலிருந்தால், அவன் ஆஸ்பத்திரிக்குப் போகவேண்டும்; அப்படிப்பட்ட நிலைமையிராவிட்டால், அவனைத் தாழ்வாரத்தில் கட்டிலின்மேல் படுக்கவைக்கவேண்டும். மஹாமாரி கண்டவர்களை ஒருபோதும் வீட்டிற்குள் வைத்திருக்கக்கூடாது. நோயாளிக்குப் பலம் குறையாதிருக்குமபொருட்டு பாலும் கஞ்சியும் ஸூப்பும் கொடுத்துவரவேண்டும். அவன் மெத்தவும் பலஹீனனாய்ப் போய்விட்டால், அவனுக்கு உற்சாக மருந்துகளைக் கொடுக்கவேண்டும். நோயாளி திடீரென்று இறந்துபோய் விழுவதற்கான அபாயம் அதிகமாயிருக்கிறபடியால், அவனை ஒருபோதும் நிமிர்ந்து உட்காரும்படி விடக்கூடாது; மஹாமாரியை சொஸ்தப்படுத்துவதற்காக சிகிச்சை ஏதுவுமில்லையென்பதை ஞாபகத்தில வைக்கவேண்டும; மருந்துச் சரக்குகளினால் எவவித பிரயோசனமுமில்லை.

### 3. விஷஜெந்துக்கள் கடிப்பதும கொட்டுவதும்.

#### பாம்புகடி

கையிலாவது புஜத்திலாவது பாதத்திலாவது காலிலாவது யாதொரு விஷப்பாம்பு கடித்தால், கடித்த இடத்துக்கு நேர் மேலான இடத்திலே கனத்த கயிற்றையாவது துணியையாவது கட்டி, அதற்குமேல் அப்படியே இன்னும ஒரு கட்டு கட்டவேண்டும்; கூடுமானால் கடித்த இடத்திலே உன் வாயைவைத்து நன்றாக உறிஞ்சு உமிழ்ந்துவிட்டு, பிறகு உன் வாயை நன்றாய்க் கொப்பளித்து அலம்பிவிடவேண்டும்.

கூர்மையான ஒரு ஆயுதம் உனக்குக் கிடைக்கக்கூடுமானால், கடித்த இடத்திலுள்ள தோலை அறுத்துவிட்டு இரத்தத்தைத் தாராளமாக ஒழுகும்படி விடவேண்டும்; காய்ந்த இரும்பாவது பழுக்கக் காய்ந்த கரியாவது சமீபத்திலிருந்தால் அதைக்கொண்டு கடித்த வாயையும அதைச்சுற்றிலுமுளள தோலையும் நன்றாகத் தீய்த்துவிடவேணடும.

தலையிலாவது கழுத்திலாவது உடலிலாவது கடித்தால், கடித்த வாயை உறிந்து, இரத்தம் தாராளமாக ஒழுகுமபடியாக அந்த வாயை அறுத்து, பழுக்கக்காய்ந்த இரும்பையாவது பழுக்கக்காய்ந்த கரியையாவது அநத வாயில் வைக்கவேண்டும்.

அறுககையிலே, பாம்பின் பற்கள் உள்ளேசென்றிருக்கும் ஆழம் வரையிலுளள பாகத்தை எடுத்துவிட முயற்சிசெய்யவேண்டும. விஷப்பாம்பின் விஷப்பற்கள் இரண்டில ஒன்று ஏற்கனவே உடைந்திருந்தாலொழிய, அல்லது தோலுக்குள செல்லத்தவறியிருந்தாலொழிய, ஒனறுக்கொனறு நெருக்கமாகவும் சமதூரத்திலும இரண்டு துளைகள் காணப்படும.

பலஹீனம் அதிகமாயிருந்தால், சுடுகையாயுள்ள காப்பித்தண்ணீரையாவது சுடுகையாயுள்ள பாலையாவது கொஞ்சம் நல்ல அரக்குச் சாராயத்தையாவது சாபபிடவேண்டும்.

இருபது நிமிஷமானபிறகு கட்டுபோட்டிருக்கிற துணியையாவது கயிற்றையாவது தளர்த்திவிடவேண்டும்.

## வெறிகொண்ட நாய் முதலிய பிராணிகளின் கடியினால் உண்டாகும் வியாதி.

'வெறி' பிடித்ததென்று நினைக்கப்படும் யாதொரு நாய் கடித்தால், பாம்புகடிக்குச் சிகிச்சைசெய்யப்படும் மாதிரியாகவே அதற்கும் சிகிச்சைசெய்யவேண்டும்; அந்த காயத்தை உறிந்துவிடுவதால் யாதொரு அபாயமும் இல்லை; ஆனால், அப்படி உறிகிறவருடைய வாயில் தேயவுகளாவது வெட்டுகளாவது இருக்கக்கூடாது; மேலும், அந்த இரத்தத்தை உடனே உமிழ்ந்துவிட்டு, வாயை நன்றாய்க் கொப்பளித்து அலம்பிவிடவேண்டும்.

வெறிபிடித்திருக்கும் நாயாவது நரியாவது இதர காய முதலிய பிராணிகளை கடிக்கக்கூடுமாகையால், அதை எவ்வளவு சீக்கிரம் கொன்றுவிடக்கூடுமோ அவ்வளவு சீக்கிரத்தில் கொன்றுவிடவேண்டும். இது விஷயத்தில் ஏதேனும் சந்தேகமிருந்து, அதைப் பிடிக்கும்போது அது கடிக்குமென்ற பயமில்லாமல் அதை பத்திரப்படுத்திவைக்கக்கூடியதாயிருக்கிறபட்சத்திலே, இந்த வியாதியின் குறிகள் பிரத்தியட்சமாய்த் தோற்றுகிறவரையில் அதை வெளியே விடாமல் கட்டிவைத்திருக்கவேண்டும்; ஷை குறிகள் பிரத்தியட்சமாய்த் தோற்றும்போது அதைக் கொன்றுவிடவேண்டும்.

கடித்தபிறகு சிறிதுகாலம்வரையில் இந்த வியாதியானது கடிக்கப்பட்ட மனிதனிடத்திலாவது பிராணியினிடத்திலாவது விருத்தியடையாமல் இருக்கிறது. கடித்த காலத்திற்கும் குறிகள் பிரத்தியட்சமாய்த் தோற்றுவதற்கும் இடையிலுள்ள காலமானது "வியாதியின் அபிவிருத்திகால"மென்று சொல்லப்படும். இந்த அபிவிருத்திகாலமானது சாதாரணமாய் ஆறுவாரத்துக்குக் குறையாமலும் எட்டுவாரத்துக்கு அதிகப்படாமலும் இருக்கிறது; ஆனால், சில அபூர்வமான சந்தாப்பங்களிலே ஷை காலமானது - இரண்டு வாரமாகக் குறைவாகவும், ஒரு வருஷம் அல்லது அதற்கு மேற்பட்ட காலமாக நீடித்தும் இருப்பதுண்டு. மேலும், வெறிகொண்ட பிராணி நகங்களினால் கீறுவதனாலும் அல்லது அதனுடைய உமிழ்நீர் சமீப காலத்தில் உண்டாயிருக்கும் வெட்டு அல்லது தேய்வுடன் சம்பந்தப்படுவதனாலும் இந்த வியாதி தொத்திக்கொள்ளலாம். வெறி நோய் கண்டிருப்பதாகச் சந்தேகிக்கப்படும் யாதொரு பிராணி ஒருவரைக் கடித்தால், அடியிற்கண்ட ஏற்பாடுகளை அனுசரிக்க வேண்டும்:—

(1) பாம்புகடிவிஷயத்தில் செய்வதைப்போலவே, கடித்த இடத்துக்குமேலே கடிக்கப்பட்ட அவயவத்தில் உடனே இறுக ஒரு கட்டுகட்டி, ஒருமணிநேரம் வைத்திருக்கவேண்டும்.

(2) பழுக்கக்காய்ச்சின இரும்பைக் கொண்டாவது, சுத்தமான நைட்ரிக் ஆஸிட் அல்லது சுத்தமான கார்பாலிக் ஆஸிடைக் கொண்டாவது கூடிய சீக்கிரத்தில் இரணங்களை நன்றாய் எரித்துப் புண்ணாக்கிவிடவேண்டும். ஸில்வர் நைட்ரேட் அல்லது பொடாஸியம் பெர்மாங்கனேட்டினால் எவ்வித பிரயோசனமும் உண்டாகமாட்டாது. சிற்சில சந்தர்ப்பங்களில் பிற்பாடு அந்த இரணத்தை அறுப்பது சாத்தியமாயிருக்கலாம்.

(3) வியாதிஸ்தரைச் சிறிதும் தாமசமில்லாமல் சிகிச்சைக்காக கூனூருக்கு அனுப்பவேண்டும். கூனூரில் வெறிகொண்ட நாய் முதலிய பிராணிகளின் கடிக்குச் சிகிச்சைசெய்வதற்கான பாஸ்சர் இன்ஸ்டிட்யூட் என்னும் வைத்தியசாலை ஒன்று இருக்கிறது; அங்கே, கடிக்கப்பட்டிருக்கும் நபர்களுக்கு கவர்ன்மென்டாருடைய உத்தரவின்படி இலவசமாய் வைத்தியசிகிச்சை செய்யப்படுகிறது; ஆனால், ஷை வைத்தியசாலையின் பராமரிப்புக்காகத் திரவியசகாயம் செய்யக்கூடிய நிலைமையிலிருக்கும் வியாதிஸ்தர்கள் சிறிதுமட்டில் அப்படி திரவியசகாயம் செய்வார்களென்று எதிர்பார்க்கப்படுகிறது. வியாதிஸ்தர்கள் சாப்பிடுவதற்காக எவ்விதமருந்தும் கொடுக்கப்படுவதில்லை; ஆனால், முளையைவிட அதிக கனமாயிராத ஒரு ஆயுதத்தைக்கொண்டு சில வஸ்துக்கள் தினந்தோறும் ஒரு தரம் குத்தி சர்மத்துக்குள் செலுத்தப்படுகின்றன. வியாதியின் உக்கிரத்துக்குத் தக்கபடி இரண்டுவாரமுதல் மூன்றுவாரம்வரையில் சிகிச்சை செய்யப்படுகிறது.

கடிக்கப்பட்ட நபர் சீக்கிரத்தில கூனூருக்குப் போய்ச்சேருகிற பட்சத்திலே, இந்த முறையை அனுசரிப்பதனலே அநேகமாய் மரணம் நேரிடாமல தடுக்கப்படுமென்பது நிச்சயம்.

யாதொரு கவர்ன்மென்ட் உத்தியோகஸ்தருடைய காயமான சம்பளமானது மாதமொன்றுக்கு 100 ரூபாய்க்கு மேற்படாமலிருந்து, அவர் தம்முடைய சொந்தச் செலவில் கூனூருக்குப் போவதற்குவேண்டிய பணமில்லாதவராயிருந்தால், அவருக்கு கூனூருக்குப் போவதற்கும் அங்கிருந்து திரும்பிவருவதற்கும் வாஸ்தவத்தில் பிடிக்கும் பிரயாணசெலவும், முன்பணமாக ஒருமாதச்சம்பளமும், ஒருமாதத்துக்குக் காஷுவல் லீவ் என்னும் ரஜாவும் கொடுக்கப்படும். மாதமொன்றுக்கு 25 ரூபாய்க்கு மேற்படாமல சம்பளம் வாங்கும் கவர்ன்மென்ட உத்தியோகஸ்தர்களுக்கு, மூன்றாவது வகுப்பு உத்தியோகஸ்தர்களின் விஷயத்திலே பிரதி $12\frac{1}{2}$ ரூபாய்க்கும் அல்லது அதற்குக் குறைந்த தொகைக்கும் நாளொன்றுக்கு இரண்டணா வீதப்படியும், நான்காவது வகுப்பு உத்தியோகஸ்தர்களின் விஷயத்திலே நாளொன்றுக்கு இரண்டணா வீதப்படியும் போஜனவாத்தனையும் கொடுக்கப்படும். ஆகவே, இந்த விதிப்படி கவர்ன்மென்ட் சேவகத்திலிருக்கும் சகல கிராம உத்தியோகஸ்தர்களுக்கும் கீழ்த்தர ஊழியக்காரர்களுக்கும் மேலே சொன்ன சலுக்கரணை செய்து கொடுக்கப்படும். ப்ரிடிஷ் இந்தியாவில் நிலையாக வசித்துக்கொண்டிருக்கிறவராய் ஸர்க்கார் ஊழியத்திலிராத யாதொரு ஏழை வெறிகொண்ட பிராணியினல் கடிக்கப்பட்டிருந்து, சிகிச்சைக்காக கூனூரிலுள்ள பாஸ்சர் இன்ஸ்டிட்யூட் என்னும் வைத்தியசாலைக்குத் தம் சொந்தச் செலவில் போகச் சக்தியற்றவராயிருக்கிறரென்று இது விஷயமாய் சகாயம் செய்துகொடுக்க அதிகாரம்பெற்றிருக்கிற யாதொரு உத்தியோகஸ்தர் அபிப்பிராயப்படும்பட்சத்தில், கூனூருக்குப் போகவும் அங்கிருந்து திரும்பிவரவும் அவருக்கு வாஸ்தவத்தில் பிடிக்கும் பிரயாணசெலவுகள் அவருக்குக் கொடுக்கப்படலாம்; அதாவது—(a) ரெயில்வே மார்க்கமாய் மூன்றும் வகுப்பில் போகவர ஒருவருக்காகச் செலுத்தவேண்டிய கட்டணம; (b) ரஸ்தா

அல்லது நதி மார்க்கமாய்ச் செய்யப்படும் பிரயாணங்களுக்கு, வாஸ்தலத்தில் போகவரப் பிடிக்கும் செலவு ; (c) அடியிற்கண்ட அன்றுட வீதங்களின்படி போஜனவர்த்தனை :—ஐரோப்பியர்களுக்கும யுரேஷியர்களுக்கும், பிரயாணம் செய்கையில் ஒரு ரூபாயும், சிகிச்சையிலிருக்கும்போது இரண்டு ரூபாய் எட்டணுவும்; சுதேசிகளுக்கு, பிரயாணம் செய்கையில் நாலணுவும், சிகிச்சையிலிருக்கும் போது ஆறணுவும்.

ஆனல், யாதொரு நபர் வருஷம் ஒன்றுக்கு 50 ரூபாய்க்கு மேற்பட்டு கிஸ்தி செலுத்தினலும, நிலமல்லாத வேறே யாதொரு வருவாய் மூலமாக அவருக்குக் கிடைக்கும் வரும்படியானது மாதமொன்றுக்கு 15 ரூபாய்க்கு மேற்பட்டிருந்தாலும், அந்த நபரையாவது அந்த நபரின் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவரையாவது இந்த விதியின் காரியத்துக்காக ஏழை என்னும் வகுப்பில் சாதாரணமாய்ச் சேர்க்கக்கூடாது ; மேலும, யாராவது சிகிசசைக்காகப் போகும் சமயத்தில் தம்முடைய செலவுகளைச் செலுத்துவதற்கு வேண்டிய பணமுள்ளவராயிருந்தாலும், அந்தப்படி செலுத்துவதற்கு வேண்டிய பணத்தை பந்துக்களிடமிருந்து அடையக்கூடியவராயிருந்தாலும், அப்படிப்பட்ட யாதொரு நபரையும் ஏழை என்னும வகுப்பில் சேர்க்கக்கூடாது.

இந்த ப்ரெஸிடென்ஸியிலே இந்த சகாயத்தைச் செய்துகொடுக்க அடியிற்கண்ட உத்தியோகஸ்தர்களுக்கு அதிகாரம கொடுக்கப்பட்டிருக்கிறது :—

(1) கம்மிஷன் பெற்ற மெடிகல் ஆபிஸர்கள் (வைத்திய உத்தியோகஸ்தர்கள்).
(2) ஸிவில் ஸர்ஜன்கள்.
(3) மிலிடரி அஸிஸ்டன்ட் ஸர்ஜன்கள்.
(4) ஆஸ்பத்திரிகளின் சுயேச்சையான விசாரணையுடையவர்களாயிருக்கும் ஸிவில் அபாதிகிரிகளும் ஸிவில் அஸிஸ்டனட் ஸர்ஜன்களும்.

| | |
|---|---|
| (5) கலெக்டர்கள்.<br>(6) டிவிஷனல் ஆபிஸர்கள்.<br>(7) தாசில்தாரர்கள்.<br>(8) சுயேச்சையான விசாரணையுடையவர்களாயிருக்கும் டெப்யுடி தாசில்தாரர்கள்.<br>(9) பொலீஸ இலாகாவைச் சேர்ந்தவர்களாய் பொலீஸ் டெப்யுடி ஸுபரின்டெண்டென்டின் அந்தஸ்தும் அதற்கு மேற்பட்ட அந்தஸ்துமுள்ள ஆபிஸர்கள்.<br>(10) ஸப்-ரெஜிஸ்ட்ரார்கள்.<br>(11) ஸர்வே ஸப்-அஸிஸ்டன்டுகள்.<br>(12) யாதொரு மியுனிஸிபல் சேர்மன் (அக்கிராசனதிபதி). | பிரஸ்தாப இடத்தில் வைத்திய உத்தியோகஸ்தர் எவரும் இராதபோது மாத்திரம் இந்த உத்தியோகஸ்தர்கள் தங்களுடைய அதிகாரங்களைச் செலுத்துவார்கள். |

கடித்தபிறகு எவ்வளவு சீக்கிரத்தில் சிகிச்சை செய்யப்படுகிறதோ அவ்வளவு நிச்சயமாய் வியாதிஸ்தன் சொஸ்தமடைகிறானென்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டும்; ஆகவே, அவசியமான ஸெர்டிபிகேட் பெற உடனே முயற்சிசெய்து பிரயாணம் செய்ய ஆரம்பிக்கும் விஷயத்தில் எவ்வித தாமதமும் உண்டாவதற்கு இடம் கொடுக்ககூடாது.

கூனூர்-நீலகிரிகுன்றுகளில் சமுத்திரமட்டத்துக்குமேல் சுமார் ஆறாயிரம் அடி உயரத்தில இருக்கிறது; மேட்டுப்பாளையத்திலிருந்து நீலகிரி ரெயில்வேமார்க்கமாய் சுமார் நாலுமணிநேரத்தில் கூனூருக்குப் போய்ச்சேரலாம். மேட்டுப்பாளையமென்பது தென் இந்தியா ரெயில்வேயின் ப்ராட் கேஜ் (broad gauge) பிரிவில் இருக்கிறது; அதற்கு தென் இந்தியாவில் சகல பாகங்களிலிருந்தும் சுலபமாய்ப் போய்சசேரலாம். வைத்தியசாலையானது கூனூர் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து சுமார் ஒருமைல் தூரத்திலிருக்கிறது. சமபூமியிலிருந்து வருபவர்களுக்கு சுமாரான உஷ்ணம் தரத்தக்க உடுப்புகளும, படுக்கையும வேணடியிருக்கின்றன. ஏழைகளான சுதேச வியாதிஸ்தர்களுக்கு கூடியமட்டில் கமபளிகள கொடுக்கப்படும். பல ஹோட்டெலகளும் (சத்திரங்களும) போர்டிங் ஹௌஸ் என்னும் போஜனசாலைகளும் இருக்கின்றன; இவை வருஷம் முழுவதும திறந்திருக்கும். ஐரோப்பியர்களுக்கும யுரேஷியாகளுக்கும் வைத்தியசாலையிலேயே தங்கியிருகக இடங்கொடுக்கப்படுகிறதில்லை; அவர்கள் சொந்தத்திலேயே சாபபாட்டுககாகவும் தங்கியிருப்பதற்கான இடத்துக்காகவும ஏற்பாடுகள செயதுகொள்ளவேணடும; இந்த விஷயத்தில எவவித கஷ்டமுமில்லை. பொருளாளிகளாயிருககும் சுதேசிகளுக்கு சௌகரியமான இடங்களிலே வீடுகள் கிடைக்கும; மற்றவர்கள் பட்டணத்தில ஜாகைக்காகவும, சாப்பாட்டுக்காகவும் ஏற்பாடு செய்துகொளளலாம. வைத்தியசாலையின் வளவில வாடகையில்லாமல் விடபபடும் பகுதிகளிலே ஏழைகளாயுள்ள வியாதிஸ்தர்களுககு வசதியிடம கொடுக்கப்படலாம; மேலும், அவாகளுக்கு கம்பளிகளும் சமையல் செய்வதற்காகச் சட்டிகளும் கொடுக்கப்படும்.

## தேள் கொட்டு.

தேள் கொட்டும்போது தோலில ஒரு சிறிய துவாரத்தை உண்டுபண்ணுகிறது.

கொட்டின இடததுக்குமேல கனத்த கயிற்றையாவது துணியையாவது கட்டி, இரத்தம ஒழுகும்படியாக கொட்டின இடத்தில் உள்ள தோலை அறுத்துவிடவேணடும்; பிறகு, அதிக சமீபத்திலுள்ள ஆஸ்பத்திரிக்குப்போய் என்ன சிகிச்சை செய்யலாமென்று கேட்கவேண்டும்.

பத்து நிமிஷமானவுடனே கட்டிவைத்த துணியையோ கயிற்றையோ அவிழ்த்துவிடவேண்டும்.

பாம்புகடியினால் நேரிடுவதைப்போல தேள் கொட்டுவதனால் மரணம நேரிடுவது அபூர்வம்.

### 4. நஞ்சிடுவதும் தற்செயலாய் நேரிடும் ஆபத்துகளும்.

அபினியைக்கொண்டாவது ஊமத்தையைகொண்டாவது நஞ்சிடப்பட்ட யாதொரு நபருக்கு இரண்டு ரூபாயின்மேல் பரப்பக்கூடிய அளவான கடுகுப்பொடியை இளஞ்சூடான தண்ணீரில் கலக்கிக் கொடுக்கவேண்டும். பிறகு வாந்தியுண்டாக்கும்பொருட்டு விரலினாலாவது இறகினாலாவது தொண்டையைக் கிளுகிளுக்கும்படி செய்யவேண்டும். வாந்தியெடுத்தபிறகு, சூடாகவும் உறைப்பாகவுமுள்ள ஒரு கோப்பை காப்பித்தண்ணீரைக் கொடுக்கவேண்டும்.

அந்த நபரை உலாவிக்கொண்டிருக்கும்படி செய்யவேண்டும்; அவனைத் தூங்கவொட்டக்கூடாது. இதனால் பிரயோசனப்படாவிட்டால், இனானும பின்னால சொல்லியிருக்கிறபடி செயற்கை சுவாஸமுறையை அனுசரித்துப் பார்க்கவேண்டும்.

யாதொரு நபர் ஸ்மரணை தப்பியும், சுவாஸம் அரக்குச்சாராய நாற்றமுடையதாகவாவது வேறே யாதொரு சாராயநாற்றமுடையதாகவாவது இருப்பதாகவும் காணப்பட்டால், தொண்டையைக் கிளுகிளுத்தாகிலும் கடுகையும் ஜலத்தையும கலந்து கொடுத்தாகிலும வாந்தியுண்டாக்கவேண்டும.

அதன்பிறகு, கொஞ்சம் சூடான காப்பித்தண்ணீரையாவது பாலையாவது ஸூப்பையாவது கொடுக்கவேண்டும்.

#### ஜலத்தில் முழுகிப்போவது.

தற்செயலாய் நேரிடும் ஆபத்துகளைத் தவிர்க்கும்பொருட்டு ஒவ்வொரு கிணற்றிலும் ஒரு சங்கிலி தொங்கவிட்டிருக்கவேண்டும்.

ஜலத்தில் முழுகிக்கொண்டிருக்கிற ஒருவனைக் காப்பாற்ற பிரயத்தனப்படும்பொழுது அவனுடைய தலைமயிரைப்பிடித்தும் அவனைக் கூடியமட்டில் மல்லாக்காக மிதக்கும்படிச் செய்தும் கரையில் இழுத்துவிடவேண்டும். ஜலத்தில் முழுகிக்கொண்டிருக்கிறவன் எது அகப்பட்டாலும் அதைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொள்வானாகையால், கூடியமட்டில் அவன் கைக்கு அகப்படாமல் தூரத்திலேயே இருக்கவேண்டும்.

#### ஜலத்தில் முழுகிப்போய் செத்தாற்போலிருக்கிறவர்களுக்குச் சிகிச்சை செய்வது.

ஜலத்தில் முழுகிப்போய்ச் செத்தாற்போலிருக்கிறவர்களைப் பெரும்பான்மையாக இடைவிடா முயற்சியால பிழைப்பிக்கலாம்.

பின்சொல்லியிருக்கிறபடி செய்யவேண்டும் :—

வாயிலிருந்து ஜலம் வெளியே வரும்பொருட்டு சிறிதுநேரம் தலையைத் தொங்கவிடவேண்டும். பின்பு, உடனே அவனை மல்லாக்காகப் படுக்கவைத்து, அவனுடைய தோள்களின் கீழே ஒரு சிறு தலையணையையாவது வைக்கோல் சுருணையையாவது துணிமூட்

டையையாவது போட்டு அவனுடைய தலையைப் பின்பக்கம் தொங்கவிடவேண்டும். பிறகு, முழங்கையைப் பிடித்துக்கொண்டு அவனுடைய புஜங்களை அவனுடைய பக்கவாட்டத்தில் வைத்து அழுத்தி, அதன்பின்பு அவனுடைய புஜங்களை அவனுடைய தலையின்மேல் உயர்த்திய பிறகு இறக்கி, அவைகளை மறுபடியும் அவனுடைய பக்கவாட்டத்திலே அழுத்தவேண்டும். இம்மாதிரி ஒரு நிமிஷத்துக்கு வறக்குறைய இருபது தரம் செய்யவேண்டும்: அதற்குமேல அதிகமாய் அடிக்கடி செய்யக்கூடாது.

தேகத்தைச் சூடாய வைத்திருக்கவேண்டும்; காலகளை இருதய ஸ்தானத்தின பக்கமாய் மேலபாரிசமாக தேயத்துககொண்டிருக்கச செயயவேண்டும்.

கமபளிகளாலும உலரமான புடடிகள கிடைககக்கூடுமானல் அவைகளாலும உடலைச் சூடாக வைததிருககவேணடும; மேலும், எதையாவது விழுஙகச சகதி அவனுககு உணடாகிறபோது, கொஞ்சம சூடான காப்பித்தணணீரையாவது இளஞ்சூடான பாலையாவது கொடுககவேணடும.

இரத்தம் வடிதல்.

கையிலாகிலும் காலிலாகிலுமுள்ள காயத்திலிருந்தும் வடிகிற இரத்தத்தை நிறுத்தவேணடுமானல, அநத காயத்துக்குமேல் ஒரு துணியை இழுத்துக் கட்டவேண்டும; அபபடிச் செய்தும இரத்தம் ஒழுகிக்கொண்டிருககுமானல், துணிக்கும தோலுக்கும் இடையிலே ஒரு கொமபையிட்டு அதனல துணியை முறுகி இறுக்கவேணடும.

சில சமயங்களில, வெறும விரலால அழுத்தினலும இரத்தம் வடிகிறது நின்றுவிடும; அபபடிக்கிலலாவிட்டால, துணியினலாவது கமபளத்தினலாவது சணற நிமபினலாவது செயயப்பட்ட திரணையை காயத்தின்மேல் வைத்து அழுத்தவேண்டும்.

தற்செயலாய்த் தீப்பற்றிக்கோள்வது.

ஒருவனுடைய உடுப்பில் தீப்பற்றிக்கொண்டால், அவனுடைய உடலை ஒரு கமபளியினலாவது எவவிதமான துணியினலாவது சுற்றி, அவனை நெருப்பின் சுவாலை தணிகிறவரையில தரையிலே உருட்டவேண்டும்.

உடுப்பைக் கொஞ்சநேரம்வரையில் கழற்றககூடாது. தீய்க்கப்பட்ட பாகங்களிலெலலாம் எவவகையான தித்திப்பெண்ணெயையாவது நெய்யையாவது பூசி, அந்த இடமுழுவதும் தளர்த்தியாகப் பஞ்சை மடித்துமடித்துப் போடவேண்டும்.

# 1-ம் பாகம்.

---

## I-ம் அனுபந்தம்.

*சென்னபட்டணம் பரம்பரையான கிராம உத்தியோகங்களைப்பற்றிய 1895-ம் வருஷத்து 3-வது ஆக்டின் 20-வது பிரிவின்படிக்கான விதிகள்.*

சென்னபட்டணம் பரம்பரையான கிராம உத்தியோகங்களைப் பற்றிய 1895-ம் வருஷத்து 3-வது ஆக்டின் 20-வது பிரிவினால் கொடுக்கப்பட்ட அதிகாரங்களைக்கொண்டு, கவர்ன்மெண்டாருடைய அங்கீகாரத்தின்மேல், ரெவினியு போர்டார் - கனிகூர்ந்து அடியில் வருகிற விதிகளை ஏற்படுத்தி, பின்வரும் நமூனாக்களை நிர்ணயிக்கிறார்கள் :—

(i)-வது பகுதியின்படி—கிராமங்களைப் பிரிப்பதும், தொகுப்பதும், ஒன்றாய்ச்சேர்ப்பதும்.

1. கிராம நத்தங்களுக்கு மத்தியிலுள்ள தூரம் ஒன்றரை மைலுக்கு அதிகப்படாமலிருக்கும்பக்ஷத்தில், இரண்டு அல்லது இரண்டுக்குமேற்பட்ட எவைகளையும் கிராமங்களையாவது அவைகளின் பாகங்களையாவது ஒரு தனியான புது கிராமமாய் ஏற்படும்படி தொகுக்கலாம் அல்லது ஒன்றாய்ச் சேர்க்கலாம்.

ஆனால், புதிய தலைமையான கிராமத்திலிருந்து ஒன்றரை மைலுக்கு அதிகமான தூரத்தில் முக்கியமான சில குக்கிராமங்கள் இருக்குமாகில், அவ்வாறு தொகுப்பதாவது ஒன்றாய்ச்சேர்ப்பதாவது கூடாது.

2. தூர அளவு அதிகப்பட்டபோதிலும், குடிவாசமில்லாத அல்லது அற்பமான கிராமங்களையும், எல்லைகளை நன்றாகப் பிரித்தறியக்கூடாத விதமாக ஒன்றோடொன்று கலந்துள்ள நிலங்களிருக்கிற கிராமங்களையும் ஒன்றாய்த் தொகுக்கலாம்.

3. ஒவ்வொரு புதிய கிராமத்துக்கும் ஒரு கிராமப் பெரியதனக்காரர் அல்லது மணியக்காரரும், அதமம் ஒரு தலையாரி அல்லது வெட்டியும் இருக்கவேண்டும் : ஆனால், சிறிய கிராமங்களிலே முக்கியமான யாதொரு கிராமத்தில் அவசியமாயிருக்கும்பக்ஷத்திலே, அப்படிப்பட்ட சிறு கிராமத்தில் வசித்துக்கொண்டிருக்கவும் காவல் காக்கவும் பிரத்தியேகமாய் ஒரு தலையாரியை நியமிக்கலாம்.

4. ஒன்றாய்ச் சேர்க்கப்பட்டிருந்தாலும் இல்லாவிட்டாலும், பல கிராமங்களைத் தொகுத்துக் கர்ணங்களின் விசாரணையின்கீழுள்ளவைகளாக ஏற்படுத்தலாம்.

5. பரிபாலன அனுகூலத்திற்காக யுக்தமாய்த் தோற்றும்போதெல்லாம், யாதொரு கிராமத்தை இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட கிராமங்களாகப் பிரிக்கலாம்.

6. கிராமங்களைத் தொகுப்பதையோ, அல்லது ஒன்றாய்ச் சேர்ப்பதையோ அல்லது பிரிப்பதையோ பற்றிய பிரேரபணைகளை அந்தந்த டிஸ்ட்ரிக்ட் கெஜெட்டில் கலெக்டரானவர் முதலில்

பிரசித்தஞ்செய்யவேண்டும்; அப்படி பிரசித்தஞ்செய்யும்போது, அந்த பிரேரேபணைகளைக்குறித்து எவையேனும் ஆக்ஷேபணைகளிரு ந்தால் அதுவிஷயத்தில் சிரத்தையுள்ளவர்கள் விளம்பரம் பிரசுரஞ் செய்த தேதிமுதல் ஒருமாதத்திற்குக் குறையாத காலத்திற்குள்ளா கத் தங்கள் ஆக்ஷேபணைகளை எழுதித் தெரிவிக்கவேண்டுமென்று ஒரு விளம்பரமும் பிரசுரஞ்செய்யவேண்டும். அவ்விளம்பரத்தின் ஒரு பிரதியை, அதனுலே பாதிக்கப்படும்போலிருக்கிற கிராமத்தி லாவது கிராமங்களிலாவது பகிரங்கமான யாதொரு இடத்தில் ஒட்டிவைக்கவும் வேண்டும். மேலேகண்ட காலஅளவு கழிந்த பிறகு, கலெக்டரானவர்-தமது பிரேரேபணைகளையும், எவையேனும் ஆக்ஷேபணைகள் வரப்பெற்றிருந்தால் அவற்றின் சுருக்கத்தையும், அவைகளின்மேல் அவருடைய அபிப்பிராயங்களையும் ரெவினியு போர்டாருக்குத் தெரிவிக்கவேண்டும். போர்டார் அப்படிப்பட்ட ஆக்ஷேபணைகளைக்குறித்து ஆலோசனைபண்ணி அந்த பிரேரேபணை களின்மேல் தங்களுக்கு யுக்தமாகத் தோற்றுகிற உத்தரவைப் பிறப் பிக்கவேண்டும்; அதன்மேல், அந்த உத்தரவு முடிவானதாகும். அந்த உத்தரவின் ஒரு பிரதியை அதற்குச் சம்பந்தப்பட்ட டிஸ்ட் ரிக்ட் கெஜெட்டில் பிரசுரஞ்செய்யவேண்டும்.

(ii)-வது பகுதியின்படி—6-வது, 7-வது, 8-வது பிரிவுகளின்படி விசாரணைகளை நடத்துவதும், 23-வது பிரிவின்படி அப்பீல்விசாரணைகளை நடத்துவதும்.

(a) 6-வது, 7-வது, 8-வது பிரிவுகளின்படி விசாரணைகளை நடத்துவது.

7. **6-வது பிரிவு.**—6-வது பிரிவைச் சேர்ந்த (1) குறிப்பிட்ட உட் பிரிவின்படி ஏற்படுத்தப்பட்ட நூதன உத்தியோகங்களுக்காவது 6-வது பிரிவைச் சேர்ந்த (2) குறிப்பிட்ட உட்பிரிவின்படி முன்போ லவே வைத்துக்கொள்ளப்பட்ட உத்தியோகங்களுக்காவது நபர்களை நியமிக்கையிலே, கலெக்டரானவர் - 10-வது பிரிவைச் சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவிற்கண்ட நிபந்தனைகளை அனுசரித்து நடக்க வேண்டும்.

8. **7-வது, 8-வது பிரிவுகள்.**—யாதொரு கிராம உத்தியோகஸ்தர் மேலாவது ஊழியக்காரன்மேலாவது செய்யப்பட்ட பிராதுகளையும், அவைகளுக்கு எதிர்வாதமாக அவனுலே எடுத்துக்காட்டப்பட்ட சமா தானங்களையும், சாட்சிகள் சொல்லும் சங்கதிகளையும் சாமானிய மான விஷயங்களில் தவிர மற்றப்படி, எழுதிவைக்கவேண்டும். குற்றஞ்சாட்டப்பட்டவன் எதிரிலே எல்லா சாக்ஷிகளையும் விசாரிக் கவேண்டும்; குற்றஞ்சாட்டப்பட்டவன் - விசாரிக்கப்படும் எல்லா பிராது பக்கத்துச் சாக்ஷிகளுக்கும் குறுக்குசவால் போடலாம். சாக்ஷியமாக ஹாஜர்செய்யப்பட்ட சகல தஸ்தவேஜுகளையும் குற் றஞ்சாட்டப்பட்டவனுடைய பரிசோதனைக்காகக் காட்டி, அவைக ளைப்பற்றி அவன் சொல்லுகிற அபிப்பிராயங்களை எழுதிவைக்க வேண்டும்.

குற்றஞ்சாட்டப்பட்டவன் வேண்டுமென்றும் பிடிவாதத்துட னும் விசாரணைக்கு ஹாஜராகவில்லையென்றாலும், ஹாஜராகித் தன்மேல் கொண்டுவரப்பட்ட பிராதுகளுக்கு ஜவாபுசொல்லும்ப டிக் கட்டளையிடும் உத்தரவின் தேதியிலிருந்து ஆறுமாதத்துக்குக்

குறைவுபடாத நியாயமான காலத்துக்குள் ஹாஜராக, மனதையோ தேகத்தையோ சேர்ந்த வியாதியின்பொருட்டு அசக்தனுயிருக்கிறானென்றாகிலும் எழுதிவைக்கப்படும் காரணங்களால் விசாரணை நடத்தும் ரெவினியு ஆபிஸராவது பூஸ்திதிகருடையவராவது திருப்தியடைந்தால், குற்றஞ்சாட்டப்பட்டவன் ஹாஜராகாத காலத்தில விசாரணை நடத்தலாம். ஆயினும, அப்படிப்பட்ட விஷயத்தில் விசாரணை நடத்துவதற்குமுன்னமே ரெவினியு ஆபிஸா அல்லது பூஸ்திதிக்குடையவா மேலே சொன்னபடி திருப்தியடைந்தாரென பதும் குறித்த தேதியில் விசாரணை ஒருதலையாய நடத்தப்படுமென் பதுமான செய்தியைத் தெரிவிக்கும் ஒரு புதிய நோடிஸை மேற்படி ரெவினியு ஆபிஸர் அல்லது பூஸ்திதிக்குடையவா குற்றஞ்சாட்டப் பட்டவனுக்குப் பிறப்பிப்பார்.

9. அந்த கேஸைபபற்றி உத்தரவுகளைப் பிறப்பிக்கையிலே, சந்தர்ப்பத்துக்கேற்றபடி, ரெவினியு ஆபிஸராவது பூஸ்திதிக்குடையவராவது - அந்தந்த பிராதுகளைப்பற்றிய சாக்ஷியத்தைச சுருக்கமாகத் தொகுத்துக்காட்டி, பிரதி பிராதினமீதும குற்றம ஏற்படவில்லையென்றாகிலும் குற்றஸ்தாபனை ஆயிற்றென்றாகிலும தெளிவான உத்தரவை, அந்த உத்தரவுக்கு ஆதாரமான காரணத்தின் சுருக்கமான சாராம்சம் சகிதமாகவும், குற்றஸ்தாபனையானதன்மேல் பிறப்பிக்கப்பட்ட தண்டனையையும இங்கிலிஷ பாஷையிலாவது சுதேச பாஷையிலாவது எழுதிவைக்கவேண்டும.

10. அந்த உத்தரவின் அடியிலே, அப்பீல்செயதுகொளவதற்கென்று ஏற்படுத்தப்பட்ட கால அளவு எந்த தேதியில் கழிவாகிறதோ அந்த தேதியைத் தெளிவாகக் குறித்துவைக்கவேண்டும்; அந்த உத்தரவின் ஒரு நகலை அகவிஷயத்தில் சம்பந்தப்பட்ட கிராம உத்தியோகஸ்தருக்கோ அல்லது ஊழியக்காரனுக்கோ எவ்வித கட்டணமுமில்லாமலே கொடுக்கவேண்டும்.

(b) 23-வது பிரிவின்படி அப்பீல் விசாரணைகளை நடத்துவது.

11. 6, 7, அல்லது 8-வது பிரிவின்படி செயயப்பட்ட உத்தரவுக்குமேல் அப்பீல் செய்துகொள்ளும்பக்ஷத்தில், அந்த அப்பீலின் யாதாஸ்திலே - எந்த உத்தரவுக்குமேல் அப்பீல செயதுகொள்ளப்படுகிறதோ அந்த உத்தரவு ஆக்ஷேபிக்கத்தக்கதென்பதற்குள்ள காரணங்களை நியாயங்காட்டாமலும் விருத்தாந்தமாக வளர்த்தாமலும் சுருக்கமாய்த் தனித்தனியான தலைப்புகளின்கீழே குறித்துவைக்கவேண்டும; அப்படிப்பட்ட காரணங்களுக்கு வரிசைக்கிரமமாக இலக்கம் போடவேண்டும். அப்பீலின் யாதாஸ்துடன் மேலே சொல்லப்பட்ட 10-வது விதியின்படி மனுதாரருக்குக் கொடுக்கப்பட்ட உத்தரவின் பிரதியையாவது அல்லது அப்படிப்பட்ட உத்தரவின் சரியென்று உறுதிமொழிகூறப்பட்ட பிரதியையாவது சேர்த்து அனுப்பவேண்டும்.

12. ஒரு அப்பீல் யாதாஸ்து ஏற்றுக்கொள்ளப்படும்பக்ஷத்தில், அப்பீல் அதிகாரியானவர் - அப்பீலை விசாரணை செய்வதற்காக ஒரு தேதியை நிர்ணயித்து, அதைப்பற்றி அப்பீல்தாரருக்கு தகுந்த நோடிஸ் கொடுக்கவேண்டும்.

13. அப்பீலானது 6-வது பிரிவின்படி செய்யப்பட்ட உத்தரவின்மேல் செய்யப்பட்டிருக்குமாகில், யாருடைய உத்தியோக நியமனத்தைப்பற்றி ஆக்ஷேபனை செய்யப்பட்டிருக்கிறதோ அந்த நபருக்கு மேற்படி சங்கதியைப்பற்றியும் விசாரணையின் தேதியைப்பற்றியும் தகுந்த நோடிஸ் சேர்ப்பிக்கவேண்டும்; அந்த நபர் மேற்சொன்ன அப்பீலில் பிரதிவாதியாக இருக்கவேண்டும். அப்படிப்பட்ட நோடிஸில், அந்த நபர் மேலேசொன்னபடி குறிக்கப்பட்ட தினத்தில் ஹாஜராகாமற்போனால் அப்பீலானது ஒருதலையாய் விசாரிக்கப்படுமென்று தெரிவிக்கவேண்டும்.

14. அப்படி நிர்ணயிக்கப்பட்ட தினத்திலாவது, அல்லது வேறெந்த தேதிக்கு விசாரணை தள்ளிவைத்துக்கொள்ளப்படுகிறதோ அந்த தினத்திலாவது, அப்பீலுக்கு ஆதாரமாக அப்பீல்தாரர் சொல்லும் விஷயங்கள் கேட்கப்படும். 6-வது பிரிவின்படி செய்யப்பட்ட உத்தரவின்மேல அந்த அப்பீல செய்யப்பட்டிருக்கும்பக்ஷத்தில், பிரதிவாதியும் ஹாஜராயிருந்தால் அவர் சொல்லும் விஷயங்களும் கேட்கப்படும்.

15. பிரதிவாதி ஹாஜராகாத காலத்தில ஒருதலையாய் ஒரு அப்பீல் விசாரிக்கப்பட்டு அவருக்கு விரோதமாகத் தீர்ப்பு கொடுக்கப்படும்பக்ஷத்தில, தமக்கு நோடிஸ் சேர்ப்பிக்கப்படவில்லையென்றாவது அப்பீல் விசாரணைக்குவரும்போது போதுமான காரணத்தால் ஹாஜராகத் தடைப்பட்டதென்றாவது அப்பிரதிவாதி ருஜுப்படுத்தினால், மேற்படி அப்பீலை மறுபடியும விசாரிப்பதற்காக அவர் அப்பீல் அதிகாரியிடத்தில் விண்ணப்பஞ்செயதுகொள்ளலாம்.

16. இன்னும சாக்ஷியம் வேண்டியதென்று அப்பீல் அதிகாரி நினைத்தால், அவர் - அப்படிப்பட்ட சாக்ஷியத்தை தாமேயாவது பெற்றுக்கொள்ளலாம; இல்லாவிட்டால், எந்த உத்தியோகஸ்தருடைய உத்தரவுக்குமேல அப்பீல் செய்யப்படுகிறதோ அந்த உத்தியோகஸ்தர் இன்னும் அதிகமான சாக்ஷியத்தைப் பெற்றுக்கொண்டு, அதைப்பற்றிய தஸ்தவேஜை குறிக்கப்பட்ட யாதொரு தேதிக்குள் அப்பீலதிகாரிக்கு அனுப்பவேண்டுமென்று அந்த உத்தியோகஸ்தருக்குக் கட்டளையிடலாம்.

17. அதிகமான சாக்ஷியம் பெற்றுக்கொள்ளும்படி கட்டளையிடப்பட்ட அல்லது பெற்றுக்கொள்வதற்கு அனுமதிகொடுக்கப்பட்ட கேஸுகளிலெல்லாம், அப்பீல் அதிகாரியானவர் - மேற்படி சாக்ஷியம் எந்த விஷயங்களைச் சேர்ந்ததாயிருக்கவேண்டுமோ அவ்விஷயங்களைக் குறிக்கவேண்டும்.

18. அப்பீலதிகாரி யாதொரு அப்பீலை வாசித்து அப்பீல்வாதியை விசாரணை செய்தபிறகு தாம் அதுவிஷயத்தில் பிரவேசிப்பதற்குப் போதுமான காரணமில்லையென்று நினைத்தால், அந்த அப்பீல் அதிகாரி மேற்படி அப்பீலை சுருக்கமாய்த் தள்ளிவிடுவதற்கு 12-வது முதல் 17-வது வரைக்குமான விதிகளிலுள்ளதெதனாலும் தடையுண்டாகமாட்டாது. மேலே 8-வது விதியிற்கண்ட கிரமாசாரங்களெல்லாம் அனுசரிக்கப்படாததனால் அப்பீல்தாரர் முக்கியாம்சத்தில் பிரதிகூலமாய் பாதிக்கப்பட்டிருப்பதாக அப்பீலதிகாரிக்குத்

தோற்றிருலன்றி மற்றப்படி, டிை கிரமாசாரங்களை அனுசரிக்காத காரணத்தினாலேயே யாதொரு விசாரணையானது குறைவாயிருப்பதாக எண்ணப்படமாட்டாது.

19. அப்பீலை விசாரணைசெய்கிற உத்தியோகஸ்தரானவர் தமது தீர்மானத்தையும் அதற்குள்ள நியாயங்களையும் தமது கைப்பட இங்க்லிஷில் எழுதிக்கொண்டு, அதற்கு ஒரு நகலை யாதொரு கட்டணமும் வாங்காமலே அப்பீலதாரருக்கும் உத்தியோகஸ்தர் அல்லது பூஸ்திதிக்குடையவருக்கும் கொடுக்கவேண்டும்.

20. 11, 16, 17, 19-வது விதிகள் ரெவினியு போர்டாருக்குச் செய்துகொள்ளப்பட்ட அப்பீல்களுக்குப் பிரயோகப்படும். போர்டாருக்குச் செய்துகொள்ளும் அப்பீல்களை டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் மூலமாக அனுப்பவேண்டும்; அந்த டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் தவிர்க்கத்தக்க எவ்வித தாமதமுமில்லாமல் அவைகளை ரெவினியு போர்டாருக்கு அனுப்பவேண்டும். அப்பீலானது கால அளவு கடந்து போயிருந்தாலாவது, கிரமமாய் ஸ்டாம்ப் ஒட்டப்படாமலிருந்தாலாவது, சுருக்கவகையாகத் தள்ளிவிடப்படக்கூடியதாயிருந்தாலாவது, இந்த ஆக்டின்படி ஏற்றுக்கொள்ளப்படத்தகாததாயிருந்தாலாவதன்றி மற்றப்படி, அதுசம்பந்தமான தஸ்தவேஜுகளையும் அனுப்பவேண்டும்.

(iii)-வது பகுதியின்படி.—3-வது பிரிவில் (1) குறிப்பிட்ட வகுப்பாகிற கிராம உத்தியோகங்களை வகிப்பவர்களுக்கு இருக்கவேண்டிய வித்தியாசம்பந்தமான யோக்கியதைகள்.

21. 1906-ளு ஜூலைமீ 1உ யனைறைகரும் அதற்குப் பிறகும், அடியிற்கண்ட வித்தியாசம்பந்தமான பரீக்ஷைகளின்படி யோக்கியதை பெறாத எந்த நபரும், தாம் கலெக்டரால் எழுதப்படும் காரணங்களுக்காகப் பிரத்தியேகமாய் நிவாத்திக்கப்பட்டாலொழிய, கர்ணம் கிராமப் பெரியதனக்காரர் அல்லது மணியக்காரர் என்னும் உத்தியோகத்துக்கு நியமிக்கப்படமாட்டார் :—

கர்ணம.

(a) கணக்கைப்பற்றிய வில்லேஜ் மானுயலென்னும் புஸ்தகம் ;

(b) கிராம உத்தியோகஸ்தர்களுடைய அதிகாரங்களும் கடமைகளும்,

இவைகளில் கிராம உத்தியோகஸ்தர்களுக்கென்று பிரத்தியேகமாய் ஏற்பட்டிருக்கும் பரீக்ஷை.

மணியக்காரர் அல்லது கிராமப் பெரியதனக்காரர்.

(a) கிராம உத்தியோகஸ்தர்களுடைய அதிகாரங்களும் கடமைகளும்,

(b) கிராம சுகாதாரம்,

இவைகளில் கிராம உத்தியோகஸ்தர்களுக்கென்று பிரத்தியேகமாய் ஏற்பட்டிருக்கும் பரீக்ஷை.

மேலும், கர்ணம் உத்தியோகத்தை அபேக்ஷித்து நிற்பவர்கள் லாண்ட் ரெகார்ட்ஸ் டிப்பந்தியைச் சேர்ந்த யாதொரு உத்தியோகஸ்தராலாவது யாதொரு டிஸ்ட்ரிக்ட் ஸர்வேயராலாவது நடத்தப்பட்டுவரும் ஒரு கர்ணம் பள்ளிக்கூடத்திலே நிர்ணயிக்கப்பட்ட ஸர்வே பயிற்சி அடைந்திருக்கிறார்களென்றாகிலும், யாதொரு ஸர்வே உத்தியோகஸ்தரால் நடத்தப்பட்டுவரும் ஒரு கர்ணம் பள்ளிக்கூடத்திலே ஸர்வே பரீக்ஷையில் தேறியிருக்கிறார்களென்றாகிலும் காட்டும் ஸெர்டிபிகேட்டையும் ஹாஜர்ப்படுத்தவேண்டும்.

22. மேலேசொன்ன விதியானது - 1898-ம்ஸ்ரீ ஜூலைமீ 1உயில் உத்தியோகத்திலிருந்த கிராம உத்தியோகஸ்தாகளுக்காவது, அந்தத் தேதியில் பதினெட்டுவயதுக்கு மேற்பட்டவர்களாயிருந்து 1897-மஸ்ரீ ஜூலைமீ 1உயிலோ அல்லது அதற்கு முன்பாகவோ தங்களுடைய டிவிஷனல் ஆபிஸாகளின ஆபிஸில் பெயா தாக்கல்செய்யப்பட டிருக்கிற ஷை உத்தியோகஸ்தர்களின் வாரிசுகளுக்காவது பிரயோகமாகமாட்டாது.

(iv)-வது பகுதியின்படி—வியாஜ்ஜியங்களையும் வியாஜ்ஜியங்களில் பிறப்பிக்கப்பட்ட தீர்மானங்கள் அல்லது உத்தரவுகளுக்குமேல் செய்யப்படும் அப்பீல்களையும் பைசல்பண்ணுகையில் அனுசரிக்கவேண்டிய நடவடிக்கைமுறையும், அதுசம்பந்தமாக வைத்துவரவேண்டிய ரெஜிஸ்டர்களும்.

(a) வியாஜ்ஜியங்கள்.

23. இந்த ஆக்டின் 13-வது பிரிவைச சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படி கொண்டுவரப்படும் ஒவ்வொரு வியாஜ்ஜியத்தையும், இங்கிலிஷிலாவது ஜில்லாவின் சுதேசபாஷையிலாவது எழுதியுள்ள ப்ளெயன்டைக கலெக்டரிடத்தில தாக்கல்செய்து தொடரவேண்டும்.

23-A. சுயேச்சையான அதிகாரமுடைய யாதொரு ராஜா அல்லது ஆளும் யாதொரு அதிபதி ப்ரிடிஷ் கவர்ன்மெண்டாரோடு சினேகமாய் அவர்களுக்கு அடங்கியிருந்தாலும் இராவிட்டாலும், ப்ரிடிஷ இந்தியாவுக்குள் வாசஞ்செய்தாலும் ப்ரிடிஷ் இந்தியாவுக்கு வெளியே வாசஞ்செய்தாலும் அப்படிப்பட்டவர் கேட்டுக்கொள்வதன்மேல் (அல்லது அப்படிப்பட்ட ராஜா அல்லது அதிபதியின் பட்சத்திலே பிரவர்த்திக்கத் தகுந்தவரென்று கவர்ன்மெனடார் அபிப்பிராயப்படுகிற யாதொரு நபர் கேட்டுக்கொள்வதன்மேல்) அவர் பட்சத்திலே யாதொரு வியாஜ்ஜியம் தொடருவதற்காகிலும் அதில் பிரதிவாதஞ் செய்வதற்காகிலும் கவர்ன்மெண்டாருடைய உத்தரவினால் பிரத்தியேகமாய் நியமிக்கப்பட்டவர்கள் - அங்கீகரிக்கப்பட்ட ஏஜெண்டுகளாக எண்ணப்படுவார்கள்; அவர்கள் - அப்படிப்பட்ட ராஜா அல்லது அதிபதிபட்சத்திலே ஹாஜராகலாம், பிரவர்த்திக்கலாம், விண்ணப்பஞ் செய்துகொள்ளலாம்.

குறிக்கப்பட்ட யாதொரு வியாஜ்ஜியத்தின் காரியத்துக்காகவாவது குறிக்கப்பட்ட பல வியாஜ்ஜியங்களின் காரியத்துக்காகவாவது அந்த ராஜா அல்லது அதிபதிபட்சத்திலே எந்தெந்த வியாஜ்ஜியங்கள் தொடருவதாகிலும் எவைகளில் பிரதிவாதஞ் செய்வ

தாகிலும் அப்போதைக்கப்போது அவசியமாயிருக்கலாமோ அப்படிப்பட்ட சகல வியாஜ்ஜியங்களின் காரியத்துசகாகவாவது இந்த விதியின்படிக்கான யாதொரு நேமசம் செய்யப்படலாம்.

இந்த விதியின்படி நியமிக்கப்பட்டவர் - அப்படிப்பட்ட யாதொரு வியாஜ்ஜியம் அல்லது வியாஜ்ஜியங்களில தாமே கட்சிக்காராயிருந்தாற்போல அந்த வியாஜ்ஜியம் அல்லது வியாஜ்ஜியங்களிலே ஹாஜராவதற்கும் விண்ணப்பஞ் செய்துகொள்வதற்கும் பிரவர்த்திப்பதற்கும் நபர்களுக்கு அதிகாரம் கொடுக்கலாம் அல்லது நபர்களை நியமிக்கலாம்.

24. மேற்படி ப்ளெய்ண்டில கீழே குறிக்கும் விஷயங்கள் அடங்கியிருக்கவேண்டும் :—

(a) எந்தக் கோர்ட்டில் வியாஜ்ஜியம் கொண்டுவரப்பட்டிருக்கிறதோ அந்தக் கோர்ட்டின் பெயர் ;

(b) வாதியின் பெயர், விவரம், வயது, இருப்பிடம், அவருடைய வித்தியாசம்பந்தமான யோக்கியதைகள் ;

(c) விசாரித்தறியக்கூடுமான வரையில பிரதிவாதியின் பெயர், விவரம், இருப்பிடம் ; பிரதிவாதி மைனராயிருந்தால், விசாரித்தறியக்கூடுமானவரையில், அவருடைய கார்டியனுடைய பெயர், விவரம், இருப்பிடம் ; அந்த கார்டியனையே வியாஜ்ஜியத்தில் விவகரிப்பதற்குப் பிரதிவாதியாக்கவேண்டும் ;

(d) வியாஜ்ஜியமூலம் எந்த சந்தர்ப்பங்களால் நேரிட்டதோ அவற்றைக்குறித்துத் தெளிவாகவும் சுருக்கமாகவுமுள்ள ஒரு ஸ்டேட்மெண்டும், அது எப்பொழுது நேரிட்டதென்பதும் ;

(e) வாதியின் தாவா இப்படிப்பட்டதென்பதும், அது எந்த சட்ட நிபந்தனையை அனுசரித்துச் செய்யப்படுகிறதோ அந்த சட்ட நிபந்தனையும் ;

(f) வாதி தாவாசெய்துகொள்ளும் பரிகாரத்தைச் செய்து கொடுக்கும்படி கேட்பது.

24-A. யாதொரு கிராம உத்தியோகத்தின்பொருட்டு வியாஜ்ஜியம் தொடரப்பட்டால, வாதியானவர் அந்த உத்தியோகத்துக்குத் தம்மைவிட அதிக நெருங்கின வாரிசுகளென்று தமக்குத் தெரிந்திருக்கிற அல்லது தாம் நம்புவதற்கு நியாயமிருக்கிற நபர்களையெல்லாம் பிரதிவாதிகளாகச் சேர்க்கவேண்டும்.

25. பிரதிவாதிகள் எத்தனைபேர் இருக்கிறார்களோ அத்தனை ப்ளெய்ன்ட் பிரதிகளையாவது அல்லது சுருக்கமான ஸ்டேட்மெண்டுகளையாவது ப்ளெய்ன்டோடுகூட வைத்தனுப்பவேண்டும் ; மேலும், வாதி அந்த ப்ளெய்ன்டின் அடியில கையொப்பமிட்டு உறுதிமொழி கூறவேண்டும்.

26. கீழே குறிக்கும் விஷயங்களில் ப்ளெய்ன்ட் தள்ளப்படும் :—

(a) சென்னபட்டணத்து 1894-ம் வருஷத்திய ஒருவருக்கேயுரிய பூஸ்திதிகளின் கிராம ஊழிய ஆக்டின் 10-வது பிரிவைச்சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படியாவது, சென்னபட்டணம் பரம்பரை

யான கிராம உத்தியோகங்களைப்பற்றிய 1895-ம்ஹூத்து ஆக்டின் 10-வது பிரிவைச்சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவு அல்லது 11-வது பிரிவைச்சேர்ந்த (1) குறிப்பிட்ட உட்பிரிவின்படியாவது வாதியானவர் நியமனத்திற்கு அர்ஹராயிராவிட்டால் ;

(b) சென்னபட்டணம் பரம்பரையான கிராம உத்தியோகங்களைப்பற்றிய 1895-ம்ஹூத்து ஆக்டின் 14-வது பிரிவின்படியாவது சட்டத்தில் தீர்மானமாய் ஏற்பட்டிருக்கிற யாதொரு விதியினலாவது வியாஜ்ஜியம் கொண்டுவருவதற்குக் காலம் கடந்துபோயிருக்கிறதாக ப்ளெயன்டிலிருக்கும் ஸ்டேட்மென்டினல் தெரியவந்தால் ;

(c) கேட்டுக்கொள்ளப்படும் பரிகாரமானது பாத்தியதை முதலியதை நிர்ணயித்து வரையறுப்பதற்காக மாத்திரம் டிக்ரி பெறவேண்டுமெனபதாயிருந்தால ;

(d) ப்ளெய்ன்டை குறித்தகாலத்துக்குள் திருத்துவதற்காகத் திருப்பிக்கொடுத்திருந்து, அது அந்த குறித்தகாலத்துக்குள் திருத்தப்படாவிட்டால் ;

(e) வாதியானவர் பின்வரும் 34-A விதியின்படி கலெக்டரால் பிறப்பிக்கப்பட்ட யாதொரு உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து நடக்கத் தவறினல்.

யாதொரு ப்ளெய்ன்ட் கலெக்டரால் தள்ளிவிடப்பட்டால், அவருடைய உத்தரவுக்குக் காரணத்தை அவர் எழுதிவைக்கவேண்டும்.

27. யாதொரு ப்ளெய்ன்ட் 23, 24, 24-A, 25-வது விதிகளிற் கண்ட நிபந்தனைகளை அனுசரித்திலலையென்று கலெக்டர் அபிப்பிராயப்படும்பக்ஷத்தில், அவர் அதை வாதிக்குத் திரும்ப அனுப்பிவிடலாம், அல்லது அதைத் திருத்தும்படி வாதிக்கு அனுமதி கொடுக்கலாம்.

27-A வியாஜ்ஜியம் தொடரப்பட்டபின்பு எப்போதாவது, வாதி விண்ணப்பம் செய்துகொள்வதன்மேல், (a) யாதொரு ஒழுங்குக்குறைவு ஏற்பட்டிருக்கும் காரணத்தினல் வியாஜ்ஜியம் கெட்டுபோகுமென்றாவது, (b) அந்த வியாஜ்ஜிய விஷயத்துக்காகவாகிலும் விட்டுவிடப்பட்ட தம்முடைய தாவாவின் ஒரு பாகத்தைக்குறித்தாகிலும் புதிதாய் வியாஜ்ஜியம் கொண்டுவரும் சுதந்தரத்துடன் அந்த வியாஜ்ஜியத்தைத் தள்ளிக்கொள்ளவோ அல்லது ஷை தாவாவின் பாகத்தை விட்டுவிடவோ அவருக்கு அனுமதிகொடுப்பதற்குப் போதுமான காரணங்கள் இருக்கின்றனவென்றாவது கோர்ட்டாருக்குத் திருப்திகரமாய்த் தெரியவந்தால, கோர்ட்டார்-செலவைப்பற்றியாகிலும் மற்றப்படியாகிலும் தங்களுக்குத் தகுதியாகத் தோற்றுகிற ஷரத்துகளின்படி அப்படிப்பட்ட அனுமதிகொடுக்கலாம்.

வாதியானவர் அப்படிப்பட்ட அனுமதியில்லாமல் வியாஜ்ஜியத்தைத்தள்ளிக்கொண்டாலும் தம்முடைய தாவாவின் ஒரு பாகத்தை விட்டுவிட்டாலும், அவர்-கோர்ட்டார் தீர்மானிக்கும் செலவுக்குப் பொறுப்பேற்றவராயிருக்கவேண்டியதுமல்லாமல், அப்படிப்பட்ட வியாஜ்ஜிய விஷயத்துக்காகவாவது அந்த தாவா பாகத்தைக்குறித்தாவது புதிதாய் வேறே வியாஜ்ஜியம் கொண்டுவர அவருக்குத்

தடையும் ஏற்படும். பல வாதிகளில் ஒருவர் மற்றவர்களுடைய சம்மதமில்லாமல் வியாஜ்ஜியத்தைத் தள்ளிக்கொள்ளும்படி அவருக்கு அனுமதிகொடுக்க கோர்ட்டாருக்கு இந்த விதியிலுள்ளதெதனுலும் அதிகாரம் உண்டாவதாக எண்ணக்கூடாது.

28. வாதியானவர் தம் சுவாதீனத்தில் அல்லது வசத்தில் இருக்கும் தஸ்தவேஜுகளில் எவை தம்முடைய தாவாவுக்கு ஆதாரமான சாக்ஷியமாக இருக்குமென்று நம்புகிறாரோ அந்த தஸ்தவேஜுகளையெல்லாம் தம்முடைய ப்ளெய்ன்டோடு தாக்கல்செய்யவேண்டும்.

29. ப்ளெய்ன்ட் ஏற்றுக்கொள்ளப்பட்டு வாதி அவசியமான ப்ராஸெஸ் என்னும் கட்டளைக் கட்டணத்தைச் செலுத்தினால், கலெக்டர் ஒவ்வொரு பிரதிவாதிக்கும் ஸம்மன் அனுப்பவேண்டும்; மேலும், ப்ளெய்ன்டுக்கு ஒரு நகலையாவது 25-வது விதியில் சொல்லப்பட்டிருக்கும் யாதொரு சுருக்கமான ஸ்டேட்மென்டையாவது அதனுடனகூட வைத்து அனுப்பவேண்டும். ஆயினும், ப்ளெய்ன்டை ஏற்றுக்கொள்ளுங்காலத்தில் பிரதிவாதி ஹாஜராயிருக்கும் பக்ஷத்தில், கலெக்டர் வியாஜ்ஜியத்தை விசாரணைசெய்ய உடனே ஆரம்பிக்கலாம்.

பிரதிவாதியை ஸம்மன் செய்வதற்காகக் கொடுக்கவேண்டிய ப்ராஸெஸ் என்னும் கட்டளைக் கட்டணத்தை கலெக்டரால் குறிக்கப்படும் நியாயமான காலத்துக்குள் வாதியானவர் கொடுக்காவிட்டால், ப்ளெய்ன்ட் தள்ளிவிடப்படும்.

30. குறிக்கப்பட்ட தேதியில் பிரதிவாதி ஸம்மனில் சொல்லப்பட்டிருக்கும் இடத்தில் ஹாஜராகவேண்டுமென்றும், அப்படி ஹாஜராகும்போது, நியாயமான சகல நிவாரணைகளுக்குமுட்பட்டு, தம்முடைய ஸ்வாதீனத்திலாவது வசத்திலாவது இருக்கும் தஸ்தவேஜுகளில் வாதி பரிசோதித்துப்பார்க்க விரும்பும் அல்லது பிரதிவாதி தம்முடைய கக்ஷிக்கு ஆதாரமாகவிருக்குமென்று எண்ணுகிற எல்லா தஸ்தவேஜுகளையும் எடுத்துக்கொண்டு வரவேண்டுமென்றும் ஸம்மனில் உத்தரவு செய்திருக்கவேண்டும்.

31. 28 - வது, 30 - வது விதிகளிற்கண்ட நிபந்தனைகளின் பிரகாரம் ஹாஜர்செய்யப்பட்டிருக்கவேண்டிய, ஆனால் செய்யப்படாத, யாதொரு கக்ஷிக்காரருடைய ஸ்வாதீனத்தில் அல்லது வசத்திலிருக்கும் எந்த தஸ்தவேஜு சாக்ஷியமும், அதை ஹாஜர்செய்யாததற்குச் சரியான காரணம் கலெக்டருக்குத் திருப்தியாகும்படி காண்பித்தாலொழிய, விசாரணையின் பினவருகிற எந்த நிலைமையிலும் ஏற்றுக்கொள்ளப்படாது. அப்படிப்பட்ட சாக்ஷியத்தை ஏற்றுக்கொள்ளும் கலெக்டர் அப்படி செய்வதற்குத் தம்முடைய காரணங்களை எழுதிவைக்கவேண்டும்.

32. முதல்விசாரணை நடக்கும தேதியில், ஒவ்வொரு கக்ஷிக்காரரும் எவர்களுடைய சாக்ஷியம் தம்முடைய கக்ஷிக்கு ஆதாரமாயிருக்குமென்று நினைக்கிறாரோ அப்படிப்பட்ட சாக்ஷிகளையாவது, தஸ்தவேஜுகளை ஹாஜராப்படுத்தும்படி கட்டளையிடப்பட்ட சாக்ஷிகளையாவது சொண்டுவந்து ஹாஜர்ப்படுத்தவேண்டும்.

33. யாதொரு கக்ஷிக்காரருக்கு வேண்டியிருக்கிற சாக்ஷிகளில் (ப்ராஸெஸ்) கட்டளை பிறப்பிக்காமல் வராதவர்களை, அவசியமான ப்ராஸெஸ் பீஸ் என்னும் கட்டணமும் படியும் செலுத்தப்படுவதன்மேல் ஸம்மன்செய்து வரவழைக்கவேண்டும்.

34. பிரதிவாதிக்கும் சாக்ஷிகளுக்கும் அனுப்பப்படும் ஸம்மன்களைச் சென்னபட்டணம் 1869-ம்வருஷத்து 3-வது ஆக்டில் நிபந்தனை கண்டிருக்கிறபிரகாரம் தயார்செய்து சேர்ப்பிக்கவேண்டும்.

34-A. மேலேகண்ட 24-A விதியின்படி ப்ளெய்ன்டில் பிரதிவாதிகளாகக் காட்டப்பட்டிருக்கும் நபர்களைத் தவிர வேறே எவர்களேனும் ஏற்கனவே ரெகார்டில குறிப்பிட்டுள்ள கட்சிக்காரர்களுக்கு இருக்கும் பரம்பரை பாத்தியதைகளைக்காட்டிலும் மேலான பரம்பரை பாத்தியதைகள் உள்ளவர்களாயிருக்கிறார்களென்று இந்த வியாஜ்ஜியத்தைச்சேர்ந்த ரெகார்டுகளிலிருந்தாவது கட்சிக்காரர்களுடைய மனுக்களிலிருந்தாவது பிரதேச உத்தியோகஸ்தர்களின் ரிபோர்ட்டுகளிலிருந்தாவது மற்றப்படியாவது கலெக்டர் நம்புவதற்கு முகாந்தரமிருந்தால், அவர்-அப்படிப்பட்ட நபர்களையுங்கூட பிரதிவாதிகளாய்ச் சேர்க்கும்படி வாதிக்கு எப்போதாகிலும் கட்டளையிடலாம்; அதன்மேல, மேலே 29-வது விதியில் நிர்ணயிக்கப்பட்ட நடவடிக்கை முறையானது பிரயோகப்படும்.

35. வியாஜ்ஜியத்தின் விசாரணைக்காக ஏற்படுத்தப்பட்ட தேதியிலாவது, வியாஜ்ஜியத்தின் விசாரணை பிற்பாடு எந்த தேதிக்கு தள்ளிவைத்துக்கொள்ளப்படுகிறதோ அந்த தினத்திலாவது, நேரிலாகிலும் அதிகாரங்கொடுக்கப்பட்ட ஏஜென்டுகள் மூலமாகவாகிலும் உபயகக்ஷிக்காரர்களில் எவரும் ஹாஜராகாவிட்டால், அந்த வியாஜ்ஜியத்தைத் தள்ளிவிடவேண்டும்.

36. பிரதிவாதி ஹாஜராகி வாதி ஹாஜராகாவிட்டால், (வாதியின்) தாவாவையாவது அதில் ஒருபாகத்தையாவது பிரதிவாதி ஒப்புக்கொண்டாலொழிய, கலெக்டரானவர் வியாஜ்ஜியத்தைத் தள்ளிவிடவேண்டும்; வாதியின் தாவாவைப பிரதிவாதி ஒப்புக்கொள்ளுகிறபக்ஷத்தில், செலவில்லாமலே கலெக்டர் பிரதிவாதிக்கு விரோதமாக தீர்ப்பு கொடுக்கவேண்டும்; ஆனால், ஒருவருக்கதிகமாகப் பல பிரதிவாதிகள் இருந்தால், அப்படிப்பட்ட தீர்ப்பானது - தாவாவை ஒப்புக்கொள்ளுகிற பிரதிவாதிக்குமாத்திரம் விரோதமாயிருக்கவேண்டும்.

37. வாதி ஹாஜராகி பிரதிவாதி ஹாஜராகாவிட்டால், பிரதிவாதிக்கு ஸம்மன் சரியாகச சேர்ப்பிக்கப்பட்டதென்று ரூபிக்கப்படுவதனமேல், கலெக்டரானவர் - வியாஜ்ஜியத்தை விசாரணைசெய்து, பிரதிவாதிக்கு பிரதிகூலமாக ஒருதலையாகத் தீர்ப்பு கொடுக்கலாம்.

38. ஹாஜராகாத காரணத்தினாலாவது ஒருதலையாகவாவது தீர்ப்பு கொடுக்கிறபக்ஷத்தில், தீர்ப்பு கொடுத்த தேதிமுதற்கொண்டு அறுபது தினங்களுக்குள்ளாகப் போதுமான நல்ல காரணம் காட்

டப்பட்டால், கலெக்டரானவர் அந்த டிக்ரியை ரத்துசெய்ய உத்தரவுபண்ணி, அந்த் வியாஜ்ஜியத்தை நடத்துவதற்காக ஒரு நாளை நியமிக்கவேண்டும். ஆனால், எதிர்கக்ஷிக்காரரை ஸம்மன்செய்து அவர் ஹாஜரானால் அவரை அதற்காதாரவான சங்கதிகளை விசாரித்தறிந்தாலொழிய, அப்படிப்பட்ட யாதொரு டிக்ரியைத் திருத்துவதாகிலும், வேறுபடுத்துவதாகிலும், நேர் விரோதமாய் மாற்றுவதாகிலும் கூடாது.

39. பிரதிவாதி ஹாஜரானால், ப்ளெய்ன்டில் கண்டிருக்கிற தாவாவை அந்தப் பிரதிவாதி ஒப்புக்கொள்ளுகிறாரென்று கலெக்டர் விசாரித்தறியவேண்டும்; பிரதிவாதி ஒப்புக்கொள்ளாதபட்சத்திலே, அவருக்குள்ள ஆட்சேபனைகளைச் சொல்லும்படி அவரைக் கலெக்டர் கேட்கவேண்டும். அவர் சொல்லுவதை எழுத்துமூலமாய் ரெகார்ட் செய்யவேண்டும். 24-A விதியின்படியாவது 34-A விதியின்படியாவது பிரதிவாதியாகக் காட்டப்பட்டிருக்கும் யாதொரு நபரின் விஷயத்திலே, கலெக்டரானவர் - அந்த உத்தியோகத்துக்கு ஷை நபருக்குரிய பாத்தியதையை விட்டுவிடுவதாய் ஒரு வாக்குமூலம் எழுதிக கொடுக்கும்படியாவது, மற்றவர்களுடைய பாத்தியதையைக்காட்டிலும் தம்முடைய பாத்தியதை மேலானதென்று ஸ்தாபித்து இதர கட்சிக்காரர்களின் தாவாக்களை எதிர்க்கும்படியாவது அந்த நபரைக் கேட்கவேண்டும் ஆயினும், மைனர்கள் என்னும் வயதுவராதவர்களுக்காகப் பிரவர்த்திக்கும் கார்டியன்களுக்கு, அந்த மைனர்களின் பாத்தியதைகளை விட்டுவிட அனுமதி கொடுக்கப்படமாட்டாது.

40. வியாஜ்ஜியம் விசாரணையாகுங்காலத்திலே, கக்ஷிக்காரர்கள் அல்லது அவர்களுடைய அதிகாரங்கொடுக்கப்பெற்ற ஏஜெண்டுகளையும், சாக்ஷிகளையும் விமரிசைசெய்வதற்குமுன்னே, சத்தியம் செய்வித்தாவது, பிரமாணபூர்வகமாய் உறுதிமொழி கூறுவித்தாவது, சாக்ஷிகளை விமரிசைசெய்வதைக்குறித்து அந்தந்த காலத்தில் செலாவணியாய்க்கொண்டிருக்கிற சட்டத்தின்படி மற்றப்படி நடவடிக்கை நடத்தியாவது விமரிசை செய்யவேண்டும்.

41. வாதி, பிரதிவாதி, சாக்ஷிகள் இவர்களுடைய சாக்ஷியத்தை அந்தந்த ஜில்லாவின் சுதேச பாஷையிலாவது இங்கிலிஷிலாவது விருத்தாந்த ரூபமாக எழுதிக்கொள்ளவேண்டும்; அவசியமானால், சாட்சி சொன்னவனுக்கு அதைப் படித்து விளக்கிக்காட்டினபிறகு அதில் கலெக்டர் கையெழுத்துசெய்யவேண்டும்.

42. கலெக்டரானவர் - வியாஜ்ஜியத்தின் உண்மையை நன்றாய் விளக்குவதற்கு அவசியமாக இனனும் அதிக சாட்சியம் அல்லது தஸ்தவேஜுகள் வேணடியிருந்தால் அவைகளைக் கொண்டுவரும்படி கட்டளையிட்டு, மேலே கணடபடி அவசியமாய் வேணடியிருக்கும இன்னும் அதிக சாட்சிகளையும் ஸம்மன்செய்து வரவழைக்கலாம.

43. கலெக்டரானவர்-யாதொரு வியாஜ்ஜியத்தில் வியாஜ்ஜியம் நடத்தவோ அல்லது எதிர்வாதம பணணவோ ஆரம்பிக்கும்பொருட்டு வாதிக்காவது பிரதிவாதிக்காவது அவகாசம கொடுக்கலாம;

இதுவுமல்லாமல், போதுமான காரணமெழுதிக் கலெக்டர் - தமக்கு எப்படி யுக்தமென்று தோற்றுமோ அந்தப்பிரகாரமே விசாரணை யைத் தள்ளிவைக்கலாம்.

44. ப்ளெய்ன்டும், பிறப்பிக்கப்பட்டிருக்கும் ஸம்மன்கள் அல்லது அவைகளின் நகல்களும், வாதி அல்லது அவருடைய அதிகாரம் பெற்ற ஏஜென்டை விசாரணைசெய்த சங்கதிகளும, பிரதிவாதியி னிடத்திலிருந்தாவது அவருடைய அதிகாரம்பெற்ற ஏஜென்டினி டத்திலிருந்தாவது வாங்கபபட்ட வாக்குமூலமும் அல்லது பிரதி வாதி தாக்கல்செயதிருக்கிற யாதொரு விவரப்பத்திரிகையும், சாக்ஷி களுடைய சாக்ஷியமும், தாக்கல்செய்யப்பட்ட தஸ்தவேஜுகளின் ஜாபிதாவும் வியாஜ்ஜியத்தைச்சேர்ந்த ரெகார்டாகும் (தஸ்தவேஜு களாகும்) அப்படிப்பட்ட தஸ்தவேஜுகள் கலெக்டரால் நிறுத்தி வைத்துக்கொள்ளப்பட்டால், அவைகளை ரெகார்டில் சேர்த்துவைக் கவேண்டும்.

45. வியாஜ்ஜியவிசாரணை முடிந்தவுடனே, கலெக்டரானவர் தம்முடைய டிக்ரியைச் சொல்லவேண்டும்; அந்த டிக்ரியை ஆக்டின் 16-வது பிரிவு (1) வது உட்பிரிவு (iii)-வது பகுதியில் கண்டிருக்கிற படி தயாரசெய்து, அந்த டிகரி சொல்லப்படும் காலத்தில் அதில் அவர் தேதிபோட்டுக் கையெழுத்து செயயவேண்டும்.

45-A. மேலேகண்ட 24-A விதியின்படியாவது 34-A விதியின் படியாவது பிரதிவாதியாகச் சேர்க்கப்பட்டிருக்கும் யாதொரு நபர்- கலெக்டரால் குறிப்பிடப்பட்ட தேதியில் ஹாஜராகத் தவறினும், தமக்குப் பிரதிகூலமாக (எக்ஸ்பார்டியாய்) ஒருதலையாய்ப் பிறப்பிக் கப்பட்டிருக்கும் யாதொரு டிக்ரியை ரத்துசெய்வதற்காக மேலே கண்ட 38 - வது விதியின்படி நடவடிக்கை நடத்தத்தவறினும், அல்லது அவர் கலெக்டருக்குமுன் ஹாஜராகி அந்த உத்தியோகத் தின் விஷயமாய்த் தமக்குளள பாத்தியதையை விட்டுவிட்டாலும், அல்லது இதர கட்சிக்காரர்களின் தாவாக்களை சித்திபெறும்படியாய் எதிர்க்கத்தவறினும், அப்படிப்பட்ட நபரை அதே உத்தியோகத் துக்காகப் பினபு வியாஜ்ஜியம் தொடருவதனின்றும் விலக்கவேண டும்.

46. வியாஜ்ஜியத்தில் நேரிட்ட செலவு இவ்வளவென்றும், அவைகள் எந்தக் கட்சிக்காரர்களுக்கு நேரிட்டதோ அவர்களின் பெயர்களையும், அந்தச் செலவுகளை அவரவர்கள் இவ்வளவு இவ்வ ளவு கொடுக்கவேண்டுமென்றும் அந்த டிக்ரியில் கண்டெழுதியிருக் கவேண்டும்.

47. கக்ஷிக்காரர்கள் கலெக்டருக்கு விண்ணப்பஞ்செய்துகொள் வதன்மேல் அவர்களுடைய செலவில் டிக்ரிக்குச் சரியானவைகளே ன்று உறுதிமொழிகூறப்பட்ட நகல்களை அவர்களுக்குக் கொடுக்க வேண்டும்.

48. வியாஜ்ஜியம் செய்வதற்குள்ள சுதந்தரம் கெடாதிருக்கிற பட்சத்திலே, வாதி அல்லது பிரதிவாதி இறந்துபோவதனால், வியாஜ்ஜியம் பலவீனமடையமாட்டாது.

(b) வியாஜ்ஜியங்களில் பிறப்பிக்கப்பட்ட டிக்ரிகளுக்கு மேலாவது உத்தரவுகளுக்கு மேலாவது செய்யப்படும் அப்பீல்களைப்பற்றிய நடவடிக்கை.

49. 13-வது பிரிவின்படி தாக்கல்செய்யப்பட்ட வியாஜ்ஜியங்களில் கலெக்டரால் செய்யப்படும் டிக்ரிக்குமேலோ அல்லது உத்தரவுக்குமேலோ செய்யப்படும் அப்பீலிலே, அப்படிப்பட்ட டிக்ரி அல்லது உத்தரவுக்குள்ள ஆக்ஷேபனையின் ஆதாரங்களை நியாயங்காட்டாமலும் விருத்தாந்தமாக வளர்த்தாமலும் சுருக்கமாய்ப் பிரதியேகமான தலைப்புகளின்கீழே காட்டவேண்டும்; அப்படிப்பட்ட ஆதாரங்களுக்கு வரிசைக்கிரமமாக இலக்கமிடவேண்டும்.

50. எதன்மேல் அப்பீல் செய்யப்படுகிறதோ அந்த டிக்ரி அல்லது உத்தரவுக்குச் சரியானதென்று உறுதிமொழிகூறப்பட்ட ஒரு நகலை அப்பீல யாதாஸ்துடனே வைத்தனுப்பவேணடும். ஜில்லா கலெக்டரானவர் அப்பீலதிகாரியாயிருக்கும்பக்ஷத்தில, யாதாஸ்தை நேராகவாவது கிரமமாய் அதிகாரங்கொடுக்கப்பெற்ற ஏஜெனடாவது கொடுக்கவேண்டும்.

51. அப்பீல் ஏற்றுக்கொள்ளப்பட்டபிறகு, தாம் பிரவேசிப்பதற்குத்தகுந்த ஆதாரம் ஒன்றும் அகப்படாவிட்டால் வியாஜ்ஜியத்தின் தஸ்தவேஜுகளை வரவழைக்காமலே வியாஜ்ஜியத்தை அப்பீல் அதிகாரியானவர் தமக்கு இஷ்டமிருந்தால் தள்ளிவிடலாம. ஜில்லா கலெக்டரானவர் அப்பீலதிகாரியாயிருக்கும்பக்ஷத்தில், ஷை அப்பீலை அப்படி தள்ளிவிடுவதற்குமுன் அபபீலவாதியை அவர் விசாரணை செய்யவேண்டும்.

52. வியாஜ்ஜியங்களின் பரிசீலனையைப்பற்றி 16-வது பிரிவு 1-வது உட்பிரிவிலும, 29-வது விதியிலும், 34 முதல் 42 வரையிலுள்ள விதிகளிலும், 43-வது விதியிலும, 45 முதல் 48-வது வரையிலுள்ள விதிகளிலும் கண்டிருககிற நிபந்தனைகள் அவசியமான மாறுதல்களுடனே ஜில்லா கலெகடரால் செயயப்படும அப்பீல் விசாரணைகளுக்குப் பிரயோகப்படும்.

53. அப்பீல் அதிகாரியானவர் இன்னும் வேண்டுமான சாட்சியத்தைத் தாமே வாங்கலாம், அல்லது கலெக்டரையாவது தாம் கட்டளையிடும் வேறே உத்தியோகஸ்தரையாவது அதை வாஙகும்படி செய்து, அவசியமாயிருக்கிற விஷயங்களைககுறித்து ஒரு தீர்மானத்தைத் தெரிவிக்கும்படி அவருக்குக் கட்டளையிடலாம. மேலும், அப்பீல் அதிகாரியானவர்-அப்பீல் கடைசியாய்ப் பைசலாகிறவரையிலே, எதன்மேல் அபபீல் செய்யப்பட்டிருக்கிறதோ அந்த டிக்ரி அல்லது உத்தரவை நிறைவேற்றுவதை நிறுத்திவைக்கும்படியாக உத்தரவுகள் பிறப்பிக்கலாம்.

54. முதல் வியாஜ்ஜியத்தைப் பரிசீலனைசெய்த உத்தியோகஸ்தருக்கு டிக்ரியின் ஒரு நகலை அனுப்பவேண்டும். அதை அவர் அந்த வியாஜ்ஜியத்தின் தஸ்தவேஜுகளுடன் தாக்கல்பண்ணி, வியாஜ்ஜியங்களைக்குறித்த ரெஜிஸ்டரிலே பதிவுசெய்துகொள்ள வேண்டும். போர்டார் அப்பீலதிகாரியாயிருக்கும்பக்ஷத்தில், அப்பீல்வாதிக்கும் அப்பீல் பிரதிவாதிக்கும் போர்டாருடைய டிக்ரி நகல்களையும் அனுப்பவேண்டும்.

55. ரெவினியு போர்டாருக்குச் செய்துகொள்ளும் இரண்டாவது அப்பீலில், முதல் டிகரிக்கும் அப்பீல் டிகரிக்கும் சரியான நகலென்று உறுதிமொழிகூறப்பட்ட நகலகளை அப்பீல் யாதாஸ்துடன் வைத்தனுப்பவேண்டும்.

56. ரெவினியு போர்டார் அந்த வியாஜ்ஜியத்திற்குச் சம்பந்தமான தஸ்தவேஜுகளை வரவழைத்து, கலெக்டரை இன்னும் வேண்டுமான சாட்சியத்தை வாங்கியனுப்பும்படி செய்து, அவசியமாயிருக்கிற விஷயங்களைப்பற்றி ஒரு தீர்மானத்தைத் தெரிவிக்கும்படி அவருக்குக் கட்டளையிடலாம்.

57. டிக்ரியின் ஒரு நகலை அப்பீல்வாதிக்கும் அப்பீல்பிரதிவாதிக்கும் ஜில்லா கலெக்டருக்குங்கூட அனுப்பவேண்டும்.

57-A. போர்டார் தங்களுக்குமுன் வரும் ஒவ்வொரு விண்ணப்பம் அல்லது அப்பீலின் செலவுகளையும் கொடுத்துப் பங்கிடும் விஷயத்திலாவது அவைகளைக் கொடாமல் நிறுத்தும் விஷயத்திலாவது முற்றிலும் தங்களுக்கு யுக்தமாகத் தோற்றுகிறபடி நடந்து கொள்ளலாம்; மேலும், அவர்கள் - அப்பீலின்மேலாகிலும் புனராலோசனைக்காகவாகிலும் தங்களுக்குமுன் வரும் யாதொரு வியாஜ்ஜியத்திலாவது விண்ணப்பத்திலாவது விவகாரத்திலாவது பிடித்திருக்கும் செலவுகளைக்குறித்து யாதொரு கீழ்க்கோர்ட்டார் செய்திருக்கும் எந்த உத்தரவையாகிலும் ரத்துசெய்யலாம், மாற்றலாம் அல்லது அதனுடன் இன்னும் விஷயங்களைச் சேர்க்கலாம்.

(c) வியாஜ்ஜியங்களுக்கும் அப்பீல்களுக்கும் சம்பந்தமாக வைத்துவரவேண்டிய ரெஜிஸ்டர்கள்.

58. III-வது அனுபந்தத்தில் கொடுத்திருக்கிற I முதல் III வரையிலுள்ள நமூனாக்களின்படி மூன்று ரெஜிஸ்டர்களை வைத்து வரவேண்டும்; அவையாவன:—(1) வியாஜ்ஜியங்களைக்குறித்த ரெஜிஸ்டர், (2) அப்பீல்களைக்குறித்த ரெஜிஸ்டர், (3) ஸம்மன்களைக்குறித்த ரெஜிஸ்டர்.

(v) - வது பகுதியின்படி—வியாஜ்ஜியங்களில் பிறப்பிக்கப்பட்ட டிக்ரிகளையும் உத்தரவுகளையும் நிறைவேற்றுவதும், செலவுகளைக் கணக்கிட்டு ஏற்படுத்துவதும்.

A —முதல் வியாஜ்ஜியங்களிலும் அப்பீல்வியாஜ்ஜியங்களிலும் பிறப்பிக்கப்பட்ட டிகரிகளையும் உத்தரவுகளையும் நிறைவேற்றுவது.

59. யாதொரு டிகரி அல்லது உத்தரவைப் பெற்றிருப்பவர் அதை நிறைவேற்ற விரும்பினால், பிரதமத்திலே அவர்-அந்த டிக்ரியையோ அல்லது உத்தரவையோ பிறப்பித்த கலெக்டருக்கு அடியிற்கண்ட நமூனாப்படி எழுத்துமூலமாக ஒரு விண்ணப்பம் பண்ணிக்கொள்ளவேண்டும்.

முதல் வியாஜ்ஜியங்களிலும் அப்பீல வியாஜ்ஜியங்களிலும் பிறப்பிக்கப்பட்ட டிக்ரிகளையாவது உத்தரவுகளையாவது நிறைவேற்றுவதற்கான விண்ணப்ப நமூனா.

| நிறைவேறுவதற்கான விண்ணப்பம் எந்த வியாஜ்ஜியத்திற்குச் சம்பந்தப்பட்டிருக்கிறதோ அந்த வியாஜ்ஜியத்தின் நம்பர். | வியாஜ்ஜியத்தின் கட்சிக்காரர்களுடைய பெயர்கள். | டிக்ரி அல்லது உத்தரவின் தேதி. | டிக்ரி அல்லது உத்தரவுக்கு மேல் ஏதாவது அப்பீல் செய்யப்பட்டிருக்கிறதா | டிக்ரியையாவது உத்தரவையாவது எவர்மேல் நிறைவேற்ற வேண்டுமென்று நாடப்படுகிறதோ அவருடைய பெயர். | சொத்தை ஒப்பிப்பது, பணத்தை வசூல்செய்வது முதலான எந்த விதத்தில் கோர்ட்டாருடைய உதவி வேண்டியதாயிருக்கிறதோ அந்த விதம். | கட்டவேண்டிய கட்டளைக்கட்டணம் விண்ணப்பத்துடன் ஹாஜர் செய்யப்பட்டதா, அப்படிக்கானால் அதன் தொகை | நிறைவேறும்பொருட்டு நடத்தப்பட்ட முந்திய நடவடிக்கைகள் ஏதாவது இருந்தால் அவை. |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | |

60 விண்ணப்பத்தை வரப்பெற்றுக்கொண்டவுடனே அதில் தேதிபோடவேண்டும்; பிறகு அதை அதற்கென்று வைக்கப்பட்டிருக்கவேண்டிய ரெஜிஸ்டரிலும் வியாஜ்ஜியங்களைக்குறித்து ரெஜிஸ்டரின் ஷராகலத்திலும் பதியவேண்டும். அந்த விண்ணப்பமானது காலநிர்ணய தோஷத்தினால் பாதிக்கப்படாமலும், அப்பீலுக்கென்று ஏற்படுத்தப்பட்டிருக்கும் கால அளவு கழிந்ததுமுதல 30 தினங்களுக்குள்ளே, விண்ணப்பத்தில் குறிக்கப்பட்டிருக்கிற டிக்ரியையோ அல்லது உத்தரவையோ நிறைவேற்றுவதை நிறுத்திவைக்க வேண்டுமென்று அப்பீல்கோர்ட்டிலிருந்து யாதொரு உத்தரவும் வராமலுமிருந்தால், கலெக்டரானவர்-அப்படிப்பட்ட டிக்ரியையாவது உத்தரவையாவது பின்வருகிற பிரகாரம் நிறைவேற்றத் தொடங்கலாம் :—

(a) யாதொரு நபர் அசையாப்பொருளின் ஸ்வாதீனத்திற்குப் பாத்தியதை உடையவராக நிர்ணயிக்கப்பட்டால்—தீர்மானத்தின்படி அந்த அசையாப்பொருளின் ஸ்வாதீனத்தை ஒப்பிக்கவும், டிக்ரி அல்லது உத்தரவின்படி நடக்கக் கடமைப்பட்ட யாவனொருவன் அந்த சொத்தைக் காலிசெய்வதில்லையென்று சொல்லுகிறபட்சத்தில் அப்படிப்பட்டவனை அவசியமிருந்தால் அப்புறப்படுத்தவும், யாதொரு நபருக்கு அதிகாரங்கொடுத்து அந்த நபருடைய பெயரையும் மேல்விலாசத்தையும் எழுதிக் கலெக்டருடைய கையெழுத்தும் முத்திரையும் போடப்பட்ட யாதொரு வாரண்டைப் பிறப்பிப்பது.

(b) நிலத்தின் யாதொரு வாடகைக்கோ அல்லது தீர்வைக்கோ யாதொரு நபர் பாத்தியதை உடையவராக நிர்ணயிக்கப்பட்டால்—டிக்ரி பெற்றிருப்பவருக்கு அந்த வாடகையையோ அல்லது தீர்வையையோ கொடுத்துவிடவேண்டுமென்று கட்டளையிட்டு அப்படிப்பட்ட நிலத்தின் அனுபோக பாத்தியதை உடையவருககு எழுத்துமூலமாயும் கலெக்டருடைய கையெழுத்தும் முத்திரையும் போட்டும் நோடிஸ் பிறப்பிப்பது.

(c) பாத்தியமில்லாமல் அனுபவிக்கப்பட்ட வரும்படியையாவது செலவுகளையாவது யாதொரு பணத்தொகையையாவது செலுத்துவதற்குள்ளானவனென்று யாதொரு நபர் தீர்மானிக்கப்பட்டால்—நிலத்தீர்வை பாக்கியை வசூல்பண்ணுவதற்கென்று செய்திருக்கிற ஏற்பாட்டின்படி நடவடிக்கை நடத்துவது.

(d) யாதொரு உத்தியோகத்தை வகிக்க பாத்தியதை உடையவரென்று யாதொரு நபர் நிர்ணயிக்கப்பட்டிருக்கிற விஷயங்களிலே—அந்த உத்தியோகத்தைச் சேர்ந்த அலுவல்களை நடத்தக்கூடாதெனறுகிலும், அதைச் சேர்ந்த கடமைகளைச் செய்யக்கூடாதென்றுகிலும், அதற்குரிய வருமானங்கள ஏவையேனுமிருந்தால் அவைகளை வசூல்செய்யக்கூடாதென்றுகிலும், நோடிஸில் கண்ட நபரையோ அல்லது நபர்களையோ தடுப்பதாகக் கலெக்டருடைய கையெழுத்தும் முத்திரையும் போடப்பட்ட எழுத்துமூலமான ஒரு நோடிஸைப் பிறப்பிப்பது. அந்த உத்தியோகத்தின் வருமானம் நிலவாடகையாகவோ அல்லது தீர்வையாகவோ இருக்கிற விஷயங்களில், டிக்ரி பெற்றிருப்பவருக்கு அந்த வாடகையையோ அல்லது தீர்வையையோ கொடுத்துவிடவேண்டுமென்று கட்டளையிட்டு, அந்த நிலங்களின் அனுபோகபாத்தியதை உடையவருக்கும் கூட நோடிஸ் கொடுக்கவேண்டும்.

61. வியாஜ்ஜியங்களைக்குறித்த ரெஜிஸ்டரில் பதிவாகும்படி கலெக்டருக்குத் தெரிவிக்கப்பட்டாலன்றி மற்றப்படி, யாதொரு டிக்ரியின்பிரகாரம் தொகை கட்டப்பட்டதும், அதைக் கணக்கில் சரிக்கட்டினதும கலெக்டரால் அங்கீகரிக்கப்படமாட்டா.

62. டிக்ரிகளை நிறைவேற்றுவதற்காகச் செய்யப்படும் விண்ணப்பங்களைக்குறித்த ரெஜிஸ்டர்களையும், டிக்ரிகளை நிறைவேற்றும்படி பிறப்பிககப்பட்ட வாரன்டுகள் அல்லது இதர கட்டளைகளைக்குறித்த ரெஜிஸ்டர்களையும், III-வது அனுபந்தத்தில் நிர்ணயிக்கப்பட்டிருக்கிற IV-வது, V-வது நமூனுக்களின்படி வைத்துவரவேண்டும். 60-வது விதியில் குறிப்பிடப்பட்ட வாரன்டையும் நோடிஸ்-களையும் குறித்த நமூனுக்கள் VI, VII, VIII, IX-வது நமூனுக்களாக அதே அனுபந்தத்தில் அச்சிடப்பட்டிருக்கின்றன.

B.—செலவுகளைக் கணக்கிட்டு ஏற்படுத்துவது.

63. சகல வியாஜ்ஜியங்களுக்காகவோ அல்லது அப்பீல்களுக்காகவோ அல்லது நிறைவேற்றுவதைப்பற்றிய (எக்ஸிக்யூஷன்) நடவடிக்கைக்காகவோ பிடிக்கும் செலவுகளை, II-வது அனுபந்தத்தில்

நிர்ணயிக்கப்பட்டிருக்கிற கட்டணவீதத்தை அனுசரித்துக் கணக்கிடவேண்டும். நியாயவாதிகளின் கட்டணங்களாக யாதொரு செலவும் கொடுக்கும்படி தீர்மானிக்கப்படமாட்டாது.

(vi) - வது பகுதியின்படி—3 - வது பிரிவில் (1)-வது வகுப்பில் வரும் கிராம உத்தியோகங்களை வகித்திருப்பவர்களுக்கு ஏற்படுத்தவேண்டிய சம்பளங்களும் வேறே வர்த்தனைகளும், அவைகளைக் கொடுக்கும் விதமும்.

A.—சம்பளங்களும் வேறே வர்த்தனைகளும்.

64. ஆக்டின் 3 - வது பிரிவு (1) குறிப்பிட்ட வகுப்பில் வரும் கிராம உத்தியோகங்களை வகித்திருப்பவர்களுக்கு, கவர்ன்மெண்டாருடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு ரெவினியு போர்டாரால் அப்போதைக்கப்போது நிஷ்கரிஷை செய்யப்படும் வீதத்தின்படி நிஷ்கரிஷையான மாதாந்தரச் சம்பளம் கொடுக்கப்படும்.

65. சம்பளத்தையும் பதிலுக்கு வேலைபார்ப்பதற்கான வர்த்தனைகளையுங்குறித்து ஸிவில ஸெர்விஸ் ரெகுலேஷன்களில் ஏற்படுத்தியிருக்கும் விதிகள் கிராம உத்தியோகஸ்தர்களுக்குப் பிரயோகப்படமாட்டா.

66. யாதொரு காணமாவது கிராமப பெரியதனககாரராவது இரண்டு அல்லது பல கிராமங்களின் வேலைகளை நடத்தினால், டிவிஷனல் ஆபிஸருடைய அனுமதியின்மேல், அவருக்கு அப்படிப்பட்ட இரண்டு அல்லது சகல உத்தியோகங்களின் முழுச்சம்பளத்தையும் கொடுக்கலாம். மொத்தத்தில் மூன்றுமாதத்துக் கதிகப்படாமல் காலியாகிற ஸ்வல்ப விஷயங்களில் மாத்திரம் இந்த சகாயஞ்செய்ய இடமுண்டு.

67. தாசில்தாரர்களும் சுயாதீனமான அதிகாரம் வகித்திருக்கும் டெப்யுடி தாசில்தாரர்களும் ஒரு தடவையில் மூன்று மாதத்துக்கு மேற்படாத கால அளவுகளுக்குக் கிராம உத்தியோகஸ்தர்களுக்கு ரஜாகொடுக்கலாம். ரஜா பெற்றுக்கொள்ளும் உத்தியோகஸ்தருடைய யாதொரு பாத்தியஸ்தராவது சினேகிதராவது அவருடைய உத்தரவாதத்தின்மேல் அந்த உத்தியோக அலுவல்களை நடத்தவேண்டியதென்னும் ஷரத்தின்மேல் சாதாரணமாய் அப்படிப்பட்ட ரஜா கொடுக்கவேண்டும்.

68. தாசில்தாரர்களும் சுயாதீனமான அதிகாரம் வகித்திருக்கும் டெப்யுடி தாசில்தாரர்களும் ரஜாவிலிருக்கும கிராம உத்தியோகஸ்தர்களுக்குப் பர்த்தியாக நபர்களைச் சம்பளம்கொடுத்து நியமிப்பது அவசியமாயிருந்தால், ஏககாலத்தில் மூனறு மாதத்துக்கு அதிகப்படாத கால அளவுகளுக்கு ஷை கிராம உத்தியோகஸ்தர்களுக்குப் பர்த்தியாக நபர்களைச் சம்பளம்கொடுத்து நியமிக்கலாம்; ஆனால், இது-கீழ்த்தர ஊழியக்காரர்களின் விஷயத்தில் தவிர மற்ற விஷயங்களிலே, அந்தப்படி செய்திருக்கும் நேமகங்களைப்பற்றிய ஒரு ஸ்டேட்மென்டைக் கிரமாசாரமான அனுமதிக்காக டிவிஷனல ஆபிஸருக்குப் பிரதிமாதமும் அனுப்பவேண்டுமென்னும் விலக்கு நிபந்தனைக்கு உட்பட்டதாகும்.

69. மூன்று மாதத்துக்கு அதிகமான கால அளவுகளுக்கு ரஜா வேண்டுமென்று செய்துகொள்ளப்படும் விண்ணப்பங்களை டிவிஷனல் ஆபிஸர்கள் பைசல்பண்ணவேண்டும்.

70. ரஜா வாங்கியிருப்பதனாலோ அல்லது வேலையினின்றும் நீக்கிவைக்கப்பட்டிருப்பதனாலோ நிலையான யாதொரு உத்தியோகஸ்தர் வேலைக்கு வராமலிருக்கும்போது பதிலுக்கு யாரையாவது நியமித்தால், அந்த உத்தியோகத்துக்குரிய சம்பள முழுவதையும், பதிலுக்கு வேலைபார்ப்பவருக்குக் கொடுக்கவேண்டும்; ஆனால், அவர் வேறொரு கிராமத்தின் கிராம உத்தியோகஸ்தராக இருக்கிற பக்ஷத்தில் அந்தப்படி செய்யாமல், மேலே சொன்ன 66-வது விதியை அனுசரிக்கவேண்டும்.

71. ஸம்மன் செய்யப்படுவதன்மேல் கோர்ட்டுகளுக்குப் போய் ஹாஜராகிற கிராம உத்தியோகஸ்தர்கள் அலுவலிலேயிருப்பவர்களாக எண்ணப்படுவார்கள்.

B.—கிராம உத்தியோகஸ்தர்களுக்குச் சம்பளம் முதலானவைகளைக் கொடுக்கும் விதம்.

72. ஆக்டின் 3-வது பிரிவு (1) குறிப்பிட்ட வகுப்பில் வரும் கிராம உத்தியோகங்களை வகித்திருப்பவர்களுக்கு அவர்கள் உத்தியோகஞ்செய்கிற கிராமங்களின் ரெவினியு வசூலகளிலிருந்து சம்பளம் கொடுக்கவேண்டும்; ஆனால், கிராமங்களில் வசூல் குறைவாகவோ அல்லது சூனியமாகவோ இருந்தால், அவர்களுடைய சம்பளத்தை யாதொரு ஸாக்கார் ட்ரெஷரியிலிருந்தாகிலும் (கஜானாவிலிருந்தாகிலும்) பாங்கிலிருந்தாகிலும் வாங்கலாம்.

73. ஒவ்வொரு மாதத்தின் ஆரம்பத்திலும் அதற்கு முன்மாதத்தில் வாஸ்தவத்திலே வேலையிலிருந்த கிராமச் சிப்பந்தியின் சம்பளப்பட்டிகளை கர்ணம், கிராமப் பெரியதனக்காரர் ஆகிய இவர்களுடைய கையெழுத்து சகிதமாய் அதற்கென்றேறபடுத்தியிருக்கிற நமூனாப்படி தயார்செய்து தாலூகா ஆபிஸுக்கு அனுப்பவேண்டும்; இந்த நமூனாவின் அச்சிட்ட பிரதிகள் தாசில்தாரர்களால் சர்ப்பரா செய்யப்படும். கொடுக்கவேண்டியதாயிருந்தும் ரஜா பெற்றுக்கொண்டு வராமலிருப்பது முதலான காரணத்தினால் பில்செய்யப்படாமலிருக்கிற யாதொரு தொகையை, அது வாங்கப்படாத சந்தர்ப்பங்களைப்பற்றி ஒரு சுருக்கமான விவரத்துடனே ஷரா கலத்தில் குறிக்கவேண்டும்; பின்னால் பில்செய்து அந்தத் தொகையைக் கொடுக்கும்படி கேட்கும்போது இந்தப் பதிவுகளைச் சுட்டிக் காட்டவேண்டும்.

74. பிரதி ரெவினியு கிராமத்துக்காகவாவது கிராமப் பெரியதனக்காரர் விசாரணையிலிருக்கிற பிரதேசத்துக்காகவாவது தனித்தனியே சம்பளப்பட்டி அனுப்பவேண்டுமேயன்றி, யாதொரு காரணத்தின் வசத்திலிருக்கும் கிராமங்களின் தொகுப்புக்காக மொத்தமாய் அனுப்பக்கூடாது.

75. இந்த சமபளப்பட்டியானது - தாலூகா ஆபிஸில் பரிசோதிககப்பட்டுத் தாசிலதாரோ அலலது அவரிலலாவிட்டால் தாலூகா ஸிரஸ்ததாரோ அல்லது ஹெட அக்கௌனடானடோ கையெழுத்து பண்ணி (சம்பளம) கொடுககலாமெனறு எணடாாஸ்செய்த உத்தரவுடனே கிராமஙகளுககுத் திருமபவும் அனுப்பிவிடப்படும்.

76. சமபளம கொடுத்தபிறகு அதறகென்று ஏறபடுத்தியிருக்கிற கலத்திலே கையெழுத்துக்களை வாஙகி, சமபளப்பட்டியைக் கிராம இரிசாலகளுடனே தாலூகாவுககு அனுபபவேண்டும ; சமபளமாகக கொடுததுச் செலவான தொகையை, (13, 15 - வது ஷை) கிராம ரொக்கக் கணககுகளிலே மொத்த வசூலிலிருநது கழிக்கபபட்ட தொகையாகக் காடடியிருக்கவேணடும.

77. சம்பளத்தை யாதொரு ஸாககார ட்ரெழரியிலிருந்து வாங்குவதாயிருந்தால, சம்பளம கொடுக்கவேணடிய உத்தரவைச் சம்பளப்பட்டியினமேல எணடாாஸ பணணவேணடும ; ஆனால், சம்பளத்தை யாதொரு பாங்கிலிருந்து வாங்குவதாயிருநதால, அச்சடித்த ஒரு செககைக் கொடுககவேணடும. இநத இரண்டு விஷயங்களில் எதிலும், சம்பளம வாஙகிககொணடவாகளுடைய கையெழுத்துக்களைப் பெற்றபிறகு மீணடும் தாலூகா ஆபிஸுக்கு அனுப்புமபொருட்டுச சம்பளப்பட்டியைக் கிராமத்துககுத் திரும்பவும் அனுப்பவேணடும்.

78. பாக்கியாக நினறிருக்கிற தொகைகளைப பிரததியேகமான சமபளப்பட்டிகளில் பிவ்பணணவேணடும் ; அந்த பாககிகள் எவ்வளவு காலத்துக்காகச் சேரவேண்டுமோ அந்தக கால அளவுகளின் விவரஙகளையும, அவைகள் ட்ரெழரிககு எப்போதேனும் வாபஸ் பணணப்பட்டிருந்தால் அவவாறு வாபஸான மாதங்களின் விவரங்களையும் ஜாக்கிரதையாகக் குறிக்கவேணடும்.

79. யாதொரு சமபளம ஒருவருஷத்துக்கு அதிகமாக வாங்கப்படாமலிருந்தால, அதை ட்ரெழரி டெப்யுடி கலெக்டருடைய அனுமதியை அதற்கென்று பிரத்தியேகமாய்ப் பெற்றுக்கொளளாமல் கிராம உத்தியோகஸ்தாகளுக்கு பட்வாடா பணணக்கூடாது.

80. பாங்கின் பெயருககோ அல்லது ட்ரெழரி பெயருக்கோ செக்குகளினாலாவது பேமெனட் ஆர்டர்களெனனும் தொகை கொடுப்பதற்கான உத்தரவுகளினாலாவது தொகைகள வாங்கப்படுகிற விஷயஙகளிலே, பட்வாடா செயயப்படாத சமபளஙகளை அடுத்த மாதச் சம்பளப்பட்டியில தொகையைக குறைவாக வாங்குவதனாலே வாபஸ் செய்யவேணடும.

(vii)-வது பகுதியின்படி—3-வது பிரிவு (1)-வது (3)-வது வகுப்புகளில் வரும் கிராம உத்தியோகஙகளை வகிததிருககிறவாகளுடைய கடமைகளும், அவாகள வைககவேண்டிய கணககுகளுக்கும் ரெஜிஸ்டாகளுக்கும் விவரமும் நமூனைககளும்.

A.—3-வது பிரிவு (1)-வது வகுபபிலவருமகிராம உத்தியோகங்களை வகித்திருப்பவாகளுடைய கடமைகள்.

81. 3-வது பிரிவு (1)-வது வகுப்பில் வரும் கிராம உத்தியோகங்களை வகித்திருப்பவர்கள் - கிராம உத்தியோகஸ்தர்களைக்குறித்த

சட்ட புஸ்தகத்தில் நிர்ணயிக்கப்பட்டிருக்கிற அலுவல்களேயும், தகுந்த அதிகாரியால் அப்போதைக்கப்போது அவர்கள் வேறே என்னென்ன செய்யவேண்டுமென்று உத்தரவாகிறதோ அந்த அலுவல்களேயும் செய்யவேண்டும். அல்லாமலும், கிராமக் கணக்குகளேப்பற்றிய மானுயலில் அடங்கியிருக்கிற கணக்குகளேயும் ரெஜிஸ்டர்களேயும், அப்போதைக்கப்போது தகுந்த அதிகாரியால் அவர்கள் வேறே என்னென்ன கணக்குகள் தயார்செய்ய வேண்டுமென்று உத்தரவு செய்யப்படுகிறதோ அந்தக் கணக்குகளேயும் அவர்கள் வைத்துவர வேண்டும்.

B.—3-வது பிரிவு (3)-வது வகுப்பில் வரும் கிராம உத்தியோகங்களே வகித்திருப்பவர்களுடைய கடமைகள்.

82. 1802-ம்ஹூ்த்திய சென்னபட்டணத்து 29-வது ரெகுலேஷன் செலாவணியாய்க்கொண்டிருக்கிற ஒருவருக்கேயுரிய பூஸ்திதிகளிலுள்ள கர்ணங்கள் நீங்கலாக, 1894-ம்ஹூ்த்திய சென்னபட்டணத்து 2-வது ஆக்ட் வியாபிக்கும்படி செய்யப்பட்டிராத ஒருவருக்கேயுரிய பூஸ்திதிகளிலுள்ள கர்ணம், பெரியதனக்காரர், தலேயாரி ஆகிய உத்தியோகங்களே வகித்திருப்பவர்கள் - 1894-ம்ஹூ்த்திய சென்னபட்டணத்து 2-வது ஆக்ட் 32-வது பிரிவின்படி செய்யப்பட்ட விதிகளில் அப்படிப்பட்ட உத்தியோகங்களே வகித்திருபபவர்களுக்காக நிர்ணயிக்கப்பட்டிருக்கும் கடமைகளேச் செய்யவும் கணக்குகளே வைத்துவரவும் வேண்டும்.

83. வெட்டிகள் அல்லது தோட்டிகள் - ரெவினியு (தீர்வை) வசூல்செய்வதற்காகப் பிறப்பிக்கப்பட்ட ப்ராஸெஸ் என்னும் கட்டளேகளே நிறைவேற்றவும், பூஸ்திதிக்குடையவருக்குச் சேரவேண்டிய வாடகைகளே வசூல்செய்யவும், நிலங்களேயும் தானியத்தையும அளக்கும் விஷயத்திலும், பயிர்களேப் பார்வையிடும் விஷயத்திலும், பூஸ்திதிக்குடையவர் அல்லது அவருடைய கீழுத்தியோகஸ்தர்களுக்கும், ஸர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கும், கிராமத்திலுள்ள குடிகளுக்கும், ஸமாசாரங்களேயும் கணக்குகளேயும் ரிட்டர்ன்களேயும் (விவரக்கணக்குகளேயும்) கொண்டுபோகும் விஷயத்திலும் கர்ணத்தின் உத்தரவுகளின்படி நடக்கவும் வேண்டும்.

84. பெரியதனக்காரருடைய உத்தரவுகளின்படி நடக்கும் நீர்க்கட்டி, ஏரிகளினின்றும் கால்வாய்களினின்றும் நீர்ப்பாய்ச்சலுள்ள கிராம நிலங்களின் நீர்ப்பாய்ச்சல் பொறுப்பையுடையவனுவான். நீர்க்கட்டி இல்லாத இடங்களில், கிராமத்தின் குடிகள் தாங்களே அந்த வேலேயைப் பார்ப்பது வழக்கமாயிருநதாலனறி மற்றப்படி, அந்த வேலேயை வெட்டிகள் செய்யவேண்டும்.

(viii) - வது பகுதியின்படி—கிராம உத்தியோகஸ்தர்களால் வைக்கப்பட்ட கணக்குகளேயும் வேறே தஸ்தவேஜுகளேயும் பத்திரமாக வைப்பதும், ஹாஜர்செய்வதும், ட்ரான்ஸ்பர் பண்ணுவதும்.

85. பூஸ்திதிக்குடையவராலாவது கலெக்டராலாவது பார்வையிடுவதற்கு அதிகாரம் கொடுக்கப்பெற்ற உத்தியோகஸ்தர்களு ... பரிசோதனேக்காக. அவர்களால் உத்தரவு செய்யப்படுகிற

அது கண்டுபிடிக்கப்பட்டபோது அதன் தோற்றத்தைக்குறித்துமாவது, கொலைசெய்யப்பட்டதனால பிராணனை போயிருந்தால் இறந்துபோனவனுடைய கொலையைகுறித்தாவது யாதொரு சங்கதி தெரிவிக்கக்கூடியவனாயிருக்கும் ஒவ்வொருவனையும அவர் விமரிசைசெய்யவேண்டும.

*அர்த்தபடி கண்டுபிடித்ததைககுறித்துப் பொலீஸ் உத்தியோகஸ்தருககுச சங்கதி தெரிவிப்பது.*

இரண்டாவது. அல்லாமலும், தேகம கண்டுபிடிக்கப்பட்டதென்னும சங்கதியைத் தெரிந்துக்கொள்வதன் மேல கிராமப் பெரியதனக்காரா அந்த டிஸ்ட்ரிக்ட் பொலீஸ் உத்தியோகஸ்தருக்கு அதைக்குறித்து ஆலசியம செய்யாமல சமாசாரம் தெரிவிக்கவேண்டும; எந்த சந்தர்ப்பங்களில் தேகம் கண்டுபிடிக்கப்பட்டிருக்கலாமோ அந்த சந்தர்ப்பங்களைப் பற்றி விசாரணை செய்ய சரியான காலத்தில அவ்விடத்திற்கு டி. பொலீஸ் உத்தியோகஸ்தா வந்துசேருவாராகில், அந்த விசாரணை அவருடைய உத்தரவின்படி நடந்தேறவேண்டும.

*பொலீஸ் உத்தியோகஸ்தர் விசாரணை நடத்த வந்து ஹாஜராகச்சவறுகிற விஷயததில் இன்னது செய்வது.*

மூன்றவது.— பொலீஸ் உத்தியோகஸ்தா விசாரணை நடத்த வந்து ஹாஜராகாவிட்டால், விமரிசைசெய்யப்படும நபாகளின் சாட்சியத்தை எழுதிக்கொள்ளும்படிககும தேகத்தின் தோற்றத்தைக் குறித்து அவசியமான எந்த விவரங்களையாவது பதிந்துகொள்ளும்படிக்கும், கிரந்தம் முழுவதையுங்குறித்து ஒரு ரிபோர்ட் எழுதும்படிக்கும கிராமப் பெரியதனககாரா காணத்திற்கு உத்தரவுசெய்யவேண்டும. கிராமப் பெரியதனக்காரர் அந்த ரிபோர்ட்டில தமமுடைய சாட்சிகையெழுத்துபோட்டு, விசாரணைகாலத்தில ஹாஜராயிருக்கும் இரண்டு அல்லது பல குடிகளையும காணத்தையும் அதில் சாட்சிக்கையெழுத்து செய்யும்படிபண்ணி, தாம் எழுதிக்கொள்ளும் சாட்சியத்தின் சகிதமாக அந்த டிஸ்ட்ரிகட் பொலீஸ் உத்தியோகஸ்தரிடத்தில் அதை அனுப்பவேண்டும.

*கொலை செயததாக அனுமானிககப்பட்டவனைப பிடிபபது.*

நான்காவது.—கிராமப பெரியதனககாரர் நடவடிக்கை நடத்துவதனமேல, கொலைசெயதாரென்று தம்முடைய அதிகாரவரம்புக்குள்ளிருக்கிற யாதொரு நபரையாவது நபர்களையாவது அனுமானிப்பதற்கு யாதொரு விஷயத்தில ஆதாரமிருக்குமாகில், கிராமப பெரியதனககாரர் உடனே அப்படிப்பட்ட நபர் அலலது நபர்களைப் பிடித்து டிஸ்ட்ரிக்ட் பொலீஸ் உத்தியோகஸ்தரிடத்தில் அனுப்பவேண்டும.

*காவலில் வைக்கப்பட்டவர்களைப்பற்றிய ரெஜிஸ்டாகளைக காணங்கள் வைத்திருக்கவேண்டியதெனபதும், பொலீஸ் உத்தியோகஸ்தருக்கு அவைகளை அனுப்பவேண்டியதெனபதும்.*

14. இந்த ரெகுலேஷன 10-வது பிரிவின்படி கிராமப பெரியதனககாரர்களால் காவலில வைக்கப்பட்டவர்களைககுறித்துக காணங்கள் ரெஜிஸ்டர்களை வைத்திருக்கவேண்டும ; இந்த ரெஜிஸ்டர்களைக கிராமப பெரியதனக்காரர்கள் மாஜிஸ்ட்ரேட்டுக்கு அனுப்பும்பொருட்டுத் தங்கள் தங்களுடைய டிஸ்ட்ரிகட்டுகளின் பொலீஸ் உத்தியோகஸ்தர்களுக்கு மாதந்தோறும் அனுப்பவேண்டும.

ரெஜிஸ்டர் நமூனு. 1828-ம்ஞு 9-வது ரெகுலேஷன் 2-வது பிரிவி னுல் ரத்து.

15 முதல் 46 வரையில். கிராமக்காவற்காரர்களுடைய நேமகமும் அலுவல்களும் : கொத்தவால்கள், அவர்களுடைய சேவகர் ஆகிய இவர்களு டைய அலுவல்கள் : தாசில்தாரர், இதர ரெவினியு உத்தியோகஸ்தர்கள் ஆ கிய இவர்களுடைய பொலீஸ் அலுவல்கள் ; பற்பல கேஸுகளில் தாசில்தார ருடைய அலுவல்களும் நடவடிக்கையும் : பொலீஸ் உத்தியோகஸ்தர் என்கிற ஹோதாவில் ஜமீன்தார்கள் ; பெரிய பட்டணங்களில் பொலீஸ் அமீனுக்கள் ; ஸ்வல்பகுற்றங்களைக்குறித்துப் பிராது தொடருவதற்காகக் காலநிர்ணயம் : சந்தேகத்திற்கிடமான சந்தர்ப்பங்களில் விற்பனைக்காகவாவது கொதுவைக் காகவாவது சொத்தைக் கொண்டுவந்து காட்டுகிறவர்களைப் பிடிப்பது ; அதிக் கிரமித்து பலாத்காரம் செய்வதற்காவது கொடுமை செய்வதற்காவது பொ லீஸ் உத்தியோகஸ்தர்கள்மேல் பிராதுகொண்டுவருவது : விபசாரம், சோரப் புணர்ச்சி ஆகிய இவைகளைக்குறித்த கேஸுகளைப் பொலீஸ் உத்தியோகஸ்தர் கள் பிடிக்கக்கூடாது. 1862-ம்ஞு 17-வது ஆக்டினுல் ரத்து.

47. தங்கள் தங்களுடைய ஜில்லாக்களுக்குள் அமரிக்கையைக் கா ப்பது மாஜிஸ்ட்ரேட்டுகளுடைய பொறுப் பாகும் ; மேலும், கொள்ளைக்காரர்களையா வது பொதுஜன அமரிக்கையைக் கெடுக்கும் வேறே நபர்களையாவது எதிர்க்கத் தங்களு டைய சிப்பந்திகள் போதாமையாயிருக்கும் போதெல்லாம், அவர்கள் அதிசமீபத்திலுள்ள ராணுவஸ்டேஷனை உதவிசெய்யும்படி கேட்டுக்கொள்ளவேண்டும்.*

அமரிக்கையைக் காப்பது மாஜிஸ்ட்ரேட்டுகளுடைய பொறுப்பாகும்.

48 முதல் 51 வரையில். பொலீஸ் சேவகர் பொலீஸ் அலுவலிலும் ரெவினியு அலுவலிலும் சமமாய் அமர்ந்திருப்பது : துப்பாக்கி முதலிய சுடு கருவிகளைச் செய்வதற்காக லைஸென்ஸுகள் : மாஜிஸ்ட்ரேட்டுகளுக்குள் சமா சாரப்போக்குவரவு ; பயிரைப்பற்றியாவது ஜலத்தின உபயோகத்தைப்பற்றி யாவது விவாதங்கள் நேரிடுகிறவிஷயத்தில் மாஜிஸ்ட்ரேட்டுகள் செய்ய வேண்டிய கடமைகள். 1862-ம்ஞு 17-வது ஆக்டினுல் ரத்து.

52. திரிந்துகொண்டிருக்கும் கால்நடைகளை இன்னதுசெய்வது. 1857-ம் ஞு 3-வது ஆக்டினுல் ரத்து. †

53 முதல் 56 வரையில. பல்லக்கு தூக்குகிறவர்கள், கூலியாள்கள் முதலானவர்களுடைய கூலிவீதங்களைத் தீர்மானிப்பது : பிசகான எடுத்தலள வைக்கருவிகளைப்பற்றியும் முகத்தலளவைக்கருவிகளைப்பற்றியும் பிராது : மாஜிஸ்ட்ரேட்டுகள மாத்திரம் பொலீஸ் உத்தியோகஸ்தர்களுக்கு உத்தரவு கள் பிறப்பிக்கவேண்டும் : நேராய்க கவர்ன்மென்டாரோடு கடிதப்போக்கு வரவுசெய்யலாம். 1862-ம்ஞு 17-வது ஆக்டினுல் ரத்து.

---

* 1876-ம்ஞு 12-வது ஆக்டினுல் ரத்துசெய்யப்பட்ட சில வார்த்தை கள் விடப்பட்டிருக்கின்றன. அந்த வார்த்தைகள சென்னபட்டணம் 1832-ம் ஞு 2-வது ரெகுலேஷனுல் ஏற்கனவே ரத்துசெய்யப்பட்டிருக்கின்றன.

† இதுவும் 1862-ம்ஞு 17-வது ஆக்டுடன் சேர்க்கப்பட்டிருக்கிற ஷெட்யூலில அடங்கியிருக்கிறது.

# 7-ம் அனுபந்தம்.

## 1816-ம்வருஷத்து 12-வது ரெகுலேஷன்.

1816-ம்வருஷ செப்டம்பர்மீ 13வ ஜாரிசெய்யப்பட்டது.

*நிலங்கள் அல்லது பயிர்களைக்குறித்த எந்த தாவாக்கள் விவாதத்துக்குட்பட்டிருக்கும் யாதொரு எல்லை தீர்மானமாவதனமேல் சட்டப்படி செல்லத்தக்கவையா அல்லவா என்று ஏற்படக்கூடுமோ அந்த தாவாக்களையும், நிலத்தை அனுபோகத்தில் வைத்துக்கொள்வது, பயிரிடுவது, அதற்கு நீர் பாய்ச்சுவது இவைகளைப்பற்றிய சில விவாதங்களையுங்கூட கிராமப்பஞ்சாயத்தார்களும் ஜில்லா பஞ்சாயத்தார்களும் விசாரித்துத் தீர்மானிக்கும்படி அவைகளை அனுப்புவதற்குக் கலெக்டர்களுக்கு அதிகாரம் கொடுப்பதற்கும், எவைகளின்படி அப்படிப்பட்ட விவாதங்களின் பரிசீலனையை நடத்தவும் பஞ்சாயத்தார்களின் தீர்மானங்களை நிறைவேற்றவும் வேண்டுமோ அந்த விதிகளை நிர்ணயிப்பதற்குமான ரெகுலேஷன் *.*

பீடிகை.

விவாதத்துக்குட்பட்ட நிலங்கள் அல்லது பயிர்களின் விஷயமான தாவாக்கள் சட்டப்படி செல்லுமா என்பதைத் தீர்மானிப்பதற்காக 1802-ம்வருஷத்து 32-வது ரெகுலேஷன் 2-ம் பிரிவில் நிர்ணயிக்கப்பட்ட முறையானது கட்சிக்காரர்களுக்கு அசௌகரியமாயிருக்கிறதென்று நினைக்கப்படுகிறபடியாலும், சாசுவதமாயாவது சில வருஷங்களுக்கென்றாவது நிலத்தீர்வை நிஷ்கரிஷை செய்யப்பட்டிருக்கிற ஜில்லாக்களிலே நிலத்தை அனுபோகத்தில் வைத்துக்கொள்வது, பயிரிடுவது, அதற்கு நீர்பாய்ச்சுவது இவைகளைக்குறித்து சொந்தக்காரர்கள் அல்லது குத்தகைதாரர்களுக்கும் அவர்களுடைய ரயத்துகளுக்கும் உண்டாகும் வியாஜ்ஜியங்களை ஜில்லா அதாலத்தில தீர்மானிப்பதும் அதே ஆட்சேபங்களுக்கு உள்ளாகக்கூடியதென்று எண்ணப்படுகிறபடியாலும், அப்படிப்பட்ட தாவாக்களைப் பரிசீலனை செய்வதற்கும் தீர்மானிப்பதற்கும், பின்னும் நிபந்தனை ஏற்படுத்தவேண்டியதும, அந்தக் காரியத்துக்காக ஷை தாவாக்களைப் பரிசீலனைசெய்து தீர்மானிக்கும்பொருட்டு கிராமப்பஞ்சாயத்தார்களுக்கும ஜில்லா பஞ்சாயத்தார்களுக்கும் அனுப்ப கலெக்டர்களுக்கு அதிகாரம் கொடுக்கவேண்டியதும யுக்தமென்று தோற்றுகிறபடியாலும், சென்னபட்டணம் ப்ரெஸிடென்ஸிக்கு உட்பட்ட ராஜ்ஜியங்களிலே செலாவணியாகும்படி அடியிற்கண்ட விதிகளை ஆலோசனை சபையிலுள்ள கவர்னரவர்கள் ஜாரிசெய்திருக்கிறார்கள்.

தங்களுக்கு அனுப்பப்பட்ட வியாஜ்ஜியங்களைத் தீர்மானிக்கப் பஞ்சாயததார்களுக்கு அதிகாரம் கொடுப்பது.

2. இந்த ரெகுலேஷன்படி ஜில்லா கலெக்டர்கள் கிராமமுன்ஸிபுகள் மூலமாயும் ஜில்லாமுன்ஸிபுகள் மூலமாயும் தங்களுக்கு அனுப்பும் வியாஜ்ஜியங்களை விசாரித்துத் தீர்மானிக்க கிராமப்பஞ்சாயத்தார்களுக்கும்ஜில்லாபஞ்சாயத்தார்களுக்கும் இதனால் அதிகாரம் கொடுக்கப்படுகிறது.

---

* ஷெட்யூலிற்கண்ட டிஸ்ட்ரிக்டுகளின் விஷயமாயன்றி மற்றப்படி, சென்னபட்டணம் ப்ரெஸிடென்ஸி முழுவதுக்கும் பிரயோகப்படுவதாகப் பிரசித்தஞ்செய்யப்பட்டது; 1874-ம்வருஷத்து 15-வது ஆக்ட். இந்த ரெகுலேஷன்படி கலெக்டர்களுக்குமுன் கொண்டுவரப்படும் வியாஜ்ஜியங்களிலே தாக்கல்செய்யும் ப்ளெய்ன்டுகள் கோர்ட் கட்டணங்களிலிருந்து நிவர்த்திசெய்யப்பட்டிருக்கின்றன: 1870-ம்வருஷத்து 7-வது ஆக்ட் 18-வது பிரிவைச்சேர்ந்த vii-வது பகுதி.

*பந்துக்கள் முதலானவர்களை வக்கீல்களாக வைப்பது.*

3. இந்த ரெகுலேஷன்படி ஜில்லா கலெக்டர்களுக்குமுன் கொண்டுவரப்படும் வியாஜ்ஜியங்களிலே வாதிகளும் பிரதிவாதிகளும யாதொரு பந்துவையோ, ஊழியக்காரரையோ, அல்லது தங்களுடைய சமாக்ஷணையிலிருப்பவரையோ தங்கள் சார்பில் பிரவர்த்திக்கும்படி வைத்துக்கொள்ள அவர்களுக்கு அனுமதி கொடுக்கப்படும்; ஜில்லா முன்ஸிபுகளுக்குமுன் கொண்டுவரப்படும் வியாஜ்ஜியங்களுக்காக நிர்ணயிக்கப்பட்டிருக்கிற நிபந்தனைகளை அனுசரித்தே மேற்கண்டபடி அனுமதிகொடுக்கப்படும்.

*இன்னின்ன விஷயங்களிலே கட்சிக்காரர்கள் தங்கள் தாவாக்களைக் கலெக்டர்களிடம் கொண்டுபோகலாமென்பது.*

4. முதலாவது.—சாசுவதமாய் பைசலேற்பாடு செய்யப்பட்டாவது வேறேவிதமாயாவதிருக்கிற ஜில்லாக்களிலே நிலங்கள் அல்லது பயிர்களின விஷயமாய் தாவாக்கள் ஏற்பட்டு, அநிச்சயமாயும் விவாதிக்கப்பட்டதாயுமுள்ள யாதொரு எல்லை அல்லது எல்லைக்குறிப்பானது தீர்மானமாவதன்மேல் ஷை தாவாக்கள் சட்டப்படி செல்லத்தக்கவையா அல்லவா என்பது ஏற்படுவதாயிருந்தால், அப்படிப்பட்ட விஷயங்களிலும், மேலும் சாசுவதமாகவோ இத்தனை வருஷங்களுக்கென்றோ நிலதீர்வை நிஷ்கர்ஷை செய்யப்பட்டிருக்கிற ஜில்லாக்களில மாத்திரம் நிலத்தை அனுபோகத்தில் வைத்துக்கொள்வது, பயிரிடுவது, அதற்கு நீர் பாய்ச்சுவது இவைகளைக்குறித்து சொந்தக்காரர்கள அல்லது குத்தகைதாரர்களுக்கும் அவர்களுடைய ரயத்துகளுக்கும உண்டாகும் வியாஜ்ஜியங்களின் விஷயத்திலும், அப்படிப்பட்ட தாவாக்களையுடைய நபர்கள் அவைகளை நேராகவோ அல்லது வக்கீலைக்கொண்டோ அந்த நிலங்கள் இருக்ககூடிய ஜில்லாவின் கலெக்டரிடம் கொண்டுவரலாம்.

*ப்ளெய்ன்டானது நிலத்துக்காக இருந்தால் அதில் இன்னது கண்டிருக்கவேண்டுமென்பது.*

இரண்டாவது.—ப்ளெய்ன்டானது நிலத்துக்காக இருந்தால் அதில், தாவா செய்யப்பட்ட நிலத்தைக்குறித்து எவ்வளவு கிடைக்கக்கூடுமோ அவ்வளவு சரியான விவரமும், அது இருக்குமிடமும், அதன் எல்லைகளும, விஸ்தீர்ணமும, அதன வருஷாந்த மாமூல திட்டத்தின மதிப்பும், அது குத்தகைத்தொகை அல்லது தீர்வை செலுத்தப்படுவதற்கு உட்பட்டதா அல்லது இவை காரணமாக எவ்விதமான கட்டணம செலுத்துவதினின்றும் அது நிவாரணையாயிருக்கிறதா என்பதும், வியாஜ்ஜியமூலம் உண்டானகாலமும், யார்மேல் பிராது செய்யப்பட்டிருக்கிறதோ அந்த நபர் அல்லது நபர்களின் பெயரும் வாசஸ்தலமும், பிரஸ்தாப விவகாரத்தைத் தெளிவாய் விளக்கக்கூடிய முக்கியமான சகல விஷயங்களும் கண்டிருக்கவேண்டும்.

*ப்ளெய்ன்டானது தண்ணீருக்காக இருந்தால் அதில் இன்னது கண்டிருக்கவேண்டுமென்பது.*

மூன்றாவது.—ப்ளெய்ன்டானது தண்ணீருக்காக இருந்தால் அதில், தண்ணீர் பாய்ச்சவேண்டிய நிலம் சம்பந்தமாக மேலேகண்ட விவரமான சங்கதிகளைக் கண்டெழுதுவதோடுகூட, பிரஸ்தாப நிலத்தின் நீர்பாய்ச்சல் சம்பந்தமாய் அந்தக் கிராமத்திய வழக்கத்தையும் காணவேண்டும்.

*பிரதிவாதிக்கு ஸம்மன் பிறப்பிக்கவேண்டுமென்பது.*

5. முதலாவது.—கலெக்டரானவர்-முந்திய பிரிவின்படி செய்யப்பட்ட பிராதை வரப்பெற்றுக்கொள்வதன்மேல், அந்தப் பிராதைச் சுருக்கமாய்ச் சங்கிரகப்படுத்தி அது அடங்கிய ஒரு சம்மனை

ஸம்மனில் அடங்கி யிருக்கவேண்டியவை.

பிரதிவாதிக்குப் பிறப்பித்து, அந்த தாவாவுக்கு ஜவாப்சொல்ல ஷை பிரதிவாதி நேராகவாவது அவருக்குப்பார்த்தியாய் வகீலாவது கலெக்டர் கச்சேரியில் குறித்த ஒருதினத்திலே ஹாஜராகும்படி பிரதிவாதிக்கு உத்தரவு செய்யவேண்டும்.

ஸம்மனுக்கு இன்னபடி அத்தாட்சிகூறி அதை இன்னபடி சேர்ப்பிக்கவேண்டுமென்பது.

ஷை ஸம்மனுக்கு கலெக்டரின் முத்திரையும் அவருடைய உத்தியோகக் கையெழுத்தும் அல்லது அவருடைய அஸிஸ்டெண்டின் உத்தியோகக் கையெழுத்தும்போட்டு அத்தாட்சிகூறி, கலெக்டர் சிப்பந்தியைச்சேர்ந்த ஒரு ப்யூன் (சேவகன்) அதைச் சேர்ப்பிக்கவேண்டும்.

ப்யூன் இன்னபடி நடந்துகொள்ளவேண்டுமென்பது.

**இரண்டாவது.**—அந்த ஸம்மன் கிரமமாகச்சேர்ப்பிக்கப்பட்டதை ஒப்புக்கொண்டு அதில் கையெழுத்து செய்யும்படி கலெக்டருடைய ப்யூன் பிரதிவாதியைக் கேட்கவேண்டும்; அதற்குப் பிரதிவாதி கையெழுத்துப் போடுவதில்லையென்று மறுக்கும்பட்சத்தில், ஷை ப்யூன் - அந்தக் கிராம உத்தியோகஸ்தர்களிலாவது பிரதிவாதியின் அண்டை அயலிலிருப்பவர்களிலாவது சிலரை,

ஸம்மன் சேர்ந்ததாக ஒப்புக்கொள்ள மறுப்பதற்கு இன்னபடி அத்தாட்சிகூறவேண்டுமென்பது.

அப்படி மறுத்ததற்குச் சாட்சியாயிருக்கும்படியும், அப்படி மறுத்த சங்கதியை அவன் அந்த ஸமனின்மேல் எழுதி அதற்கு அத்தாட்சி கூறும்படியும் கேட்டுக்கொண்டு, அந்த ஸமமனைக் கலெக்டருக்குத் திருப்பி அனுப்ப எந்த தினம் குறிப்பிட்டிருக்கிறதோ அந்த தினத்திலாகிலும் அதற்கு முன்னாகிலும் அதை அப்படித் திருப்பி யனுப்பவேண்டும்.

பிரதிவாதி அகப்படாவிட்டாலும் ஸம்மன் சேர்ந்ததென்று ஒப்புக்கொள்ள மறுத்தாலும் கலெக்டர் இன்னபடி நடந்துகொள்ளவேண்டுமென்பது.

**மூன்றாவது.**—எவருக்கு ஸமமன் பிறப்பிக்கப்படுகிறதோ அப்படிப்பட்ட யாதொரு பிரதிவாதி பராரியாய்ப் போயாகிலும், ஜாக்கிரதையாய்த் தேடியும் காணப்படாமலாகிலும், தமக்குச் சொந்தமான அல்லது இதரமான யாதொரு வீட்டிலாவது கட்டடத்திலாவது ஒளிந்துகொண்டாகிலும் எவ்விடத்துக்கேனும் போய்விட்டாகிலுமிருந்து அதனால் அவருக்கு ப்ராஸெஸ் என்னும் கட்டளையைச் சேர்ப்பிக்கமுடியாமல் அது காரணமாக அந்த ப்ராஸெஸ் என்னும் கட்டளையைத் தன்னால் சேர்ப்பிக்கவோ அல்லது நிறைவேற்றவோ முடியவில்லையென்று ஷை ப்யூன் ரிபோர்ட் செய்தாலும், ஸமமன் சேர்ப்பிக்கப்பட்டதாக ஒப்புக்கொள்ள பிரதிவாதி மறுத்தாலும், முந்திய பகுதியில் நிர்ணயிக்கப்பட்டமாதிரியாக ஷை ஸம்மன் திரும்பிவருவதன்மேல், கலெக்டரானவர் - அந்த ஸமமனுக்கு ஒரு நகலும்,

நோடிஸ் ஒட்டவேண்டுமென்பது.

அடியிற்கண்டபடி ஒரு நோடிஸும் தமது ஜில்லாவிலே வழங்கும் பாஷையில் எழுதுவித்து, அதைத் தமது கச்சேரியில நன்றாய்த் தெரியும்படியான ஓரிடத்தில் ஒட்டிவைக்கும்படிச் செய்யவேண்டும்; அந்த நோடிஸில் கண்டிருக்கவேண்டியதென்னவென்றால், (நோடிஸ் மாட்டிவைக்கப்படும் காலத்திலிருந்து பதினைந்து நாளைக்குக் குறையாமலிருக்கும்படி) குறிக்கப்படும் ஒரு தினத்தில் ஷை கட்சிக்காரர் ஹாஜா

ஜராகாவிட்டால், கலெக்டரானவர் அதுவிஷயமாய்ப் பின்னும் தெரிவிக்காமலே, அந்த வியாஜ்ஜியத்தை, வாதியின் சம்மதிபெற்று, விவாதத்துக்குட்பட்ட நிலங்கள் இருக்கக்கூடிய ஜில்லாவிலுள்ள ஒரு பஞ்சாயத்தார், பிரதிவாதி ஹாஜராகாமலேயாவது ஜவாப் சொல்லாமலேயாவது, பரிசீலனைசெய்து தீர்மானிக்கும்படி ஷை. கலெக்டர் அனுப்புவாரென்று கண்டிருக்கவேணடும். பிரதிவாதி வழக்கமாய் வசித்திருக்கக்கூடிய வீட்டின் வெளிக்கதவிலாவது, அவர் சாதாரணமாய் வசித்திருக்கக்கூடிய கிராமம் அல்லது வேறே இடத்தில் நன்றாய்த் தெரியும்படியான ஏதோ ஓரிடத்திலாவது, ஷை ஸம்மனுக்கு ஒரு நகலேயும் ஷை நோடிஸையும் கூடியவரையில் துரிதமாய மேலே கண்டவிதமாக மாட்டிவைக்கும்படி கலெக்டர் உத்தரவு செய்யவேண்டும்.

நோடிஸை இன்ன இடத்தில் ஒட்டவேண்டுமென்பது.

ஸம்மனைச் சேர்ப்பிக்கும் ப்யூன் - எநதக் காலங்களிலும் இடங்களிலும் அந்த ஸம்மன மாட்டிவைக்கப்பட்டிருக்ககூடுமோ அந்த ஸங்கதி கண்டுள்ள ஒரு எண்டார்ஸ்மென்ட் சகித மாய் ஷை உத்தரவைத் திருப்பியனுப்பவேணடும்.

இன்னபடி திருப்பியனுப்பவேணடுமெனபது.

நான்காவது.—நோடிஸில் நிர்ணயிக்கப்பட்ட காலத்தக்குள்ளாக பிரதிவாதி ஹாஜராகும்பட்சத்தில, கலெக்டர் - அவர் ஹாஜராகாமலிருந்ததற்குக் காரணத்தையாவது ஸமமனில் அவர் கையெழுத்து போடமாட்டேனென்று மறுத்த சந்தாப்பங்களையாவது பரிசோதனைசெய்யத் தொடங்கவேண்டும் ; மேலும், பிரதிவாதி அலக்ஷியமாய் நடந்து கொண்டாரென்று கலெக்டருக்குத திருப்திகரமாகத் தோற்றும்பட்சத்தில், அநத விஷயத்தின் சந்தர்ப்பங்களுக்குத் தககபடி பத்து ரூபாய்க்கு மேற்படாமல் பிரதிவாதிக்கு அபராதம் போட்டு மேலே கணடபடி அலக்ஷியமாய் நடந்துகொண்டதற்காக தண்டனே விதிக்க கலெக்டருக்கு அதிகாரமுண்டு : அந்த அபராதம் உடனே செலுத்தப்படாவிட்டாலும், நியாயமான ஒரு காலத்துக்குள் அதைச் செலுத்துவதற்காக ஜாமீன் கொடுக்கப்படாவிட்டாலும் கலெக்டரானவர் - எந்த விஷயத்திலும் பதினேந்து தினத்துக்கு அதிகப்படாத ஒரு காலத்துக்காகிலும் அபராதம செலுத்தியாகிறவரையிலாகிலும் அப்படிப்பட்ட பிரதிவாதியை ஜில்லாஜெயிலுக்கு அனுப்பியாவது, கச்சேரியிலோ அல்லது கிராமச்சாவடியிலோ காவலில் வைத்தாவது அவரைத் தண்டிக்கவேண்டும்

பிரதிவாதி ஹாஜராகும்பட்சத்தில் கலெக்டர் இன்னபடி நடந்துகொள்ளவேண்டுமெனபது.

பிரதிவாதி அலக்ஷியமாய் நடந்துகொண்டதற்காக அபராதத்துக்குள்ளாவது. அப்படிப்பட்ட அபராதம் செலுத்தப்படாவிட்டாலும் ஜாமீன் கொடுக்கப்படாவிட்டாலும் கலெக்டர் இன்னவிதமாய் நடந்துகொள்ளவேண்டுமென்பது.

ஐந்தாவது.—பிரதிவாதி முதல ஸம்மன்படி ஹாஜராஞலுஞ்சரி, நோடிஸில் நிர்ணயிக்கப்பட்ட காலத்துக்குள்ளாக ஹாஜராஞலுஞ்சரி, அவர் ஹாஜராவதன்மேல், கலெக்டரானவர் - வாதியின் எதிரில் பிரதிவாதிக்கு ப்ளெய்ன்டைப் படித்துக் காட்டச்செய்து, பிராது செய்யப்பட்ட விஷ

வாதியின் எதிரில் பிரதிவாதிக்கு ப்ளெய்ன்டைப் படித்துக்காட்டவேண்டுமென்பது.

யத்தின் உண்மையை அவர் ஒப்புக்கொள்ளுகிருரா அல்லது மறுக்கிருரா என்று கேட்கவேண்டும். பிராது உண்மையானதென்று பிரதிவாதி ஒப்புக்கொள்ளும்பட்சத்தில், அப்படி ஒப்புக்கொள்வதைக் கலெக்டர் ப்ளெய்ன்டின் அடியில் எழுதிக்கொண்டு, அதற்கு சாட்சிகளின் முன்னிலையில் கைபெழுத்துப்போட்டு அத்தாட்சி கூறும்படி பிரதிவாதிக்கு உத்தரவு செய்யவேணடும்; அந்தச் சாட்சிகள் கலெக்டரின் சிப்பந்தியைச்சேர்ந்த ஊழியக்காரர்களாயிருக்கக்கூடாது; அவர்களும் அதற்கு அத்தாட்சிக் கையெழுத்துப்போடவேண்டும்; அதன்மேல் அந்த தஸ்தவேஜுக்கு கலெக்டர் மேற்கையெழுத்துப் போட்டு, அந்த தஸ்தவேஜை பிராதுதாரருக்குத் திருப்பி அனுப்ப வேணடியதுமல்லாமல் அதோடுகூட, ப்ளெயன்டில விவரித்திருக்கும் நிலங்களை வாதிக்கு மாற்றிவிடும்படியாவது, அந்த நிலங்களில் சாகுபடியான மாசூல்கள் அந்த ப்ளெய்ன்டில் அடங்கியிருக்கும்பட்சத்தில், அந்த மாசூல்களையாகிலும் அவைகளின் மதிபபையாகிலும் பிரதிவாதியைக்கொணடு வாதிக்குக் கொடுப்பிக்கும்படியாவது, ப்ளெயனடானது தண்ணீருக்காக இருந்தால், அந்தத் தண்ணீரை ப்ளெய்ன்டில் கேட்டுக்கொண்டிருக்கிற விதமாய்ப் பங்கிட்டுசெயது கொடுக்கும்படியாவது, தாசில்காரருக்கோ, அந்த ஜில்லாவிலுள்ள பிரதான சதேச ரெவினியு உத்தியோகஸ்தருககோ, அல்லது கிராம முன்ஸிபுககோ ஒரு உத்தரவும அனுப்பவேணடும்; அந்த வியாஜ்ஜியத்தில் வேறே நடவடிககைகள் எவையும் நடத்தவேண்டிய அவசியமில்லை.

ப்ளெய்ன்ட் உண்மையென்று பிரதிவாதி ஒப்புக்கொண்டால் இன்னது நடத்தவேண்டுமென்பது.

ஆறவது.—ப்ளெய்ன்டில் சொல்லியிருப்பது உண்மையல்லவென்று பிரதிவாதி மறுக்கும்பட்சத்தில், அந்த வியாஜ்ஜியத்தை ஒரு கிராமப் பஞ்சாயத்தாரைக்கொணடு பரிசீலனைசெய்து தீர்மானித்துக்கொள்ள கட்சிக்காரர்கள் பாஸ்பரம் சம்மதிக்கிருர்களாவென்று அவர்களைக் கலெக்டர் கேட்கவேண்டும்; குறிப்பிட்ட யாதொரு கிராமப் பஞ்சாயத்தாரைக்கொண்டு அந்த விஷயத்தைப் பரிசீலனைசெய்து தீர்மானித்துக்கொள்ள அவர்கள் எழுத்துமூலமாய்ச் சம்மதிப்பதன்மேல், கலெக்டரானவர் - அந்த வியாஜ்ஜியத்தைப் பரிசீலனைசெய்து தீர்மானிக்கும்பொருட்டு ஒரு பஞ்சாயத்தை ஆலசியமில்லாமல் கூட்டும்படி அந்த கிராம முன்ஸிபுக்கு ஒரு உத்தரவுசகிதமாய் ஷை ப்ளெய்ன்ட் மனுவை உடனே அனுப்பவேண்டும்.

ப்ளெய்ன்டில் சொல்லியிருப்பது உண்மையல்லவென்று பிரதிவாதி மறுத்தால் இன்னது நடத்தவேண்டுமென்பது.

ஏழாவது.—அந்த வியாஜ்ஜியத்தைக் கிராமப் பஞ்சாயத்தார் பரிசீலனைசெய்து தீர்மானிக்கும்படி அவர்களுக்கு அனுப்புவதைக்குறித்து வாதியாவது பிரதிவாதியாவது ஆட்சேபஞ்செய்து, அதை ஜில்லா பஞ்சாயத்தார் பரிசீலனைசெய்து தீர்மானிக்கும்படி அவர்களுக்கு அனுப்பலாமென்று உபயவாதிகளில் எவராவது எழுத்துமூலமாய்க் கோரும் பட்சத்தில், அப்படி அனுப்புவதற்கு மற்றொரு கட்சிக்காரர் ஒப்புக்கொண்டாலும் ஒப்புக்கொள்ளாவிட்டாலும், கலெக்டரானவர் - விவாதத்துக்குட்பட்ட சொத்து இருக்கக்கூடிய ஜில்லாவின் முன்ஸிபுக்கு அந்த ப்ளெய்ன்டை ஒரு உத்தரவு சகிதமாய் அனுப்பி,

இன்னபடியாறல் விஷயத்தை ஜில்லா பஞ்சாயத்தாருக்கு அனுப்பலாமென்பது.

அந்த உத்தரவு வரப்பெற்றுக்கொண்ட தினத்திலிருந்து பதினைந்து தினத்துக்குள் அந்த வியாஜ்ஜியத்தைப் பரிசீலனைசெய்து தீர்மானிப்பதற்கு ஒரு பஞ்சாயத்தைக் கூட்டும்படி அந்த உத்தரவில் கட்டளையிடவேண்டும்.*

மேற்கண்டபடி அனுப்புவதை உபயவாதிகளில் ஒருவரும் ஒப்புக்கொள்ளாத பட்சத்தில், வியாஜ்ஜியத்தைத் தள்ளிவிடவேண்டுமென்பது.

**எட்டாவது.**—அந்த வியாஜ்ஜியத்தை ஜில்லா பஞ்சாயத்துக்கு அனுப்புவதை உபயவாதிகளில் ஒருவரும் ஒப்புக்கொள்ளாத பட்சத்தில், அந்த வியாஜ்ஜியத்தைத் தள்ளிவிடவேண்டும்; அதன்மேல், அந்தக் கட்சிக்காரர்கள் ஜில்லா கோர்ட்டிலாவது தகுந்த அதிகாரமுள்ள எந்த இடத்திலாவது பரிகாரம் தேடிக்கொள்ள சுதந்தரமுடையவர்களாவார்கள்.

பஞ்சாயத்துகளை இன்னபடி கூட்டவேண்டுமென்பது; அவைகளின் நடவடிக்கை.

6. **முதலாவது.**—கிராம பஞ்சாயத்துகளையும் ஜில்லா பஞ்சாயத்துகளையும் கூட்டிவைத்தமட்டில் நிர்ணயிக்கப்பட்ட விதிகளின்படி பஞ்சாயத்துகளைக் கூட்டவேண்டும்; இந்த ரெகுலேஷன்படி அனுப்பப்பட்ட சிவில் வியாஜ்ஜியங்களின் நடவடிக்கைகளை, அவைகள் அனுசரித்து நடப்பதற்காக 1816-ம் வருஷத்து 5-வது 7-வது ரெகுலேஷன்களில் விதிக்கப்பட்டிருக்கிற பொதுவிதிகளின்படி அடியிற்கண்ட வரைமுறைகளுக்குட்பட்டு நடத்தவேண்டும்.†

ஒரு கட்சிக்காரர் ஆட்சேபிப்பதன்மேல், இன்னபடிக்கானால் பஞ்சாயத்தைச் சேர்க்கலாமென்பது.

**இரண்டாவது.**—கட்சிக்காரர்களில் ஒருவர் மாத்திரம் ஜில்லா முனிசிபுக்கு முன் ஹாஜராகியிருந்தால், அந்தக் கட்சிக்காரர் மாத்திரம் ஆட்சேபிப்பதன்மேல் பஞ்சாயத்தார் சேர்ந்து வியாஜ்ஜியத்தை விசாரிக்கத் தொடங்கவேண்டும்.

டிக்ரிக்கு நகல்களைக் கலெக்டருக்கு அனுப்புவது.

**மூன்றாவது.**—டிக்ரி எழுதியதற்கு இரண்டு நகல்கள் தயார்செய்தான பிறகு, அந்த டிக்ரியைக் கட்சிக்காரர்களின் முன்னிலையில் படித்துக்காட்டி, அந்த இரண்டு நகல்களையும் சிப்பமாகக்கட்டி முகரிட்டு, முனிசிபினிடம் ஒப்புவிக்கவேண்டும்; அவர் அதைத் தாம் பெற்றுக்கொண்டமாதிரியாகவே முகரிட்டபடி கலெக்டருக்கு அனுப்பவேண்டும்.

டிக்ரிகளை நிறைவேற்றுவதற்குமுன் ஊர்ஜிதப்படுத்த வேண்டுமென்பது. எப்படியானால் அவைகளை ரத்து செய்ய வேண்டுமென்பது.

**நான்காவது.**—இந்த ரெகுலேஷன்படி கலெக்டர்களால் கிராமப் பஞ்சாயத்தார்களுக்கும் ஜில்லா பஞ்சாயத்தார்களுக்கும் அனுப்பப்படக்கூடிய வியாஜ்ஜியங்களின்மேல் அவர்கள் செய்யும் டிக்ரிகளைக் கலெக்டர் ஊர்ஜிதம் செய்கிறவரையில் அவைகளை நிறைவேற்றக்கூடாது; மேலும், பஞ்சாயத்தாரால் பெரும் பட்சபாதம் நடந்ததென்னும் காரணத்துக்காகவல்லாமல் வேறே எந்தக் காரணத்துக்காகவும் அவைகளை ரத்துசெய்யவும் கூடாது.

---

* 4 சென்னபட்டணம் ஹைகோர்ட் தீர்மானங்கள், i.

† 1816-ம் வருஷத்து சென்னபட்டணம் 7-வது ரெகுலேஷனுக்கு இதில் எவ்வளவு சம்பந்தப்படுகிறதோ அவ்வளவுமட்டில் 1876-ம் வருஷத்து 12-வது ஆக்டினால் ரத்து செய்யப்பட்டது.

சிப்பத்தைப் பெற்றுக்கொள்வதன்மேல் கலெக்டர் அனுசரிக்கவேண்டிய முறைகள்.

7. கலெக்டர் சிப்பத்தை எந்த ஸ்திதியில் பெற்றுக்கொண்டாரோ அந்த ஸ்திதியில் அதை இருபது தினத்துக்கு நிறுத்திவைத்துக்கொள்ளவேண்டும்; அந்தக் காலத்துக்குள் உபயவாதிகளில் எவராவது பஞ்சாயத்தாரின்மேல் பெரும் பட்சபாதம் செய்ததாகக் குற்றஞ் சாட்டாவிட்டால், கலெக்டர் அந்த சிப்பத்தைத்திறந்து, இரண்டு நகல்களில் ஒவ்வொன்றுக்கும் தமது முகரும் கையெழுத்தும்போட்டு, அந்தத் தீர்மானத்தை ஊர்ஜ்ஜிதஞ்செய்து, எவரிடத்திலிருந்து அவைகளைத் தாம் பெற்றுக்கொண்டாரோ அந்த முன்ஸிபுக்கு அவைகளைத் திருப்பி அனுப்பவேண்டும்.

(நகல்களை) கட்சிக்காரர்களுக்கு எப்போது கொடுக்கவேண்டுமென்பது.

8. முதலாவது.—முன்ஸிபானவர்-கலெக்டரால் ஊர்ஜ்ஜிதம் செய்யப்பட்ட டிக்ரி நகல்களைப் பெற்றுக்கொள்வதன்மேல், கட்சிக்காரர்களை வரவழைத்து அவர்களில் ஒவ்வொருவருக்கும் டிக்ரியின் நகலொன்றை ஒப்பிக்கவேண்டும்.

நகலைப் பெற்றுக்கொள்ள ஹாஜராகாமற்போனாலும் நிராகரித்தாலும் அதை அந்த நகலின்மேல் எழுதிவைக்கவேண்டுமென்பது.

இரண்டாவது.—டிக்ரியின் நகலைப் பெற்றுக்கொள்ள வாதியாவது பிரதிவாதியாவது நேராகவாகிலும் அவர் சார்பில் வக்கீலாகிலும் ஹாஜராகத் தவறினாலும், ஹாஜராகியும் நகலைப் பெற்றுக்கொள்ள நிராகரித்தாலும், முன்ஸிபானவர்-அப்படிப்பட்ட கட்சிக்காரருக்காக உத்தேசிக்கப்பட்ட நகலின்மேல் மேலேகண்டபடி ஹாஜராகாததை அல்லது நிராகரித்ததையும் தேதியையும் எழுதிவைக்கச்செய்யவேண்டும். முன்ஸிப் அதற்குத் தமது கையெழுத்துப்போட்டு அத்தாட்சி கூறுவதுமல்லாமல், நம்பத்தக்க எவர்களேனும் இரண்டு சாட்சிகளும் அதில் சாட்சிக் கையெழுத்துப்போடவேண்டும். அவ்விதமாக எழுதிவைக்கப்பட்ட நகலைப் பின்னால் கேட்கும் கட்சிக்காரருக்கு ஒப்புவிக்கும்படியாக அதை, சந்தர்ப்பத்துக்கேற்றபடி, ஜில்லா முன்ஸிப் அல்லது கிராமக்கர்ணத்தின் ரெகார்டுகளில் சேர்த்துவைக்கவேண்டும்.

பட்சபாதம் செய்த குற்றம் தம்மிடம் கொண்டுவரப்பட்டு தமக்குத் திருப்திகரமாக ருஜு செய்யப்பட்டால், கலெக்டர் இன்னவிதமாக நடந்துகொள்ள வேண்டுமென்பது.

9. முதலாவது.—உபயவாதிகளில் யாராவது - நிர்ணயிக்கப்பட்ட காலமாகிய இருபது தினத்துக்குள், பெரும் பட்சபாதம் செய்ததாகப் பஞ்சாயத்தாரின் மேல் குற்றஞ்சாட்டி, அந்தப் பஞ்சாயத்தாரின்மேல் சாட்டப்பட்ட பட்சபாதக்குற்றம் கலெக்டருக்குத் திருப்திகரமாக ஸ்தாபிக்கப்படும் பட்சத்தில், அவர்-அந்த வியாஜ்ஜியத்தின் தொகை அல்லது மதிப்பு எவ்வளவாயிருந்தபோதிலும், ஒவ்வொரு விஷயத்திலும் தாம் நடத்தும் நடவடிக்கைக்குறிப்புகளை அந்தக் கேஸில் தம்முடைய அபிப்பிராய சகிதமாய் அப்பீல் கோர்ட்டாருக்கு அனுப்பவேண்டும்; அந்த நடவடிக்கைகளால் ஷை குற்றம் அந்தக் கோர்ட்டாருக்குத் திருப்திகரமாக ருஜுவாகும்பட்சத்தில், அவர்கள் - அந்தத் தீர்ப்பை ரத்துசெய்யவேண்டும்; அதன்மேல், அந்தக் கட்சிக்

காரர்கள்-வேறே பஞ்சாயத்தாரிடமாவது தகுந்த அதிகாரமுடைய வேறே இடத்துக்காவது செல்ல சுதந்தரமுடையவர்களாவார்கள்.

இன்னபடியானால் பஞ்சாயத்தாரின தீர்மானம் முடிவானதாகுமென்பது.

**இரண்டாவது.**—ஆனால், இரண்டாம் பஞ்சாயத்தாரின் தீர்மானம் அதே வியாஜ்ஜியத்தில் அதற்குமுந்தின பஞ்சாயத்தாரின் தீர்மானத்தோடு ஒத்திருந்தால், அந்தத் தீர்மானம் முடிவானதாகும்.

பட்சபாதம் ருஜுவாகாவிட்டால், 'கலெக்டர் இன்னவிதமாய் நடக்கவேண்டுமென்பது.

அபராதம போடலாமென்பது.

**மூன்றவது.**—பஞ்சாயத்தாரின்மேல் கொண்டுவரப்பட்ட பக்ஷபாதக்குற்றம் கலெக்டருக்குத் திருப்திகரமாக ருஜுவாகாவிட்டால், அவர் - அந்த டிக்ரியை இந்த ரெகுலேஷன் 7-வது பிரிவில் நிர்ணயிக்கப்பட்டபடி ஊர்ஜ்ஜிதம்செய்வதுமல்லாமல்; ஆதாரமற்ற அப்படிப்பட்ட குற்றம் கொண்டுவரும் கட்சிக்காரரிடத்திலிருந்து நூறு ரூபாய்க்கு அதிகப்படாமல் அபராதம் விதித்து வசூல் செய்யவேண்டும்.

டிக்ரிகளை இன்னவிதமாய் நிறைவேற்றவேண்டுமென்பது.

10. இந்த ரெகுலேஷன்படி கிராமப் பஞ்சாயத்தாருக்கும் ஜில்லா பஞ்சாயத்தாருக்கும் அனுப்பபபடும் கேஸுகளில் அவர்கள் செய்யும் டிக்ரிகளை, யாருக்கு அனுகூலமாய் டிக்ரி கொடுக்கபபடுகிறதோ அந்தக் கட்சிக்காரர் எழுத்துமூலமாய் விண்ணப்பம் செய்துகொள்வதனமேல, வியாஜ்ஜியமானது விவாதத்துக்குட்பட்ட யாதொரு எல்லைககுச் சம்பந்தப்பட்டால, அந்த எல்லையை கிராமமுன்ஸிப் கர்ணம் இவர்களின் முன்னிலையிலும் முக்கியமான குடிகளில் இரண்டு அல்லது இரணடுக்கு மேற்பட்டவர்கள் முனனிலையிலும் குறித்துக் காட்டும்படியாகச் செய்தும், மற்ற எல்லாவிஷயங்களிலும் டிக்ரியில் நிர்ணயிக்கப்பட்டபடி நிலத்தை விட்டுவிடும்படியாவது தண்ணீரைப் பகிர்ந்துகொடுக்கும்படியாவது செய்தும் கலெக்டராகிலும் தாசில்தாரராகிலும் அந்த ஜில்லாவின் பிரதான சுதேச ரெவினியு உத்தியோகஸ்தராகிலும் நிறைவேற்றவேண்டும்.

இந்த ரெகுலேஷன் படிக்கான வியாஜ்ஜியங்களின்மேல் ஏறும் செலவுகள்.

11. இந்த ரெகுலேஷன்படி கலெக்டர்களுக்குமுன் கொண்டுவரப்பட்ட வியாஜ்ஜியங்கள் யாதொரு கிராமப் பஞ்சாயத்தாரால் தீர்மானிக்கப்பட்ட பட்சத்தில், அவைகள் - 1816 - ம் ௵த்து 5-வது ரெகுலேஷனில் குறிப்பிடப்பட்ட செலவுகளுக்குத்தான் உள்ளானவைகளாகும்.

12. [1869-ம் ௵த்து சென்னபட்டணம் 2-வது ஆக்டினால் ரத்துசெய்யப்பட்டது.]

ரெகுலேஷன் பிரதியைக் கொடுத்துவைப்பது.

13. கிராம முன்ஸிபுகள் தெரிந்துகொள்வதற்காக இந்த ரெகுலேஷன் பிரதியொன்றை ஒவ்வொரு கிராமக்கர்ணம் வசத்திலும் கொடுத்துவைக்கவேண்டும; அந்தக் கர்ணம் அதைப் பத்திரமாய் வைத்திருக்கவேண்டும்.

# 8-ம் அனுபந்தம்.

## * 1821-ம்௵த்து 4-வது ரெகுலேஷன்.

1821-ம் ௵ ஜூன் ௴ 15௳ ஜாரிசெய்யப்பட்டது.

சென்னபட்டணம் ப்ரெஸிடென்ஸிக்குட்பட்ட மாகாணங்களில் ஸ்தாபிக்கப் பட்ட பொலீஸ் ஏற்பாடு இன்னும் நன்றாய நடந்தேறும்படி செய்வதற் கான ரெகுலேஷன்.

1 முதல் 5 வரையில. பொலீஸ் அமீனுக்களுடைய அதிகாரத்தை வியாபிக்கச்செய்வது : தாழ்ந்த உத்தியோகஸ்தர்களுடைய அலுவல்கள்: தாழ்ந்த உத்தியோகஸ்தர்கள் விசாரணைபண்ணுவது : சில ஸ்வல்ப திருட்டுகளைத் தண்டிக்க பொலீஸ் தலைவர்களுக்கு அதிகாரம்: அபராதம் விதிக்கவும் பிரதிபலன் தீர்மானித்துக்கொடுக்கவும் அதிகாரம். 1862-ம்௵த்து 17-வது ஆக்டினால் ரத்து.

*ஸ்வல்பதிருட்டுகளைத் தண்டிக்க கிராமப்பெரியதனக்காரர்களுக்கு அதிகாரம்.*

6. முதலாவது.—1816-ம்௵த்து 11-வது ரெகுலேஷன் 10-வது பிரிவைச்சேர்ந்த முதல் பாகத்தின்படி ஸ்வல்ப குற்றங்களைத் தண்டிக்கக்கிராமப் பெரியதனக்காரர்களுக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரங்கள்-அதிற்கண்ட விதிகளின்படிக்கும் வரையறைகளின்படிக்கும், பிரமாதமான சந்தர்ப்பங்கள் சகிதமாயிராமலும், துஷ்டாகளென்று பெயர்போனவர்களால் செய்யப்படாமலும், திருட்டுச்சொத்தின் மதிப்பு ஒரு ரூபாய்க்கு மேற்படாமலுமிருக்கிற ஸ்வல்ப திருட்டுகளைத் தண்டிப்பதற்கு இதனால் வியாபிக்கும்படி செய்யப்படுகின்றன.

*தண்டனையைப்பற்றி ரிபோர்ட்.*

இரண்டாவது.—இந்தப் பிரிவின் முதல் பாகத்தினால் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட தண்டனையதிகாரத்தைக் கிராமப் பெரியதனக்காரர்கள் செலுத்தியிருக்கும் எல்லா கேஸுகளையுங்குறித்து அவர்கள் டிஸ்ட்ரிக்ட் பொலீஸ் தலைமை உத்தியோகஸ்தருக்கு ரிபோர்ட் செய்யவேண்டும்.

7 முதல் 10 வரையில். 1816-ம்௵த்து 9-வது ரெகுலேஷன் 37-வது பிரிவு ரத்து : மாஜிஸ்ட்ரேட்டும் டிஸ்ட்ரிக்ட் பொலீஸ் தலைமை உத்தியோகஸ்தரும் ஸ்வல்பகேஸுகளில சாட்சியத்தை எழுதிக்கொள்ளவேண்டியதுமில்லை தண்டனைகளைக்குறித்த கணக்குகளை அனுப்பவேண்டியதுமில்லை : பிரமாணஞ்செய்விப்பதைப்பற்றி யுக்தம்போல் பிரவர்த்திப்பது. 1862-ம்௵த்து 17-வது ஆக்டினால் ரத்து.

---

* 1862-ம்௵த்து 17-வது ஆக்டினால் ரத்துசெய்யப்பட்டிருந்த இந்த ரெகுலேஷன் 4-வது பிரிவு 1874-ம்௵த்து 15-வது ஆக்ட் 2-வது ஷெட்யூலினால் மறுபடியும் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டதைக் கவனிக்கலாகும்; ஆயினும், அந்தப் பிரிவு பிற்பாடு 1876-ம்௵த்து 12-வது ஆக்டின் ஷெட்யூல் 1-ம் பாகத்தினால் மறுபடியும் ரத்துசெய்யப்பட்டது. 1874-ம்௵த்து 15-வது ஆக்டின் 2-வது ஷெட்யூலில் 6-வது பிரிவு குறிப்பிடப்படவில்லை.

# 9-ம் அநுபந்தம்.

---

## 1840-ம்ஸூ 8-வது ஆக்ட்.

*பஞ்சாயத்துகளின் மெம்பர்கள் தீர்மானங்களுக்குக் கையெழுத்து போடுவதைக்குறித்த ஆக்ட்.*

பஞ்சாயத்து மெம்பர்களில் பெரும்பான்மையோரால் கையெழுத்து போடப்பட்டதீர்மானம் சட்டசம்மதமாகு மென்பது.

சென்னபட்டணம் கோடின் நிபந்தனைகளை அனுசரித்து நடத்தப்பட்ட பஞ்சாயத்து மெம்பர்களில் சிறுபான்மையோர் பஞ்சாயத்தாரின் தீர்மானத்துக்குக் கையெழுத்து போட மறுக்கும் விஷயங்களிலே, அந்தத் தீர்மானத்தைச் சட்ட சம்மதமாக்குவதற்குப் பெரும்பான்மையோருடைய கையெழுத்து அல்லது கைநாட்டு போதுமானதென்று இதனால் விதிக்கப்படுகிறது. ஆனால் எப்போதும், அப்படிப்பட்ட விஷயங்களில், ஷை பெரும்பான்மையோரால் செய்யப்பட்ட தீர்மானத்துக்குச் சிறுபான்மையோர் கையெழுத்து போடவோ அல்லது கைநாட்டு செய்யவோ மறுப்பதற்குள்ள காரணங்களை அந்தச் சிறுபான்மையோர் எழுதி அவைகளுக்குத் தங்களுடைய கைநாட்டு அல்லது கையெழுத்து மூலமாக அத்தாட்சி கூறுவதற்கு இடம் கொடுப்பது ஷை பெரும்பான்மையோருடைய கடமையாகும்.

---

# 10-ம் அனுபந்தம்.

---

## சென்னபட்டணம் 1889-ம்௵த்து 1-வது ஆக்ட்.

ஆலோசனைசபையிலுள்ள சென்னபட்டணம் கவர்னவர்களால் ஜாரிசெய்யப்பட்டது.

[1888-ம்௵ டிஸெம்பர்மீ 1௳ கவர்னரவர்களாலும் 1889-ம்௵ ஜனவரிமீ 30௳ கவர்னர் ஜெனரலவர்களாலும் அங்கிகரிக்கப்பட்டது.]

---

சென்னபட்டணம் ப்ரெஸிடென்ஸியிலே கிராம முன்ஸிபுகளின் கோர்ட்டுகளைக்குறித்த சட்டதிட்டத்தைத் திருத்தி ஒன்றாய்ச் சேர்ப்பதற்கான ஆக்ட்.

பீடிகை.

சென்னபட்டணம் ப்ரெஸிடென்ஸியிலே கிராமமுன்ஸிபுகளின் கோர்ட்டுகளைக்குறித்த சட்டதிட்டத்தைத் திருத்தி ஒன்றாய்ச்சேர்ப்பது யுக்தமாயிருக்கிறபடியால், இதனால் விதிக்கப்படுகிற தென்னவென்றால் :—

### 1-ம் அத்தியாயம்.

பீடிகா விதிகள்.

சுருக்கமான பெயரும் வழங்கத்தொடங்குவதும்.

1. (1) இந்த ஆக்டை, "1888-ம்௵த்திய சென்னபட்டணத்துக் கிராமக கோர்ட்டுகளாக்ட்" என்று சொல்லலாம் ; மேலும், இது உடனே வழங்கத்தொடங்கவேண்டும், ஆனால், 9-வது பிரிவில் (2) முதல் (8) உட்பட அதுவரையிலுள்ள உட்பிரிவுகளானவை அந்தப் பிரிவு (1)-வது உட்பிரிவில் சொல்லியிருக்கிறபிரகாரம் ஆலோசனைசபையிலுள்ள கவர்னரவர்களுடைய உத்தரவின்படிமாத்திரம் வழங்கத்தொடங்கவேண்டும்.

வியாபிக்குமிடம்.

(2) இந்த ஆக்டானது 1874-ம்௵த்து 14-வது ஆக்டில் விவரித்திருக்கிறபடி ஷெட்யூலிற்கண்ட டிஸ்ட்ரிக்டுகளும் சென்னை ராஜதானிப் பட்டணமும் தவிர, சென்னபட்டணம் ப்ரெஸிடென்ஸியைச் சேர்ந்த ஆலோசனை சபையிலுள்ள கவர்னரவர்களுக்கு அந்தந்த காலத்தில் உட்பட்டிருக்கிற ராஜ்ஜியங்களுக்கு வியாபிக்கின்றது. ஆனால், ஆலோசனைசபையிலுள்ள கவர்னரவர்கள்-போர்ட் ஸெய்ன்ட் ஜார்ஜ் கெஜெட்டில் விளம்பரமூலமாய் யாதொரு கிராமம் அல்லது பிரதேச விஸ்தீர்ணத்தை இந்த ஆக்டின் வியாபகத்தினின்றும் அப்போதைக்கப்போது நீக்கிவிடலாம் ; மேலும், அப்படிப்பட்ட விளம்பரத்தை ரத்தும் செய்யலாம்.

ரத்துசெய்யப்பட்ட சட்டதிட்டங்கள்.

2. (1901-ம்வருஷத்திய 11-வது ஆக்டாகிய) ரத்துசெய்வதற்கும் திருத்துவதற்குமான 1901-ம் வருஷத்து ஆக்டினால் ரத்துசெய்யப்பட்டது.

நடந்துகொண்டிருக்கும் வியாஜ்ஜியங்கள் அல்லது டிக்ரிகளுக்கு ஆக்ட் வியாபிப்பது.

3. இந்த ஆக்ட் வழங்கத்தொடங்குங்காலத்தில் கிராமமுன்ஸிபுகளின் கோர்ட்டுகளிலே நடந்துகொண்டிருக்கும் எல்லா வியாஜ்ஜியங்களும் இந்த ஆக்டின்படி தொடரப்பட்டிருப்பவைகளாக எண்ணப்படும்; அந்தத் தேதிக்குமுன்னே கிராமமுன்ஸிபுகளால் செய்யப்பட்ட எல்லா டிக்ரிகளையும் இந்த ஆக்டின்படி செய்யப்பட்ட டிக்ரிகளை நிறைவேற்றுவதைக்குறித்து இதில் பின்னால் சொல்லியிருக்கிற நிபந்தனைகளின் பிரகாரம் நிறைவேற்றலாம்.

ஆக்ட் வியாபகத்தினின்று நிவர்த்திசெய்யப்பட்ட பிரதேசத்தில் முடிவாகாமல் நடந்துகொண்டிருக்கும் வியாஜ்ஜியங்களையும் டிகரிகளையும் இன்னவிதமாய் நடத்துவது.

4. இந்த ஆக்ட் வியாபகத்தினின்று யாதொரு கிராமம் அல்லது பிரதேசவிஸ்தீர்ணம் நிவர்த்திசெய்துவிடப்படும்போது, அவ்விடத்திலுள்ள யாதொரு கிராமக்கோர்ட்டில் வியாஜ்ஜியங்கள் நடந்துகொண்டிருந்தாலும், அந்தக் கோர்ட்டாரால் டிக்ரிகள் செய்யப்பட்டு நிறைவேற்றப்படாதிருந்தாலும், அந்த வியாஜ்ஜியம் அப்போது தான் தொடரப்படுவதாயிருந்தால் அதை விசாரணைசெய்ய யாருக்கு அதிகாரமிருக்குமோ அந்த ஸிவில்கோர்ட்டார் மேற்கண்ட வியாஜ்ஜியங்களையெல்லாம் விசாரணைசெய்து தீர்மானிககவேண்டியதுமல்லாமல், மேற்சொலலிய டிக்ரிகளையெல்லாம் நிறைவேற்றவும் வேண்டும்.

அப்படிப்பட்ட வியாஜ்ஜியங்களும் டிக்ரிகளும், அந்த ஸிவில் கோர்ட்டிலே தொடரப்பட்ட வியாஜ்ஜியங்களாகவும் அந்தக் கோர்ட்டாரால் செய்யப்பட்ட டிக்ரிகளாகவுமிருந்தாற்போல, விசாரணை செய்யப்படவும் நிறைவேற்றப்படவும் வேண்டும்.

அர்த்தம்.

5. இந்த ஆக்டிலே, சங்கதியினாலாவது முன்பின் தொடர்ச்சியினாலாவது விரோதமொன்றுமில்லாவிட்டால்—

"கிராமம்" என்பதற்கு.

"கிராமம்" என்பது-நிலையாய் பைசலாகியான பூஸ்திதியிலே எதற்காக இந்த ஆக்ட் ஜாரிசெய்யப்பட்டபோது 1816-ம்வருஷத்திய 4-வது சென்னபட்டணத்து ரெகுலேஷன்படி கிராம முன்ஸிபுகோர்ட் ஏற்படுத்தப்பட்டிருக்கிறதோ, அல்லது இந்த ஆக்டின்படி கிராமக்கோர்ட் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதோ அப்படிப்பட்ட யாதொரு பிரதேச விஸ்தீர்ணமென்றும், மற்ற இடங்களிலே லாண்ட் ரெவினியு வசூலின்பொருட்டுக் கிராமமாயிருப்பதாக கவர்ன்மென்டாரால் அப்போதைக்கப்போது ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிற யாதொரு பிரதேச விஸ்தீர்ணமென்றும் அர்த்தமாகும்.

"கிராம முன்ஸிப்" என்பதற்கு.

"கிராம முன்ஸிப்" என்பது-இந்த ஆக்டினபடி ஸ்தாபிக்கப்பட்ட யாதொரு கிராம முன்ஸிப் கோர்ட்டிலுள்ள ஜட்ஜ் என்று அர்த்தமாகும்.

"கிராமக் கோர்ட்" என்பதற்கு.

"கிராமக்கோர்ட்" என்பது - 9 - வது பிரிவின்படி ஏற்படுத்தப்படும் நியாயசபையென்றும் அர்த்தமாகும்.

"டிஸ்டிரிகட் ஜட்ஜ்" "டிஸ்டிரிக்ட்முன்ஸிப்" என்பவற்றிற்கு.

"டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜ" அல்லது "டிஸ்ட்ரிக்ட் முன்ஸிப்" என்பது-யாருடைய அதிகாரப்பிரதேச எல்லைக்குள கிராமக்கோர்ட் இருக்கிறதோ அந்த டிஸ்டிரிக்ட் ஜட்ஜ அல்லது டிஸ்ட்ரிக்ட் முன்ஸிப் என்று அர்த்தமாகும். * கிராமமானது எந்த டிஸ்ட்ரிக்ட் முன்ஸிபின அதிகாரப் பிரதேச எல்லைக்குள்ளும் இராவிட்டால், அது யாருடைய அதிகாரப்பிரதேச எல்லைக்குள்ளிருக்கிறதோ அந்த ஸபார்டினேட் (கீழ்ப்பட்ட) ஜட்ஜாவது, ஸபார்டினேட் ஜட்ஜ் இராத விஷயத்திலே டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜாவது இந்த ஆக்டின் காரியஙகளுக்காக டிஸ்ட்ரிக்ட் முன்ஸிபாக எணணப்படுவார்.

---

## 2-ம் அத்தியாயம்.

கிராமகோர்ட்டுகளின் ஸ்தாபகமும் ஏற்பாடும்.

கிராமக்கோர்ட்டுகளை ஸ்தாபிப்பது.

6. ஆலோசனை சபையிலுள்ள கவர்னரவர்கள்-அப்போதைக்கப்போது டிஸ்ட்ரிக்ட் கெஜெட்டில் பிரசித்தஞ்செய்யப்படுகிற உத்தரவுமூலமாய்—

(1) இரண்டு அல்லது மேற்பட்ட கிராமங்களை ஒன்றாய்ச் சேர்த்து, அவவிடங்களில் முன்னமேயிருக்கிற பல கிராமக்கோர்ட்டுகளுக்குப் பாத்தியாக அந்தக் கிராமங்களுக்கு ஒரே ஒரு கிராமக்கோர்ட்டை ஸ்தாபிக்கலாம் ;

(2) யாதொரு கிராமத்தில் பிரிவினைகள ஏற்படுத்தி, அந்தக் கிராமத்திலே முன்னமேயிருக்கிற கிராமக்கோர்ட்டுக்குப்பாத்தியாக அப்படிப்பட்ட பிரிவினை ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு கிராமக்கோர்ட்டை ஸ்தாபிக்கலாம் ;

(3) குறித்த யாதொரு விஸ்தீர்ணத்திற்காக நூதனமாய் ஒரு கிராமக்கோர்ட்டை ஸ்தாபிக்கலாம்.

இந்த ஆக்டின்படி ஸ்தாபிக்கப்பட்ட யாதொரு கிராமக்கோர்ட்டிலே, இதில் பின்னால் சொல்லியிருக்கிற பிரகாரம நியமிக்கப்பட்ட யாதொரு கிராம முன்ஸிபுக்கு முன்பாகவாவது ஒரு ஜட்ஜுக்கு

---

* திருத்தப்பட்டது—சென்னபட்டணம் 1904-ம்வருடத்து 4-வது ஆக்டைப் ர்ககவும்.

அதிகமாக ஏற்பாடான நியாயசபைக்கு முன்பாகவாவது நடவடிக்கை நடத்தப்படவேண்டும்.

கிராம முன்ஸிபை நியமிப்பது.

7. ஆலோசனைசபையிலுள்ள கவர்னரவர்கள் அப்போதைக்கப்போது நிர்ணயிக்கிற விதிகளுக்குட்பட்டு, கிராம முன்ஸிபுகளை டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் நியமிக்கவேண்டும்; ஆனால், கிராமத்திற்குள் வாசஞ்செய்யாமலிருக்கிற யாதொரு நபர் அந்த உத்தியோகத்தைப் பெறுவதற்குத் தகுதியுள்ளவனாகமாட்டான்.

கிராம முன்ஸிபை ஸஸ்பெண்ட் பண்ணுவது அல்லது தள்ளிவிடுவது.

8. டிஸ்ட்ரிக்ட் கலெக்டரானவர் யாதொரு கிராமமுன்ஸிபை வேலைத்திறமையில்லாமையினாலாவது, வேலையை அசட்டைசெய்வதனாலாவது, துர்நடத்தை நடப்பதனாலாவது, வேறே தகுந்த போதுமான காரணத்தினாலாவது ஸஸ்பெண்ட்செய்யலாம், அல்லது தள்ளிவிடலாம்; யாதொரு கிராம முன்ஸிபினுடைய நீதிமுறை நடவடிக்கைகளினால் தெரியவருகிற அவ்வித காரணத்தினிமித்தம் டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜ் உத்தரவு பிறபித்தால் அதன்மேல் கலெக்டர் அந்த கிராம முன்ஸிபை ஸஸ்பெண்ட்செய்யவேண்டும், அல்லது தள்ளிவிடவேண்டும்.

யாதொரு கிராம முன்ஸிபை ஸஸ்பெண்ட்செய்யவோ தள்ளிவிடவோ பிறப்பிக்கப்படுகிற ஒவ்வொரு உத்தரவின்மேலும், அந்த உத்தரவு டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜினுடைய உத்தரவின்மேலல்லாமல் கலெக்டராலேயே பிறப்பிக்கப்பட்டிருக்கும்பட்சத்தில் ரெவினியுபோர்டாருக்கும், டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜினுடைய உத்தரவின்மேல் பிறப்பிக்கப்பட்டிருக்கும் பட்சத்தில் ஹைகோர்ட்டாருக்கும் மூன்றுமாசத்திற்குள்ளாக, அப்பீல்செய்துகொள்ளலாம். அப்படிப்பட்ட சகல அப்பீல்களின்மேலும் சங்கதிக்குத்தக்கபடி ரெவினியுபோர்டாரோ ஹைகோர்ட்டாரோ செய்கிற தீர்மானம் முடிவானதாகும்.

நியாய சபைகளைக்குறித்த நிபந்தனைகள்-விளம்பரமூலமாய் யாதொரு கிராமத்திற்கு அவைகளை வியாபிக்கச்செய்வது.

9. (1) டிஸ்ட்ரிக்ட் கெஜெட்டில் பிரசித்தஞ்செய்யப்படுகிற உத்தரவுமூலமாய், ஆலோசனை சபையிலுள்ள கவர்னரவர்கள் - யாதொரு கிராமத்திலாவது யாதொரு விஸ்தீர்ணத்திற்குள்ளிருக்கிற கிராமங்களிலாவது நிர்ணயிக்கப்பட்ட ஒரு தேதிமுதற்கொண்டு இந்தப் பிரிவிலே அடியில்வரும் உட்பிரிவுகளை வியாபிக்கச்செய்யவேண்டியதென்று உத்தரவுபண்ணலாம், அப்படிப்பட்ட உத்தரவை அப்போதைக்கப்போது மாற்றலாம் அல்லது ரத்துபண்ணலாம்.

நியாயசபையில் மெம்பராக இருந்து வேலை நடத்துவதற்கு யோக்கியதையுள்ளவர்களைக் குறித்து ஜாபிதா ஏற்படுத்திவைத்திருப்பது.

(2) அப்படிப்பட்ட யாதொரு உத்தரவு செலாவணியாய்க்கொண்டிருக்கிற ஒவ்வொரு கிராமத்திற்காகவும், இதுவிஷயமாய் ஆலோசனை சபையிலுள்ள கவர்னரவர்கள் செய்யும்படியான ஏதாவது விதிகளுக்குட்பட்டு, கலெக்டரானவர் - கிராமத்தில் வாசஞ்செய்பவர்களாயும், இந்த ஆக்டின்படி கொண்டுவரப்பட்டவியா

ஜ்ஜியங்களை விசாரிப்பதற்காக யாதொரு நியாயசபையில் மெம்பர்களாக உட்காருவதற்கு யோக்கியதையுள்ளவர்களாயுமிருக்கிற நபர்களைக்குறித்து ஒரு ஜாபிதா தயார்செய்து அதை அப்போதைக்கப்போது திருத்திக்கொண்டே வரவேண்டும். அந்த ஜாபிதாவைக் கிராம முன்ஸிபினுடைய கோர்ட் - வீட்டில் மாட்டிவைக்கவேண்டும்.

*வியாஜ்ஜியத்தில் வாதியாவது பிரதிவாதியாவது நியாய சபையாரால் விசாரணை நடத்தப்படவேண்டியதென்று சுதந்தரித்துக்கேட்கலாமென்பது.*

(3) அப்படிப்பட்ட யாதொரு கிராமத்திலுள்ள கிராமக்கோர்ட்டு முன்பாக தொடரப்படும்படியான யாதொரு வியாஜ்ஜியத்திலே, வாதி தன்னுடைய ப்ளெய்ன்டிலாவது பிரதிவாதி தன்னுடைய மறுமொழியிலாவது மூன்று ஜட்ஜுகள் கூடிய ஒரு நியாயசபையாரால் அந்த வியாஜ்ஜியம் விசாரணை செய்யப்படவேண்டியதென்று சுதந்தரித்துக்கேட்டு, இந்தப் பிரிவு (2) - வது உட்பிரிவில் சொல்லப்பட்ட ஜாபிதாவில் கண்டிருக்கும் யாதொரு நபரை அந்த நியாயசபைக்கு மெம்பராக நியமித்துக்கொள்ளலாம்; ஆனால், அந்த நபர் அவனுடைய வேலைக்காரனுகவாவது அடுத்தவனுகவாவது பந்துவாகவாவது வாரக்குடியாகவாவது, வியாஜ்ஜியத்தின் தேறுகடையில் நேராய்ப் பற்றுமுள்ளவனுகவாவது இருக்கக்கூடாது.

*நியாயசபைக்கு மெம்பர்களை நியமிப்பது.*

(4) வாதி தன்னுடைய ப்ளெய்ன்டிலே அப்படிப்பட்ட யாதொரு நபரை நியமித்துக்கொண்டிருந்தால், தனக்காகவும் ஒரு நபரை நியமித்துக்கொள்ளும்படி பிரதிவாதிக்கு ஸம்மனிலே தெரியப்படுத்தவேண்டும். பிரதிவாதியானவன் நியாயசபை வேண்டுமென்று சுதந்தரித்துக்கேட்டு அதற்கு யாதொரு நபரை நியமித்துக்கொண்டிருந்தால், தனக்காக ஒரு நபரை நியமித்துக்கொள்ளும்படி வாதிக்கு உத்தரவு பண்ணவேண்டும். யாதொரு நியாயசபைக்கு நியமிக்கப்பட்ட எந்த நபராவது அதில் சேர்ந்து காரியம் நடத்த நிராகரித்தாலும் கூடாதவராயிருந்தாலும், அவரை நியமித்த கட்சிக்காரனுக்கு நூதனமாய் வேறொரு நபரை நியமித்துக்கொள்ளும்படி உத்தரவுபண்ணவேண்டும்.

இந்த உட்பிரிவின்படி செய்யப்படும் உத்தரவின் தேதிமுதல் பரிஷ்காரமாய் இரண்டுநாள் சென்றபின்பு, அந்த உத்தரவின்படி கட்சிக்காரன் நடந்துகொள்ளாதிருக்கும் விஷயத்தில், அப்படி நடந்துகொள்ளாதிருக்கிற கட்சிக்காரன்பட்சத்திலே நியாயசபையில் காரியம் நடத்துவதற்காக மேற்படி ஜாபிதாவிலிருந்து ஒரு நபரைக் கிராம முன்ஸிப் தானே தெரிந்தெடுக்கவேண்டும்.

*நியாயசபை மெம்பர்களை ஸம்மன்மூலமாய் முன்ஸிப் வரவழைப்பது.*

(5) மேற்சொல்லியபடி நியமிக்கப்பட்ட அல்லது தெரிந்தெடுக்கப்பட்ட இரண்டு நபர்களையும் கிராமமுன்ஸிபானவர் வியாஜ்ஜியத்தை விசாரணை செய்யத் தம்மோடுகூட (நியாயசபையாக) உட்காரும்படி ஸம்மன்மூலமாய் வரவழைக்கவேண்டும்.

நடவடிக்கை.

(6) அந்த நியாயசபைக்குக் கிராமமுன்ஸிப் (தலைவர்) ப்ரெஸிடென்டாயிருக்கவேண்டும்; நடத்தப்படும் நடவடிக்கையை அவர் ஒழுங்குபடுத்தவேண்டும்; ஸம்மன்கள் நோடிஸுகள் முதலியவைகளையெல்லாம் அவர் தம்முடைய பெயராலேயே பிறப்பிக்கவேண்டும்; ஆனால், டிக்ரியை நியாயசபையைச்சேர்ந்த மூன்றுமெம்பர்கள் பெயராலும் எழுதவேண்டும். நியாயசபையிலுள்ள மெம்பர்கள் அபிப்பிராயத்தில் வேறுபட்டால், பெரும்பாலாருடைய அபிப்பிராயமெதுவோ அதுதான் ஏற்றுக்கொள்ளப்படும்.

நியாயசபையில் சேர்ந்து காரியம் நடத்த உள்ளாயிருப்பது.

(7) யாதொரு நியாயசபையில் சேர்ந்து காரியம் நடத்துவதற்கு இந்தப்பிரிவின்படி ஸம்மனமூலமாய் வரவழைக்கப்பட்ட யாதொரு நபர் எந்த மாசத்திலாகிலும் மூன்றுநாளைக்கு அதிகமாக அந்தச் சபையில மெம்பராக உட்காரவேண்டுமென்பதில்லை; ஆனால், அப்படிப்பட்ட ஒவ்வொரு நபரும் தன் முன்பாக ஆரம்பஞ்செய்யப்பட்ட யாதொரு வியாஜ்ஜிய விசாரணை முடிவுபெறுகிறவரையில ஹாஜராகி அந்த விசாரணையை நடத்தவேண்டியவராவார்.

நியாயசபையில் சேர்ந்து காரியம நடத்த நிராகரித்தாலும் தவறிப்போனாலும் தண்டனை.

(8) யாதொரு நியாயசபையில் சேர்ந்து காரியம் நடத்த இந்தப் பிரிவின்படி ஸம்மன்மூலமாய்க் கிரமமாக வரவழைக்கப்பட்ட யாதொரு நபர் நியாயமான முகாந்தரமில்லாமல் அப்படிச் செய்ய நிராகரித்தாலும் தவறிப்போனாலும், அந்த நபர் யாதொரு மாஜிஸ்ட்ரேட்டுக்கு முன் குற்றஸ்தாபனை செய்யப்படுவதன்மேல் இருபது ரூபாய்க்கதிகப்படாமல் அபராதம் விதிக்கப்படுவதற்குள்ளாவார்.

வியாஜ்ஜியங்களுக்காக ரெஜிஸ்டா வைக்கவும் நடவடிக்கைகளை எழுதவும் கிராமக்கர்ணம் முன்ஸிபுக்கு உதவிசெய்வது.

10. கிராம முன்ஸிபானவா கிராமக்கோர்ட்டில் தொடரப்பட்ட வியாஜ்ஜியங்களைக்குறித்து ஒரு ரெஜிஸ்டர்வைக்கவும் கோர்ட்டின் நடவடிக்கைகளை எழுதவும் வேண்டும்; உத்தரவுசெய்யப்படும்போது, அந்த ரெஜிஸ்டரில் பதிவுசெய்யவும் கோர்ட்டின் நடவடிக்கைகளை எழுதவும் கிராமக்கர்ணம் உதவிசெய்யவேண்டியவனாவான்.

கிராம ஊழியக்காரன் ஸம்மன்முதலியதைச் சேர்ப்பிப்பது.

11. இந்த ஆக்டின்படி பிறப்பிக்கப்பட்ட எல்லா ஸம்மன்களையும் நோடிஸுகளையும் கட்டளைகளையும் சேர்ப்பிப்பதும், இந்த ஆக்டின்படி ஜப்திசெய்யப்பட்ட அசையும்பொருளைக் கைப்பற்றுவதிலும் விற்பதிலும் ஒப்பிப்பதிலும் கிராமமுன்ஸிபினுடைய உத்தரவின்படி நடந்துகொள்வதும், சமாசாரம் கொண்டுபோகும் வேலை சாதாரணமாய் யாருடையதோ அந்த கிராம ஊழியக்காரனுடைய அலுவலாகும்.

12. முறையே 10 - வது 11 - வது பிரிவுகளினால் நிர்ணயிக்கப்பட்ட அலுவல்களைச் செய்வதற்கு, கிராமக் கர்ணம் அல்லது 11 - வது பிரிவில சொல்லியிருக்கிற கிராம ஊழியக்காரனுக்குப் பர்த்தியாகவாவது அவர்களோடுகூடவாவது யாவனொருவனை ஆலோசனை சபையிலுள்ள கவர்னரவர்களுடைய மேல்விசாரணைக்குட்பட்டு நியமிக்க டிஸ்ட்ரிகட் கலெக்டருக்கு அதிகாரமுண்டு.

கிராமக்கர்ணம் - கிராம ஊழியககாரன் - இவர்களுக்குப் பர்த்தியாகவாவது இவர்களோடு கூடவாவது யாதொரு நபரைக் கலெக்டர் நியமிக்கலாம்.

---

### 3-ம் அத்தியாயம்.

அதிகாரவரம்பும் தீர்மானமாயிருக்கிற விஷயங்களும் காலநிர்ணயமும்.

13. கிராமக்கோர்ட்டுகளால் விசாரணை செய்யப்படவேண்டிய தான வியாஜ்ஜியங்கள் எவையென்றால்—கடனாவது தாவாவாவது கணக்கு நிலுவையின்மேலாகிலும் மற்றப்படியாகிலும் தொகை அல்லது பெறுமானத்தில் இருபதுரூபாய்க்கு அதிகப்படாதபோது, கான்ட்ராக்டின்மேல் பாக்கியாயிருக்கிற பணத்திற்காகவாகிலும் ஜங்கம சொத்திற்காகவாகிலும அப்படிப்பட்ட சொத்தின் பெறுமானத்திற்காகவாகிலும் கொண்டுவரப்படும் தாவாக்கள்.

கிராமக்கோர்ட்டுகள் வியாஜ்ஜியங்களை விசாரணை செய்வது.

விலக்கு. ஆனால்—

(1) கூட்டுப்பங்கு வியாபாரக்கணக்கில் நிலுவை இவ்வளவென்று அதிற் சம்பந்தப்பட்ட நபர்களாவது அவர்களுடைய ஏஜெண்டுகளாவது முடிவு ஏற்படுத்தியிருந்தாலொழிய, அப்படிப்பட்ட நிலுவையைக் குறித்தாகிலும்,

(2) (உயில்) மரணசாஸனம் ஏற்படுத்தாமல் இறந்துபோயிருக்கும்விஷயத்தில் பங்குக்காகவாகிலும் பங்கில் ஒரு பாகத்திற்காகவாகிலும், மரணசாஸனத்தின்படி ஏற்பாடான பொருளுக்காகவாகிலும் பொருளில் ஒரு பாகத்திற்காகவாகிலும்,

(3) நிலத்தின் குத்தகைத்தொகையானது பிரதிவாதியால் கையெழுத்து போடப்பட்டிருக்கிற எழுத்துமூலமான கான்ட்ராக்டின்மேல் பாக்கியாயிருந்தாலொழிய, அப்படிப்பட்ட குத்தகைத் தொகைக்காகவாகிலும்,

(4) கவர்ன்மென்டாராலாகிலும் அவர்கள்மேலாகிலும் உத்தியோகமுறைமையில் ஸர்க்கார் உத்தியோகஸ்தர்களாலாகிலும் அவர்கள்மேலாகிலும்,

(5) மைனர்கள் அல்லது புத்திமாருட்டமுள்ளவர்களாலும் அவர்கள்மீதாகிலும்,

அப்படிப்பட்ட யாதொரு கோர்ட்டிலே வியாஜ்ஜியம் கொண்டுவரக்கூடாது.

14. கோர்ட்டுக்குமுன்பாக வியாஜ்ஜியத்தைச்சேர்ந்த இரு கட்சிக்காரர்களும் அனுமதி உடன்படிக்கை எழுதிக்கொடுக்கும்பட்சத்தில், யாதொரு கிராமக்கோர்ட்டார் - 13 - வது பிரிவில விவரித்துச் சொல்லப்பட்டிருக்கிற தன்மையுள்ளதாய்த் தொகை அல்லது மதிப்பு 200 ரூபாய்க்கதிகப்படாமலிருக்கிற வியாஜ்ஜியங்களை விசாரணைசெய்து தீர்மானிக்கலாம்.

சம்மதியின்மேல் 200 ரூபாய் வரையிலுள்ள வியாஜ்ஜியங்களை விசாரணைசெய்ய அதிகாரம்.

15. 16 - வது பிரிவில் சொல்லியிருக்கிற நிபந்தனைகளுக்குட்பட்டு, இந்த ஆகடின்படி கொண்டுவரப்படும் ஒவ்வொரு வியாஜ்ஜியமும - வியாஜ்ஜியம் ஆரம்பிக்கப்படுமபோது பிரதிவாதிகளெல்லாரும யாருடைய அதிகாரப் பிரதேச எல்லைக்குள் வாசஞ்செய்துகொண்டிருக்கிறார்களோ அல்லது தொழில் நடத்திக்கொண்டிருக்கிறார்களோ அல்லது லாபத்துக்காக நேராய் வேலைசெய்துகொண்டிருக்கிறார்களோ அப்படிப்பட்ட கிராம முன்ஸிபினுடைய கோர்ட்டில் தொடரப்படவேண்டும்.

இன்ன கோர்ட்டில் வியாஜ்ஜியம் தொடர வேண்டுமென்பது.

16. எந்த கிராம முன்ஸிபும் தாம் கட்சிக்காரராகவாவது நேராய்ப் பற்றுள்ளவராகவாவதிருக்கிற யாதொரு வியாஜ்ஜியத்தைப் பரிசீலனைபண்ணவுங்கூடாது; அப்படிப்பட்ட வியாஜ்ஜியத்தைச் சேர்ந்ததாகவாவது அதிலிருந்து உண்டாவதாகவாவதிருக்கிற யாதொரு நடவடிக்கை விஷயமாய் நீதிமுறையில தீர்மானஞ்செய்யவுங்கூடாது. அப்படிப்பட்ட ஒவ்வொரு வியாஜ்ஜியம் அல்லது நடவடிக்கையையும் அடுத்துப் பக்கத்திலிருக்கிற யாதொரு கிராமத்து முன்ஸிபினுடைய கோர்ட்டிலே தொடரலாம்.

கிராம முன்ஸிப் நேராய்ப் பற்றுள்ளவராயிருக்கும் வியாஜ்ஜியவிஷயத்தில் இன்னபடி.

17. யாதொரு வியாஜ்ஜிய மூலத்தின்மேல் வியாஜ்ஜியம் கொண்டுவரப்பட்டால், அந்த வியாஜ்ஜியமூலமானது அதற்குமுன்னமே கொண்டுவரப்பட்ட வியாஜ்ஜியத்தில் அதே கட்சிக்காரர்களுக்குள்ளாவது அவர்கள் யாரை முன்னிட்டுக்கொண்டு தாவாசெய்கிறார்களோ அவர்களுக்குள்ளாவது தகுந்த அதிகாரமுள்ள யாதொரு கோர்ட்டாரால் விசாரணைசெய்து தீர்மானிக்கப்பட்டிருக்கும்பட்சத்தில், அப்படி மறுபடியும் கொண்டுவரப்படுகிற யாதொரு வியாஜ்ஜியத்தை எந்தக் கிராமக்கோர்ட்டாரும் பரிசீலனை செய்யக்கூடாது.

தீர்மானமாயிருக்கிற விஷயங்கள்.

18. வியாஜ்ஜியமூலத்தைப்பற்றிச் செய்ய வாதிக்கு ஹக்குண்டாயிருக்கிற தாவா முழுமையையுங் குறித்து ஒருமிக்க யாதொரு கிராமக்கோர்ட்டில் வியாஜ்ஜியங் கொண்டுவரவேண்டும்; ஆனால், வாதியானவன் அந்தக் கோர்ட்

வியாஜ்ஜியத்தில் தாவா முழுமையையும் சேர்ப்பது.

டின் அதிகாரவரம்புக்குள் வியாஜ்ஜியம் கொண்டுவரும்பொருட்டுத் தன்னுடைய தாவாவில் எவ்வளவையாவது தள்ளிவிடலாம்.

தாவாவில் ஒரு பாகத்தைத் தள்ளிவிடுவது.

வாதியானவன் தன்னுடைய தாவாவில் யாதொரு பாக சம்பந்தமாய் வியாஜ்ஜியம் தொடராதிருந்தாலும், யாதொரு பாகத்தை வேண்டுமென்று தள்ளிவிட்டாலும், அப்படிப்பட்ட பாகத்திற்காவது பாகசம்பந்தமாயாவது அவன் வேறே வியாஜ்ஜியம் கொண்டுவரலாகாது.

கிராமக் கோர்ட்டுகளால் விசாரணை செய்யப்படக்கூடாத விஷயங்களை இடையில் தீர்மானிப்பது.

19. 13-வது 15-வது பிரிவுகளின்படி கிராமக்கோர்ட்டாரால் விசாரணை செய்யப்படத்தக்க யாதொரு வியாஜ்ஜியத்தைத் தீர்மானிக்கையில், அந்த வியாஜ்ஜியத்தைச்சேர்ந்த கட்சிக்காரர்களுக்குள் அசையாப்பொருளைப்பற்றிய ஹக்கைக் குறித்தாவது, அவர்களில் யாருடைய சட்டசம்பந்தமான முறைமையைக்குறித்தாவது, அவர்கள் யாரை முன்னிட்டுக்கொண்டு தாவா செய்கிறார்களோ அவர்களுடைய சட்டசம்பந்தமான முறைமையைக்குறித்தாவது, யாதொரு கான்ட்ராக்ட் அல்லது கடமை ஏற்பட்டிருப்பதைக்குறித்தாவது விவாதமுண்டாயிருக்கிற எந்த விஷயம் நேராய் அந்த வியாஜ்ஜியவிஷயமாயிருக்கும்பட்சத்தில் கிராமக் கோர்ட்டாரால் இந்த ஆக்டின்படி விசாரணை செய்யப்படத்தக்கதல்லவோ அப்படிப்பட்ட யாதொரு விஷயத்தை இடையிலே தீர்மானிக்கவேண்டிய அவசியமிருந்தால், அந்த வியாஜ்ஜியத்தைத் தீர்மானிப்பதற்கு எவ்வளவு மட்டில் அவசியமாயிருக்கலாமோ அவ்வளவுமட்டில், ஹக்கைக்குறித்தாகிலும் சட்டசம்பந்தமான முறைமையைக்குறித்தாகிலும் கான்ட்ராக்ட் அல்லது கடமையைக்குறித்தாகிலும் உண்டாயிருக்கிற அப்படிப்பட்ட விவாதத்தைத் தீர்மானிக்க கிராமக் கோர்ட்டாருக்கு அதிகாரமுண்டு; ஆனால், அந்தத் தீர்மானமானது அதே கட்சிக்காரர்களுக்குள்ளாவது அவர்களுடைய பிரதிநிதிகளுக்குள்ளாவது வேறே யாதொரு வியாஜ்ஜியம் கொண்டுவரப்பட்டபோதிலும் அந்த வியாஜ்ஜியத்தில், அப்படிப்பட்ட ஹக்கு - சட்டசம்பந்தமான முறைமை - கான்ட்ராக்ட் அல்லது கடமையைக்குறித்து ருஜுவாக எடுத்துக்கொள்ளப்படாது.

கால நிர்ணயம்.

20. 1877-ம்வருஷத்திய இந்துதேசத்துக் காலநிர்ணயச் சட்டத்திலுள்ள நிபந்தனைகள் இந்த ஆக்டின்படியான வியாஜ்ஜியங்களுக்கும் விண்ணப்பங்களுக்கும் சம்பந்தப்படவேண்டும்.

விலக்கு.

ஆனால், வியாஜ்ஜியம் தொடரவாவது விண்ணப்பஞ்செய்துகொள்ளவாவது சுதந்தரம் முதலில் எப்போது ஏற்பட்டதோ அந்தக் காலமுதற்கொண்டு மூன்றுவருஷம் சென்றபின்பு யாதொரு கிராமக்கோர்ட்டார் அப்படிப்பட்ட யாதொரு வியாஜ்ஜியத்தையாவது விண்ணப்பத்தையாவது ஏற்றுக்கொள்ளக்கூடாது.

21. டிஸ்ட்ரிக்ட் முன்ஸிபானவர் கட்சிக்காரர்களில் யாராகிலும் விண்ணப்பஞ்செய்துகொள்வதன்மேல், யாதொரு கிராமக்கோர்ட்டிலிருந்து எந்த வியாஜ்ஜியத்தையாகிலும் வரவழைத்துக்கொண்டு அது தம்முடைய கோர்ட்டிலேயே தொடரப்பட்டிருந்தாற்போல அதைத் தாமே பரிசீலனைசெய்யலாம், அல்லது தம்முடைய அதிகாரப் பிரதேச எல்லைக்குள்ளிருக்கும் வேறே யாதொரு கிராமக்கோர்ட்டுக்குப் பரிசீலனைக்காக அதை அனுப்பலாம். ஆனால், யாதொரு கிராமக்கோர்ட்டிலிருந்து வியாஜ்ஜியத்தை வரவழைத்துக்கொண்டு அதை டிஸ்ட்ரிக்ட் முன்ஸிப் பரிசீலனைபண்ணும்படி விண்ணப்பஞ் செய்துகொள்ளுகிற எந்த கட்சிக்காரனாவது - அப்படி வியாஜ்ஜியத்தை வேறொரு கோர்ட்டுக்கு மாற்றும்படி உத்தரவு செய்யப்படுவதற்கு முன்னமே, 1870-ம்ளூத்து கோர்ட் கட்டண ஆக்டின்படி அதற்காகச் செலுத்தப்படவேண்டிய கட்டணத் தொகையைச செலுத்திவிடவேண்டும.

வியாஜ்ஜியங்களை வேறொரு கோர்ட்டுக்கு அனுப்புவது.

---

## 4 - ம் அத்தியாயம்.

*வியாஜ்ஜியங்களைத் தொடருவதையும் தயார்செய்வதையும், அதிகாரம்பெற்ற ஏஜென்டுகளையும், கட்சிககாரர்களுககு ஸம்மன பிறப்பிப்பதையும் சேர்ப்பிப்பதையும், விசாரணையை நிறுத்திவைப்பதையும், ஹாஜராகாவிட்டால் இன்னதாகுமென்பதையுங்குறித்து.*

22. இந்த ஆக்டின்படி கொண்டுவரப்படுகிற பிரதி வியாஜ்ஜியத்தையும் கிராமமுன்ஸிபினிடத்தில் ப்ளெய்ண்ட்கொடுத்து அதனமூலமாய்த் தொடரவேண்டும்; மேலும், பிரதிவாதிகள் எத்தனைபேரிருக்கிறார்களோ அத்தனை ப்ளெய்ன்ட் பிரதிகளையுங்கூடக் கொடுக்கவேண்டியது. ஸம்மன் பிரதியோடுகூட ப்ளெய்ன்ட் பிரதி ஒன்றை இதில் பின்னால் சொல்லியிருக்கிற விதமாய ஒப்பிக்கவேண்டும், அல்லது ஒட்டவேண்டும்.

வியாஜ்ஜியத்தை ப்ளெய்ன்ட் கொடுத்து அதன்மூலமாய் ஆரம்பிப்பது.

23. ப்ளெய்ன்டை கிராமத்தில் வழங்குகிற பாஷையிலே எழுதி, அதில் வாதியாவது அவனில்லாவிட்டால் அவனால் கிரமமாய் அதிகாரங்கொடுக்கப்பெற்ற ஏஜெனடாவது கையெழுத்து போடவேண்டும் ; அதில் கண்டெழுதவேண்டிய விவரங்களென்னவென்றால் :—

ப்ளெய்ன்டில் எழுதவேண்டிய விவரங்கள்.

(a) வாதி - பிரதிவாதி - இவர்களுடைய பெயரும் தொழில் முதலிய விவரங்களும் வாசஸ்தலமும் ;

(b) வியாஜ்ஜியமூலத்திற்குச் சுருக்கமான ஸ்டேட்மென்டும், வியாஜ்ஜியமூலம் பிறந்த காலமும் ;

(c) கேட்டுக்கொள்ளுகிற பரிகாரமும், தாவாசெய்யப்படுகிற மொத்த தொகை அல்லது பெறுமானமும்.

நேராக ஹாஜராவது அல்லது ஏஜென்டை ஹாஜர்ப்படுத்துவது.

24. யாதொரு கிராமக்கோர்ட்டுக்குமுன் வந்திருக்கிற வியாஜ்ஜியத்தைச்சேர்ந்த எந்த கட்சிக்காரனாவது தனக்காக ஹாஜராகி நியாயவாதம் பண்ணும்படி யாதொரு நபரை வகாலத்து நாமா எழுதி ஏற்படுத்தலாம்; ஆனால், நியாயம் நடப்பதற்கு கட்சிக்காரன் நேரில் ஹாஜராவது அவசியமென்று கிராமமுன்ஸிப் அபிப்பிராயப்படும்போது, அந்த வியாஜ்ஜியத்தைச்சேர்ந்த கட்சிக்காரர்களில் யாரையாவது நேரில்வந்து ஹாஜராகும்படி உத்தரவு பண்ணக் கிராமமுன்ஸிபுக்கு அதிகாரமுண்டு; அப்படி உத்தரவுசெய்யப்பட்ட கட்சிக்காரன நேரில வந்து ஹாஜராகாவிட்டால், நேராய்த் தானாவது தனக்காக ஏஜென்டாவது ஹாஜராகாதபட்சத்தில் எப்படியோ அதே பலப்பிராப்திகளுக்கு அவன் உள்ளாகவேண்டும்.

பிரதிவாதிக்கு ஸம்மனை இன்னபடி சேர்ப்பிப்பது.

25. ப்ளெய்ன்ட் கிரமமாய்க் கொடுக்கப்பட்டபின்பு அதைக் கிராமமுனஸிப் ரெஜிஸ்டர் செய்விக்கவேண்டியதுமலலாமல், குறித்த ஒரு தினத்தில் பிரதிவாதி ஹாஜராகித் தாவாவுக்கு உத்தரவு சொல்லவேணடுமென்று எழுதிய ஸம்மன் மூலமாய்க் கட்டளைபண்ணவும் வேண்டும். சமாசாரம் கொண்டுபோகும் வேலை சாதாரணமாய் யாருடையதோ அந்த கிராம ஊழியக்காரனாவது, 12-வது பிரிவினபடி கலெக்டரால் நியமிக்கப்பட்ட வேறே யாதொரு நபராவது ஸம்மனைப் பிரதிவாதிக்கு நேரில் சேர்ப்பிக்கவும அதற்கு ஒரு பிரதியை அவனிடத்தில் ஒப்பிக்கவும வேண்டும்.

ஸம்மன் சேரவொட்டாமல் பிரதிவாதி தப்பித்துக் கொண்டிருக்கும்போது அதை இன்னபடி சேர்ப்பிப்பது.

26. ஸம்மன் சேராமலிருக்கும்படி பிரதிவாதி தப்பித்துக்கொண்டிருக்கிறானென்று கிராமமுன்ஸிபுக்குத் திருப்திகரமாய்த் தெரியவந்தால, கிராமமுனஸிபானவர் பிரதிவாதியினுடைய குடும்பத்திலே அவனோடுகூட வாசஞ்செய்கிற வயசுவந்த யாதொரு ஆண்பிள்ளையினிடத்தில் அதைச் சோப்பித்து அதற்கு ஒரு பிரதியை ஒப்பிக்கும்படியாவது, பிரதிவாதி சாதாரணமாய குடியிருககிற வீட்டில் தெரியும்படியான ஒரு இடத்திலே ஸம்மன் பிரதியை ஓட்டுமபடியாவது உத்தரவு பண்ணலாம்.

கோர்ட்டின் அதிகாரப்பிரதேச எல்லைக்கு வெளியில் பிரதிவாதியிருந்தால் ஸம்மனை இன்னபடி சோப்பிப்பது.

27. கிராமக்கோர்ட்டினுடைய அதிகாரப்பிரதேச எல்லைக்கு வெளியிலிருக்கிற பிரதிவாதிககு ஸமமனைச் சோப்பிககவேண்டிய அவசியமிருந்தால், அதை டிஸ்ட்ரிக்ட் முனஸிபுக்கு அனுப்பவேண்டும்; அவர் அதைத் தாமே பிறப்பித்திருந்தாற்போல அதைச் சேர்ப்பிக்கும்படிச் செய்யவேண்டும்; பின்பு அந்த ஸம்மனை, அது சேர்ப்பிக்கப்பட்டதென்கிற ரிபோர்ட்டோடுகூட கிராமக்கோர்ட்டுக்குத் திரும்ப அனுப்பவேண்டும். அந்த ரிபோர்ட்டானது அதில் கண்ட சங்கதிகளுக்குப் பிரத்தியட்சமான ருஜுவாகும.

28. நிர்ணயிக்கப்பட்ட தினத்தில் பிரதிவாதி நேரில் ஹாஜராகாவிட்டாலும் அவனுக்காக ஏஜெண்ட் ஹாஜராகாவிட்டாலும், ஸம்மன் கிரமமாய்ச் சேர்ப்பிக்கப்பட்டதென்று ருஜுவாகும்பட்சத்தில், கிராமக் கோர்ட்டார் (எக்ஸ்பார்ட்டி) ஒருதலையாய் விசாரணைசெய்யத் தொடங்கலாம்.

*பிரதிவாதி ஹாஜராகாவிட்டால் நடவடிக்கை.*

ஸம்மன் கிரமமாய்ச் சேர்ப்பிக்கப்பட்டதென்று ருஜுவாகாவிட்டால், கிராமமுன்ஸிப் புது ஸம்மன் பிறப்பிக்கவேண்டும்.

ஒவ்வொரு பிரதிவாதியும் வியாஜ்ஜியத்தைக்குறித்துப் பரிஷ்காரமாய் இரண்டுநாளைய நோடிஸ் கொடுக்கவேண்டுமென்று சுதந்தரித்துக் கேட்கலாம்; நிர்ணயிக்கப்பட்ட தினத்திலே உத்தரவுசொல்லப் பிரதிவாதிக்குச் சாத்தியமாயிருக்கும்படி தகுந்த காலத்தில் ஸம்மன் சேர்ப்பிக்கப்படாதிருந்தால், வியாஜ்ஜிய விசாரணையை நிறுத்தி வேறொரு நாளைக்கு வைத்துக்கொள்ளவேண்டும்; அதைக் குறித்துப் பிரதிவாதிக்கு எழுத்துமூலமாக நோடிஸ் கொடுக்கவேண்டும்.

*வியாஜ்ஜியத்தைக்குறித்து இரண்டுநாளைய நோடிஸ் கொடுக்கவேண்டுமென்று பிரதிவாதி சுதந்தரித்துகேட்கலாம்.*

29. கிராம ஊழியக்காரனுலல்லாமல் மற்றப்படி இந்த ஆக்டின் பிரகாரம் சேர்ப்பிக்கப்படுகிற ஒவ்வொரு ஸம்மனும் அது யார்பட்சத்தில் பிறப்பிக்கப்படுகிறதோ அந்தக் கட்சிக்காரனுடைய செலவிலே சேர்ப்பிக்கப்படவேண்டும்; அப்படி சேர்ப்பிப்பதற்கு வாங்கவேண்டிய கட்டணத் தொகை இவ்வளவென்று ஆலோசனை சபையிலுள்ள கவர்னரவர்களால் அப்போதைக்கப்போது நிர்ணயிக்கப்படும்; அந்தக் கட்டணத் தொகையானது இதுவிஷயத்தில் ஆலோசனைசபையிலுள்ள கவர்னரவர்களால் நிர்ணயிக்கப்படுகிற விதமாய் அவர்களால் ஏற்படுத்தப்படும் விதிகளுக்குட்பட்டு கிராமமுன்ஸிபினுல் வாங்கப்படவேண்டும்.

*யாருக்காகக் கட்டளை பிறப்பிக்கப்படுகிறதோ அந்த கட்சிக்காரனுடைய செலவில் அதைச் சேர்ப்பிப்பது.*

*வாதி ஹாஜராகாதிருந்து பிரதிவாதி தாவாவை ஒப்புக்கொள்ளாவிட்டாலும வாதியினுடைய தவறுதலினுலே ஸம்மன் சேர்ப்பிக்கப்படாவிட்டாலும் நடவடிக்கை.*

30. பிரதிவாதி ஹாஜராகும்படி நிர்ணயிக்கப்பட்ட தினத்திலே—

(1) உபய கட்சிக்காரர்களும் ஹாஜராகாவிட்டாலும்,

(2) வாதி ஹாஜராகாமல் பிரதிவாதிமாத்திரம் ஹாஜராகி, தாவாவை அவன் ஒப்புக்கொள்ளாவிட்டாலும்,

(3) வாதியினுடைய தவறுதலினுலே பிரதிவாதிக்கு ஸம்மன் சேர்ப்பிக்கப்படாதிருந்து, அந்தப் பிரதிவாதி ஹாஜராகாவிட்டாலும்,

வியாஜ்ஜியத்தைத் தள்ளிவிடக்கூடாதென்று கிராமக்கோர்ட்டார் வித்தரவுசெய்யாதபட்சத்தில், அந்த வியாஜ்ஜியத்தைத் தள்ளிவிட வேண்டும்.

*வாதி ஹாஜராகாதிருந்து பிரதிவாதி தாவாவை ஒப்புக்கொண்டால் நடவடிக்கை.*

31. வாதி ஹாஜராகாமல், பிரதிவாதிமாத்திரம் ஹாஜராகி, தாவா முழுமையையுமாவது அதில் யாதொரு பாகத்தையாவது அவன் ஒப்புக்கொள்ளுகிற பட்சத்தில், அப்படி ஒப்புக்கொள்வதற்கு ஒத்திருக்கும்படியாகக் கிராமக்கோர்ட்டார் பிரதிவாதியினமேல் தீர்ப்புசெய்யவேண்டும்; ஆனால், தாவாவில் ஒருபாகமாத்திரம் ஒப்புக்கொள்ளப்படும் விஷயத்தில, வியாஜ்ஜிய விசாரணையை வேறொருநாள் வரையிலே கோர்ட்டார் நிறுத்திவைக்கலாம்.

*30 அல்லது 31 - வது பிரிவின்படி செய்யப்பட்ட உத்தரவைக் காரணம் தெரிவிக்கப்படுவதன்மேல் ரத்து செய்வது.*

32. எந்த வியாஜ்ஜியமாவது 30-வது பிரிவு (1) - வது அல்லது (3) - வது உட்பிரிவின்படி தள்ளிவிடப்பட்டால், வாதியானவன் மறுபடி வியாஜ்ஜியங் கொண்டுவரலாம்; வியாஜ்ஜியத்தைத் தள்ளிவிடும்படி 30 - வது பிரிவு (2) - வது உட்பிரிவின்பிரகாரமசெய்யப்பட்ட உத்தரவு தேதிமுதற்கொண்டாவது, 31-வது பிரிவின் பிரகாரம் தாவாவில் ஒரு பாகத்திற்குமாத்திரம் செய்யப்பட்ட டிக்ரி தேதி முதற்கொண்டாவது முப்பது தினங்களுக்குள் வாதியானவன் தகுந்த காரணத்தினாலே தான ஹாஜராவதற்குக் கூடாமையாய் விட்டதென்று கிராமகோர்ட்டாருக்குத் திருப்திகரமாய் தெரிவித்தால், கோர்ட்டார்-வியாஜ்ஜியம் தளளுபடியானதையாகிலும் டிக்ரியையாகிலும ரத்துசெய்யவேண்டியதுமல்லாமல், வியாஜ்ஜியத்தை நடத்துவதற்கு ஒரு நாளை நியமிக்கவும வேண்டும்.

*பிரதிவாதியின்மேல் ஒருதலையாகச் செய்யப்பட்ட டிக்ரியை ரத்துபண்ணுவது.*

33. யார்மேல் ஒருதலைபாக டிக்ரி செய்யப்பட்டிருக்கிறதோ அந்தப் பிரதிவாதியானவன் - தீர்ப்பை அமுலுக்குக் கொண்டுவருவதற்கான யாதொரு பராமெஸையை நிறைவேற்றுகிற தேதிமுதல் முப்பது தினங்களுக்குள், கிராமக்கோர்ட்டுக்குத் தீர்ப்பை ரத்துபண்ணவேண்டுமென்று மனுசெய்துகொள்ளலாம; ஸம்மனாவது நோடிஸாவது கிரமமாய்ச் சேர்ப்பிக்கப்படவில்லையென்றாகிலும், பிரதிவாதி ஹாஜராவதற்குத் தகுந்த காரணத்தினாலே கூடாமையாய்விட்டதென்றாகிலும் திருப்திகரமாய்த் தெரியவந்தால், கோர்ட்டார்-டிக்ரியை ரத்துபண்ணவேண்டியதுமல்லாமல், வியாஜ்ஜியத்தை நடத்துவதற்கு ஒரு நாளை நியமிக்கவும் வேண்டும.

*எதிர் கட்சிக்காரனுக்கு நோடிஸ் கொடாமல டிக்ரியை ரத்துபண்ணக்கூடாதென்பது.*

34. 32 அல்லது 33 - வது பிரிவின்படி யாதொரு மனு செய்யப்படுவதன்மேல், எதிர்கட்சிக்காரனுக்கு நோடிஸ் கொடாமல் டிக்ரியை ரத்துசெய்யக்கூடாது.

## 5-ம் அத்தியாயம்.

**வியாஜ்ஜியங்களை விசாரணைசெய்வதையும் தள்ளிக்கொள்வதையும் ராஜியாய்ப்போவதையும் சாட்சிகளுக்கு ஸம்மன் பிறப்பிப்பதையும் அவர்களை விமரிசை செய்வதையுங்குறித்து.**

இரு கட்சிக்காரர்களும் ஹாஜராவதன்மேல் நடவடிக்கை.

35. பிரதிவாதி ஹாஜரானால், ப்ளெய்ன்டில் சொல்லப்பட்ட தாவாவை அவன் ஒப்புக்கொள்ளுகிறானென்று கோர்ட்டார் அவனை விசாரணை செய்து தெரிந்துகொள்ளவேண்டும். அவன் அந்த தாவாவை ஒப்புக்கொண்டாலும், அந்த வியாஜ்ஜியத்தில் கட்சிக்காரர்கள் ராஜியாய்ப்போனாலும், அப்படி ஒப்புககொண்டதையாவது ராஜியாய்ப்போனதையாவது எழுதி ரிகார்டசெய்து அதற்குக் கட்சிக்காரர்கள் கையெழுத்துபோட வேண்டும்; அதற்கொத்திருக்கும்படியாகக் கோர்ட்டார் டிக்ரி பிறப்பிக்கவேண்டும். பிரதிவாதி அந்த தாவாவை ஒப்புக்கொள்ளாவிட்டால், தனக்குள்ள ஆட்சேபணைகளை வாய்மொழியாகவோ அல்லது எழுத்துமூலமாகவோ தெரிவிக்கும்படி அவனுக்கு உத்தரவு பண்ண வேண்டும்; கோர்ட்டார் தங்களுக்கு யுக்தமாகத் தோற்றினால் (ஸ்டேட்மென்ட்) விவரப்பத்திரிகை எழுதித் தாக்கல்செய்ய அவனுக்குச் சாத்தியமாயிருக்கும்படி வியாஜ்ஜியத்தை நிறுத்திவைக்கலாம்.

வியாஜ்ஜியத்தைத் தள்ளிக்கொள்வது.

36. வாதியானவன் வியாஜ்ஜியத்தைத் தள்ளிக்கொள்ள விரும்பினால், அவன அதை எழுதிக கோர்ட்டாருக்குத் தெரியப்படுத்தவேண்டும்; கோர்ட்டார் அந்த வியாஜ்ஜியத்தைப் பயிலிருந்து அடித்துப்போடவேண்டும்; அந்த வியாஜ்ஜியமூலத்தைகுறித்து மறுபடியும வியாஜ்ஜியம் கொண்டுவரலாகாது.

இன்னபடிக்கானால் வியாஜ்ஜியத்தைப் பிரமாணத்தின்மேல் பைசல்செய்யலாமெனபது.

37. இருகட்சிக்காரர்களில எவனாவது மறுகட்சிககாரனுடைய பிரமாணத்தினமேல் வியாஜ்ஜியத்தைப் பைசல்செய்துகொளள மனமுளளவனாயிருந்து, அந்த மறுகடசிக்காரன் அதறகுச சமமதித்துப் பிரமாணஞ்செய்தால, அந்த பிரமாணத்திற்கு ஒத்தபடி கோர்ட்டார் தீர்ப்பு சொல்லவேண்டும.

எதிர்க்கடன்.

38. சட்டப்படி பிரதிவாதிக்கு வாதி கொடுக்கவேணடியதாயிருந்து அந்தப் பிரதிவாதி யாதொரு கிராமக் கோர்ட்டில் வியாஜ்ஜியம் கொண்டுவரக் கூடியதாயிருக்கிற யாதொரு தொகையைப் பிரதிவாதி எதிர்க்கடனைகத் தெரிவிக்கலாம். அந்த எதிர்க்கடன் தாவா ஸ்தாபிதஞ்செய்யப்பட்டால், இருகட்சிக்காரர்களில் யாருக்காவது எவ்வளவுதொகைபாக்கியாயிருக்கிறதென்று கடைசியில தெரியவருகிறதோ அவ்வளவு தொகைககு டிக்ரி பிறப்பிககவேண்டும்.

ஹாஜராயிராத சாட்சிகளை ஸம்மனனுப்பி வரவழைப்பது.

39. பிரதிவாதியினுடைய ஸ்டேட்மென்ட் தெரிவிக்கப்பட்ட பின்பு, கோர்ட்டார் தாவாவின் உண்மையைக் குறித்துப் பரிசீலனைசெய்யத் தொடங்கவேண்டியதுமல்லாமல், இருகட்சிக்காரராலும் கோரிக்கொள்ளப்பட்ட சாட்சிகளில் ஹாஜராயிராதவர்களை ஸம்மனனுப்பி வரவழைக்கவும் வேண்டும்.

40. கிராமக்கோர்ட்டினுடைய அதிகார எல்லைக்குள் வாசஞ்செய்கிற யாதொரு சாட்சியை வாய்மொழியாகவாவது எழுத்துமூலமாகவாவது ஸம்மனனுப்பி வரவழைக்கலாம். கோர்ட்டினுடைய அதிகார எல்லைக்கு வெளியில் ஐந்து மைல் தூரத்திற்குள்ளாக வாசஞ்செய்கிற யாதொரு சாட்சியை எழுதிய ஸம்மன்மூலமாய் வரவழைக்கலாம்; அந்த ஸம்மனை அவன் யாருடைய அதிகார எல்லைக்குள் வாசஞ்செய்கிறானோ அந்த கிராம முன்ஸிப் மூலமாய்ச் சேர்ப்பிக்கவேண்டும். எந்த சாட்சியாவது கோர்ட்டினுடைய அதிகார எல்லைக்கு வெளியில் ஐந்துமைலுக்கு மேற்பட்ட தூரத்தில் வாசஞ்செய்தால், கோர்ட்டார்-சவால்கள் எழுதிக்கொடுக்கும்படி கட்சிக்காரர்களுக்கு உத்தரவு செய்யலாம்; அப்படி கொடுக்கப்பட்ட சவால்களை அந்த சாட்சி யாருடைய அதிகார எல்லைக்குள் வாசஞ்செய்கிறானோ அந்த கிராமமுன்ஸிபுக்கு ஒரு கடிதமெழுதி அதோடு அனுப்பவேண்டும்; அந்த முன்ஸிபானவர் உடனே அந்த சாட்சியை ஸம்மனனுப்பி வரவழைத்து அந்த சவால்களின்மேல் அவனை விமரிசை செய்யவேண்டியதுமல்லாமல், அவன் சொல்லும் ஜவாபை வியாஜ்ஜியம் நடந்துகொண்டிருக்கிற கோர்ட்டுக்கு அனுப்பிவிடவேண்டும்.

*சாட்சிகளுக்கு இன்னவிதமாய் ஸம்மன் சேர்ப்பிப்பது.*

*இன்ன விஷயங்களில் சவால்கள் அனுப்புவது.*

41. ஸம்மனிலே, அது யாருக்கு அனுப்பப்படுகிறதோ அந்த நபர் ஹாஜராகிச் சாட்சியம் சொல்லவேண்டியதென்றாவது தஸ்தவேஜைக் கொண்டுவந்து காட்டவாகிலும் காட்டுவிக்கவாகிலும் வேண்டியதென்றாவது உத்தரவு பண்ணலாம்.

*ஹாஜராகிச் சாட்சியம் சொல்லவாவது தஸ்தவேஜைக் கொண்டுவந்து காட்டும்படியாவது ஸம்மன பிறப்பிப்பது.*

42. தேசாசாரப்படிக்கும் வழக்கப்படிக்கும் பகிரங்கத்தில் வந்து ஹாஜராகும்படி வரவழைக்கப்படக்கூடாத ஸ்திரீகளையும், கோர்ட்டிலே நேரில் ஹாஜராவதினின்றும் நிவர்த்திசெய்யப்பட்டிருக்கிற நபர்களையும், வியாதியினாலாவது துர்ப்பலத்தினாலாவது ஹாஜராகக் கூடாதவராயும் ஹாஜரானால் மிகுந்த துன்பத்துக்குள்ளாகவேண்டியவராயுமிருக்கிற யாதொரு நபரையும், ஸம்மனனுப்பி வரவழைக்ககூடாது; ஆனால், அப்படிப்பட்ட யாதொரு நபரினுடைய சாட்சியம் அவசியமாயிருக்கும்போது, அப்படிப்பட்டவரை அவருடைய இருப்பிடத்தில கிராமக்கோர்ட்டார் விமர்சை செய்யவேண்டும்.

*சில ஸ்திரீகளும் வேறே சில நபர்களும் நேராய ஹாஜராகவேண்டியதில்லையென்று நிவாரணை.*

43. சாட்சிகளைப் பிரமாணத்தின்மேலாவது பிரமாணபூர்வகமான உறுதிமொழியின்மேலாவது விமரிசை செய்யவேண்டும்; ஆனால், சாட்சிகளுடைய வாக்குமூலத்தைக் கிராமக்கோர்ட்டார் எழுதிக்கொள்ளவேண்டுமென்கிற அவசியமில்லை.

*சாட்சிகளை விமரிசை பண்ணுவது*

ராஜியாய்ப் போகும் பொருட்டாவது வேறே காரணத்தினாலாவது வியாஜ்ஜியத்தை நிறுத்திவைப்பது.

44. கட்சிக்காரர்கள் அந்த விஷயத்திலே ராஜியாய்ப்போவார்கள் போயிருக்கிறதென்று தெரியவந்தாலும், தகுந்த வேறே யாதொரு காரணம் இருந்தாலும், கிராமக்கோர்ட்டார்-கட்சிக்காரர்களுக்கெதிரிலாவது பிரதிவாதி ஹாஜராகாத விஷயங்களிலே வாதிக்கெதிரிலாவது ஒரு தினத்தை நிச்சயித்து அந்த தினம்வரையில் வியாஜ்ஜிய விசாரணையை நிறுத்திவைக்கலாம் அந்த தினத்தில் கட்சிக்காரர்களாவது அவர்களிலெவராவது ஹாஜராகத் தவறிப்போனால், கிராமக்கோர்ட்டார்-வியாஜ்ஜியத்தைப் பைசல் செய்வதைக்குறித்து 30-31-வது பிரிவுகளினால் நிர்ணயிக்கப்பட்ட விதங்களில் எதன்படிக்காவது வியாஜ்ஜியத்தைப் பைசல்செய்யத் தொடங்கலாம், அல்லது தமக்கு யுக்தமாகக் காணுகிற வேறே உத்தரவு பிறப்பிக்கலாம்.

---

## 6-ம் அத்தியாயம்.

*டிக்ரியையும் அதை நிறைவேற்றுவதையுங் குறித்து.*

விசாரணைசெய்து முடிந்தபின்பு கோர்ட்டார் டிக்ரி பிறப்பிப்பது.

45. கட்சிக்காரர்களையாவது அவர்களுடைய ஏஜென்டுகளையாவது விசாரணைசெய்ததும், உபயபட்சத்துச் சாட்சியத்தையும் யோசித்துமான பிறகு, கிராமக்கோர்ட்டார் நியாயமாகவும் நடுவுநிலைமையாகவும் மனச்சாட்சிக்குப் பொருந்தினதாகவும் காணுகிறபடி டிக்ரி பிறப்பிக்கவேண்டும்.

டிக்ரியில் எழுதவேண்டியவை.

46. டிக்ரியிலே, வியாஜ்ஜிய நம்பரையும் கட்சிக்காரர்களின் பெயரையும் தாவாவின் விவரங்களையும் விமரிசை செய்யப்பட்ட சாட்சிகளின் பெயரையும் பார்வையிடப்பட்ட எக்ஸிபிட்டுகள் (ஆதாரவுகள்) இன்னவையென்பதையும் அதன்மேல் செய்த தீர்மானத்தையும் அந்தத் தீர்மானஞ்செய்ததற்குள்ள ஹேதுக்களையும் கண்டெழுதவேண்டும். தீர்மானஞ்செய்யப்பட்ட ரொக்கம் இவ்வளவு என்பதையும், ஒப்பிக்கப்படவேண்டிய அசையும்பொருள் இன்னதென்பதையும், ஒப்பிக்கத்தவறுகிற பட்சத்தில் அதற்குப் பர்த்தியாகச் செலுத்தவேண்டிய தொகை இவ்வளவென்பதையும், வியாஜ்ஜியச்செலவு இவ்வளவென்பதையும், அந்தச்செலவு இன்னின்ன கட்சிக்காரர்களால் இவ்வளவிவ்வளவு செலுத்தப்படவேண்டியதென்பதையும், அந்த டிக்ரியில் குறிக்கவேண்டும்.

டிக்ரி எந்த தேதியில் பிறப்பிக்கப்படுகிறதோ அந்தத் தேதிபோட்டு அதில் கிராமமுன்ஸிப் கையெழுத்துசெய்யவேண்டும். யாதொரு நியாயசபையாரால் வியாஜ்ஜிய விசாரணை செய்யப்பட்டிருக்கும் விஷயத்தில், டிக்ரியிலே அந்த நியாயசபையைச்சேர்ந்த எந்த மெம்பர்கள் அதை ஏற்றுக்கொள்ளுகிறார்களோ அவர்கள் கையெழுத்துசெய்யவேண்டும். விண்ணப்பஞ்செய்துகொள்வதன்மேல் பிரதி கட்சிக்காரனும் டிக்ரிக்கு நகலைப்பெற்றுக்கொள்ள அருஹனாவான்.

47. ரொக்கத்திற்காகக் கொண்டுவரப்பட்ட வியாஜ்ஜியங்களிலே, டிக்ரியான தொகைக்கு வியாஜ்ஜிய தேதிமுதல் பணம் செலுத்தப்படுகிற தேதி வரையில வருஷம் ஒன்றுக்கு நூற்றுக்குப் பன்னிரண்டுக்கு அதிகப்படாமல வட்டி செலுத்தப்படவேண்டியதென்று கிராமககோர்ட்டார் டிக்ரிபண்ணலாம்.

டிக்ரியில் வட்டி தீர்மானிககலாம் அல்லது வாயிதாக்களில் செலுத்தும்படி உத்தரவுபண்ணலாம்.

கிராமக்கோர்ட்டார் பணம செலுத்தும்படி டிக்ரிசெய்கையில், அதை மேற்கண்ட விதப்படி வட்டியுடனேயாகிலும் வட்டியிலலாமலாகிலும் வாயிதாக்களாகச் செலுததும்படி உத்தரவுசெயயலாம்.

48. டிக்ரியை, அதைச்செய்த கிராமக்கோர்ட்டாராவது, நிறைவேறறபபடுவதற்காக அது யாருக்கு அனுப்பபபடுகிறதோ அந்த கிராமககோர்ட்டாராவது டிஸ்டரிக்ட் முனஸிபாவது இதில் பின்னால் சொல்லியிருககிற நிபந்தனைகளின்படி நிறைவேற்றவேண்டும்.

இன்ன கோர்ட்டாரால் டிகரி நிறைவேற்றபபடலாமெனபது.

49. குறித்த யாதொரு அசையும்பொருளை வரப்பற்றுவதற்கென்று டிகரிசெய்யபபடுமாகில, அநதப் பொருளைக் கைபபற்றி, டிக்ரிபெற்றவனுக்கு அதை ஒப்பிபபதனால டிக்ரியை நிறைவேற்றலாம. அந்தப பொருளைக் கைப்பற்றககூடாவிட்டால், அதறகுப பாத்தியாகவென்று டிகரிசெய்யப்பட்டிருக்கிற பணத்தைச் செலுத்தும்படி நிரப்பந்திப்பதனால் டிக்ரியை நிறைவேற்றவேணடும்.

குறித்த யாதொரு அசையுமபொருளைப்பற்றிய டிகரியை இனனபடி நிறைவேற்றுவது.

50. யாதொரு கிராமக்கோர்ட்டாரால் செய்யப்பட்ட டிக்ரியின்படி செலுத்தப்படவேணடிய சகல தொகையும, அந்த டிக்ரியை நிறைவேற்றுவது யாருடைய அலுவலோ அந்த கிராம முனஸிபுக்கு எதிரில டிகரிபெற்றவனுக்காவது எழுத்துமூலமாகப்பிரத்தியேகமாய அதிகாரங்கொடுககப்பெற்ற அவனுடைய ஏஜெண்டுக்காவது செலுத்தப்படவேணடும ; அபபடிக்கில்லாமல் டிக்ரிபெற்றவனுக்குத் திருப்திகரமாய அந்த டிகரியைககுறித்து வேறேவிதமாய் ஒழுஙகுசெயயபபட்டால், அந்த ஒழுங்கு இப்படிப்பட்டதென்பதை எழுதி ரெகாாடசெய்து, அந்த டிகரிபெறறவனாவது அவனுடைய ஏஜனடாவது மேற்படி கிராம முன்ஸிபுக்கு எதிரில் கையெழுதது செயயவேணடியதுமல்லாமல அநத கிராமமுன்ஸிப் அதற்கு அத்தாட்சிககையெழுத்து போடவும வேண்டும்.

டிக்ரியின்படியாவது வேறே ஏற்பாட்டினபடியாவது பணஞ்செலுத்துவதை முனஸிபுக்கு எதிரில் செலுத்துவது அல்லது ரிகார்டபண்ணுவது.

அப்படி பணஞ்செலுத்தபபட்டதென்பதையாவது ஒழுங்குசெயயப்பட்டதெனபதையாவது கிராமமுன்ஸிப டிக்ரியின்மேல எழுதி எண்டார்ஸ் செய்யவேண்டியதுமல்லாமல், 10-வது பிரிவில் சொல்லியிருக்கிற வியாஜ்ஜிய ரெஜிஸ்டர் புஸ்தகத்தில் பதிவுபண்ணவும் வேண்டும்.

யாதொரு டிக்ரியின்படி பணஞ்செலுத்தப்பட்டாலும், யாதொரு டிக்ரியைக்குறித்து முழுமைக்குமாவது ஒரு பாகத்திற்காவது ஒழுங்குசெய்யப்பட்டாலும், இந்தப் பிரிவில் நிர்ணயித்திருக்கிற விதமாயாகிலும் டிஸ்ட்ரிக்ட் முன்ஸிப் கோர்ட்டிலாகிலும் பணஞ்செலுத்தப்பட்டாவது ஒழுங்கு ஏற்பாடு பதிவுசெய்யப்பட்டாவது இருந்தாலொழிய, அது ஏற்றுக்கொள்ளப்படாது.

தீர்ப்பான கடனாளியைப் பிடிக்கவும் அசையாப்பொருளை ஜப்திபண்ணவும் கூடாதென்பது.

51. 66-வது 67-வது பிரிவுகளிலுள்ள நிபந்தனைகளுக்குட்பட்டு, யாதொரு கிராமக்கோர்ட்டாருடைய டிக்ரியை நிறைவேற்றுவதற்காக, தீர்ப்பான யாதொரு கடனாளியைப் பிடிக்கவுங்கூடாது, யாதொரு அசையாப்பொருளை ஜப்திசெய்யவுங்கூடாது.

அசையும் பொருளை ஜப்திபண்ணுவது.

52. டிக்ரிபெற்றவன் விண்ணப்பஞ்செய்துகொள்வதன்மேல், கிராமக்கோர்ட்டார் தங்களுடைய அதிகார எல்லைக்குள் தீர்ப்பான கடனாளிக்குச் சொந்தமாயிருக்கிற எந்த அசையும்பொருளை டிக்ரி பெற்றவன் காட்டுகிறானோ அதை டிக்ரியின்படி செலுத்தப்படவேண்டிய தொகையினளவுக்கு ஜப்திபண்ணவேண்டும்; ஆனால், அடியிற்கண்ட பொருள்கள் அப்படி ஜப்திசெய்யப்படுவதற்குள்ளாகா: அவையாவன :—

(a) தீர்ப்பான கடனாளியும் அவனுடைய மனைவியும் மக்களும் உடுத்திக்கொள்ளுகிற அவசியமான வஸ்திரங்கள், அவர்களுடைய படுக்கை முஸ்தீதுகள்;
(b) கைத்தொழிலாளிகளின் ஆயுதங்கள், தீர்ப்பான கடனாளி விவசாயக்காரனாகவிருந்தால் அவனுடைய விவசாய சாமான்கள், அவன் விவசாயஞ்செய்து ஜீவனம்பண்ணக்கூடியதற்கு அவசியமாய் வேண்டியிருப்பதாகக் கோர்ட்டார் அபிப்பிராயப்படுகிற காலநடைகள், தானிய விதைகள்;
(c) கணக்குப் புஸ்தகங்கள்;
(d) கவர்ன்மெண்ட் மிலிடரி பென்ஷனர்களுக்கும் ஸிவில் பென்ஷனர்களுக்கும் கொடுக்கப்படும் வாத்தனைகள் நன்கொடைகள், பொலிடிகல் பென்ஷன்கள்;
(e) யாதொரு ஸர்க்கார் உத்தியோகஸ்தனுக்காவது ரெயில்வே கம்பெனி அல்லது பிரதேச அதிகாரிகளுடைய உத்தியோகஸ்தனுக்காவது சேரவேண்டிய சம்பளம் மாசமொன்றுக்கு இருபது ரூபாய்க்கு மேற்படாத விஷயத்தில் அப்படிப்பட்ட சம்பளம்; இருபது ரூபாய்க்கு மேற்படும் விஷயத்தில் அதில் ஒரு பாதியை ஜப்திபண்ணலாம்;
(f) சுதேச ராணுவ நிபந்தனைகள் சம்பந்தப்படுகிற நபர்களுக்குக் கொடுக்கப்படுகிற சம்பளம், வாத்தனைகள்;
(g) வேலையாட்களும் வீட்டுவேலைக்காரர்களும் பெறுகிற கூலிகள்,

*தீர்ப்பான கடனாளியினுடைய ஸ்வாதீனத்திலிருந்தால் இன்னபடி ஜப்திபண்ணுவது.*

53. தீர்ப்பான கடனாளியினுடைய ஸ்வாதீனத்தில் பொருளிருக்கும் பட்சத்தில், அதை நேராய்க் கைப்பற்றி ஜப்திபண்ணவேண்டும்; கிராம முன்சீப் அதன் பத்திரத்திற்காக வகைசெய்யவேண்டும். கேட்கப்படும்போது அந்தப் பொருளை ஹாஜராபடுத்துவதாக எழுத்துமூலமாய்ப் போதுமான ஜாமீன் கொடுக்கப்படும் பட்சத்தில், அதைத் தீர்ப்பான கடனாளியினுடைய வசத்திலே விட்டுவைக்கலாம். கேட்கப்படும்போது பொருள் ஹாஜராபடுத்தப்படாவிட்டால், ஜாமீனதாரன் மேல் அந்த டிகரியை ஹாஜராபடுத்தப்படாத பொருளின் பெறுமானத்தொகைக்கு நிறைவேற்றலாம்.

*தீர்ப்பான கடனாளியினுடைய ஸ்வாதீனத்திலிராவிட்டால் இன்னபடி ஜப்திபண்ணுவது.*

54. தீர்ப்பான கடனாளியினுடைய ஸ்வாதீனத்தில் பொருளிராதபட்சத்தில், அந்தப் பொருள் யாருடைய ஸ்வாதீனத்திலிருக்கிறதோ அந்தப்பேர் அதைத் தீர்ப்பான கடனாளிக்குக் கொடுத்துவிடக்கூடாதென்று எழுதிய கட்டளைமூலமாய் ஜப்திபண்ணவேண்டும்.

*கடன்தொகைகளை இன்னபடி ஜப்திபண்ணுவது.*

55. தீர்ப்பான கடனாளிக்குப் பாக்கியாயிருக்கிற கடன்களையும் தொகைகளையும் ஜப்திசெய்வது எப்படியென்றால்-கிராமகோர்ட்டாருடைய மறு உத்தரவுவரையில், தீர்ப்பான கடனாளி அந்தக் கடனைப் பற்றிக்கொள்ளவோ தொகையைப் பெற்றுக்கொள்ளவோ கூடாதென்றும், கடன்வாங்கியிருப்பவன் அதைச் செலுத்தக்கூடாதென்றும் எழுதிய கட்டளைமூலமாய் ஜப்திபண்ணவேண்டும். அசையாப்பொருளின்மேல் உண்டாயிருக்கிற யாதொரு கடனை ஜப்திபண்ணவாகிலும் விற்கவாகிலும் கிராமக் கோர்ட்டுக்கு இந்தப் பிரிவிலுள்ளதெதனாலும் அதிகாரமுண்டாவதாக எண்ணக்கூடாது.

*ஜப்திசெய்யப்பட்டபின்பு பொருளை உள்ளுக்குள்ளாகப் பராதீனஞ்செய்வது செல்லாதென்பது.*

56. நேராய்க் கைப்பற்றியாவது எழுத்துமூலமான உத்தரவைக் கொண்டாவது ஜப்தி செய்யப்பட்டபின்பு, ஜப்தியிலிருக்கிறவரையில் அந்த ஜப்திப்பொருளானது விக்கிரயம் - தானம் - அடைமானம் முதலிய எவ்விதத்தினாலாவது உள்ளுக்குள்ளாகப் பராதீனஞ்செய்யப்பட்டாலும், தீர்ப்பான கடனாளிக்கு அந்தக் கடன் செலுத்தப்பட்டாலும், அது ஜப்தியின்படி எந்தெந்த தாவாக்களை அமுலுக்குக்கொண்டுவரலாமோ அந்தந்த தாவாக்களுக்கெல்லாம் விரோதமாயிருக்கிறமட்டில் ரத்தாகவேண்டும்.

*ஜப்தி செய்யப்பட்ட பொருளின்மேல் கொண்டுவரப்படும் தாவாவைக்குறித்து விசாரணைபண்ணுவது.*

57. யாதொரு டிக்ரியை நிறைவேற்றும்பொருட்டு ஜப்திசெய்யப்பட்ட பொருளுக்கு ஏதாவது தாவா செய்யப்பட்டால், கிராமகோர்ட்டார் அந்த தாவாவைக்குறித்து விசாரணைசெய்யவேண்டும், அந்தப் பொருளை விற்கும்படியான சுதந்தரம் தீர்ப்பான கடனாளிக்கில்லையென்று தெரியவந்தால், அதை ஜப்தியிலிருந்து விடுதலைசெய்யவேண்டும்.

58. ஜப்திசெய்யப்பட்டபின்பு கூடுமான சீக்கிரத்திலே கிராமக் கோர்ட்டார்-ஜப்திசெய்யப்பட்ட பொருளை விற்றுவிடுவதற்காக ஜப்திதேதிமுதல் பதினைந்து நாளைகளுக் குறையாமல் ஒரு நாளை நிச்சயிக்கவேண்டியதுமல்லாமல், அந்த உத்தேசமான விற்பனையைக்குறித்து இஸ்தியார் எழுதி அதைத் தங்களுடைய கோர்ட்டுக்கு வெளிப்புறத்தில் ஒட்டுவிக்கவும் வேணடும்; மேலும், விற்பனைக்கு முன்னிட்டு அதைக்குறித்துத் தண்டோரா போட்டுப் பின்னும் பிரசித்தப்படுத்தவும் வேணடும்.

ஜப்திசெய்யப்பட்டபின்பு பதினைந்து நாளைக்குக் குறையாமல் ஒரு நாளிலே பொருளை விற்பதும் விற்பனையைப் பிரசித்தப் படுத்துவதும்.

ஆனால், (1) தீர்ப்பான கடனாளியினுடைய எழுத்துமூலமான சம்மதியினாலேயாவது, (2) கைப்பற்றப்பட்ட பொருள் தனிச்சையாயச் சீக்கிரத்தில் அழிந்துபோகத்தக்கதாயிருக்கும்போதாவது, (3) அதைப் பத்திரமாய் வைத்திருப்பதற்குண்டான செலவு அதன் கிரயத்திற்கு மேற்படுகிற தாயிருக்கும்போதாவது, கோர்ட்டார்-தண்டோராபோட்டுக் கிரமமாய் நோடிஸ் கொடுத்தபின்பு, ஜப்திதேதிமுதல் பதினைந்துநாளைக்குள் எப்போதாகிலும் ஜப்திபொருளை விற்றுவிடலாம். இப்படி செய்யும் விஷயத்தில, விற்றுவந்த பணத்தை, டிகிரிகளை நிறைவேற்றுகையில ஜப்திபணம்செலுத்தப்பட்ட தொகைகளைச் செலுத்துவதற்காக இதில் பின்னால் சொல்லப்பட்டிருக்கிற நிபந்தனைகளுக்குட்பட்டுக் கோர்ட்டார் வைத்திருக்கவேண்டும.

விலக்கு.

59. விற்பதற்காக நிச்சயிக்கப்பட்ட தினத்திலே, கிராம முன்ஸிபுக்கு எதிரில் அந்தப் பொருள் பகிரங்கமாய் ஏலம்போடப்பட்டு உயர்ந்த விலைக்குக்கேட்கிறவனுக்கு விற்றுவிடப்படும். அந்த விலை அட்டியில்லாமல் உடனே செலுத்திவிடப்படவேண்டும்; செலுத்தப்படாவிட்டால் அந்தப் பொருள் மறுபடி ஏலம்போடப்படும்.

விற்பனையில் நடவடிக்கை.

கொள்கிரயம் செலுத்தப்படுவதன்மேல், கோர்ட்டார் அதற்கு ரசீது கொடுக்கவேண்டும்; அதனுடனே அந்த விக்கிரயம் அறுதியாகும்.

மறு ஏலத்தில் ஏதாவது நஷ்டம் உண்டானால அது-கடனுக்குத் தீர்ப்புபெற்றவனாகிலும் தீர்ப்பான கடனாளியாகிலும் கேட்டுக்கொள்ளும்பட்சத்தில், பணங்கட்டத் தவறிப்போனவன்மேல் அதற்காக டிக்ரி செய்யப்பட்டிருந்தாற்போல அவனிடத்தில் வசூல்செய்யப் படத்தக்கதாகும்.

60. இந்த ஆக்டின்படி பிரசித்தஞ்செய்யப்பட்ட யாதொரு விற்பனையை, கோர்ட்டாருக்கு யுக்தமாகத் தோற்றும்பட்சத்தில, குறித்த இன்ன தினத்தில் நடத்தவேண்டுமென்று நிறுத்திவைக்கலாம்; அதைக்குறித்து 58-வது பிரிவில் நிர்ணயித்திருக்கிற விதமாய் ஜனங்களுக்குப் பிரசித்தப்படுத்தவேண்டும.

ஏலவிற்பனையை நிறுத்திவைக்க அதிகாரம்.

*கிராமமுனிஸிபும் மற்ற உத்தியோகஸ்தர்களும் விற்கப்படும் பொருளை விலை கேட்கவும் விலைக்கு வாங்கவுங்கூடாது.*

61. இந்த ஆக்டுக்குட்பட்ட யாதொரு ஏலவிற்பனை சம்பந்தமாய் யாதொரு அலுவலை நடத்தவேண்டிய கிராமமுனிஸிபாவது வேறே உத்தியோகஸ்தனாவது - அப்படிப்பட்ட ஏலத்தில் விற்கப்பட்ட யாதொரு பொருளை நேராகவாகிலும் நேராயல்லாமல் மற்றப்படியாகிலும் விலைகேட்கவுங்கூடாது, அதில் யாதொரு சுதந்தரத்தை அப்படி அடையவுங்கூடாது.

*பாக்கித் தொகையும் செலவும் செலுத்தக் கொண்டுவரப்பட்டால் விற்பனையை நிறுத்துவது.*

62. ஏலத்தில் பொருளைவிடுவதற்கு முன்னமே, டிக்ரியின்படி பாக்கியாயிருக்கிற தொகையையும் விற்பனைச் செலவையும் கிராம முனிஸிபிடத்தில் கொடுக்கவந்தால், இந்த ஆக்டின்படி நடத்துகிற பிரதி விற்பனையையும் நிறுத்திவிடவேண்டும்.

*விற்றுவந்த பணத்தைப் பகிர்ந்துகொடுப்பது.*

63. டிக்ரியை நிறைவேற்றி வசூல்செய்யப்பட்ட பணத்திலிருந்து, நிறைவேற்றுதலுக்குப் பிடித்த செலவை முதலில் செலுத்தவேண்டும்; டிக்ரி பெற்றவனுக்குச் சேரவேண்டிய தொகையைப் பின்பு செலுத்தவேண்டும். ஏதாவது மிலுவையிருந்தால் அதைத் தீர்ப்பான கடனாளிக்குச் செலுத்திவிடவேண்டும்.

*நேராயக் கைப்பற்றப்பட்ட பொருளைக் கிரயக்காரனுக்கு ஒப்பித்துவிடுவது.*

64. விற்கப்பட்ட பொருள் ஜப்தியில் நேராயக் கைப்பற்றப்பட்ட பொருளாயிருந்தால், அதைக் கிரயக்காரனுக்கு ஒப்பித்துவிடவேண்டும்.

*மற்ற விஷயங்களில் இன்னபடி கிரயக்காரனுக்குப் பொருளை ஒப்பித்துவிடுவது.*

65. விற்கப்பட்ட பொருளானது தீர்ப்பான கடனாளியல்லாத வேறே யாதொரு நபருடைய ஸ்வாதீனத்திலிருந்தாலும், தீர்ப்பான கடனாளிக்கு எந்த நபராவது கொடுக்கவேண்டிய கடனாயிருந்தாலும், கிரயக்காரனைத் தவிர வேறே எவனுக்காவது பொருளின் ஸ்வாதீனத்தை ஒப்பிக்கக்கூடாதென்றாகிலும் கடனைச் செலுத்தக்கூடாதென்றாகிலும் மேற்படி நபருக்கு எழுத்துமூலமாய நோடிஸ் கொடுப்பதனாலே அந்தப் பொருள் கிரயக்காரனுக்கு ஒப்பிக்கப்படவேண்டும்; ஜப்தி செய்யும்போது தீர்ப்பான கடனாளிக்கு அந்தப் பொருள் அல்லது கடனில் என்ன சுதந்தரமிருந்ததோ அந்த சுதந்தரம் கிரயக்காரனுக்குச் சித்திக்கவேண்டும்.

*நிறைவேற்றுவதற்காக டிக்ரியை டிஸ்டிரிக்ட் முனிஸிபுக்கு அனுப்பலாம்.*

66. யாதொரு கிராமக்கோர்ட்டாரால் செய்யப்பட்ட எந்த டிக்ரியையாகிலும், டிக்ரிபெற்றவன் விண்ணப்பஞ்செய்துகொள்வதன்மேல், நிறைவேற்றப்படுவதற்காக டிஸ்டிரிக்ட் முனிஸிபினிடத்தில் அனுப்பலாம்; அவர் அதைத் தம்மால் செய்யப்பட்ட டிக்ரியாயிருந்தாற்போலவே நிறைவேற்றலாம், அல்லது பிரதிவாதிக்கு வேறெந்த கிராமத்தில்

அசையும்பொருளிருக்கிறதென்று தெரிவிக்கப்படுகிறதோ அந்த கிராமத்துக் கோர்ட்டாருக்கு நிறைவேற்றப்படுவதற்காக அதை அனுப்பலாம். அந்தக் கோர்ட்டார் இந்த டிக்ரி தங்களால் செய்யப்பட்டிருந்தாற்போலவே நடவடிக்கை நடத்தவேண்டும்.

யாதொரு டிக்ரியை நிறைவேற்றும் அலுவலை டிஸ்டிரிக்ட் முனஸீப் வரவழைத்துக்கொள்ளலாம்.

67. யாதொரு டிக்ரியை நிறைவேற்றும் அலுவலை யாதொரு கிராமக்கோர்ட்டிலிருந்து வரவழைத்துக்கொண்டு, அந்த டிக்ரி தன்னால் செய்யப்பட்டிருந்தாற்போலவே அதைத் தானே நிறைவேற்ற டிஸ்டிரிக்ட் முனஸீபுக்கு அதிகாரமுண்டு.

---

## 7-ம் அத்தியாயம்.

### பலவகைப்பட்டவை.

வியாஜ்ஜியத்தைச் சேர்ந்த கட்சிக்காரன் இறந்துபோவதன்மேல் விண்ணப்பஞ்செய்துகொள்ளப்பட்டால், இறந்துபோனவனுடைய சட்டசம்மதமான பிரதிநிதியை ரெகார்டில் பதிவுசெய்துகொள்ளலாம்.

68. வியாஜ்ஜியத்தில் டிக்ரிசெய்யப்படுவதற்கு முன்னமே வாதியாவது பிரதிவாதியாவது இறந்துபோனால், அவனுடைய சட்டசம்மதமான பிரதிநிதியின் பெயரை, மறுகட்சிக்காரனாகிலும் அந்த சட்டசம்மதமான பிரதிநிதியாகிலும் விண்ணப்பஞ்செய்துகொள்வதன்மேல், இறந்துபோனவனுக்குப் பாத்தியாக ரெகார்டில் எழுதிக்கொள்ளலாம்; ஆனால், இறந்துபோன பிரதிவாதியினிடத்திலிருந்து அடையப்பட்டுக் கிரமமாய் வகைசொல்லப்படாதிருக்கிற ஆஸ்தியின் பெறுமான தொகைக்கு அதிகமாக அந்தப் பிரதிவாதியின் சட்டசம்மதமான பிரதிநிதியின்மேல் டிக்ரி செய்யக்கூடாது.

விண்ணப்பஞ்செய்துகொள்ளப்படாவிட்டால் வியாஜ்ஜியத்தைத் தள்ளிவிடுவது.

69. வாதியாவது பிரதிவாதியாவது இறந்துபோன தேதிமுதற்கொண்டு அறுபதுநாளகளுக்குள் அப்படி விண்ணப்பம் செய்துகொள்ளப்படாவிட்டால், வியாஜ்ஜியத்தைத் தள்ளிவிடவேணடும்; அதே வியாஜ்ஜிய மூலத்தைக்குறித்து மறுபடி வியாஜ்ஜியங்கொணடுவர அனுமதி கொடுக்கப்படமாட்டாது.

வாதிகள் அல்லது பிரதிவாதிகள் ஒருவனுக்கு மேற்பட்டிருந்தால ஜீவித்திருக்கிறவன கேட்டுக்கொளவதனாலாவது அவனமேலாவது வியாஜ்ஜியம் நடப்பது.

70. ஒருவனல்லாமல் பல வாதிகளாவது பிரதிவாதிகளாவதிருந்து, அவர்களில் எவனாவது இறந்துபோய், அவனுடைய பிரதிநிதி மேற்சொல்லியபடி சேர்க்கப்படாமலிருந்தால், ஜீவித்திருக்கிற வாதி அல்லது வாதிகள் கேட்டுக்கொள்வதனாலாவது, ஜீவித்திருக்கிற பிரதிவாதி அல்லது பிரதிவாதிகளின்மேலாவது வியாஜ்ஜியம் நடக்கவேணடும்.

*டிகரிபெற்றவன் இறந்துபோனால் அவனுடைய சட்டசம்மதமான பிரதிநிதியை அவனுக்குப் பாத்தியாகச் சேர்த்துக்கொள்ளலாம்.*

71. டிக்ரிபெற்றவன் டிக்ரி பூர்த்தியாய் நிறைவேற்றப்படுவதற்கு முன் இறந்துபோனால், அவனுடைய சட்டசம்மதமான பிரதிநிதியானவன் இறந்துபோனவனுக்குப் பாத்தியாகத் தன்னுடைய பெயரை டிகரிபெற்றவனாகச் சேர்க்கும்படி கிராமக்கோர்ட்டாருக்கு விண்ணப்பஞ்செய்து கொள்ளலாம்; தீர்ப்பான கடனாளிக்கு நோடீஸ் கொடுத்தபின்பு கோர்ட்டார் அந்த விண்ணப்பக்காரன் இறந்துபோனவனுடைய சட்டசம்மதமான பிரதிநிதிதானென்று திருப்தியாய்த் தெரிந்துகொண்டால், ரெகார்டிலே அவனுடைய பெயரை டிகரிபெற்றவனாக எழுதிக்கொள்ள வேண்டும்.

*தீர்ப்பான கடனாளி இறந்துபோனால் அவனுடைய சட்டசம்மதமான பிரதிநிதியின்மேல டிக்ரியை நிறைவேற்றலாம்.*

72. தீர்ப்பான கடனாளி டிகரி பூர்த்தியாய் நிறைவேற்றப்படுவதற்குமுன் இறந்துபோனால், டிகரிபெற்றவன் விண்ணப்பம் செய்துகொள்வதன்மேல், தீர்ப்பான கடனாளியிடத்திலிருந்து அடையப்பட்டுக் கிரமமாய் வகைசொல்லப்படாதிருக்கிற ஆஸ்தி எவ்வளவோ அவ்வளவுக்கு அவனுடைய சட்டசம்மதமான பிரதிநிதியின்மேல் அந்த டிக்ரியை நிறைவேற்றலாம்.

*கிராமக்கோர்ட்டாருடைய நடவடிக்கைகளை டிஸ்ட்ரிக்ட் முன்ஸிப் புனராலோசனைபண்ணுவது.*

73. யாதொரு கிராமக்கோர்ட்டினுடைய டிகரி அல்லது உத்தரவினாலே அநியாயமடைந்ததாக எண்ணுகிற யாதொரு கட்சிக்காரன் அந்த டிகரி அல்லது உத்தரவு தேதிமுதல் அறுபது நாட்களுக்குள் மனு கொடுத்துக்கொள்வதன்மேல், டிஸ்ட்ரிகட் முன்ஸிபானவர்—

கிராமக்கோர்ட் லஞ்சம்வாங்கினதென்கிற ஹேதுவின்மேலாவது, முற்றிலும் பாரபட்சம் பண்ணினதென்கிற ஹேதுவின்மேலாவது, துர்நடத்தை நடந்ததென்கிற ஹேதுவினமேலாவது,

சட்டப்படி அந்தக் கோர்ட்டுக்கு ஏற்படாத அதிகாரத்தை அந்தக் கோர்ட் செலுத்தியிருக்கிறதென்கிற ஹேதுவின்மேலாவது, மற்றப்படி சட்டவிரோதமாயாகிலும் முக்கிய முறை பிறழ்வாயாகிலும் நடந்ததென்கிற ஹேதுவினமேலாவது,

அந்த டிக்ரி அல்லது உத்தரவு ஸ்பஷ்டமாய் நீதிக்கேடாகவோ சட்டத்திற்கு விரோதமாகவோ இருக்கிறதென்கிற ஹேதுவின்மேலாவது,

அப்படிப்பட்ட டிக்ரி அல்லது உத்தரவைத் தள்ளிவிட்டு, தமக்கு யுக்தமாகக் காணுகிற வேறே டிக்ரி அல்லது உத்தரவைப் பிறப்பிக்கலாம்; ஆனால், யாதொரு கிராமக்கோர்ட்டாரால் செய்யப்பட்ட டிக்ரியையாவது உத்தரவையாவது எதிர் கட்சிக்காரனுக்கு நோடீஸ் கொடாமல் தள்ளிவிடக்கூடாது. அப்படிப்பட்ட யாதொரு மனு பைசல் செய்யப்படுகிறவரையில், அந்த டிக்ரி அல்லது உத்தரவு நிறைவேற்றப்படுவதை டிஸ்ட்ரிக்ட் முன்ஸிப் நிறுத்திவைக்கலாம்.

அறுபது நாள்களுக்குப் பின்பு இந்தப் பிரிவின்படி மனுசெய்து கொள்ளப்பட்டால, அந்த ஆலசியத்தைக்குறித்துத் தெரிவிக்கப்படும் காரணம் டிஸ்ட்ரிக்ட் முனஸிபுக்குத் திருப்திகரமாயிருக்குமபட்சத்தில் அவர் அதை ஏற்றுக்கொள்ளலாம்

இந்தப் பிரிவில விதித்திருக்கிறபடிக்குத் தவிர, யாதொரு கிராமக்கோர்ட்டாரால் செய்யப்பட்ட ஒவவொரு டிக்ரியும் உத்தரவும் முடிவானதாகும.

டிஸ்ட்ரிகட் முன்ஸிப் டிஸ்ட்ரிகட் ஜட்ஜுக்கு ரிபோாட் பண்ணவாமெனபதும் சில விஷயங்களில் ரிபோாட் பண்ணவேண்டுமென்பதும்.

74. டிஸ்ட்ரிக்ட் முன்ஸிபானவர் 73-வது பிரிவின்படி யாதொரு டிக்ரி அல்லது உத்தரவைத் தள்ளிவிடும்போது, அவர் அந்த விஷயத்தை டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜுககு ரிபோர்ட்பணணலாம் ; கிராமக்கோாட் லஞ்சம் வாங்கினதென்கிற ஹேதுவின்மேலாவது முற்றிலும் பாரபட்சம் பணணினதென்கிற ஹேதுவின்மேலாவது துர்நடத்தை நடந்ததென்கிற ஹேதுவின்மேலாவது யாதொரு டிக்ரி அல்லது உத்தரவைத் தாம் தளளிவிடும் ஒவவொரு விஷயத்தையும் அப்படி ரிபோர்ட் பண்ணவேணடும்.

நமூனாக்கள் ஏற்படுத்தவும் கோாட்டாருககும் ரெகாாடுகளைப் பரிசோதனைசெய்ய டிஸ்ட்ரிகட் ஜட்ஜுககும டிஸ்ட்ரிக்ட் முனஸிபுக்கும் அதிகாரம்.

75. கிராமக்கோர்ட்டுகளில் உபயோகிக்கப்படவேண்டிய நமூனாக்களையும அந்தக கோர்ட்டார் அனுப்பவேணடிய கணககுகளையும ஹைகோர்ட்டார் அபபோதைக்கபபோது நிர்ணயிக்கலாம. டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜாவது டிஸ்ட்ரிக்ட் முன்ஸிபாவது கிராமககோாட்டுகளுடைய ரெஜிஸ்டர்களையும ரெகார்டுகளையும எப்போதாவது வரவழைத்துப் பார்வையிடலாம்.

[1] * * * *

[1] இந்த ஆகடைச்சேர்ந்த ஷெட்யூலானது - (1901-ம் வருஷத்திய 11-வது ஆக்டாகிய) ரத்துசெயவதற்கும் திருத்துவதற்குமான 1901-ம்வருஷத்து ஆக்டினல் ரத்துசெய்யப்பட்டது.

# 11-ம் அனுபந்தம்

## சென்னபட்டணம் 1899-ம்௵த்து 3-வது ஆக்ட்.

ஆலோசனை சபையிலுள்ள சென்னபட்டணம் கவர்னரவர்களால் ஜாரிசெய்யப்பட்டது.

[1899-ம்௵ எப்ரல்மீ 3௳ சிறப்புற்றோங்கும் கவர்னரவர்களாலும் 1899-ம் ௵ மேமீ 3௳ சிறப்புற்றோங்கும் ராஜப் பிரதிநிதியாகிய கவர்னர் ஜெனரலவர்களாலும் அங்கீகரிக்கப்பட்டது; கவர்னர் ஜெனரலவர்களுடைய அங்கீகாரமானது - 1899-ம்௵ ஜூனமீ 6௳ யுள்ள போர்ட் ஸெய்ன்ட் ஜார்ஜ் கெஜேட்டில் முதன்முதல் பிரசுரிக்கப்பட்டது.]

நாட்டுப்புறத்துப் பிரதேசங்களில் ஜனனமரணங்களை ரெஜிஸ்டர் செய்வதற்காக நிபந்தனை ஏற்படுத்துவதற்கான ஆக்ட்.

பீடிகை. நாட்டுப்புறத்துப் பிரதேசங்களில் ஜனனமரணங்களை ரெஜிஸ்டர் செய்வதற்காக நிபந்தனை ஏற்படுத்துவது யுக்தமாயிருக்கிறபடியால், இதனால் விதிக்கப்படுகிறதென்னவென்றால்:—

பெயர். 1. இந்த ஆக்டை, "சென்னபட்டணம் ஜனனமரண ரெஜிஸ்ட்ரேஷனைகுறித்த 1899-ம்௵த்து ஆக்ட்" எனறு சொல்லலாம்.

இந்தசட்டத்தை வியாபிக்கச்செய்வதும், இந்தச்சட்டத்தினின்றும் நிவர்த்திசெய்வதும். 2. சென்னை ராஜதானிப் பட்டணத்தின் எல்லைகளுக்கும், சென்னபட்டணம டிஸ்ட்ரிக்ட் மியுனிஸிபாலிடிகளைக்குறித்த 1884-ம்௵த்து ஆக்டின்படி ஏற்பாடான மியுனிஸிபாலிடிகளின் எல்லைகளுக்கும் வெளியிலுள்ள யாதொரு பிரதேச விஸ்தீர்ணத்திற்கு இந்த ஆக்டையாகிலும் அதைச்சேர்ந்த யாதொரு பாகத்தையாகிலும பிரதேச கவர்ன்மென்டார் விளம்பரமூலமாய வியாபிக்கச்செய்யலாம்; மேலும், அப்படிப் பட்ட யாதொரு பிரதேச விஸ்தீர்ணத்திற்கு இந்த ஆக்டாகிலும் அதைச்சேர்ந்த யாதொரு பாகமாகிலும பிரயோகமாகாமலிருக்கும படி விளம்பரமூலமாய் அப்பிரதேச விஸ்தீர்ணத்தை நிவாரணை செய்யலாம்.

அர்த்தம். 3. இந்த ஆக்டிலே சங்கதியினாலாவது முன்பின் தொடர்ச்சியினாலாவது விரோதமொனறுமில்லாவிட்டால்,—

"கிராமம்." "கிராமம்" என்பது - ரெவினியு பரிபாலன விஷயங்களுக்காக இப்போது கிராமமாய் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறதாகவாவது, கிராமமெனறு பிரதேச கவர்ன்மென்டாரால் இனிமேல் அங்கீகரிக்கப்படுவதாகவாவதுள்ளதும், இந்த ஆக்டாவது அதன யாதொரு பாகமாவது செலாவணியாய்க்கொண்டிருக்கிறதுமான யாதொரு பிரதேச விஸ்தீர்ணமென்று அர்த்தமாகும்.

*"ரெஜிஸ்ட்ரார்."*

"ரெஜிஸ்ட்ரார்" என்பது - இந்த ஆக்டின் 5-வது பிரிவின்படி ஜனனமரணங்களைக்குறித்த ரெஜிஸ்ட்ராராக நியமிக்கப்பட்டவரென்று அர்த்தமாகும்.

*ரெஜிஸ்டர் செய்வது கட்டாயமென்று டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் பிரசித்தஞ்செய்யவேண்டும்.*

4. யாதொரு பிரதேச விஸ்தீர்ணத்திற்கு இந்த ஆக்டையாவது அதன் யாதொரு பாகத்தையாவது வியாபிக்கச்செய்து 2-வது பிரிவின்படி விளம்பரம் பிரசுரிக்கப்படுவதன்மேல், மேற்சொன்ன விஸ்தீர்ணத்திலே இந்த தேதியிலிருந்து ஜனனமரணங்களை ரெஜிஸ்டர் செய்வது கட்டாயமாகுமென்று டிஸ்ட்ரிக்ட் கலெக்டரானவர் - அவ்வாறு விளம்பரம் பிரசுரிக்கப்பட்ட விஸ்தீர்ணத்திற்குள் ஒவ்வொரு கிராமத்திலும் கிராமசாவடியிலாவது எல்லாருக்கும் தெரியும்படியான இடத்திலாவது சுதேசபாஷையில் நோடிஸ் ஒட்டுவித்தும் தண்டோரா போடுவித்தும், டிஸ்ட்ரிக்ட் கெஜெட்டில் பிரசுரம் செய்வித்தும் பிரசித்தம் பண்ணுவிக்கவேண்டும்.

*ரெஜிஸ்ட்ரார்களை நியமிப்பது.*

5. (1) அப்படிப்பட்ட விளம்பரத்தைப் பிரசித்தஞ்செய்வதன் மேல் கலெக்டரானவர் - ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒருவரை, அவருடைய பெயரைக்கொண்டாவது அவர் வகித்திருக்கும் யாதொரு உத்தியோக முறைமையைக்கொண்டாவது ஜனனமரணங்களைக்குறித்த ரெஜிஸ்ட்ராராயிருக்கும்படி நியமிக்கவேண்டும்; அல்லது, அவருக்குத் தகுதியாகத் தோற்றினால், யாதொரு கிராமத்தை, வார்டுகளாகப் பிரித்து, ஒவ்வொரு வார்டுக்கும் ஒருவரை, அவருடைய பெயரைக்கொண்டாவது அவர் வகித்திருக்கும் யாதொரு உத்தியோக முறைமையைக்கொண்டாவது ஜனனமரணங்களைக்குறித்த ரெஜிஸ்ட்ராராயிருக்கும்படி நியமிக்கலாம்.

*ரெஜிஸ்ட்ரார்கள் நிர்ணயிக்கப்பட்ட நமூனாப்படி ரெஜிஸ்டர்களை வைத்திருக்க வேண்டுமென்பது.*

(2) அவ்வாறு நியமிக்கப்பட்ட ஒவ்வொரு ரெஜிஸ்ட்ராரும் - நிர்ணயிக்கப்பட்டிருக்கிற நமூனாப்படி ஜனனமரணங்களைக்குறித்த ஒரு ரெஜிஸ்டரை, சந்தர்ப்பத்திற்குத்தக்கபடி, தம்முடைய கிராமத்திற்காவது வார்டுக்காவது வைத்திருக்க வேண்டும்.

*ரெஜிஸ்ட்ரார்கள் தங்களுடைய கிராமங்களிலாவது வார்டுகளிலாவது வசிக்கவேண்டுமென்பது.*

6. கலெக்டர் வேறேவிதமாய் வெளிப்படையாக எழுத்துமூலமாய் அதிகாரங்கொடுத்தாலன்றி மற்றப்படி, அவ்வகையான ஒவ்வொரு ரெஜிஸ்ட்ராரும் - தாம் எதற்கு ரெஜிஸ்ட்ராராயிருக்கிறாரோ அந்தக் கிராமம் அல்லது வார்டில் வசிக்கவேண்டும்; அவர் எந்தக் கிராமம் அல்லது வார்டுக்கு அந்தப்படி நியமிக்கப்பட்டிருக்கிறாரோ அந்தக் கிராமம் அல்லது வார்டுக்கு ஜனனமரணங்களைக்குறித்த ரெஜிஸ்ட்ராரென்பதைச் சேர்த்துத் தம்முடைய பெயரைச் சுதேச பாஷையில் எழுதுவித்து, தம்முடைய ஆபிஸின் வெளிக்கதவிலாவது அதற்குச் சமீபத்

திலாவது எல்லாருக்கும் தெரியும்படியான ஓரிடத்தில் அவர் அதை வைத்திருக்கும்படிச் செய்யவேண்டும்.

டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் ரெஜிஸ்டர்களை அச்சிடுவித்துச் சரப்பரா செய்விக்கவேண்டும்.

7. (1) ஜனனமரணங்களைக்குறித்துத் தாக்கல்செய்து வைப்பதற்காகப் போதுமான அளவுக்கு ரெஜிஸ்டர் புஸ்தகங்களை, பிரதேச கவர்ன்மெண்டார் அப்போதைக்கப்போது நிர்ணயிக்கிற நமூனாக்களின்படிக்கும் செய்கிற உத்தரவுகளின்படிக்கும் டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் அச்சிடுவித்து சரப்பரா செய்விக்கவேண்டும்.

அந்த நமூனாக்களின் நகல் ஒன்றை ரெஜிஸ்ட்ரார் ஆபிஸில் ஒட்டிவைக்கவேண்டுமென்பது.

(2) சுதேச பாஷையில் அப்படிப்பட்ட நமூனாக்களுக்கு ஒரு நகலை ஒவ்வொரு ரெஜிஸ்ட்ராருடைய ஆபிஸின் வெளிக்கதவிலாவது அதற்குச் சமீபத்திலாவது எல்லாருக்கும் தெரியும்படியான ஓரிடத்தில் ஒட்டிவைக்கவேண்டும்.

குழந்தை பிறந்ததைப்பற்றி இரண்டுவாரத்துக்குள் சமாசாரம் தெரிவிக்கவேண்டும்.

8. ஒவ்வொரு குழந்தையின் தகப்பனாவது, அந்தத் தகப்பன் இறந்துபோயாகிலும், வியாதியஸ்தனாயாகிலும், ஊரில் இல்லாமலாகிலும், அசக்தனாயாகிலும் இருக்கும்பட்சத்தில் பிரசவசமயத்தில் சகாயஞ்செய்யும் மருத்துவிச்சியும், அந்த மருத்துவிச்சி அப்படி செய்யாவிட்டால் அந்தக் குழந்தை பிறந்த வீட்டில் வாசஞ்செய்கிற குடும்பத்திலே வயதுவந்த பிரதி புருஷனும், அக்குழந்தையைத் தனவசத்திலுடைய யாதொரு நபருமாவது, மேலேசொல்லப்பட்டவர்கள் அந்தப்படி செய்யாவிட்டால் தாயாவது, அந்த ஜனனம் நேரிட்ட தினத்திலிருந்து பிறகு அடுத்த இரண்டுவாரத்திற்குள்ளாக 7-வது பிரிவின்படி நிர்ணயிக்கப்பட்டிருக்கும் நமூனாக்களில் பதிவுசெய்வதற்கு வேண்டியிருக்கும் பற்பல விவரங்களைக்குறித்துத் தனக்கு மிகவும் நன்றாய்த்தெரிந்து தான் அந்தப்படி நம்புகிற அளவுக்கு வாய்மொழியாகவாகிலும் எழுத்துமூலமாகவாகிலும் ரெஜிஸ்ட்ராருக்குச் சங்கதி தெரிவிக்கவாவது தெரிவிக்கும்படி செய்யவாவது வேண்டும்.

விலக்குகள்.

ஆனால், வேறொருவர் சங்கதி தெரிவிக்காவிட்டால் மாத்திரமேயன்றி மற்றப்படி பிரதமத்திலே சங்கதி தெரிவிக்கவேண்டியவனல்லாத யாவனொருவன் - அப்படிப்பட்ட வேறொரு நபரால் பிரஸ்தாப சங்கதி தெரிவிக்கப்பட்டதென்றாவது நியமமாய்த் தெரிவிக்கப்படுமென்றாவது நினைக்கத் தனக்கு நியாயமான காரணமிருந்தால், இந்த ஆக்டின்படி சங்கதிதெரிவிக்கக் கடமைப்பட்டவனாகான்.

அல்லாமலும், சட்டசம்மதமல்லாத குழந்தையின் விஷயத்திலே, அந்தக் குழந்தையின் பிரசவத்தைக்குறித்து இந்த ஆக்டின்படி பிரதமத்திலே சங்கதிதெரிவிக்கவேண்டியது அதன் தாயின் கடமையாகும்; அதன் தகப்பனாக எவரும் இந்த ஆக்டின்படி அதைக்குறித்துச் சங்கதி தெரிவிக்கவேண்டியதில்லை; அக்குழந்தையின் தாயும் அதன் தகப்பனென்று ஒப்புக்கொள்ளுகிற நபரும் சேர்ந்து கேட்டுக்கொண்டு அந்த நபர் அக்குழந்தையின் தாயோடு ரெஜிஸ்டரில்

கையெழுத்துசெய்தாலன்றி மற்றப்படி, அக்குழந்தையின் தகப்பனென்று யாருடைய பெயரையும் ரெஜிஸ்ட்ரார் ரெஜிஸ்டரில் தாக்கல்செய்துகொள்ளக்கூடாது.

நூதனமாய்ப் பிறந்த குழந்தை நிராதரவாயிருக்கக் கண்டால் அதைப்பற்றிச் சங்கதி தெரிவிப்பது.

9. நூதனமாய்ப் பிறந்த யாதொரு குழந்தை நிராதரவாயிருக்கக் கண்டால், அக்குழந்தையை அந்தப்படி காணும் யாதொரு நபரும் அக்குழந்தை யார் வசத்தில் விடப்படுமோ அந்த நபரும் - அக்குழந்தையைக் கண்டபிறகு ஏழு தினத்திற்குள்ளே தமக்கு மிகவும் நன்றாய்த் தெரிந்து தாம் அந்தப்படி நம்புகிற அளவுக்கு, அக்குழந்தையின் ஜனனத்தைக்குறித்து ரெஜிஸ்டர் செய்யவேண்டியிருக்கிற விவரங்களில் தமக்குத் தெரிந்திருக்கிற விவரங்களை ரெஜிஸ்ட்ராருக்குத் தெரிவிக்கக் கடமைப்பட்டவராவார்கள்.

இறந்துபோனதைப்பற்றி நாலு தினத்திற்குள் சங்கதி தெரிவிக்கவேண்டும்.

10. கிராமத்தில் இறந்துபோகிற யாதொரு நபருடைய மரணகாலத்தில் ஹாஜராயாவது, அந்த நபர் கடைசியாக நோயாயிருந்தபோது அந்த நபருக்கு உதவிசெய்துகொண்டாவதிருந்த அதிநெருக்கமான வயதுவந்த புருஷபந்துவாகிலும், அந்த பந்து அந்தப்படி செய்யாவிட்டால் மரணகாலத்தில் ஹாஜராயிருந்த வயதுவந்த ஒவ்வொரு புருஷனுமாகிலும், அவர்கள் அந்தப்படி செய்யாவிட்டால் மரணம் சம்பவித்த வீட்டின் அனுபோகதாரனாகிலும், அவன் அப்படி செய்யாவிட்டால் மரணம் சம்பவித்தவீட்டில் வசிக்கிற வயதுவந்த ஒவ்வொரு புருஷனாகிலும், அப்படி குடியிருப்பவன் அந்தப்படி செய்யாவிட்டால் இறந்தவனுடைய சவத்தை ஒருவகைசெய்விக்கும் நபராகிலும் 7-வது பிரிவின்படி நிர்ணயிக்கப்பட்ட நமூனாக்களில் பதிவுசெய்வதற்கு வேண்டியிருக்கிற பற்பல விவரங்களைத் தனக்கு மிகவும் நன்றாய்த் தெரிந்து தான் அந்தப்படி நம்புகிற அளவுக்கு வாய்மொழியாகவாவது எழுத்துமூலமாகவாவது இறந்துபோன தேதியிலிருந்து நாலுதினத்திற்குள் ரெஜிஸ்ட்ராருக்குச் சங்கதி தெரிவிக்கவாயினும் தெரிவிக்கும்படி செய்யவாயினும் வேண்டும்.

ஆனால், வேறொருவர் சங்கதி தெரிவிக்காவிட்டால்மாத்திரமேயன்றி மற்றப்படி பிரதமத்திலே சங்கதி தெரிவிக்கவேண்டியவனாயிராத யாவனொருவனும் - அப்படிப்பட்ட வேறொரு நபரால் பிரஸ்தாப சங்கதி தெரிவிக்கப்பட்டதென்றாவது கிரமமாய்த் தெரிவிக்கப்படுமென்றாவது நினைக்கத் தனக்கு நியாயமான காரணமிருந்தால், இந்த ஆக்டின்படி சங்கதி தெரிவிக்கக் கடமைப்பட்டவனாகான்.

வேறுவிதமான மரணங்களைப்பற்றிச் சங்கதி தெரிவிக்கக் கிராமப் பெரியதனக்காரர் கடமைப்பட்டிருக்கிறார்.

11. யாதொரு கிராமத்திலே 10-வது பிரிவிலடங்காத சந்தர்ப்பங்களில், ஒருவன் இறந்துபோயிருக்கக்கண்டால், அந்த கிராமப் பெரியதனக்காரர் அந்த மரணத்தைக்குறித்து ரெஜிஸ்டர் செய்யவேண்டியதாயிருக்கிற விவரங்களில் தமக்குத் தெரிந்திருக்கிற விவரங்களை, தமக்கு

மிகவும் நன்றாய்த்தெரிந்து தாம் நம்புகிற அளவுக்கு உடனே ரெஜிஸ்ட்ராருக்குத் தெரிவிக்கக் கடமைப்பட்டவராவார்.

12. இந்த ஆக்டின் 8-வது, 10-வது பிரிவுகளில் என்ன சொல்லியிருந்தபோதிலும் பாதகமில்லாமலே—

(1) யாதொரு ஆஸ்பத்திரியில் ஒரு குழந்தை பிறந்தாலும் அல்லது ஒருவர் இறந்தாலும், அந்த ஆஸ்பத்திரி யாருடைய விசாரணையிலிருக்கிறதோ அந்த வைத்திய உத்தியோகஸ்தர் அப்படிப்பட்ட ஜனனம் அல்லது மரணத்தைக் குறித்து, 7-வது பிரிவின்படி நிர்ணயிக்கப்படும் நமூனாக்களில் பதிவுசெய்வதற்கு வேண்டியிருக்கிற பற்பல விவரங்களைக் கண்டு ரெஜிஸ்ட்ராருக்கு எழுத்துமூலமான நோட்டீஸ் உடனே அனுப்பக் கடமைப்பட்டவராவார்.

ஆஸ்பத்திரியில் ஜனன மரணம் சம்பவிக்கும்பட்சத்திலே, அதைப் பற்றி அந்த ஆஸ்பத்திரியில் அதிகாரஞ்செலுத்தும் வைத்திய உத்தியோகஸ்தர் ரெஜிஸ்ட்ராருக்கு நோட்டீஸ் அனுப்பவேண்டும்.

(2) யாதொரு சத்திரம், சாவடி, ஹோட்டல், சாப்பாடுபோடும் வீடு, விடுதியிடங்கொடுக்கும் வீடு, மதுக்கடை, சாராயம் அல்லது கள் விற்கும் கடை, அல்லது ஜனங்கள் நடமாடும் இடத்தில் ஒரு குழந்தை பிறந்தாலும் அல்லது ஒருவன் இறந்தாலும், 8-வது, 10-வது பிரிவுகளின்படி தெரிவிக்கவேண்டியதாயிருக்கிற சங்கதிகளை, அப்பிரிவுகளிற்கண்ட விதமாக, சந்தர்ப்பத்திற்கேற்றபடி, அந்த ஜனனம் அல்லது மரணம் நேரிட்டதுமுதல் நாற்பத்தெட்டுமணி நேரத்துக்குள்ளாக மேற்படி சத்திரம் முதலியவற்றின் சொந்தக்காரனாவது அதை வைத்துக்கொண்டிருப்பவனாவது அதைத் தன் விசாரணையிலுடையவனாவது தெரிவிக்கக் கடமைப்பட்டவனாவான்.

சத்திரங்கள் முதலியவைகளில் ஜனனமரணங்கள் சம்பவிக்கும்பட்சத்திலே, அவைகளை வைத்துக்கொண்டிருப்பவனாவது, அவைகளைத் தன் விசாரணையிலுடையவனாவது வேண்டியிருக்கிற சங்கதிகளைத் தெரிவிக்கவேண்டும்.

13. இந்த ஆக்டின்படி தெரிவிக்கவேண்டியதாயிருக்கிற யாதொரு சங்கதியை ரெஜிஸ்ட்ராருக்கு வாய்மொழியாகத் தெரிவித்த ஒவ்வொருவனும் தன்னுடைய பெயரையும் இருப்பிடம் முதலிய விவரத்தையும் ரெஜிஸ்டரில் எழுதவேண்டும்; அவனுக்கு எழுதத் தெரியாவிட்டால், மேற்படி பெயர் முதலிய விவரங்களை ரெஜிஸ்ட்ரார் ரெஜிஸ்டரில் எழுதிக்கொள்ளவேண்டும்: அதில் அவன் தன் கைநாட்டு செய்யவேண்டும்.

வாய்மொழியாகச் சங்கதி தெரிவிக்கிறவன் தன்னுடைய பெயரை ரெஜிஸ்டரில் எழுதவேண்டும்.

14. ஒரு குழந்தையின் ஜனனத்தைப்பற்றிய ரெஜிஸ்ட்ரேஷன் பூர்த்தியானவுடனே விண்ணப்பஞ்செய்துகொள்வதன்மேல் எவ்வித கட்டணமும் வாங்காமலே ரெஜிஸ்ட்ராரானவர் எந்தக் குழந்தையின் ஜனனத்தைக்குறித்து ஒருவன் சங்கதிதெரிவிக்கிறானோ அவனுக்கு ரெஜிஸ்

ரெஜிஸ்ட்ராரானவர் கட்டணமில்லாமல் எக்ஸ்ட்ராக்ட் எப்பொழுது கொடுக்கவேண்டுமென்பது

டரிலிருந்து அக்குழந்தையின் ஜனனத்தைப்பற்றி எக்ஸ்ட்ராக்ட் எடுத்து அதில் தம் கையெழுத்துபோட்டுக்கொடுக்கவேண்டும்.

*ரெஜிஸ்ட்ராரானவர்-ஒவ்வொரு ஜனனத்தைப்பற்றியும் மரணத்தைப்பற்றியும் தெரிவிக்கும் சங்கதியைக் கட்டணம் அல்லது வெகுமதி பெருமல் ரெஜிஸ்டர்செய்யவும், அவைகளைப்பற்றிச் சங்கதி தெரிந்துகொள்ளவும் வேண்டுமென்பது.*

15. ஒவ்வொரு ரெஜிஸ்ட்ராரும் 8-வது பிரிவிலிருந்து 13-வது பிரிவுவரையிலுள்ள பிரிவுகளின்படிக்குத் தமக்குத் தெரிவிக்கப்படும் சகல சங்கதியையும் கட்டணம் அல்லது வெகுமதி பெருமலே ரெஜிஸ்டர்செய்யவேண்டும்; மேலும், தம்முடைய கிராமத்திலாவது வார்டிலாவது சம்பவிக்கிற ஒவ்வொரு ஜனனத்தையும் ஒவ்வொரு மரணத்தையும் ஜாக்கிரதையாய்த் தெரிந்துகொள்ளவும் அவர் கடமைப்பட்டிருக்கிறுர், அன்றியும், சந்தர்ப்பத்திற்குத் தக்கபடி, முன்னதாக ரெஜிஸ்டர் செய்யப்பட்டிராத, ஒவ்வொரு ஜனனத்தைப்பற்றியும் ஒவ்வொரு மரணத்தைப்பற்றியும் 7-வது பிரிவில் நிர்ணயிக்கப்பட்டிருக்கும் நமூனைகளின்படி ரெஜிஸ்டர்செய்யவேண்டியிருக்கிற விவரங்களை அவர் அப்படி ஜனனமரணம் சம்பவித்தபிறகு தமக்கு அநுகூலப்பட்ட கூடுமான சீக்கிரத்தில் தெரிந்துகொண்டு ரெஜிஸ்டர் செய்யவேண்டும்.

*குழந்தையின் பெயரை பதிவுசெய்வது.*

16. யாதொரு குழந்தையின் ஜனனம் பெயரில்லாமலே ரெஜிஸ்டர் செய்யப்பட்டிருந்தால், அக்குழந்தையின் பெற்றோராவது கார்டியனாவது - அக்குழந்தையின் ஜனனம் ரெஜிஸ்டரான பிறகு அடுத்த பன்னிரண்டுமாதத்திற்குள்ளே அந்தக் குழந்தையின் பெயரை ரெஜிஸ்டரில் பதியும்படி ரெஜிஸ்ட்ராரைக் கேட்கலாம்; அப்படிக்கேட்டதன்மேல் ரெஜிஸ்ட்ராரானவர் அப்பெயரைப் பதிவுசெய்யவேண்டும்; மேலும், அந்தப் பதிவுக்குத் தம்முடைய பெயரின் முதற்குறிப்பெழுத்துக்களையும் தேதியையும் போடவேண்டும்.

*ஜனன மரணங்களைக் குறித்த ரெஜிஸ்டர்களில் தேடிப்பார்ப்பது.*

17. 20-வது பிரிவின்படி பிரதேச கவர்ன்மென்டார் செய்யும் எவ்வித விதிகளுக்காவது உட்பட்டு, வந்து பார்க்கிற ஒவ்வொரு தடவைக்கும் நாலணு கட்டணம் செலுத்துவதன்மேல் நியாயமான எல்லாக்காலங்களிலும் யாதொரு நபர் ஜனனமரணங்களைக்குறித்த யாதொரு ரெஜிஸ்டரில் தேடிப்பார்க்கலாம்; இன்னும் நாலணு கட்டணம் செலுத்துவதன்மேல் அந்த நபர் ரெஜிஸ்டரில் ரெஜிஸ்டர்செய்திருக்கும் யாதொரு ஜனனம் அல்லது மரணத்தைப்பற்றி அதிலிருந்து ஒரு எக்ஸ்ட்ராக்டைப் பெற்றுக் கொள்ளலாம்.

இந்தப் பிரிவின்படி கொடுக்கப்படும் சகல எக்ஸ்ட்ராக்டுகளுக்கும் 1872 ம் ஹிந்திய இந்துதேசத்துச் சாட்சிய ஆக்டின் 76-வது பிரிவில் நிபந்தனை கண்டிருக்கிறபடி உறுதிமொழி கூறப்பட்டிருக்கவேண்டும்; அந்த எக்ஸ்ட்ராக்டுகள் எவைகளின் நகல்களென்று பொருள்படுகின்றனவோ அந்தப் பதிவுகளுக்கு ருஜுவாக அவைகளைக் கொண்டுவந்து காட்டலாம்.

சங்கதி *முதலியவற்றைத் தெரிவிக்கத் தவறினால் தண்டனை.

18. யாதொரு நபர்—

(1) இந்த ஆக்டின் 8, 9, 10, 11, 12-வது பிரிவுகளின்படிக்குத் தான் தெரிவிக்க கடமைப்பட்டிருக்கும் யாதொரு சங்கதியை நியாயமான காரணமில்லாமல் தெரிவிக்கத் தவறினாலும்,

(2) தெரிந்துகொண்டு ரெஜிஸ்டர் செய்யவேண்டியதாயிருக்கிற விவரங்களில் யாதொரு விவரத்தைப்பற்றிப் பிசகானதும், பிசகென்று தனக்கு தெரிந்திருக்கிற அல்லது பிசகென்று தான் நம்புகிறதுமான யாதொரு சங்கதியை யாதொரு ஜனனமரண ரெஜிஸ்டரில் தாக்கல் செய்விக்கும்பொருட்டுத் தெரிவித்தாலும் தெரிவிக்கும்படி செய்தாலும்,

(3) 13-வது பிரிவில் சொல்லியிருக்கிறபடி தன்னுடைய பெயர் இருப்பிடமுதலிய விவரங்களை எழுதவாவது, அவ்விவரங்களுக்கு ரெஜிஸ்டரில் தன்னுடைய கைநாட்டு செய்யவாவது நிராகரித்தாலும்,

மாஜிஸ்ட்ரேட்டுக்குமுன் குற்றவாளியென்று தீர்மானிக்கப்படுவதன்மேல் பத்து ரூபாய்க்கு மேற்படாமல் அபராதத்திற்குள்ளாவான்.

தாசில்தாருடைய அல்லது அவருக்குமேலான அந்தஸ்துள்ள உத்தியோகஸ்தருடைய உத்தரவின்படிக்கன்றி மற்றப்படி பிராதுகள் தொடரக்கூடாதென்பது.

19. (1) இந்த ஆக்டின்படி தண்டிக்கப்படத்தக்க யாதொரு குற்றத்தைப்பற்றி, அக்குற்றம் எவ்விடத்தில் செய்யப்பட்டதோ அந்த கிராமம் யாருடைய அதிகாரவரம்பிலிருக்கிறதோ அந்தத் தாசில்தாருடைய அல்லது அவர் யாருக்குத் தாழ்ந்த உத்தியோகஸ்தராயிருக்கிறாரோ அந்த உத்தியோகஸ்தருடைய உத்தரவின்படிக்கன்றி மற்றப்படி எவ்விதமான பிராதும் தொடரக்கூடாது.

டிஸ்ட்ரிக்ட் கலெக்டராவது, அவரால் இதுவிஷயத்தில் பொதுவாகவாகிலும் பிரத்தியேகமாகவாகிலும் அதிகாரங் கொடுக்கப்பெற்றிருக்கிற யாதொரு உத்தியோகஸ்தராவது அப்படிப்பட்ட பிராதை நிறுத்திவைக்கலாம்.

குற்றஞ் சாட்டப்பட்டவர்கள் ஏஜெண்டுகள் மூலமாக ஹாஜராகி எதிர்வாதஞ்செய்யலாம்.

(2) இந்த ஆக்டின் நிபந்தனைகளின்படிக்கான குற்றங்களைப்பற்றித் தொடரப்படும் பிராதுகளிலே, குற்றஞ்சாட்டப்பட்டவன் ஒரு ஏஜெண்ட் மூலமாய் ஹாஜராகலாம்; மேலும், ஒரு ஏஜெண்டைக்கொண்டு எதிர்வாதஞ்செய்ய அவனுக்குச் சுதந்தரமுண்டு.

ஆனால், மாஜிஸ்ட்ரேட்டானவர் நடவடிக்கை நடந்துகொண்டிருக்கையில் எப்போதாவது, குற்றஞ்சாட்டப்பட்டவனை நேரில் ஹாஜராகும்படி உத்தரவு செய்யலாம்; அப்படி அவர் உத்தரவு செய்வதற்குள்ள நியாயங்களை அவர் எழுதிவைக்கவேண்டும்.

நமூனக்களை நிர்ணயிக்கவும் விதிகளை ஏற்படுத்தவும் பிரதேச கவர்ன்மெண்டாருக்கு அதிகாரம்.

20. பிரதேச கவர்ன்மெண்டார்—

(1) இந்த ஆக்டின்படி வைக்கவேண்டியதாயிருக்கிற ஜனன மரணங்களைக்குறித்த ரெஜிஸ்டர்களுக்கு நமூனக்களை நிர்ணயித்தும்,

(2) 5-வது பிரிவின்படி வைக்கப்பட்டிருக்கும் ரெஜிஸ்டர்களைப் பார்வையிடுவதற்காகவும் பரிசோதிப்பதற்காகவும்,

(3) ரெஜிஸ்டிரார் வேறே அலுவலாகப் போயிருக்கும்போதாவது, வியாதியாயிருக்கும் காரணத்தினலாவது, வேறே காரணத்தினலாவது ஹாஜராயிராதபோது அவருடைய அலுவலை நடத்துவதற்காகவும்,

(4) ரெஜிஸ்டிரார்கள் வைத்திருக்கும் ரெஜிஸ்டர்களையும் வேறே தஸ்தவேஜுகளையும் பாதுகாப்பதற்காகவும், ஹாஜர்ப்படுத்துவதற்காகவும், டிரான்ஸ்பர்செய்வதற்காகவும்,

(5) ஜனனங்களைக்குறித்த ரெஜிஸ்டர்களிலாவது மரணங்களைக்குறித்த ரெஜிஸ்டர்களிலாவது எழுத்துப் பிழைகளிருக்கக் கண்டால் அவைகளைத் திருத்துவதற்காகவும்,

(6) பொதுவாய், இந்த ஆக்டின் நிபந்தனைகளை நிறைவேற்றுவதற்காகவும்,

முன்னதாகவே பிரசித்தஞ்செய்தபிறகு விதிகளேற்படுத்தலாம்.

---

# 12-ம் அனுபந்தம்.

## சென்னபட்டணம் 1899-ம்ஹுத்து 3-வது ஆக்ட் 20-வது பிரிவின்படிக்கான விதிகளும் நமூனுக்களும்.

இந்த ஆக்ட் பிரயோகமாகும்படி செய்யப்படும் ஒவ்வொரு யூனியன் அல்லது இதரவிஸ்தீர்ணத்துக்கும் 5-வது பிரிவின்படி கலெக்டரால் நியமிக்கப்படும் ரெஜிஸ்ட்ரார் அல்லது ரெஜிஸ்ட்ரார்கள் ஒவ்வொருவரும் - இதனுடன் சேர்க்கப்பட்டிருக்கும் 1-ம் ஷெ. நமூனுப்படி ஜனனங்களைக்குறித்து ஒரு ரெஜிஸ்டரையும், இதனுடன் சேர்க்கப்பட்டிருக்கும் 2-ம் ஷெ. நமூனுப்படி மரணங்களைக் குறித்து ஒரு ரெஜிஸ்டரையும் வைத்துவரவேண்டும். இந்த இரண்டு ரெஜிஸ்டர்களிலும், ஜனன மரணங்கள் சம்பவித்ததைக்குறித்து ஜனவரிமாதம் முதல்தேதியில் ஆரம்பித்து வரிசைக்கிரமமாக இலக்கமிட்டு டிஸெம்பர்மீ 31உ வரையில் போட்டுக்கொண்டே போகவேண்டும். வரிசைக்கிரமமாயுள்ள இரண்டு இலக்கங்களுக்கு மத்தியில் எந்தப் பதிவையும் நுழைக்கக்கூடாது. குழந்தையின் தகப்பன் தன்னுடைய பெயருடனே தாயாருடைய பெயரையும் எழுதிவைக்க வேண்டுமென்று விரும்பினாலன்றி மற்றப்படி, 1-ம் ஷெ. நமூனுவின் 4-வது கலத்தில் ஒன்றும் எழுதக்கூடாது. விவாகமூலமாயல்லாமல் மற்றப்படி பிறந்த குழந்தைகளின் விஷயத்திலே 8-வது பிரிவின் கடைசி பாகத்தில் சொல்லியிருக்கும் கற்பனைகளை ரெஜிஸ்ட்ரார் கவனிக்கவேண்டும். ஜனனங்களைக்குறித்த ரெஜிஸ்டரின் 7-வது கலத்திலும் மரணங்களைக்குறித்த ரெஜிஸ்டரின் 7-வது கலத்திலும் எழுதவேண்டிய "வகுப்பார்" யாரென்றால்: "ஐரோப்பியர்", "யூரேஷியர்", "இந்திய கிறிஸ்தவர்", "ஹிந்துக்கள்", மஹம்மதியர்", "மற்ற வகுப்பார்". ஜாதிகளையும் ஜாதிகளைச்சேர்ந்த உட்பிரிவுகளையும் குறிக்கக்கூடாது. வீட்டுப்பெயர் இல்லாதவர்கள் விஷயத்திலே, 2-ம் ஷெ. நமூனுவின் 3-வது கலத்தில் தகப்பனுடைய பெயரை எழுதவேண்டும். (இதனுடன் சேர்க்கப்பட்டிருக்கிற) வில்லேஜ் மானுயல் என்னும் கிராமச் சட்டபுஸ்தகத்தைச் சேர்ந்த 19-A, 19-B நமூனுக்களின்படி ஒவ்வொரு ரெஜிஸ்ட்ராரும் தம்முடைய ரெஜிஸ்டர்களிலிருந்து கோர்வைகளை தயார்செய்து மாதந்தோறும் தாசில்தாரருக்கு அனுப்பவேண்டும்.

2. ஜனனங்களைக்குறித்தாவது மரணங்களைக்குறித்தாவது சங்கதிதெரிவிப்பதானால், அவசியமான சகல விவரங்களையுங்கண்டு ஒரு கடிதமூலமாகவாகிலும் இதனுடன் சேர்க்கப்பட்டுள்ள 3-ம் ஷெ. 4-ம் ஷெ. நமூனுக்களின்படியாகிலும் எழுத்துமூலமாய் ரெஜிஸ்ட்ராருக்குத் தெரிவிக்கலாம். ரெஜிஸ்ட்ரார் எந்த விஸ்தீர்ணத்துக்காகத் தாம் நியமிக்கப்பட்டிருக்கிறாரோ அதற்குள் இருக்கிற சகல குடிகளுக்கும் அவர் இந்த நமூனுக்களைக் கட்டணமில்லாமல் சவரிப்பார். ஜனனமரணங்களைக்குறித்து வாய்மொழியாகவும் சங்கதி தெரிவிக்கலாம். ஜனனம ரெஜிஸ்டர் செய்யப்படுகிற ஒவ்வொரு விஷயத்திலும், சங்கதி தெரிவிப்பவர் கேட்டுக்கொள்தவன்மேல்

இதனுடன் சேர்க்கப்பட்டிருக்கிற 5-ம் நெ. நமூனாப்படி அச்சங்கதி யைக்குறித்து ஒரு யாதாஸ்தைக் கட்டணமெதுவும் வாங்காமல் அவருக்கு ரெஜிஸ்ட்ரார் 14-வது பிரிவில் செய்யசசொல்லியிருக்கிற படி கொடுக்கவேண்டும். கடிதமூலமாகவாவது 3-ம் நெ. நமூனாப் படிக்கும் 4-ம் நெ. நமூனாப்படிக்குமாவது ரெஜிஸ்டிராருக்கு வரும் சகல சங்கதிகளையும் அவர் பைலில் சேர்த்து இரண்டுவருஷம் வரை யில் பத்திரமாய் வைத்திருக்கவேண்டும்.

3. ரெஜிஸ்டர்களையும், கடிதங்களையும் நமூனாக்களையும் வைத் திருக்கிற பைல்களையும், 17-வது பிரிவின்படி வசூல் செய்யப் படுகிற கட்டணங்களைக்குறித்த கணக்குகளையும், ஜில்லா கலெக்ட ருடைய உத்தரவுகளை அனுசரித்து ரெஜிஸ்ட்ரார் வைத்திருக்க வேண்டிய இதர ரெகார்டுகளையும், ரெவினியு இன்ஸ்பெக்ட ருடைய அந்தஸ்தையாவது அதற்கு மேற்பட்ட அந்தஸ்தையாவ துடைய யாதொரு ரெவினியு உத்தியோகஸ்தர் பார்வையிடும்படி வைத்திருக்கவேண்டும்; ஜில்லா கலெக்டர் நிர்ணயிக்கிற மாதிரி யாகவும் காலம் விட்டும் விட்டும் மேற்படி ரெஜிஸ்டர்களையும் ரெகார்டு களையும் பரிசோதித்துப் பார்ப்பது அந்த உத்தியோகஸ்தர்களு டைய கடமையாகும். ஆனால், ஸப் ரெஜிஸ்ட்ரார் ஆவ் அஷ்யூரன் ஸெஸ் என்னும் உத்தியோகஸ்தர் அப்படிப்பட்ட ரெஜிஸ்ட்ராரா யிருக்கிற விஷயத்தில், பரிசோதனை செய்கிற உத்தியோகஸ்தரான வர் சுயேச்சையான விசாரணையுடைய தாசில்தார் அல்லது டெப் யுடி தாசில்தாருடைய அந்தஸ்துக்குக் குறையாத அந்தஸ்துள்ள வராயிருக்கவேண்டும்.

4. ஆக்டின் 6-வது 7-வது பிரிவுகளிலுள்ள நிபந்தனைகளின்படி நடந்துகொள்வதோடுகூட ரெஜிஸ்ட்ராரானவர் - ஜனன மரணங் களை இன்னின்ன மணி நேரங்களில் தாம் ரெஜிஸ்டர் செய்வா ரென்று தம்முடைய ஆபிஸிலாவது, (அவருக்கு ஆபிஸில்லாவிட் டால்) அவருடைய வீட்டிலாவது வெளிப்புறத்துக்கதவிலோ அல் லது அதற்குச் சமீபத்திலோ எல்லாருக்கும் தெரியும்படியான இட த்தில் விளம்பரப்படுத்தவும் வேண்டும். அப்படிப்பட்ட மணிநேர ங்கள் (ஆதிவாரங்களும் அனுமதிகொடுக்கப்பெற்ற விடுமுறை நாள் களும் நீங்கலாக) நாளொன்றுக்கு இரண்டு அல்லது மூன்றுமணி நேரமாயிருக்கவேண்டும்; ஒவ்வொரு ரெஜிஸ்ட்ராருக்காகவும் மேற்படி மணிநேரங்களை ஜில்லா கலெக்டர் நிர்ணயிப்பார். இந்த மணிநே ரங்களில் எந்தக் காரணத்தினாலாவது ரெஜிஸ்ட்ரார் ஹாஜராயிரா விட்டால், ரெஜிஸ்ட்ராராகத் தாம் செய்யவேண்டிய வேலையை இன்ன காலத்தில் செய்யக்கூடுமென்றும், தாம் ஹாஜராயிராத போது கடிதங்களையாவது 3-வது நெ. அல்லது 4-வது நெ. நமூனா வின்படி எழுதியிருக்கும் சங்கதியையாவது சங்கதி தெரிவிப்போர் யாரிடத்தில் ஒப்பிக்கலாமோ அந்த நபரின் பெயரையுங்கண்டு தம் முடைய ஆபிஸ் அல்லது வீட்டின் வெளிப்புறத்துக்கதவிலோ அல் லது அதற்குச் சமீபத்திலோ அவர் ஒரு நோடீஸ் ஒட்டிவைக்க வேண்டும்.

5. வியாதியினாலோ வேறே அவசரமான காரணத்தினாலோ ரெஜிஸ்ட்ரார் இரண்டு தினத்திற்கு மேற்படத் தம்முடைய வேலே யைச் செய்யக்கூடாதவராயிருக்கிற விஷயத்திலே, டெப்யுடி தாசில்

தாருடைய அந்தஸ்தையாவது அவரது அந்தஸ்துக்கு மேம்பட்ட அந்தஸ்தையாவதுடைய அதிசமீபத்திலுள்ள ரெவினியு உத்தியோகஸ்தருக்கு அவர் அந்தச் சங்கதியைத் தெரிவிக்கவேண்டும்; அந்த உத்தியோகஸ்தர் - ரெஜிஸ்ட்ராருடைய அலுவல்களைச் செய்யும் பொருட்டு உடனே அங்காமியான ஏற்பாடுகளைச் செய்யவேண்டும்; இந்தப்படி அங்காமியாக நியமிக்கப்படும் யாதொரு நபர் இந்த ஆக்டின் காரியங்களுக்காகவும் இந்த விதிகளின் காரியங்களுக்காகவும் ரெஜிஸ்ட்ராராயிருப்பவராக எண்ணப்படுவார்.

6. 1 - வது 2 - வது நிட. நமூனாக்களின்படி இருக்கும் ரெஜிஸ்டர்களை, ஒவ்வொரு சவுரவருஷமும் முடிந்தபிறகு பன்னிரண்டுமாதம் வரையில் ரெஜிஸ்ட்ரார் தம் வசத்தில் வைத்திருக்கவேண்டும்; அதன்பிறகு, பிரஸ்தாப கிராமம் எதிலிருக்கிறதோ அந்த டிவிஷனுக்காகவுள்ள ஸப் ரெஜிஸ்ட்ரார் ஆவ அஷ்யூரன்ஸெஸ் என்னும் உத்தியோகஸ்தரிடத்தில் அவைகளை வைத்திருக்கவேண்டும்; அவர் அவைகளைத் தம்முடைய ஆபிஸில் பையப்பணமாரி வைத்திருக்கவேண்டும். ஸப் ரெஜிஸ்ட்ரார் ஆவ அஷ்யூரன்ஸெஸ் என்னும் உத்தியோகஸ்தர் தாமே ரெஜிஸ்ட்ராராயிருந்தால், அவர் தம்முடைய ஆபிஸிலேயே அந்த ரெஜிஸ்டர்களை வைத்திருக்கவேண்டும்; 17 - வது பிரிவின்படி அவைகளிலிருந்து எக்ஸ்ட்ராக்ட் எடுத்துக்கொடுக்கவும் அது சரியென்று உறுதிமொழி கூறவும் வேண்டிய உத்தியோகஸ்தர் அவரேயாவார். கிராமப் பெரியதனக்காரராகவாவது கர்ணமாகவாவது இருக்கிற ரெஜிஸ்ட்ரார் வசத்தில் அந்த ரெஜிஸ்டர்களிருக்கும்போது, 17 - வது பிரிவின்படி அவைகளிலிருந்து எக்ஸ்ட்ராக்ட் எடுத்துக்கொடுக்கவும் அது சரியென்று உறுதிமொழி கூறவும் வேண்டிய உத்தியோகஸ்தர் - அந்த கிராமப் பெரியதனக்காரராவது கர்ணமாவது யாருக்குக் கீழ்ப்பட்டவரோ அந்த தாசில்தார் அல்லது டெப்யுடி தாசில்தாராவார். ரெஜிஸ்டர்களை ஸப் ரெஜிஸ்ட்ரார் ஆவ அஷ்யூரன்ஸெஸ் என்னும் உத்தியோகஸ்தருக்கு அனுப்பிய பிறகு, 17-வது பிரிவின்படி அவைகளிலிருந்து எக்ஸ்ட்ராக்ட் கொடுக்கவும் அது சரியென்று உறுதிமொழி கூறவும் வேண்டியவர் அந்த உத்தியோகஸ்தரேயாவார்.

7. ஜனனங்களைக்குறித்த ரெஜிஸ்டர்களிலாவது மரணங்களைக் குறித்த ரெஜிஸ்டர்களிலாவது காணப்படும் சகல எழுத்துப்பிழைகளையும் திருத்துகையில் (பிரதமத்தில் செய்யப்பட்ட பதிவை வாசிக்கமுடியாதபடி செய்துவிடாமல்) அதன்மீது நெடுக ஒரு வரியிழுத்து அதற்குமேல் நூதனமாய் எழுதவேண்டியதை எழுதவேண்டும்; ரெஜிஸ்ட்ரார் அந்தப் பிழையைக் கண்டுபிடித்தால், அவரே அந்த திருத்தத்துக்குத் தம்முடைய பெயரின் முதற்குறிப்பெழுத்துக்களையும் தேதியையும் போடவேண்டும்; பரிசோதிக்கும் உத்தியோகஸ்தர் அப்பிழையைக் கண்டுபிடித்தால், அந்த உத்தியோகஸ்தர், ரெஜிஸ்ட்ரார் ஆகிய இருவரும் மேற்கண்டபடி செய்யவேண்டும். ஆனால், பதிவு செய்யப்பட்டதற்குப் பிறகு ஒரு வருஷத்திற்கு மேற்பட்டு, டிவிஷனல் ஆபிஸருடைய அனுமதியை முன்னதாய்ப் பெற்றுக்கொண்டாலன்றி மற்றபடி, இந்த விதியின் பிரகாரம் எந்தப் பதிவையும் திருத்துவதுகூடாது.

